முதற்பதிப்பு : ஜூலை-2009
இரண்டாம் பதிப்பு ஜூலை, 2010


Ø TITLE RUTHRAVEENAI-1
Ø BY INDRA SOUNDAR RAJAN
Ø **Second Edition:** JULY - 2010
Ø PAPER 11.6 N.S. BOOK PRINT
Ø TOTAL NO. OF PAGES 432

விலை ரூ. 230/-

**திருமகள் நிலையம்**
**புதிய எண்.16, பழைய எண். 55**
**வெங்கட்நாராயணா ரோடு,**
**தியாகராய நகர், சென்னை-600 017.**
**தொலைபேசி - 24342899, 24327696**

Typesetting *AMARAVATHI GRAPHICS*
Chennai - 33. Cell 9444169725

Printed by **உதயம் ஆப்செட்ஸ்,** செ-2. ☎ 28454808

# என்னுரை

'ருத்ர வீணை' என்னும் பெயரில் உங்கள் கைகளில் தவழ்ந்துகொண்டிருக்கும் இந்த நாவல் எனது வித்தியாசமான முயற்சிகளில் ஒன்றாகும்.

தமிழ் கூறும் நல்லுலகில் ஆயிரமாயிரம் படைப்புகள் தோன்றிக்கொண்டேயிருக்கின்றன. சிறுகதை, நாவல், நாடகம், குறுநாவல் என்று அவைகளின் அடையாளங்களில் வேறுபாடுகள் இருந்தாலும் அவைகளின் நோக்கம் மக்கள் மனங்களில் இடம் பிடிப்பது என்கிற ஒன்றுதான்!

ஆனால், மக்கள் ஒரு எழுத்தாளரை அங்கீகரிப்பது என்பது அவ்வளவு சுலபத்தில் நிகழ்ந்து விடுவதில்லை. அதே சமயம் வித்தியாசமாகவும் விறுவிறுப்பாகவும் கூடவே சமூக நலன்களைக் கருத்தில் கொண்டும் எழுதுபவர்களை அவர்கள் கைவிடுவதும் இல்லை.

தமிழ் வாசகர்களிடையே எனக்கொரு தனி இடம் கிடைக்க நான் கிட்டத்தட்ட பதினைந்து ஆண்டு காலம் காத்திருக்க வேண்டியிருந்தது. அதன்பின் 1990-ல் ஆனந்த விகடனில் 'கோட்டைப்புரத்து வீடு' என்கிற ஒரு தொடர் மூலமாக ஒரு பார்வைக்கு உள்ளான நான், அப்படியே படிப்படியாக தாவி ஏறி குங்குமத்தில் எழுதிய 'விட்டு விடு கருப்பா' மூலம் ஒரு அசைக்க முடியாத இடத்தைப் பிடித்தேன். அதுதான் பிறகு 'விடாது கருப்பு' என்கிற பெயரில் சன் டி.வி.யில் தொடராக வந்து தொலைக்காட்சி உலகிலும் எனக்கொரு ஆசனத்தைப் பெற்றுத் தந்தது.

அந்தப் பாட்டையில் இந்த ருத்ரவீணையும் எனக்கொரு நல்ல பெயரை பெற்றுத் தந்த தொடர்களில் ஒன்றாகிவிட்டது. இதன் கதையம்சம் மிக வித்தியாசமானது... நமது வாழ்வில் அதிசயங்கள் என்று நாம் கேள்விப்படும் விஷயங்கள் எவ்வளவோ உள்ளன.

நாம் தொலைத்துவிட்டு நிற்கும் கோஹினூர் வைரம் ஒரு அதிசயம்தான்... மயிற்பொறி என்கிற ஒன்று அக்பர் காலத்தில் இருந்ததாகவும் அதில் ஒருவர் ஏறி அமர்ந்து வான்வெளியில் பயணிக்க முடியும் என்றும் ஒரு தகவல். அதுவும் அதிசயம்தான்!

அவ்வளவு ஏன்... பதினெட்டுச் சித்தர்களின் வாழ்க்கையும் அவர்கள் சாகசங்களும்கூட நமக்கெல்லாம் அதிசயம்தான்.

'விட்டு விடு கருப்பா' என்று ஒரு தொடர் எழுதினேனே... அதில் வரும் 'கருப்பச்சாமி' கூட ஒரு கிராமத்து அதிசயம்தான். ஒருவர் தவறினால் பாதிக்கப்படும் மற்றொருவர் 'சாமி நீதான் கூலி கொடுக்கணும்' என்று அந்த சாமி முன் சென்று கதறி அழுதால் சாமி எங்கிருந்தோ வந்து நீதி வழங்கிவிட்டுச் சென்று விடுகிறது என்பது இன்றும் பல நூறு கிராமத்தவர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை.

இதில் விஞ்ஞானப் பார்வை பார்த்து, எல்லோரும் பேத்தல், மனக்கோணல், பித்தலாட்டம் அல்லது முட்டாள்தனங்களின் உச்சம் என்று விமர்சிப்பதைவிட இதை நம்பி இது நிஜமாலுமே இருந்தால் எப்படி இருக்கும் என்பதில் ஒரு சுகம் இருக்கிறது.

இன்றைய ஹைடெக் உலகில் வாழும் மனிதர்களுக்கு முதல் தேவையே அப்படி ஒரு சுகம்தான்.

அந்தப் பரமன் தனது இணையான உமையையே ஒரு ருத்ர வீணையாக்கி இசை மீட்டினான். அந்த இசை என்னும் நாதசப்தத்தில் உண்டானதே இந்தப் பிரபஞ்சம். அதிலுள்ள 'நாம்' என்பது ஒரு பௌராணிக் சிந்தனை அல்லது கற்பனை!

இப்படிப்பட்ட கற்பனைகள் இந்தியர்களுக்கு மட்டுமே உரியதல்ல... உலகம் முழுவதிலும் இப்படிப்பட்ட கற்பனைகளும் நிரம்பி வழிகின்றன.

யேசுநாதர்கூட, வற்றாத உணவு தரும் ஒரு 'பௌல்' (கிண்ணம்) வைத்திருந்தார் என்றும் அது இன்றும் இந்த உலகில் எங்கோ இருப்பதாகவும் அதைத் தேடி பலர் திரிவதாகவும் கேள்விப் பட்டிருக்கிறேன். இது மேற்கத்திய கற்பனை அல்லது நிஜம் என்றால் ருத்ரவீணை நமது நாட்டு கற்பனை அல்லது நிஜம்.

அப்படிப்பட்ட ஒரு வீணை இன்றும் இருந்து அது மனிதனுக்கு தெரிய வந்தால் என்னாகும் என்கிற கற்பனையில் உருவானதுதான் இந்த ருத்ரவீணை நாவல்.

தொலைக்காட்சியிலும் பல்லாயிரக்கணக்கா னோரைக் கொள்ளை கொண்ட இந்த நாவல் அகத்தியரின் கமண்டலத்தில் இருந்து பொங்கிய காவிரி போல என்னுள் பாகம் பாகமாக பெருக்கெடுத்து விட்டது. உங்கள் கையில் இருப்பது முதல் பாகம் மட்டுமே.

மற்ற பாகங்கள் தொடர்ந்து அணி வகுக்கும். பதிப்பகத் துறையில் ஒரு புது வேகத்துடன் நுழைந்திருக்கும் திருமகள் நிலையம் தயாரிப்பான இந்த நூலை வாசக உலகம் நன்கு வரவேற்கும் என்று நம்புகிறேன்.

அரிய நல்ல கருத்துக்களைக் கூறி ருத்ரவீணை வழி வகுத்தது. சரித்திரம், சமூகம் என்று இரு விதமாக சிந்தித்து புதுமையாக செயல் படவும் இது இடமளித்தது.

இதற்குமுன் 'ஐந்து வழி மூன்று வாசல்' என்கிற பெயரில் ஆனந்த விகடனில் இதே போல ஒரு சரித்திர சமூக முயற்சியை நான் செய்திருக்கிறேன். இது அந்த வரிசையில் வரும் ஒன்றாகும்.

என்னுள்ளிருந்து எழுதச்செய்யும் அந்த சிவமே நூலின் ஜீவன்.

*அந்த சிவத்தின் மலரடிகளில் இந்த நாவலை வைப்பதோடு, தொடர்ந்து திருமகள் பதிப்பகம் மூலம் அடுத்தடுத்த பாகங்களில் உங்களைச் சந்திக்கிறேன். வரவேற்று வாழ்த்தியருளுங்கள்.*

*தென்னாடுடைய சிவனே போற்றி!*

*என்னாட்டவருக்கும் இறைவா போற்றி!*

*அன்புடன்,*

**இந்திரா சௌந்தர்ராஜன்.**

★★★

# ருத்ரவீணை

## (முதல் பாகம்)

## 1



### அன்று

**அ**ன்று என்றால் இன்றிலிருந்து மிகச் சரியாக 302 ஆண்டுகளுக்கு முன்னால் சென்று விட வேண்டும்.

அன்றைய இந்தியாவை வடக்கில் மொகலாயர்களும் தெற்கில் மங்கம்மாள், சாந்தாஜி, கிழவன் சேதுபதி என்கிற மூன்று பேரும் பட்டா போட்டுக்கொள்ளாத குறையாக ஆண்டு கொண்டிருந்த காலம் அது. அதாவது கி.பி.1700.

குறிப்பாக தஞ்சையில் வீர சிவாஜியின் சகோதரன் சாந்தாஜி ராஷ்ட்ரச் சிறப்புடைய ஆட்சியை நிறுவி சோழநாட்டுக்குள் மஹாராஷ்ட்ரர்களைக் குடியேற்றி தன் பிடிக்குள் வைத்திருந்தான்.

மதுரையும் திருச்சியும் மங்கம்மாளின் பிடியில் நாயக்கர் ஆட்சியை நடத்திக்கொண்டிருக்க - கடலோரமாக ராமநாதபுரத்தில் மட்டும் தமிழனாகிய சேதுபதி மறவன் ஆண்டு கொண்டிருந்தான்.

கூட்டிக்கழித்துப் பார்த்தால் தென்பகுதியில் உருது, தெலுங்கு, தமிழ், மராத்தி என்கிற மொழிகளில் தமிழ் சற்றுப் பின் தங்கியிருக்க-மற்ற மூன்றும்தான் முன்னிலை வகித்தது.

காலகட்டம் அப்படி!

இதில் தஞ்சையில் மட்டும் ஒரு தனி உணர்ச்சி பரவிக்கிடந்தது.

மஹாராஷ்ட்ராவில் மொகலாயர்களுக்கு எதிராக வீர சிவாஜி ஆண்டு கொண்டிருந்தான். பாரதம் முழுவதையும் வசப்படுத்தி பாரதத்தை இந்து ராஷ்ட்ர பூமியாக்க வேண்டும் என்பது சிவாஜியின் கனவு.

டெல்லியில் ஔரங்கசீப் ஒரு மகத்தான ஆட்சியை வழங்கிக் கொண்டிருந்தார். ஔரங்கசீப் பற்றி பிழையான வரலாற்றுப் பார்வையைத்தான் பலர் கொண்டிருக்கிறார்கள்.

'பெற்ற தந்தையைச் சிறை வைத்தவன்'-

'இசைச் சிறப்பு அறியாதவன்'-

'மிகப்பெரிய கருமி' என்றெல்லாம் ஔரங்கசீப் பற்றி கருத்துக்கள் நிலவுகின்றன. ஆனால், அதில் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை.

ஔரங்கசீப் மிகத் திட்டமிட்ட ஒரு நல்லாட்சியை நடத்திக் கொண்டிருந்ததாகவே தோன்றுகிறது. இதனால், சிவாஜியால் இந்து ராஷ்ட்ரத்தைப் பெருமளவில் மக்கள் துணையுடன் அன்று கொண்டுவர இயலவில்லை.

இருந்த போதிலும் தஞ்சை மட்டும் அவன் பிடிக்கு வந்தது. அதையும் சிவாஜியின் சிற்றன்னை மகன் சாந்தாஜியிடம் ஒப்படைத்து ஆட்சியை நடத்திக் கொண்டிருந்தான்.

இப்படியாக தஞ்சைக்கு அதாவது சோழநாட்டுக்கு நான்கு புறத்திலும் நான்கு விதமான கலாசாரங்கள் பரவிக்கிடந்தன. அதே சமயம் ஒரு வித இந்துத்வ மனப்பான்மை பலமாகவும் முகமதியர்கள்மேல் ஒரு வித கோபமும்கூட இருந்ததாகக் கூறலாம்.

இப்படி ஒரு காலகட்டத்தில் கி.பி.1700-ல் அதிலும் ஆடி மாதத்தில் அதே சமயம் மார்கழியில் வரும் திருவாதிரை நாளை மனதில் கொண்டு ஒருவர் தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களில் ஒரு பக்கரி போல வலம் வந்து கொண்டிருந்தார்.

அறுபது வயது மதிக்கும்படியான தோற்றம். நாடோடியாய் அலைந்து திரிந்ததால் கறுத்துவிட்ட தேகம். தலையில் அழுக்குத் துணியால் அமைந்த பாகை. தாடையிலோ குறுந்தாடி. ஆனால் கண்களில் படு தீர்க்கம் அவரிடம்...

உடுப்பு அன்றைய இஸ்லாமிய யாத்ரீகர்கள் தரிக்கும் பருத்தியாலான பைஜாமா குர்தாவாகத்தான் இருந்தது.

'நவாப் ஜான் பாபா' என்னும் பெயர் கொண்ட அவரது ஒரு தோளில் அவரது துணிப்பை தொங்கியது. மறுதோளில் ஒரு கன்னிப் பெண்ணை ஆரோகணித்திருப்பது போல வீணை ஒன்றை சுமந்து கொண்டிருந்தார்.

வித்தியாசமான வீணை அது! சாதாரணமாக வீணைகள் பிரதானமாய் பெரிய குடம் ஒன்றை முகமாகவும் அதிலிருந்து நீளும் தட்டையான தந்திப் பாதையுடன் முடிவில் சிறிய ஒரு குடம் கொண்டும் அங்கே ஸ்ருதியை கூட்டிக் குறைக்கத் தோதாக விஜ்ஜைகளுமாய்த்தானிருக்கும்.

ஆனால் பாபாவிடம் உள்ள வீணை அவ்வாறு இல்லாமல் மிக வித்தியாசமாக இருந்தது. தேர்ந்த இசை விற்பன்னர்களுக்கு மட்டும்தான் தெரியும்-

அது 'ருத்ர வீணை' என்று!

தடித்த உறுதியான தந்திக்கம்பி. அதன் மீட்சியின் போது உருவாகும் நாதத்தை ஒரு பாத்திரத்தில் வாங்கிக்கொள்வது போல் இருபுறத்திலும் அமைந்த குடங்கள் என்று ருத்ரவீணை மட்டும் எப்பொழுதும் தனித்துவத்துடன் இருக்கும்.

எடுத்து மடியில் வைத்து வாசித்து இசையெழுப்ப நிச்சயமாக பேராண்மை வேண்டும்.

இத்தனைக்கும் சோழநாடு இசையில் மேன்மையான நாடு. நீடாமங்கலத்தில் வாய்ப்பாட்டு பாடுபவர்கள் அனேகர். விட்டால் விடிய விடிய ஆலாபனையிலேயே ஆளைக் கட்டிப்போட்டு விடுவார்கள்.

திருவாரூர் பக்கமும் திருக்குவளைப் பக்கமும் போனால் நாதஸ்வரச் சக்கரவர்த்திகளைப் பார்க்கலாம்.

தஞ்சைக்குள் எல்லாம் கலந்த கூட்டம் ஒன்று இருந்தது. சாந்தாஜியும் தன் அவையில் இசைக் கலைஞர்களுக்கு மிக முக்கியத்துவமளித்திருந்தான்.

பெரிய கோயிலில் வாய்ப்பாட்டும் நாட்டியமும் நடக்காத நாளில்லை எனலாம். போதாக்குறைக்கு ஒயிலாட்டம், மயிலாட்டம், கரகம் என்கிற வயல்வெளிக் கலைகளும் தழைத்துக் கிடந்தன.

'தளும்பத் தளும்ப தண்ணீர் ஓடும் ஓர் ஆறு போதும்... அது ஆயிரம் கலைகளை தன் முதுகில் கட்டி இழுத்து வந்து கரையில் சேர்த்துவிடும்' என்பார்கள்.

அது சத்தியமான உண்மை என்பது போல் திகழ்ந்த தஞ்சைக்கே அந்த ருத்ரவீணை மட்டும் சற்று புதிய விஷயம்.

அதைக் கற்பிக்கவோ, இல்லை அதை வைத்து வாசிக்கவோ யாரும் தயாராகவில்லை.

ஆசைப்பட்ட சிலரும்கூட அதன் பின்புலம் தெரிந்து தயங்கினார்கள்.

அந்த வீணையும் அன்னை பராசக்தி திருச்சிலையும் ஒன்றாம்!

அதை பயபக்தியோடுதான் தொடவேண்டுமாம். பயன்படுத்த வேண்டுமாம். தவறி கை, கால் மேல் பட்டாலும் தோஷமாம். அது அந்த உமையை உதைத்த பாவத்தைத் தந்துவிடும். எல்லாவற்றிக்கும் மேலாக அதை பூஜையறையில் பூசனைப் பொருட்களோடுதான் வைத்துப் பராமரிக்க வேண்டும். ஒரு மூலையில் கிடக்க அது சாதாரண இசைக்கருவி கிடையாது என்றெல்லாம் சொல்லப்பட்டதால், எதற்கு வம்பு என்று யாரும் ருத்ர வீணையை வைத்துக்கொள்ளத் துணியவில்லை.

அவ்வளவு ஏன்... தஞ்சை மேலவீதியில் ஜம்புநாதம் என்று ஒரு இசைக்கருவி தயாரிப்பவன் இருந்தான். வீணை செய்வதில் சமர்த்தன் இவன். வீணைக்கு என்று ஒரு மரம் இருக்கிறது. அதைத் தேடிப்பிடித்து அதில் தேவையான அளவு தண்டுப்பாகத்தை வெட்டி எடுத்து வந்து அதைக் குடைந்து, பின் உலரப்போட்டு ஒரு வீணை செய்ய எப்படியும் ஒரு மாதமாகும் இவனுக்கு.

ஆனால் லட்சம் பொன் தந்தாலும் ருத்ரவீணையை மட்டும் தான் செய்து தரமுடியாது என்பான்.

காரணம், ‘அதைப் பழுதின்றிச் செய்ய பரமன் அருள் வேண்டும். சிறு பிழை இடையில் நிகழ்ந்தாலும் உயிர் போய் விடும்’ என்றெல்லாம் நம்பிக்கைகள் நிலவிக்கொண்டிருந்தன.

எனவே ருத்ரவீணை என்பதே ஒரு அரிய காட்சிப் பொருள் போன்றதாக இருந்துவிட்ட நிலையில்தான் பாபா அத்துடன் திருவாதிரை நாளைக் குறிவைத்து ஆடிக்கருக்கலில் தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களில் சுற்றித் திரிந்தபடி இருந்தார்.

இப்படிச் சொல்வதுகூடத் தவறு.

அவர் புராணச் சிறப்புடைய தோடிபுரம் என்கிற ஊர் எங்கே இருக்கிறது என்று தேடிக்கொண்டிருந்தார் என்றால் அது சரியாக இருக்கும்.

அன்று அவர் இருந்த ஊரின் பெயர் செம்பொன் களரி. சிறிய கிராமம்தான். ஐம்பது குடிசைகள் இருந்தால் அதிகம்...

அதில் வாழ்பவர்களும் வயல்வெளி வேளாண்குடி மக்கள்.

வயல்களில் எல்லாம் நல்ல நெல் விளைச்சல் என்று சொல்ல முடியாது. பாதி விளைந்து மறுபாதியும் மழை நீருக்காகக் காத்துக்கொண்டிருந்தது.

ஆடி மாதத்தில் கன்னிப்பெண் சதிராடிக்கொண்டு வருவது போல வரவேண்டிய காவிரியில்கூட நீரில்லை.

காலம் சில சமயங்களில் கண்ணாமூச்சி விளையாடுவது உண்டு. அப்பொழுது அது மழையை ஒளித்து வைத்துவிட்டு 'கண்டுபிடி பார்க்கலாம்' என்று ஜனங்களைத் தேடித் திரிய விட்டுக் கொண்டிருப்பது போல தோன்றியது.

நடந்தே பயணிக்கும் பாபாவை தாகம் வாட்டிற்று. உச்சிச் சூரியனை அண்ணாந்து ஒரு பார்வை பார்த்துவிட்டு அந்தக் கிராமத்து குடிசை ஒன்றை நோக்கி நடந்தார்.

கட்டிலில் ஒரு முதியவர் நோயாளி போல படுத்திருக்க, அந்த வீட்டுப் பெண் வெளியே வைக்கோல் கொட்டாரத்தை ஒட்டி அடுப்பெரித்து சோறு பொங்கிக்கொண்டிருந்தாள்.

பாபா வரவும் ஒரு பார்வை.

''என்ன வேணும்?''

''ஒரு வாய் தண்ணீர்...!''

''இருங்க. தாரேன்...!'' என்றவளாய் உள்ளே ஓடியவள் அலறிக்கொண்டு ஓடிவந்தாள். பாபா அவளை பதிலுக்கு அதிர்வோடு பார்த்தார். அவளோ நடுங்கியபடி குடிசைக்குள் கையைக் காட்ட உள்ளே தூளி ஒன்றில் குழந்தை ஒன்று தூங்கிக்கொண்டிருந்தது. அதற்குக் கீழே எங்கிருந்தோ வந்திருந்த நல்லபாம்பு ஒன்று படம் விரித்தபடி!

அவளுக்குக் கண்டங்கழுத்தில் குழிவிழுந்து வியர்வை பெருக ஆரம்பித்தது. அச்சத்தில் உடம்பெல்லாம் நடுங்கியது. பேசக்கூட வாய் வரவில்லை. பாபாவுக்கும் ஒரு வினாடி சுருக் கென்றுதான் இருந்தது. இருந்தாலும் சுதாரித்தவராகத் தன் தோள்மேல் கிடந்த வீணையை எடுத்து மடிமேல் வைத்துக் கொண்டு நிதானமாக வாசிக்க ஆரம்பித்தார்.

அந்தப் பெண்ணுக்கு எரிச்சலாக வந்தது.

'ஒரு கம்பையோ, கழியையோ எடுத்துக்கொண்டு சென்று அதை அடித்து தன் குழந்தையை மீட்டுத்தருவார் இவர்' என்று அவள் நினைத்திருக்க வேண்டும். நேர்மாறாக வீணையை வாசிக்க

ஆரம்பித்தால் எப்படி இருக்கும்? ஆனால், பெருகி வழிய ஆரம்பித்த அந்த வீணை இசை அவளை வாயடைக்க வைத்தது. அவள் நின்று கொண்டிருந்த தலைப்பரப்பிலும் மெல்லிய நடுக்கம் ஒன்று உருவாகிப் பரவுவது போல ஒரு பிரமை அவளுக்கு.

உள்ளே குழந்தையை நோக்கியபடி படம் எடுத்திருந்த அந்த நாகமும் வீணை இசையால் கவரப்பட்டது போல திரும்பியது. விறுவிறுவென்று அவரை நோக்கி வர ஆரம்பித்தது.

வந்து அவர் முன் படமெடுத்து நின்றது.

அவரும் சட்டென்று வாசிப்பை நிறுத்தினார். அப்படியே கைகளைக் கூப்பினார். அதுவும் 'சரி. நான் வருகிறேன்' என்பது போல திரும்பி ஊர்ந்து சென்று மறைந்தும் போயிற்று!

அந்தப் பெண்ணின் கண்களில் ஏகாண்ட விரிவு. ஓடிப்போய் குழந்தையை அள்ளி மார்பில் போட்டுக்கொண்டு திரும்பி வந்தவள் கேட்டாள்

''எப்படிங்க... எப்படிங்க சாமி அந்தப் பாம்பு திரும்பி வந்துச்சு? நீங்க வாசிச்சதாலையா?''

அவரிடம் ஒரு அனந்தமான புன்னகை.

''ஆம் தாயே...! புன்னாகவராளியை இந்த வீணையைக் கொண்டு இசைத்தேன். அது அந்த நாகத்தை மயக்கி திசை திருப்பிவிட்டது.''

''புன்னாகவராளியா...? ஆமாம் நீங்க யாரு?''

''நான் ஒரு நாடோடி தாயே...!''

''பேரு...?''

''நவாப் ஜான்... ஆனால் என் சொந்த ஊரில் நவாப் ஜான் பாபா என்பார்கள்.''

''பாபா...!''

''அப்படியே நீ கூப்பிடு... கொஞ்சம் பருகத் தண்ணீர் கேட்டேனே...''

''சோறே போடுறேன் சாமி. என் குழந்தையைக் காப்பாத்துன மகாத்மாவாச்சே நீங்க...''

அவள் ஆவலாக தண்ணீர் கொண்டுவர ஓடினாள். குழந்தையும் மண்ணில் தவழத் தொடங்கியது. அவரைப் பார்த்துச் சிரித்தது. அவர் முகத்தில் ஒரு வித நிம்மதிப் புன்னகை!

# இன்று

## தோடிபுரம்.

காவிரியிடம் குதூகலமான பாய்ச்சல்!

நல்லவேளையாக கர்நாடகாவில் நிறைய மழை பெய்து கண்ணம்பாடி அணையும் நிரம்பி வழிந்ததால் தண்ணீர்ச் சண்டைக்கு நடுவிலும் நிறைய தண்ணீரை போகட்டும் என்று அனுப்பி வைத்திருந்தார்கள்.

அதனால் இக்கரை... அக்கரை இரண்டும் திமிலோகப் பட்டது. சரியான செங்கழுநீர். புதிய மழை நீரே இப்படித்தான். வழியில் தழைத்தும் போகட்டும் என்று பிழைத்தும் வளர்ந்திருந்த தாழைச்செடிகளும் நீர்முள்ளிகளும் கூட்டம் கூட்டமாய் ஏராளமாய் வெள்ளத்தில் மிதந்து வந்து கொண்டிருந்தன.

தோடிபுரம் படித்துறையின் பாதிப்பாகம் வரை காவிரித் தண்ணீர். அந்தப் படி ஒன்றின் மேல் அமர்ந்தபடி துவைக்கக் கொண்டுவந்திருந்த அழுக்குத் துணிகளுக்கு சோப்பைப் போட்டுக் கொண்டிருந்தாள் கோமதிப்பாட்டி.

எழுபது வயது மொட்டைப்பாட்டி. காவியில் மடிசார் உடுத்தி மொட்டையடித்துக்கொண்டு அது தெரியாதபடி முட்டாக்கும் போட்டிருந்தாள்.

இத்தனை வயசுக்கு எதற்கு ரவிக்கை என்று அதை உதறிவிட்ட அவளது கோலம் இன்றைய நாளைக்கு மிகப் புதியது. இன்று யார் இப்படி புருஷன் போனால் காவிக்குள் போய் புகுந்து கொள்கிறார்கள்!

ஆனாலும் கோமதி அந்தக் காலத்து மனுஷி.

எனவே அந்தக் கோலத்தை ஒரு திருக்கோலம் போலவே நினைத்துவிட்டாள். அவளது பேத்தி அலமு படித்துறையில் அட்டூழியம் பண்ணிக்கொண்டிருந்தாள்.

தோடிபுரம் ஹைஸ்கூலில் ஒன்பதாம் வகுப்பு படிக்கிறாள். இரட்டை ஜடை, பாவாடை தாவணி என்று பார்க்க பரம திவ்யமாய் இருப்பாள். நல்ல நெய் மணக்கும் பிராம்மணச் சாப்பாடு. அன்றாடம் கீரை உண்டு. எனவே உடம்பு வனப்புக்கு கேட்கவேண்டுமா என்ன?

தளதளவென்று பதிமூணு வயசில் இருபது வயது உடம்போடு இருந்தாள். ஆனாலும் குறும்பு விளையாட்டு இவைகளில் ஏழெட்டு வயசுப் பெண்ணாகத்தான் இருந்தாள்.

இல்லாவிட்டால் அந்த வெள்ள நீரில் பொதேல் பொதேல் என்று குதிப்பாளா என்ன?

''சண்டாளி... செத்த சும்மா இரேன். பொம்மனாட்டியா லட்சணமா உக்காந்து குளிக்காம எதுக்கு இப்படி விடலைப் பசங்க மாதிரி குதிக்கறே...?'' என்று கத்தல் வேறு கோமதிப் பாட்டியிடம்...

பக்கத்திலேயே அக்ரஹாரத்து மாமி ஒருத்தியும் துணி மூட்டையை அவிழத்துக்கொண்டிருந்தாள்.

''நன்னா சொல்லுங்கோ... அலமு வயசுக்கு வந்துட்ட ஒரு பொண்ணாவே நடந்துக்கறதில்லை. அப்பா அம்மா இருந்து வளத்திருந்தா இப்படி வளத்திருப்பாளான்னு நாளைக்கு உங்களை யாரும் சொல்லிடக்கூடாதோல்லியோ...?''

''அதே கவலைதான் எனக்கும்... அவா ரெண்டு பேரும் ட்ரெய்னிங்னு தென்னாப்பிரிக்காவுக்குப் போய்ட்டா. இங்க இது என்னைப் பாடாய் படுத்தறது.''

கோமதிப்பாட்டியின் அந்தக் கோவத்தை அலமு லட்சியமே செய்யவில்லை.

''பாட்டி, இங்க பாரேன்...'' என்று அவளை கைச்சொடக்குப் போட்டு அழைத்து வாயை இருகையாலும் விகாரமாய் பிடித்து இழுத்துக்காட்டி 'பே' என்று பரிகாசம் செய்தாள்.

கோமதிப்பாட்டியிடமும் கோவம் சிண்டைப் பிய்த்தது. கைவசம் துவைபட்டுக் கொண்டிருந்தது அவளது ரவிக்கை. அதை எடுத்து அப்படியே வீசினாள். அது பறந்து வந்த வேகம் பார்த்து அலமு மளுக்கென்று விலகிக்கொள்ள, அது அவளைக் கடந்து பறந்து சென்று அப்பொழுதுதான் படித்துறைபடியில் காலை வைத்திருந்த மைதிலியின் முகத்தில் பட்டு மூடி அவளுக்கு ஒரு தினுசான வரவேற்பைக் கொடுத்தது

''அய்யோடா... அம்மாடி மன்னுக்சுடுடிம்மா. நீ வரதை பாக்கலே...'' என்று கோமதிப்பாட்டி உடனே கத்த, பக்கத்து மாமியும்-

''யாரு மைதிலியா... வா.'' என்று வரவேற்க சரியாக இருந்தது. மைதிலி அந்த ஈர ரவிக்கையை கோமதிப்பாட்டியை நெருங்கி நீட்டியவளாகச் சிரித்தாள். இடுப்பில் பித்தளைக்குடம்!

''வா மைதிலி...! என்ன ஆத்துக்குத் தண்ணி எடுத்துண்டு போக வந்தியா?''

பாட்டியின் கேள்விக்கு அவள் தலை ஆமோதிப்பாக ஆடியது.

''கொண்டா... நானே உள்ளபோய் நல்ல சுத்த ஜலமா பிடிச்சுத்தரேன்...'' என்றபடி பாட்டியே குடத்தை வாங்கிக் கொண்டு ஆற்றுக்குள் இறங்கி நடந்து ஒரு இடத்தில் தண்ணீரை மொண்டுகொண்டு வந்து தந்தாள்.

அதைப் பெற்றுக்கொண்டவளும் 'இந்த ஜலம் அந்த பிள்ளையாருக்கு.' என்கிற மாதிரி கரையோரமாய் வன்னி மரத்தடியில் இருந்த பிள்ளையாரை நோக்கி கையைக் காட்ட பாட்டிக்குப் புரிந்தது.

''என்ன... பிள்ளையாருக்கு அபிஷேகமா. உம்... போய் பண்ணு. அவர்தான் வாய் பேசமுடியாத உனக்கு ஒரு நல்ல மாப்பிள்ளையை அனுப்பி வைக்கணும்.''

என்று பாட்டி சொல்லவும் மைதிலி என்னும் அந்த இளம் பெண்ணின் முகத்தில் சன்னமாய் ஒரு சலனம்.

இருந்தும் அதை உடனே போக்கிக்கொண்டு பிள்ளையாரை நோக்கி நடந்தாள்.

அவரை நெருங்கி அப்படியே ஜலத்தை அவர் மேல் கவிழ்த்துவிட்டு சேலைமுந்தானையில் அடக்கமாய் வைத்து கொண்டு வந்திருந்த செம்பருத்தி பூவில் இரண்டை எடுத்து பிள்ளையாரின் தலைமேல் வைத்தாள்.

பார்த்துக்கொண்டேயிருந்த கோமதிப்பாட்டியிடம் இருந்து உஷ்ணமாய் பெருமூச்சு வெளிப்பட்டது. அப்படியே ஆதங்கமும்...

''நாள் தவறினாலும் இவ இந்த பிள்ளையாருக்கு அபிஷேகம் பண்ணத் தவர்றது கிடையாது. ஆனா, அந்தப் பகவான்தான் கண்ணைத் திறக்கமாட்டேங்கறான்...''

''என்ன பண்றது... வாய் பேசமுடியாத ஊமையா போய்ட்டா. எந்த ஆம்பளை பெரிய மனசு பண்ணி இவளைப் பண்ணிக்கப்போறானோ... பார்க்க ரதியாட்டம் இருக்கா...!''

இது பக்கத்து மாமி. அவர்கள் ஆதங்கித்து முடிக்க, திரும்பவும் குடத்துடன் படித்துறைக்கு வந்து குடத்தைக் கொடுத்து நீரை மொண்டு கொண்டாள்.

அந்த வாண்டு அலமு அவள் படி ஏறும்போது பார்த்துச் சிரித்தது. அப்படியே... ''சீக்கரமே விவாகப் பிராப்தி ரஸ்து மைதிலி...'' என்று பெரிய முனிவரின் தோரணையில் ஆசீர்வதித்து கையை ஆட்டியது.

மைதிலி அதை ரசித்தாள். செல்லமாய் கன்னத்தை வருடியும் விட்டாள்.

தொடர்ந்து நடந்தாள்.

சில அடிதான் போட்டிருப்பாள்... எதிரில் சிலர் தாறுமாறாக ஓடி வந்தபடி இருந்தனர்.

ஒருவன் கத்திக்கொண்டே முன்னால் ஓடிவந்து கொண்டிருந்தான்.

''நவுந்து ஓடுங்க... கோவில் மாடு மிரண்டு முட்ட வந்துக்கிட்டிருக்குது...''

அவன் அலறலுக்கு ஏற்ப நல்ல கறுப்பு நிறக் காளை ஒன்று கண்ணில் வெறியோடு ஓடி வந்தபடி இருந்தது.

மைதிலி அதைப் பார்த்து விக்கித்துப்போக அது அவளையே நோக்கி வருகிற மாதிரிகூட இருந்தது.

ஒரு புறம் மாட்டின் பாய்ச்சல்.

எதிர்திசையில் ஒரு டி.வி.எஸ்-50 வாகனத்தின் மேல் தோடிபுரம் பிரசிடென்ட்டின் மகன் சாமிநாதனும் மைதிலியின் அண்ணன் சங்கரனும் ஜோடியாக வந்து கொண்டிருந்தனர்.

அவர்களில் சாமிநாதன் மாட்டைப் பார்த்துவிட்டு பிரேக்போட, மாடு எதிர்பார்த்த மாதிரியே மைதிலியை நோக்கித்தான் திரும்பியது.

காலால் அது நிலத்தைக் கீறிய விதமும் மூச்சுக்காற்றின் அரவமும் கண் முழியின் வெறிப்பும் அவளை மிரட்டாய் மிரட்ட அவளும் இடுப்புக் குடத்தைக் கீழே போட்டுவிட்டு பயத்தில் காதைப் பொத்திக்கொண்டாள்.

நல்லவேளை...

ஒரு தடுப்புச்சுவர் மாதிரி நடுவில் சரேலென்று புகுந்து நிமிர்ந்தான் சாமிநாதன்.

மிரட்சியின் உச்சமாய் வெறித்த அந்தக் காளையின் கொம்பையும் எகிறிப்பிடித்தான்.

சினிமாவில் வரும் ஹீரோக்கள் காட்டும் அதே சாகசம். மைதிலி ஓடிப்போய் அண்ணன் சங்கரனை ஒட்டி நின்றுகொள்ள - படித்துறையே நின்று அந்தக் காட்சியை வேடிக்கை பார்த்தது. அதில் பல் விளக்கியபடி நிற்கும் ஆண்களும் அடக்கம்.

மாடு சாமிநாதன் பிடியில் ஒரு வழியாக மடங்கினாலும் ஒரு உதறு உதறி அவனைத் தூக்கி எறிந்துவிட்டுத் திரும்பி ஓடியது...

சங்கரன் கீழே விழுந்த சாமிநாதனை சமீபத்துத் தொட்டுத் தூக்கினான்.

மைதிலி அப்பாடா என்று நிம்மதிப் பெருமூச்சுவிட்டாள்.

''சாமிநாதா...! உனக்கு ஆனாலும் தைரியம்டா...'' படித்துறையில் இருந்து கோமதிப்பாட்டிதான் முதல் பாராட்டுக் குரல் கொடுத்தாள்.

''டேய் சாமி... அடிகிடி பட்டுடுத்தாடா...?''

சங்கரன் கனிவோடு விசாரிக்க, அந்தச் சூழலில் ஒருவன் மட்டும் லேசாக ஒரு மாதிரி சிரித்தான்.

சாமிநாதனும் அவன் சிரிப்பதைப் பார்த்துவிட்டான். கை கால்களில் ஒட்டியிருக்கும் மண்ணைத் தட்டிவிட்டபடியே அவனை நெருங்கினான். சங்கரனும் மைதிலியை அனுப்பிவிட்டு அவனை நெருங்கினான்.

''என்னடா சிரிப்பு?''

''சிரிக்காம...? இது ஒரு சோதா மாடு. இதை அடக்கிட்டேன்னு இந்தக் கிழவி பாராட்டுனா சிரிக்காம என்ன பண்றது...?''

''ஏன்... இப்பக் கேள்வி கேக்கற? நீ பூந்து பிடிச்சிருக்க வேண்டியதுதானே...?''

''நீதான் பெரிய ஹீரோ மாதிரி முந்திக்கிட்டியே. ஒழியுது போன்னுதான் உட்டுட்டேன்.''

''ஆமாம்... இல்லாட்டி கிழிச்சிருப்பே...''

சாமிநாதனின் பதில் அவனைக் குத்திக் கிழித்திருக்க வேண்டும். ஒரு மாதிரி பார்த்தான்.

''என்னடா பாக்கறே...?''

''பாக்காம... பெரிய தைரியசாலி பாரு... நீ!''

''ஏண்டா...? என் தைரியத்துக்கு என்ன...?''

''அப்ப தாசி பங்களாப் பக்கம் போய்ட்டு வர்றது...?'' அவன் அப்படிச் சொன்ன நொடி சாமிநாதன் கன்னத்தில் பளாரென்று ஒரு அறை விழுந்த மாதிரி ஆகிவிட்டது.

பல வினாடிகளுக்குப் பேச்சு வரவில்லை.

''இங்க மாட்டைப் பிடிக்கறதும் ஆட்டைப் பிடிக்கறதுமா வீரம்...? தாசி பங்களாவுக்குப் போய் உள்ளையும் என்ன இருக்குன்னு பார்த்துட்டு வந்தா அது வீரம்...!

அதுவும் சாதாரண வீரமில்ல...

முந்நூறு வருஷத்துல யாரும் காட்டாத வீரம். காட்டு பாப்போம். அப்ப ஒப்புக்கறேன் நீ வீரன்கறதை...!''

அவன் முகத்தில் அறைந்த மாதிரி சொல்லிவிட்டுச் சென்று விட்டான்.

சாமிநாதன் சோர்ந்து போய் ஒரு ஓரமாய் நின்றுவிட, சங்கரன் முகத்தில் பீதி வழிய ஆரம்பித்தது.

''சாமி... வேண்டாண்டா. இவன் இதுதான் சாக்குன்னு ஏத்திவிடுறான். இவன் பேச்சைக் கேட்டு வருத்தப்படாம கிளம்புடா...''

பேச்சோடு சாமிநாதனை கையைப் பிடித்து இழுத்தான்.

''இல்லடா சங்கரா... அவன் சொன்னதும் வாஸ்தவம். ஆட்டையும் மாட்டையும் பிடிக்கறதா வீரம்? தாசி பங்களாங்கற ஒரு பெரிய முந்நூறு வருஷத்து மர்மத்தை உடைக்கிறதுதாண்டா வீரம்.''

சாமிநாதன் கண்கள் சிவக்க சொன்னவிதமே பயங்கரமாக இருந்தது.

''போடா பைத்தியம்... ராணி பங்களாங்கற அந்த தாசி பங்களா விஷயத்துல மூக்க நுழைக்கறதும் பாம்பு புத்துக்குள்ள கையை விடுறதும் ஒண்ணுன்னு உனக்குத் தெரியாதா...? விவேகமா யோசிச்சுப் பாருடா...!''

சங்கரன் அவனைச் சமாதானப்படுத்தியபடியே மொபெட்டை நெருங்கினான். சாமிநாதனோ சமாதானம் ஆன மாதிரி தெரியவில்லை.

சாமிநாதன் எதையாவது தீவிரமாக யோசிக்கத் தொடங்கி விட்டால் நகம் கடிக்கத் தொடங்கிவிடுவான். அவனுக்குக் கண்களும் சற்று பெரிது. அது மேலும் அகண்டுவிடும்.

காவக்காரச் சாமிகளான அய்யனாரையும் முனீஸ்வரனையும் ஞாபகப்படுத்துகிற மாதிரி இருக்கும்.

இப்பொழுதும் அப்படித்தான் இருந்தான்.

''என்னடா சிந்தனை...? நான் சொன்னது உன் காதுல விழுந்துதா இல்லையா...?''

''விழுந்துச்சு... விழுந்துச்சு...!''

''விழுந்த பிறகும் எதுக்குடா இப்படி யோசிக்கிறே...?''

''யோசிக்காம...?''

''டேய்... அங்க யோசிக்க ஒண்ணுமில்லடா. இந்தத் தோடிபுரமே அந்த தாசி பங்களா விஷயத்துல எனக்கென்னன்னு இருக்கு. அதோட அங்க போய் நோட்டம் போடுறதும் தாசி சுந்தராம்பாளை அவமானப்படுத்தறதும் ஒண்ணுன்னு எல்லாரும் நினைக்கும் போது நீ மட்டும் ஏண்டா அந்த விஷயத்தை ஒரு மர்மமாவே நினைக்கறே...?''

''அப்ப அங்க எந்த மர்மமும் இல்லேங்கிறியா...?''

''நான் அப்படிச் சொல்லலை. அங்க போறதால என்ன சாதிச்சுடப்போறே...? போகாததால நமக்கு என்ன குறைஞ்சுடப்போறது... அதை யோசிச்சியா...?''

''இப்ப பார்த்தேல்ல... ஒருத்தன் என்ன கேட்டான்? சரியான ஆம்பளையா இருந்தா அந்த பங்களாக்குப் போய்ட்டு வந்து பேசு, ஒப்புக்கறேன்னான்ல... அப்ப என்ன அர்த்தம்...? இந்த ஊர்ல ஆம்பளைகளே இல்லேன்னுதானே அர்த்தம்...?''

''அவன் கிடக்கறான்... தெருவுல போறவன் ஆயிரம் சொல்வான். அதுவா பெருசு...? நீ அதையே நினைச்சுண்டு என்கிட்ட ஆர்கியூ பண்ணாதே. வண்டிய எடு. டயமாச்சு பார். இந்த அப்பா ஒண்ணு... 'ஆத்துப் பக்கம்தானே போறே, தர்ப்பையைப் பறிச்சுண்டு வா. அதைப் பறிச்சுண்டு வா'ன்னு...''

அலுத்துக்கொண்டான் சங்கரன். மொபெட்டும் சில நொடிகளில் சீற ஆரம்பித்தது!

## 2



### அன்று

**ஊ**ர் எல்லையில் ஒரு பட்டியக்கல்லில் தசரதராஜபுரம் என்றிருந்தது. உற்றுப்பார்த்த பாபா சரிதான் என்று அந்த ஊருக்குள் நுழைய ஆரம்பித்தார். அப்படியே அண்ணாந்து வானத்தைப் பார்த்தார். உச்சிப்பொழுதில் எங்கு பார் ஒரே அனல்காற்று.

அவருக்கும் தொழுகை செய்யும் நேரம் வந்து விட்டதாகத்தான் தோன்றியது. சுற்றுமுற்றும் பார்த்தார். அருகில் ஒரு தென்னந்தோப்பு தெரிந்தது. கீழே விஸ்தாரமாய் அமர்ந்து துண்டு விரித்து தொழுகை புரியலாம் என்னும்படி இருந்தது. அருகிலேயே ஒரு குளம் வேறு. அதில் பெரும்பாலும் நீர் வற்றிவிட்டிருந்தது. கொஞ்சம் போல் இருந்த நீரைப் பார்த்தவர் தோளில் சுமந்து கொண்டிருந்த வீணையை ஒரு சரியான இடமாகப் பார்த்து வைத்தார். பிறகு குளத்தில் இறங்கி கைகால்களை சுத்தப்படுத்திக்கொண்டு வந்தார். பருத்த அவரது துணி மூட்டையைப் பிரித்தவர் அதில் நன்கு மடித்து வைத்திருந்த ஒரு சீனப்பட்டு வஸ்திரத்தை எடுத்து தரையில் விரித்தார். பச்சை நிறத்தில் ஆன அந்தப் பட்டு வஸ்திரத்தின் நடுவில் பிறை நிலாத் துண்டு ஒன்றும் நட்சத்திரம் ஒன்றும் இருந்தது.

அதற்குமுன் மண்டியிட்டவர் கண்களை மூடிக்கொண்டு தொழ ஆரம்பித்தார்.

**அ**ந்த வீரர்கள் பார்ப்பதற்கு டெல்லிப் பட்டணத்தைச் சேர்ந்தவர்கள் போலத்தான் இருந்தனர். உருவத்தைப் பார்க்கும் பொழுதே அவர்கள் அச்சு அசல் இஸ்லாமியர்கள் என்பது நன்கு தெரிந்தது. சீராக வளர்க்கப்பட்ட குறுந்தாடி... உச்சி நெற்றியில் தொழுகை நெற்றிகளில் தோன்றும் அதே வெண்ணிறத் தேமல். தலையில் அவர்கள் தரித்திருந்த பாகையும் வித்தியாசமாகவே இருந்தது.

அவர்கள் மொத்தம் நான்கு பேர்.

நான்கு ஆகிருதியான புரவிகளில் அமர்ந்து கொண்டிருந்தனர். தஞ்சை வீதிகளில் அவர்களது புரவி தளர்நடை போட்டபடி இருந்தது.

தஞ்சை நகர வீதிகளிலும் சரியான நகரப் பரபரப்பு. சீமாட்டிகளும் தனவந்தர்களும் பல்லக்கிலும் சாரட்டிலும் போய்க் கொண்டிருந்தார்கள். பாதசாரிகளும் நிறையப்பேர் இருந்தனர்.

தமிழ் பேசும் சோழவேளாளர்கள், மராத்தி பேசும் மராத்தியர்கள், நெற்றியில் குங்குமம் தரித்த தெலுங்கு பேசும் நாயக்கர்கள், இவர்களுக்கு நடுவே மழுங்கச் சிரைத்த தலையின் உச்சியில் ஒரு விரல் பருமன் அளவில் குடுமிவைத்து அதுவும் கட்டப்பட்ட நிலையில் தென்பட்ட வடஇந்திய பிராமணர்கள் என்று தஞ்சை ஒரு கலவையாகக் காட்சி தந்தது.

போதாக்குறைக்கு அந்த வீரர்கள் வேறு அங்கே திரியவும் அந்த நொடி 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்று பாடிய் பூங்குன்றனார் இருந்தால் மிக மகிழ்ச்சி அடைந்திருப்பார் என்று தான் தோன்றிற்று.

டெல்லிப் பட்டணத்தில்கூட இப்படி பலதரப்பட்ட மக்களைப் பார்க்க முடியாது.

அந்தக் காட்சிகளை அந்த வீரர்கள் தங்களுக்குள் உருது மொழியில் ஸ்லாகித்துக்கொண்டனர். அவர்களில் ஒருவன் பாதசாரி ஒருவனை தன் குதிரையை முன் செல்லவிட்டு மறித்து நிறுத்தினான். அந்தப் பாதசாரியும் ஏறிட்டான்.

''நீ இந்த ஊர்க்காரன்தானே...?'' - மறித்த வீரன் நல்ல தமிழ் பேசினான்.

''ஆமாம்... நீங்கள்...?''

''எங்களைப் பார்த்தால் தெரியவில்லை? நாங்கள் டெல்லிப் பட்டணத்தவர்கள்...''

''அப்படியா...! அவ்வளவு தொலைவிலிருந்தா இந்த தஞ்சைக்கு வந்திருக்கிறீர்கள்...?''

''ஆமாம். இங்கே நாங்கள் தங்க நல்ல சத்திரம்சாவடி ஏதாவது கிடைக்குமா...?''

''ஆஹா... உலகுக்கே சோறு போடும் சோழநாடு அய்யா எங்கள் நாடு. இங்கே இல்லாத சத்திரம்சாவடியா என்ன...?''

அவன் பெருமை பொங்கப் பேசினான்.

''அதனால்தான் எல்லா மொழிக்காரர்களும் இங்கே மேயத்தொடங்கி விட்டார்களோ...?'' வீரனின் கேள்வியில் இளக்காரம்.

''என்ன செய்வது... இங்கே வாழ்பவர்களைவிட எப்பொழுதும் வந்தார் வாழ வழிசெய்வதே இந்த மண்ணுக்கு வழக்கமாகிவிட்டது...''

''சரிதான்... தோல்வியைக்கூட வெகு அழகாக கூறுகிறாயே...''

''தோல்விதான்... எங்கள் பேரரசர் ராஜராஜசோழச் சக்கரவர்த்திக்குப் பிறகு இந்த மண்ணே மாறித்தான் போய் விட்டது. வலியோர் பிடியில் அடங்குவதும் பின் விடுபடுவது மாகவே உள்ளது...''

அவன் வருத்தமுடன் பேசினான்.

''போகட்டும்... நான் உன்னை ஒன்று கேட்டால் கூறுவாயா...?''

''இப்பொழுதும் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் கூறிக்கொண்டுதானே இருக்கிறேன்.''

''இல்லை... நான் கேட்பது அது போன்ற கேள்வியில்லை...''

''வேறு என்ன...?''

''இந்த ஊரைச் சதா சுற்றிவரும் ஒருவரை உன்னால் சொல்ல முடியுமா...?''

''ஊரைச் சுற்றிவரும் ஒருவரா...? சரிதான். அரண்மனையில் இருக்கும் காவல்வீரர்கள்தான் எப்பொழுது பார் ஊரைச் சுற்றி வருவார்கள். அதிலும் புறாத் தபால்முறையை நிர்வகிக்கும் வாரியத்துக்காரர் என்றால் கேட்கவே வேண்டாம்...''

''அவரை நாங்கள் பார்க்க முடியுமா...?''

அந்த வீரன் கேட்கும் போதே ஒரு அரண்மனை வீரன் புரவி ஒன்றின்மேல் வேகமாய் அந்தப் பக்கமாய் வந்த வண்ணமிருந்தான்.

அவனது பாகையின் பின்புறம் மிச்சமிருந்த மடிப்பு வஸ்த்ரம் ஒரு கொடி போல காற்றில் பறக்க அவன் வரும்விதமே பார்க்க அலாதியாக இருந்தது.

''ஆஹா... என்ன ஒரு அதிர்ஷ்டம் உங்களுக்கு. நீங்கள் யாரைக் கேட்டீர்களோ... அதோ அவர்!''

அந்தப் பாதசாரி கைகாட்ட, அந்த அரண்மனை வீரன் தன்னை வித்யாசமான நான்கு வீரர்கள் பார்ப்பது தெரிந்து தன் புரவியை அவர்கள் அருகே கொண்டுவந்தான்.

அவர்கள் தங்கள் இஸ்லாமிய பாணியை விடுத்து பணிவாக ''வந்தனம் வீரரே...!'' என்றனர்.

பாதசாரியும் தன் வேலை முடிந்துவிட்டதாகக் கருதி விலகிக்கொண்டான்.

அரண்மனை வீரன் பேசத் தொடங்கினான்.

''நீங்கள்...?''

''நாங்கள் டெல்லிப்பட்டணத்தில் இருந்து வந்திருக்கிறோம். அங்கு அரண்மனையில் பணி புரிகிறோம்.''

''ஓ... டெல்லி பாதுஷாவின் வீரர்களோ...?''

''ஆம்... அதே சமயம் நேரடியாக அவரது நிர்வாகத்தில் இல்லாமல் அங்குள்ள ஒரு பகுதியை நிர்வகிக்கும் அமைச்சர் ஒருவரின் அவை வீரர்கள் நாங்கள்.''

''நல்லது... நீங்கள் நேராக தஞ்சை அரண்மனைக்கு சென்று வட்டகர் முத்திரை வில்லைகளைக் காட்டி விருந்தினராகத் தங்கலாமே...''

''மன்னிக்க வேண்டும். நாங்கள் இங்கு தங்கி அரசியல் செய்ய வரவில்லை. வேறு ஒரு விஷயமாக ஒரு மனிதரைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறோம்.''

''யார் அவர்...?''

''அவர் பெயர் நவாப் ஜான். அவரை எங்கள் பகுதியில் பாபா என்று அழைப்பார்கள். மிக வித்தியாசமான மனிதர். இமாலயம் பக்கமாய் உங்கள் சன்னியாசிகள் போல இவரும் சென்று திரும்பியவர்...''

''ஆச்சரியமாக இருக்கிறதே...!''

''இன்னும் பல ஆச்சரியங்கள் அவரிடம் உண்டு. ஒருவரைப் பார்த்த மாத்திரத்தில் அவர்களைப் பற்றி சொல்லிவிடும் சக்தி படைத்தவர். அற்புதமான வீணை இசைக் கலைஞர். பதினான்கு மொழிகள் எழுதப் படிக்கத் தெரிந்தவர்...!''

''சரி. அவருக்கென்ன...?''

''அவர் இந்தத் தஞ்சைப் பக்கம் வந்திருப்பதாக எங்களுக்குத் தகவல் கிடைத்தது. அதனால்தான் அவரைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறோம்...''

''இங்கேயா...? இங்கே அவருக்கென்ன வேலை...?''

''இந்த நாவலந் தேசத்திலேயே (இந்தியா) இந்தத் தஞ்சை மண்ணில்தான் சாஸ்திரீய சங்கீதம் நல்ல நிலையில் போஷிக்கப்படுகிறதாமே...?''

''ஆமாம்... இது கலைகளின் பூமி. அதற்கென்ன...?''

''அவரும் அடிப்படையில் ஒரு கலைஞர் அல்லவா...? எனவே கையில் ஒரு பெரிய வீணையோடு ஒரு பிச்சைக்காரப் பரதேசிபோல இந்த மண்ணிற்கு வந்திருக்கிறார். அனேகமாக இந்த ஊரில்தான் எங்காவது அவர் தங்கியிருக்க வேண்டும்.''

''இப்பொழுதும் அவரைக் கண்டறிய வேண்டுமா...?''

''ஆமாம். எங்கள் அமைச்சர் அவரைக் கையோடு அழைத்து வரச் சொல்லியிருக்கிறார். அங்கே எங்கள் அமைச்சரின் மகன் பேச முடியாதபடி ஊமையாகிவிட்டார். ஒரு விபத்தில் இப்படி ஆகிவிட்டது. பாபா இருந்தால் நிச்சயம் அவரைப் பேசவைத்து விடுவார்...''

''அப்படியா...! அவர் அவ்வளவு சக்தி படைத்தவரா...?''

''ஆமாம்... மிக அதிசயமான மனிதர். எங்கள் மதத்தில் நாங்கள் இறைவனுக்கு நிகராக யாரையும் கருதுவதில்லை. ஆயினும் இவரை நாங்கள் மிக மதிக்கிறோம். உங்கள் ஊராக இருந்தால் அவரை ஒரு சித்தர் என்று கூறி கோவில் கட்டிக் கும்பிட்டுவிடுவீர்கள்...''

''ஓ... அவ்வளவு பெரிய மனிதரா...?''

''ஆமாம்... சதா ஊர் சுற்றிவரும் உங்கள் கண்களில்கூட அவர் பட்டிருக்கலாம். ஞாபகப்படுத்திப் பாருங்கள்.''

''இல்லையே... அப்படி நான் யாரையும் பார்க்க வில்லையே...!''

''நன்றாக ஞாபகப்படுத்திப் பாருங்கள்.''

''எனக்கு மறதி என்பதே கிடையாது. ஒருவரை ஒரு முறை பார்த்தால் போதும்... பத்து ஆண்டு கழித்துக் கேட்டால்கூட மறவாமல் அவர் பேரைச் சொல்வேன். ஒருவேளை அவர் இந்த ஊர்ப்பக்கம் வரவில்லையோ என்னவோ...?''

''நிச்சயம் அவர் தஞ்சைப் பக்கமாகத்தான் செல்ல வேண்டும் என்றாராம்...''

''அப்படிச் சொல்லுங்கள். தஞ்சைப் பக்கம் என்றால் இந்த சோழநாட்டில் மட்டும் எண்ணாயிரம் கிராமங்கள் உள்ளன. இதில் எங்கே என்று சொல்வீர்கள்...?''

''அப்படியா...?''

அவர்களிடம் மலைப்பு!

தொழுகை முடிந்து ஒரு உறக்கமும் உறங்கி எழுந்து அமர்ந்திருந்தார் பாபா... தென்னை மரக்கூட்டத்தின் நடுவில் அங்கே வேலை செய்யும் தோட்டக்காரப் பெண்களின் குழந்தைகள் தூளிகளில் தூங்கிக்கொண்டிருந்தனர்.

அதில் ஒரு குழந்தை அழ ஆரம்பித்தது.

பசிக்கு அழுகிறதா... இல்லை வலியால் அழுகிறதா என்பது தெரியாதபடி ஒரே அழுகை...!

அந்தத் தாயோ அழுகை கேட்டு வரவேயில்லை. ஒருவேளை அவள் அந்தப் பிராந்தியத்திலேயே இல்லையோ என்றுகூட நினைக்கத் தோன்றியது.

குழந்தையிடமோ அழுகை கூடிக்கொண்டு போய் அது மற்ற குழந்தைகளையும் தொற்றிக்கொண்டது.

சில நொடிகளில் ஜில்லென்ற தென்றல் வீசும் தென்னந் தோப்பில் ஒரு பிஞ்சுக் கூட்டத்தின் விஸ்தாரமான அழுகுரல் சப்தம். காதை அடைத்தது. பாபாவால் ஒரு அளவுக்கு மேல் பொறுக்க முடியவில்லை. மளமளவென்று துணி உறைக்குள் தூங்கிக்கொண்டிருந்த ருத்ரவீணையை வெளியே எடுத்தார். வாசிக்க ஆரம்பித்தார். 'சுநாத விநோதினி' ராகம்... தாயின் அரவணைப்பில் இருப்பதைப் போன்ற ஒரு சுகத்தை கேட்பவர்களுக்கு தரவல்லது இந்த ராகம்.

ராகம் ருத்ரவீணையில் தந்திக்கம்பிகள் வழியாக பெருகி வழிய குழந்தைகளும் அழுவதை நிறுத்திவிட்டு ஆனந்தமாய் ராகத்தைக் கேட்டு தங்களை மறக்கத் தொடங்கின!

## இன்று

தோடிபுரம் பல விஷயங்களுக்குப் பெயர் பெற்ற ஊர். எந்த ஒரு இசைக் கலைஞனும் முதன்முதலில் தோடிபுரம் தோடீஸ்வரர் சன்னதியில் அரங்கேற்றம் செய்யத்தான் ஆசைப்படுவான்.

அதன்பின் விருத்திதான். அப்படி ஒரு நம்பிக்கையை வலுவாகக்கொண்ட கோவில் அது. பிரம்மா விஸ்வகர்மாவைக் கொண்டு கட்டிய கோவிலாம். விமானமும் மதிலும் அவ்வளவு அழகு! அத்தனை உயரம்!

சராசரியாக ஆயிரம் கிளிகளாவது அந்தக் கோபுரச் சருக்கத்தில் தான் குடியிருக்கின்றன. அப்படி அங்கே குடியிருக்கும் கிளிகள் ஒவ்வொன்றுமே மறுஜெனமத்தில் மனிதப் பிறப்பெடுத்து அதிலும் தேர்ந்த இசைக் கலைஞனாகவே பிறப்பெடுக்குமாம்.

இப்படிச் சொல்கிறது தோடீஸ்வரர் கோவில் தலபுராணம்.

ஊரைச்சுற்றி பன்னிரண்டு கிணறுகள்.

காவிரி ஆற்றில் வெள்ளம் பெருகும் போதெல்லாம் இந்தக் கிணற்றிலும் நீர் மட்டம் உயரும். பன்னிரண்டு கிணறும் பன்னிரண்டு ராசியைக் குறிக்கின்றன... மேஷராசிக்கு மேஷக்கேணி என்றால், ரிஷபத்துக்கு ரிஷபக்கேணி... அந்தந்த ராசிக்குரியவர்கள் அந்தந்தக் கிணற்றில் நீராடினார்கள். அவர்களுக்கு தோஷம் இருந்தால் நீங்கும் என்பது நம்பிக்கை.

இதனால் தோடிபுரத்துக்கு வந்து செல்வோர் எண்ணிக்கைக்குக் குறைவேயில்லை.

இன்னொரு சிறப்பும் இந்த ஊருக்கு உண்டு. கடந்த முந்நூறு வருஷங்களில் ஒரு வருஷம்கூட இங்கே மழை பொய்த்ததில்லை. அதே போல இந்த ஊரில் வாழும் ஒருவர்கூட நோய் வாய்ப்பட்டு இறந்தார் என்றும் கிடையாது.

இதனால் புதிதாக வீடு கட்டுபவர்கள் தோடிபுரத்துக்கு வந்து ஒரு கைப்பிடி மண்ணை எடுத்துக்கொண்டு அதற்கு ஒரு தம்பிடியை விலையாக தோடீஸ்வரன் கோவில் உண்டியலிலும் சேர்த்துவிட்டுப் போவார்கள்.

காரணம்...? இந்த தோடிபுரமே சிவன் சொத்து என்பதால். சிவன் சொத்தைக் களவாடினால் பரம்பரை என்னாவது!

மற்ற ஊர்க்காரர்களுக்கும் தோடிபுரம் என்றாலே ஒரு பொறாமைதான். இங்கே குடிவர ஆசைப்படுபவர்கள் பலர். ஆனால் யாராவது இடத்தை விற்றால்தானே?

எல்லோருமே பரம்பரை பரம்பரையாக வீடு வாசல், நிலம் நீச்சை அனுபவிக்கலாம். வேறு ஒருவர்க்கும் விற்க உரிமை இல்லை. மீறி விற்றவர்கள் குடும்பம் விளங்காமல் போனதையும் பார்த்திருப்பதால் பயம்!

இப்படித் தொட்ட இடமெல்லாம் சிறப்பைக் கொண்டிருக்கும் ஊரில் ஒரு புதிரான விஷயமும் உண்டு.

அதுதான் தாசி பங்களா!

ஊருக்குத் தென்கிழக்கில் அக்னிமூலையில் காவிரி ஆற்றோரமாக மயானக்கரை இருக்கிறது. காசிக்கு பிறகு இந்த ஊர் மயானத்துக்குத்தான் தனிச்சிறப்பு. இங்கே ஒரு சிதை எரிக்கப்பட்டால் அதற்கு மறுபிறப்பு கிடையாது என்பதால் சுற்று வட்டாரத்தில் சாகிறவர்கள் கூட ஊர் பஞ்சாயத்துக்குப் பணத்தைக் கட்டிவிட்டு பிணத்தை இந்த காட்டுக்குக் கொண்டுவந்து போட்டுத்தான் எரிப்பார்கள்.

இதனால் சுடுகாட்டு வெட்டியான் காத்தான் எப்பொழுதும் பிணத்தை எரித்தபடியே இருப்பான்.

பெரிய மயானம்!

அடர்ந்த மரக்கூட்டத்துக்குக் கீழே இருக்கிறது. மயானத்துக்குள்ளேயே வருபவர்கள் குளிக்கத்தோதாக காவிரியின் வாய்க்கால் ஒன்று ஓடிக்கொண்டிருக்கிறது. அதில் மோகினிக்கரை என்று ஒரு இடம்.

அங்கே மட்டும் யாரும் போய் குளிக்கமாட்டார்கள். தோடிபுரத்தில் எரிந்தும் மோட்சம் கிடைக்காத அல்பாத்மாக்கள் அங்கே அந்த மோகினிக்கரையில்தான் உட்கார்ந்து கொண்டிருக்குமாம்.

இரவு நேரங்களில் கொலுசுச் சப்தம், விசும்பி அழும் சப்தம், சீற்றத்தோடு கத்தும் சப்தம் எல்லாம் சாதாரணம்.

காத்தான் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டான்.

அந்த மயானத்தின் நடுவில் ஒரு கல்மண்டபமும் உண்டு அங்கே நின்றுகொண்டு பார்த்தால் பெரிய மாளிகை ஒன்று கிழக்குப் பக்கத்தில் தெரியும்.

பெரிய்ய்ய மாளிகை!

ஆயிரம் ஜன்னல்கள் வரை இருப்பதால் 'ஆயிரம் ஜன்னல் மாளிகை' என்றும் சொல்வார்கள். ஆனால், ஊரில் இருப்பவர்கள் அதற்கு வைத்திருக்கும் பெயர் தாசிபங்களா. ஊரைப் பொறுத்த மட்டில் தாசிபங்களா ஒரு கோவிலைப் போன்றது. தப்பித்தவறிக் கூட யாரும் தாசிபங்களாப் பக்கம் செல்ல மாட்டார்கள்.

சுடுக்காட்டுக்குக் கர்ம காரியம் பண்ண வருகிறவர்கள்கூட கல்மண்டபத்தில் நின்றுகொண்டு பங்களாவைப் பார்த்துப் பெருமூச்சுவிடுவார்கள்.

''எப்பேர்ப்பட்ட பங்களா...! காலத்தோட கோலம்... யாரும் போகக்கூடாத இடமாகப் போயிடிச்சு.'' என்று உதடுகள் முணுமுணுக்கும்.

அந்த பங்களா ஒரு விசித்திரம் என்பதற்குத் தோதாக அடிக்கடி அங்கே வீணை ஒலி கேட்கும்.

விதவிதமான ராகங்களில் ஒலிக்கும் அந்த இசைக்கு ஏற்ப மந்திரம் போட்டது போல பல விஷயங்கள் நடக்கும்.

ஒருநாள் ஆயிரக்கணக்கில் கிளிகள் வரும். ஒருநாள் வௌவால்களாய் வந்து அடையும். இன்னும் சில நாட்களில் புறாக்கள் வந்து குவியும்.

வெட்டியான் காத்தான் இந்த அதிசயங்களை அடிக்கடி பார்ப்பவன். சிவந்த கண்களோடு அவனைப் பார்க்கவே பயங்கரமாக இருக்கும். யாரோடும் ஒரு வார்த்தைகூடப் பேசாதவன். யாரைப் பார்த்தாலும் துளியும் அஞ்சாதவன், தாசி சுந்தராம்பாளைப் பார்த்தால் மட்டும் அடங்கி ஒடுங்கிப் பெரிதாகக் கும்பிடுபோடுவான்!

அவன் மட்டுமா?

தோடிபுரத்துக்கே சுந்தராம்பாள் ஒரு பெண் தெய்வம். கோவிலில் உள்ள அம்பாள் வேறு, அவள் வேறு இல்லை என்று தான் நினைக்கிறது.

அவள் ஒருத்திதான் நாள் தவறாமல் அந்தப் பங்களாவிற்கு சென்று வருவாள்.

ஊரைப் பொறுத்து அவள் அங்குள்ள பாபா சமாதியை வணங்கச் செல்கிறாள். ஆனால் வேறு ஒரு விஷயம் அங்கிருக்கிறது என்று சிலர் சந்தேகப்படத்தான் செய்கின்றனர்.

ஆனாலும் அதை வெளியே உரக்கச் சொல்ல அவர்களுக்குத் தைரியமில்லை... சிலர் பேசிப் பார்த்தார்கள். பலனில்லை. அவர்களுக்குக் காய்ச்சலும் குளிரும் வந்து உலுக்கி எடுத்தது. எவ்வளவு மருந்து சாப்பிட்டும் பிரயோஜனமில்லை.

இறுதியில் ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமையன்று தோடீஸ்வரர் கோவிலில் குறை கேட்க வரும் அவளிடமே வந்து வரிசையில் நின்று குறையைச் சொல்லித்தான் காய்ச்சல் குளிரிடமிருந்து விடுபட முடிந்தது.

அதன் பின் மூச்!

இதனால் சுந்தராம்பாள் என்றாலே ஒரு தனி மதிப்புதான். சுந்தராம்பாளும் இந்த மாதிரி அமானுஷ்ய செயல்களால் தான் மதிக்கப்படுவதை விரும்பவில்லை என்று நினைத்தாளோ என்னவோ, ஒரு நல்ல கர்நாடக சங்கீதப் பாடகியாக தன்னைக் காட்டிக்கொண்டாள்.

அவள் குரல் வளத்தைக் கேட்டவர்கள் திருமதி. எம்.எஸ்.சுப்புலட்சுமி அம்மாவுக்குப் பிறகு இவள்தான் தலை சிறந்த பாடகி என்றனர்.

இதனால் டெல்லி வரை சுந்தராம்பாள் புகழ் பரவியிருந்தது. தோடிபுரத்துக்குள் அவள் ஒரு தெய்வம். வெளியிலோ மிகப்பெரிய இசைமேதை. இதுதான் அவளது இன்றைய நிலை. ஆனாலும் அவள் முகத்தில் எப்பொழுதும் ஒரு சோகம்... அவள் கண்களைக் கூர்ந்து கவனித்தால் அது நன்கு தெரியும்.

யாருக்கும் அது தெரிகிறதோ இல்லையோ கோவில் பட்டர் சுந்தரேசனுக்கு மட்டும் அதற்குக் காரணம் நன்கு தெரியும்.

பட்டர் அவளுக்குச் சகோதரன் போல்... பட்டரின் அருமை மனைவி வேதா, சுந்தராம்பாளுடன் ஒன்றாகப் படித்தவள். இருவரும் தோழிகள். கோவிலில் சேர்ந்தே பாடுவார்கள். நாளெல்லாம் கேட்டுக்கொண்டிருக்கலாம். சுந்தரேச பட்டரின் அப்பா சதாசிவ பட்டர் அதைப் பார்த்துத்தான் தன் மகன் சுந்தரேசனுக்கு வேதா மிக ஏற்றவள் என்று முடிவுசெய்து வேதாவின் அப்பா அம்மாவிடம் சென்று பெண் கேட்டார். அவர்களும் சம்மதிக்க, திருமணமும் நடந்து முடிந்தது. ஆனால் இன்று வேதா உயிருடன் இல்லை.

சங்கரனை தலைச்சனாகவும் மைதிலி, காயத்ரி என்று இரண்டு பெண்களை அடுத்தடுத்தும் பெற்றுப்போட்டுவிட்டு போய்ச் சேர்ந்துவிட்டாள்.

அவள் போனதும் ஒரு கொடுமையான முறையில்தான்...

ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது. கரையில் பெரியவள் மைதிலி பாத்திரம் துலக்கியபடி இருக்க, சில அடி தள்ளிச்சென்று ஒரு முக்குபோடுவோமே என்று போனவள் தான்.

திரும்பவேயில்லை!

மைதிலி அன்று காவிரிக்கரை ஓரமாகவே கத்திக்கொண்டே ஓடினாள்.

''அம்மா... அம்மா...!'' என்று கத்திக்கொண்டே ஓடிய மைதிலிக்கு அப்பொழுது வயது பதின்மூன்று. ஓடிய வேகத்தில் ஒரு பள்ளத்தில் இடறி விழுந்தவள் கண்முழித்து பார்த்தபோது நான்கைந்து நாள் ஆகிவிட்டிருந்தது. வீட்டில் அவள் அம்மாவின் புகைப்படத்தில் மாலைதான் ஆடிக்கொண்டிருந்தது. பட்டரும் தாடி மீசையுடன் கலக்கத்துடன் பார்த்தார். அவரைப் பார்த்தவள் ''அப்பா...'' என்று கத்தி அழவாயெடுத்தாள். ஆனால் வார்த்தை வரவில்லை. அன்று போனது பேச்சு... இன்று வரை வரவில்லை...

ஆனால் சுந்தராம்பாளோ நம்புகிறாள்.

'ஒரு நாள் மைதிலி பேசுவாள்' என்கிறாள்.

அவள் சொன்னால்தான் தெய்வமே சொல்லிவிட்ட மாதிரி ஆயிற்றே?

பட்டரும் நம்பிக்கொண்டிருக்கிறார்.

இப்படித் தோடிபுரத்தில் பல பாத்திரங்கள். அவர்களது நிலைப்பாடுகள்.

இவர்களில் சாமிநாதனையும் சங்கரனையும் பற்றியும் சொல்லிவிட வேண்டும்.

சங்கரன், கோவில் பட்டரான சுந்தரேசபட்டரின் ஒரே புதல்வன். பட்டருக்கு சங்கரன் ஒரே பையன் என்றால் சாமிநாதனும் அவன் அப்பா கல்யாண சுந்தரத்துக்கு ஒரே பிள்ளை.

இருவரும் இணைபிரியாத நண்பர்கள் என்று சொன்னால் அது ஒரு சராசரி விமர்சனமாகத்தான் இருக்கும். இருவரும் உயிருக்கு உயிரான - இல்லையில்லை... சாமிநாதன் சாப்பிட்டால் சங்கரனுக்கு ஏப்பம் வரும்... சங்கரன் ஜோக் படித்தால் சாமிநாதன் சிரிப்பான் எனலாம். அப்படி ஒரு அமரமான ஜோடிகள்.

இதில் சங்கரன் சாது... சாமிக்கு அசாத்ய தைரியம் என்பதை சொல்லிவிட வேண்டும். இன்றைக்கு சாமிநாதனின் அப்பா கல்யாணசுந்தரம்தான் தோடிபுரம் பஞ்சாயத்தின் பிரசிடென்ட். ஆனால் அவருக்கு ஊர் பிரசிடென்ட்டாய் இருப்பதைவிட பிடித்த ஒரு விஷயம் தோடிபுரம் கோவிலின் ஆஸ்தான நாதஸ்வர வித்வானாய் இருப்பதுதான்...

அதிதேர்ந்த நாதஸ்வரக் கலைஞர். சாமிநாதனும் நாதஸ்வர மேதை ஆகவேண்டும் என்பதுதான் அவர் எதிர்பார்ப்பு.

ஆனால் சாமிநாதனோ ''பீப்பீக்கு இன்று காலமில்லை. நான் சிங்கப்பூர் போய் சம்பாதிக்கப்போகிறேன்'' என்கிறான். அவனுக்கு சங்கரனும் உடந்தை.

''ஆமாண்டா சாமி... இந்த ஊர்ல இருந்தா தேறமுடியாது. நன்னா சாப்பிடலாம். தூங்கலாம். உடம்புதான் பெருக்கும். ஃபாரீன் பக்கமா போனாதான் நமக்கும் நல்ல எக்ஸ்போஷர் கிடைக்கும்.'' என்று சொல்லி இப்பொழுது இரண்டு பேருமே சிங்கப்பூர் செல்வதற்குத்தான் முயன்று கொண்டிருக்கின்றனர்.

அதற்காக பக்கத்தில் டவுன் வரை போய்விட்டுத் திரும்பும் போதுதான் மைதிலியை மாடு முட்டப் பார்த்தது. சாமிநாதனும் குறுக்கில் புகுந்து அதை அடக்கி விரட்டினான். ஆனாலும் ஒருவன் அதைப் பார்த்துச் சிரித்து ''இதென்ன வீரம்?'' என்று சொன்னதும் ''தாசி பங்களாவுக்குள்ள போய்ட்டு வாயேன்'' என்று சொன்னதும் சாமிநாதன் மனதை அரித்துக்கொண்டேதான் இருக்கிறது.

கரையில் அந்த அரிப்போடு சாமிநாதன் நின்று கொண் டிருக்க, ஆற்றில் சங்கரன் - அப்பா சுந்தரேச பட்டர் கேட்டிருந்தார் என்பதற்காக தர்ப்பைபுல்லை அரிந்து கொண்டிருந்தான்.

இதற்கு நடுவே ஒரு விபரீதத்துக்கு அடித்தளம் போடுவதுபோல ஆட்டுக்குட்டி ஒன்று கரையோர மேய்ச்சலில் இருந்து விலகி மயானத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தது. ஆடுகளை மேய்ந்தபடி இருந்தவன் ஒரு பொடியன். குட்டி ஆடு விலகி ஓடவும் அதைப் பிடிக்க அவனும் மயானத்துக்குள் புகுந்தான்.

இத்தனை நாளில் மயானத்தைத் தூர இருந்துதான் பார்த்திருக்கிறான்.

இப்பொழுதுதான் சற்று உள்சென்று பார்க்கிறான்.

'ஹோ' வென்று கிடந்த மைதானத்தில் ரெட்டியார் ஒருவர் பிணமாகிப் புகை கக்கிக்கொண்டிருந்தார். அந்தப் புகையும் சுடுகாட்டையே வளைய வளைய வந்து கொண்டிருந்தது. அதற்குள் புகுந்து புகுந்து ஓடிய ஆட்டுக்குட்டி அங்கிருந்து அப்படியே தாசி பங்களாவுக்குச் செல்லும் ஒற்றையடிப் பதைக்குத் தாவியது... பொடியனும் விடுவதாக இல்லை. தாவிக்குதித்து பின்னாலேயே ஓடினான். பார்த்துக்கொண்டிருந்த வெட்டியான் காத்தானுக்குத் தூக்கிவாரிப்போட்டது.

''ஏய்... ஏய்...!'' என்று அவனும் பின்னாலேயே ஓடினான். சிறிது தூரம் வரை ஓடியவன் பொடியனைக் காணாமல் திரும்பி வந்தான். ஆனால் பொடியனோ தாசிபங்களா முன்னால் நின்று கொண்டிருந்தான்.

ராட்சஸ உருவம் ஒன்றின் காலடியில் ஒரு சிறுபூச்சி இருந்தால் பார்க்க எப்படித் தெரியும்? அப்படி இருந்தது அவன் அங்கே இருந்தவிதம்.

ஆட்டுக்குட்டி 'மே' என்று கத்துவது மட்டும் கேட்டது. ஆனால் எங்கிருந்து அது கத்துகிறது என்பது தெரியவில்லை. பொடியன் சப்தம் வந்த திக்கை வைத்து நடந்தான். ஒரு பெரிய கிராதிக் கதவும் கதவுக்கு அப்பால் நந்தவனம் போல தோட்டமும் தெரிந்தது. கீழே தரையில் பெரிதாக ஒரு சமாதி... அதன் மேல் ஒரு பச்சைத்துணி விரிப்பு. சமாதிக்கு அருகில் வரிசையாக சமாதிகள். அந்தச் சமாதிகளின்மேல் சிவலிங்கங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தன. பொடியனுக்கு அந்த வித்தியாசமான காட்சி பற்றியெல்லாம் ஒன்றும் பெரிதாகத் தோன்றவில்லை. அந்தச் சமாதிக்கு நடுவில் அவனது ஆட்டுக்குட்டி நின்று கொண்டிருப்பது தான் கண்ணில் பட்டது.

ஊரே திரும்பிக்கூட பார்க்கப் பயப்படும் ஒரு இடத்தில் ஆட்டுக்குட்டி. அதைப் பார்த்தபடி பொடியன்.

அங்கே நிலவும் மௌனம் அவனை என்னவோ செய்தது. சிலைபோல நின்று சில வினாடிகள் அப்படியே வெறித்தான்.

பின் மெல்ல அந்தச் சமாதியை நோக்கி கால் எடுத்தான். சில அடிகள் போட்டு சமீபத்தில் மிக சமீபத்தில் ஆட்டுக்குட்டியை எட்டிப்பிடிக்கும் அளவுக்குப் போனவன் ஒரு கணம் அப்படியே விடைத்து நின்றான்.

சமாதியின் பின்பக்கம் இருந்து ஒன்று இரண்டு மூன்று என்று வரிசையாக சர்ப்பங்கள் வர ஆரம்பித்தன். அவனுக்கும் க்ஷணத்தில் நெஞ்சையடைத்துக் கண்கள் அகண்டு விரிந்தன.

கையில் இருந்த குச்சியை எறிந்தவனாக 'ஓ' என்று கத்தியபடியே திரும்பி ஓடினான்.

**கை** நிறைய தர்பைப்புல்... ஈரம் சொட்டும் அந்தப் புற்களை உதறிக் கட்டிக்கொண்டு கரை எறிய சங்கரன் மொபெட்டின் பின்சீட்டில் அதை வைத்துவிட்டு கையை உதற, ''என்னடா கிளம்பலாமா...?'' என்றபடியே முன்னால் வண்டியில் ஏறி அமர்ந்தான் சாமிநாதன்.

''புறப்படு...'' என்ற சங்கரனும் கட்டை எடுத்துக்கொண்டு சீட்டில் அமரப்போகும் போது அலறிக்கொண்டு ஓடிவரும் அந்தச் சிறுவனின் குரல் கேட்டது. ஓடிவந்த சிறுவனும் சாமிநாதன் மேல்தான் மோதி நின்றான்.

''டேய்... எதுக்குடா... எதுக்குடா இப்படி ஓடி வர்றே...?''

சாமிநாதன் கேட்க அவனிடம் மூச்சிளைப்பு. சில நொடி கழியவும் பாதி ஆசுவாசத்துடன் பேச ஆரம்பித்தான்.

''அண்ணே, என் ஆட்டுக்குட்டி தாசிபங்களாப் பக்கம் போயிடிச்சு. பிடிக்கலாம்னு போனா பாம்பு... பாம்பு...!''

அவனால் அதற்குமேல் பேசமுடியவில்லை. கண்களிலும் நீர் துளிர்த்தது.

''ஏண்டா அழுவறே...?''

''ஆட்டுக்குட்டி இல்லாம போனா எங்க ஊட்ல அடிப்பாங்க...''

அவன் குரலில் பரிதாபம். அதற்குமேல் சாமிநாதனாலும் அங்கேயே ''எனக்கென்ன?'' என்று நிற்க முடியவில்லை.

''டேய் சங்கரா, வாடா... போய் இரண்டுல ஒண்ணு பார்த்துருவோம்.''

வேட்டியை மடித்துக்கட்டிக்கொண்டு கிளம்பினான்.

''டேய், வேண்டாண்டா...!''

''பேசாம வாடா... இப்ப நான் ஒண்ணும் என் வீரத்தைக் காட்டப் போகலை. அந்த ஆட்டுக்குட்டிய பிடிக்கத்தான் போறேன். இது ஒரு உதவி. இதைக்கூட செய்யத் தவறினா நான் மீசை வெச்சுருக்கறதுலையே அர்த்தமில்ல...''

அவன் பதிலில் அனல் அடித்தது.

கால்கள் வேகமாக நடந்தன.

வழியில் சுடுகாடு இடையிட்டு புகைக்கவளங்கள் முகத்தில் பட்டு முகத்தைக் கோணவிட்டன.

சமாதித்திட்டுகள் தாண்டிக் குதிக்கச் செய்தன. அங்கங்கே நாய்கள் சில பிணங்களை இழுத்து வெளியில் போட்டு எலும்புகளைச் சப்பித் துப்பியிருந்தன. சாமிநாதன் எதையும் சட்டை செய்யவில்லை... மரக்கிளைகளுக்கு நடுவில் தெரியும் தாசி பங்களா நோக்கியே நடந்தான். அதை, பிணம் ஒன்றை அவித்தபடி இருந்த வெட்டியான் காத்தானும் பார்த்துவிட்டான். அதிர்ந்து விட்டான்.

பிணத்தைப் புரட்டிப்போடும் கரம்பைத் தடியோடு அப்படியே ஓடிவந்தான்.

''ஏய்... ஏய், எங்க போறே...?'' என்று கத்திக்கொண்டே வந்து இடைமறித்தான்.

சாமிநாதன் எதுவும் பேசவில்லை.

ஒரு முறைப்புதான். அவனால் அதற்குமேல் ஒன்றும் செய்யமுடியவில்லை.

''வேணாம் தம்பி... எதுக்காகவும் அந்த தாசிபங்களாப் பக்கம் மட்டும் போயிடாதீங்க. அது ஆபத்து...'' என்றான்.

''தெரியும். நீ போய் உன் வேலையைப் பார்.'' என்ற சாமி தொடர்ந்து நடந்தான்.

நெடுநாட்களாய் அவன் மனதில் முள்ளாய் உறுத்திக் கொண்டிருந்த ஒரு விஷயத்திற்கு இன்று விடை தெரியப்போவது போல தோன்றியது அவனுக்கு. 'எது வந்தாலும் சரி...' அவனுக்குள் வெறித்தனமான ஒரு தீர்மானம்.

சங்கரனும் பின்னாலேயே வியர்க்க விறுவிறுக்க அவனைத் தொடர்ந்து கொண்டிருந்தான்.

தாசிபங்களாப் பாதையும் மரக்கூட்டங்கள் கடந்த நிலையில் பங்களாமுன் உள்ள மைதானம் போன்ற இடத்தில் முடிந்து போனது. மைதானத்தில் ஒரு புல் பூண்டு இல்லை. மலட்டு நிலம்போலக் கிடந்தது. அதற்கு நேர்மாறாக நந்தவனம் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. அருகே சென்று கிராதிக் கதவருகே நின்று பார்த்தபோது, பாபா சமாதியில் விளக்கெரிந்து கொண்டடிருந்தது. பக்கத்திலும் வரிசையாக பதினோரு சமாதிகள். அவைகளின் மேல் சிவலிங்கங்கள்!

பாபா சமாதியில் மட்டும் பச்சைத்துண்டு.

பார்க்கவே மிக ஆச்சரியமாக இருந்தது.

இஸ்லாமியமும் இந்துத்துவமும் பின்னிப்பிணைந்து கிடக்கிற மாதிரி தோன்றியது.

சாமிநாதன் ஒரு அர்த்தமுள்ள பார்வையை சங்கரனை நோக்கிப் பார்த்தான்.

ஆட்டுக்குட்டியைக் காணவில்லை.

பயங்கர நிசப்தம்.

திடும்மென்று அந்த நிசப்தத்தைக் கலைக்கிற மாதிரி வீணை இசை கேட்க ஆரம்பித்தது.

ஆனால் அது எங்கிருந்து வருகிறது என்றுதான் தெரியவில்லை.

சுற்றிச் சுற்றிப் பார்த்தவன் பங்களா முகப்புக்குச் சென்றான். பெரிய தேக்குக்கதவு! திண்டுக்கல் பூட்டு ஒன்று அதில்

தொங்கிக்கொண்டிருந்தது. பூட்டைத் திறக்காமல் உள்ளே போக முடியாது. பூட்டைத் தொட்டுப் பார்த்தவன் அப்படியே பக்கவாட்டு ஜன்னல் அருகே போய் நின்றான். நல்லவேளை அது திறந்திருந்தது. உள்ளே பெரிய ஹால் ஒன்று தெரிய, ஹால் சுவரில் பளிச்சென்று நவாப் ஜான் பாபாவின் படம்.

படத்தின் முன் சிறியதாக ஒரு அகல் விளக்கு. சாமிநாதன் பார்க்கும்போது சங்கரனும் சேர்ந்து பார்த்தான்.

சட்டென்று வீணை இசை நின்று போனது. மீண்டும் நிசப்தம்.

ஒரு முந்நூறு ஆண்டு கால மர்மத்தைக் கொண்டிருக்கும் அந்த பங்களாவில் தாசி சுந்தராம்பாள் காலடியைத் தவிர இன்னொருவர் காலடி பட்டதாகச் சரித்திரமே இல்லை.

அதை மாற்றியவனாய் நின்று கொண்டிருக்கும் சாமிநாதன் 'இங்கே யாரும் வரக்கூடாது என்று சொன்னதற்குக் காரணம் எதுவாக இருக்கும்?' என்ற கேள்வியோடும் ஒருவிதப் படபடப் போடும் பார்த்துக்கொண்டிருக்கும் போதே 'ரொய்ங்ங்...' என்கிற ஒருவித தேனீக்களின் ரீங்காரச் சப்தம் கேட்க ஆரம்பித்தது. இருவரும் விக்கித்துப் போய் எங்கிருந்து வருகிறது என்று பார்த்துக்கொண்டிருக்கும் போதே பாபா படத்திற்கு அருகில் இருந்து ஒரு தேனீப்படை ஒரு ஊதுபத்திக் குழல்போல அப்படியே சுருண்டு பறந்து அவர்கள் இருவரையும் நோக்கி வந்தது.

''சங்கரா ஓடு!'' - சாமிநாதன் அலறியவனாக ஓட, சங்கரனும் பின்தொடர... ராட்சஸத் துரத்தல்... ராட்சஸ ஓட்டம்!

தேனீக்களுக்கும் அவர்களுக்கும் இடையே சில அடிகள்தான் இடைவெளி!

வளைந்து வளைந்து ஓடிய அவர்களை தேனீக்களும் வளைந்து வளைந்து ஓடித் துரத்தியது. பார்த்துக்கொண்டேயிருந்த வெட்டியான் காத்தான் சட்டென்று தன்னைத் தாக்க வந்தால் என்ன செய்வது என்று சிதையில் எரிந்து கொண்டிருந்த கொள்ளி ஒன்றை எடுத்து ஏந்திப்பிடித்துக் கொண்டான்.

ஆனால் அதுவோ அவர்களையே குறிவைத்துத் துரத்தியது. அவர்களும் இனியும் ஓடித் தப்பிக்க முடியாது என்பது போல அருகில் ஓடிக்கொண்டிருந்த காவிரியில் போய் ஒரே பாய்ச்சலாக பாய்ந்தார்கள். பின் அப்படியே நீரின் அடி ஆழம் வரை மூழ்கிப்போனார்கள். இருந்தும் நீருக்கும் மேலே பந்தல் போட்டது போல அந்த தேனீக்கள் சூழ்ந்துகொண்டு அப்படியே நின்றன.

கடவுளே!

**கா**விரி ஆற்றங்கரையில் இருந்தது அந்தச் சிவாலயம். பழைய ஆலயம். கோவிலுக்கு வருகிறவர்கள் ஆற்றில் இறங்கி காலை நனைத்துக் கொள்ளலாம் - அந்த அளவில் ஒரு படித்துறை.

அந்தப் படித்துறையில் ஒரு சன்யாசி தன் சன்யாச தண்டத்தை மாற்றி மாற்றிப் பிடித்தபடி ஆற்றில் மூழ்கி எழுந்து கொண்டிருந்தார். அவர் ஸ்நானம் புரிவதைப் பார்த்தபடியே அவரது அனேக சிஷ்யர்களும் இருந்தனர்.

அவரும் ஈரம் சொட்டச் சொட்ட கரை ஏறினார். அவர் துவட்டிக்கொள்ள தோதாக ஒரு காவி வஸ்த்ரத்தை நீட்டிக் கொண்டிருந்தார் அந்த சன்யாசியின் சீடர் ஒருவர்.

வாங்கித் துவட்டிக்கொண்டவர், அங்கேயே நின்று கோவில் கோபுரத்தைப் பார்த்துப் பெரிதாக ஒரு கும்பிடு போட்டார்.

அப்படியே சூழந்திருப்பவர்களைப் பார்க்க - அவர்கள் அவர் காலில் விழுந்து எழுந்தனர்.

எல்லோரையும் ஆசீர்வதித்தார். அந்தக் கூட்டத்தில் ஒரு முதிய பெண்மணியும் இருந்தாள். அவளுக்கு நூறு வயதுகூட இருக்கலாம்.

''ஸ்வாமி... ப்ராணன் போவேனாங்கறது. எனக்குச் சீக்கிரமா முக்தி கிடைக்கணும். இந்த உடம்போட தினம் போராடிண்டிருக்கேன்.'' என்றாள் அவள்.

அவரும் அந்த முதியவளைக் கருணையோடு பார்த்தார்.

''நானும் உங்களைப் போலத்தான்... எனக்கும் வேளை வரலை. இன்னும் எவ்வளவு காலத்துக்கு இந்த பூமியில போட்டுருக்கோ தெரியில... யோகம் யாகம்னு எத்தனைதான் பண்ணாலும் வேளை வந்தாதானே நடக்க வேண்டியது நடக்கும்.''

அவரது பதிலில் ஆழ்ந்த பொருள்.

''அப்ப இந்த உடம்போட வாழற வரை சம்சார பந்தத்துல இருந்துண்டு... அந்த ஜெகன்மாதாவைப் பாக்கவோ, அடையவோ முடியாதா...? திரும்பத் திரும்பப் பொறந்து பாவம் பண்ணிண்டே தான் இருக்கணுமா...?''

அவள் கண்ணீருடன் கேட்ட கேள்விக்கு அந்தச் சன்யாசி சிரித்தபடியே சொன்னார்.

''ஒரு வழிதான் இருக்கு... இமாலயத்துல ஒரு ரிஷி ருத்ர வீணை வெச்சுண்டுருக்கார். அதுல அம்பாளோட பீஜாட்சரத்தை இசைச்சா அவ நேர்ல பிரசன்னமாவாளாம்!

அந்த வீணைக்கு அப்படி ஒரு சக்தி.

ஆனா அது இப்ப அந்த ரிஷிகிட்டகூட இல்லேன்னு கேள்விப்பட்டேன். நானும் அதைத்தான் தேடிண்டிருக்கேன்.

ஆனா அவ அனுக்ரகம் வேணுமே. இருந்தாதானே அது வசப்படும்.''

அவர் பதில் எல்லோரையும் புருவத்தை உயர்த்தி 'ருத்ர வீணை, ருத்ர வீணை' என்று முணுமுணுக்கச் செய்தது!

**த**ண்ணீருக்குள்ளேயே நீந்திப் பின் மூச்சுக்காற்றுக்காக அவ்வப்போது வேகமாய் வெளியில் தலையைக்காட்டி அந்த தேனீக்களிடம் இருந்து ஒரு வழியாய் தப்பித்தும் சில தேனீக்கள் சங்கரன் கைகளைக் கொட்டிப் பிடுங்கிவிட்டன.

விரல்களின் மேல் அதன் கொடுக்குகளின் உடைந்த பாகங்கள். சாமிநாதன் பார்த்துவிட்டுப் பதறிப்போனான்.

''என்னடா இது இப்படி கொட்டி வெச்சுருக்கு... மடையா கையைத் தண்ணிக்குள்ள வெச்சுக்கமாட்டே...?''

''அதுசரி. நீ பேசமாட்டே... ஏண்டா... நான் எத்தனை தடவை சொல்லியிருப்பேன்... தாசிபங்களாப் பக்கம் போவேண்டாம்டான்னு... இப்ப பார்த்தியா...?''

''நினைச்சாலே ஆச்சரியமாக இருக்குடா... அது எப்படிடா சங்கரா அவ்வளவு தேனீங்க நம்மைத் துரத்த முடியும்...?''

''துரத்த முடியும்னா... என்ன கேள்விடா இது? துரத்தி அடிச்சுதானே வந்து தண்ணியில விழுந்தோம்.''

''தேனீ தானா வந்ததா... இல்லை கூட்டுல யாராவது கல் எறிஞ்சு அதனால கலைஞ்சு...''

''சரிதான்... இதுலையும் சந்தேகமா...?''

''நிச்சயமா...! இப்பதான் என் இண்ட்ரஸ்ட் ஜாஸ்தியா யிருக்கு. விடமாட்டேன்.''

''அடப்பாவி... நல்லவேளை. தப்பிச்சோம்னு நான் நினைக்கிறேன். நீ என்னடான்னா விடமாட்டேங்கறியே...? பேசாம வாயை மூடிண்டு கிளம்புடா.''

பேச்சும் பதிலுமாய் இருவரும் ஒரு வழியாய்க் கிளம்பினர். சாமிநாதன் மட்டும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டேதான் போனான்.

வீட்டுக்குள் சங்கரன் நுழைந்தபோது வடாம் பிழிந்து கொண்டிருந்தாள் மைதிலி. அவளுக்கு உதவி செய்து கொண்டிருந்தாள் காயத்ரி. மைதிலிக்கு மூன்று வயது இளையவள்.

தஞ்சாவூர் கல்லூரியில் பி.எஸ்ஸி. படித்தாள். தோடிபுரத்தில் இருந்து தினசரி பஸ் பயணம்.

இப்பொழுதுதான் பரீட்சை முடிந்து ரிசல்ட்டும் வந்திருக்கிறது. ஒரு வழியாக பட்டம் வாங்கிவிட்டாள்.

இருந்தும் சும்மா இருக்கப் பிடிக்காமல் கம்ப்யூட்டர் கிளாசுக்காக திரும்பவும் தினசரி பஸ் பயணம். மீதி நேரங்களில் பட்டருக்கு ஒத்தாசையாக கோவில் காரியத்தையும் மைதிலிக்கு ஒத்தாசையாக வடாம், அப்பளம் என்று இடுவதையும் வழக்கமாக வைத்துக்கொண்டிருக்கிறாள்.

இந்த வேலைகளை எல்லாம் செய்யும்போது மைதிலி தேமே என்று வேலையில் குறியாக இருப்பாள். ஆனால் காயத்ரி மனது கற்பனையில் மூழ்கிவிடும்.

''பொண்ணுன்னாலே வீடு கூட்டணும். சமைக்கணும். இப்படி வடாம் பிழியணும். அப்பளம் இடணும்னு இருக்கற சிஸ்டத்தை எல்லாம் மாத்தணும்க்கா.'' என்றாள் நடுவில்.

மைதிலி மௌனமாக ஒரு பார்வை பார்த்தாள்.

''என்ன பாக்கறே...? ஏன்... இதையெல்லாம் ஆம்பளைகள் செஞ்சா குறைஞ்சா போயிடுவா...?''

மைதிலியிடம் பார்வை முறைப்பாகியது.

''நீ ஒருத்தி... சரியான பழம் பஞ்சாங்கம். பேச முடியாததால அந்த காம்ப்ளக்ஸ் வேற. உன்கிட்ட போய் பேசறேன் பாரு...''

காயத்ரியின் பதிலில் ஊசிகள்.

சாதாரணமாகத்தான் பேசினாள். இருந்தும் அதில் அவள் மனசு பட்டவர்த்தனமாய் தெரிந்தது.

மைதிலியின் கண்களில் நீர் துளிர்த்துவிட்டது.

''அடக்கடவுளே...! நான் சாதாரணமா சொன்னேன். இதுக்குபோய் அழறீயே.''

காயத்ரி அலுத்துக்கொண்டு எழுந்து விலகியும் போனாள்.

கச்சிதமாய் கையை உதறிக்கொண்டு சங்கரன் உள்ளே நுழைந்தான். அவன் வருவதைப் பார்த்தவள் கண்ணைத் துடைத்துக்கொண்டாள்.

''என்ன கண் கலங்கியிருக்கு... சின்னது சீண்டினாளாக்கும்...?'' கச்சிதமாகக் கேட்டான்.

மைதிலியிடம் பதிலில்லை.

''அவகிட்ட எதுக்கு வாயைக் கொடுக்கறே...?'' என்றவன்

''சாரி... உன்னாலதான் பேச முடியாதே. அந்த வாயாடியத்தான் கண்டிக்கணும். நீ கவலைப்படாதே...'' என்றான். அப்படியே ஆதரவாக அவள் கண்ணீரைத் துடைத்துவிடும் போது அவன் கைகளை அவளும் பார்த்தாள்.

''அய்யோ...!'' பதறிப்போனாள்.

கண்ணாலேயே 'எப்படி?' என்று கேட்டாள்.

''அது ஒண்ணுமில்ல... தேனீ கொட்டிடுத்து.'' என்று சமாளிக்கப் பார்த்தான்.

'தேனீயா...?' அவள் கண்களே அடுத்து கேள்வியைக் கேட்டது.

''சரி சரி. விடு... எல்லாம் சரியாயிடுத்து. ஒண்ணும் பிரச்னை இல்லை...'' என்னும் பொழுது யாரோ வரும் அரவம்.

தில்லைஸ்தானம் வெங்கட்ராமன் நுழைந்து கொண்டிருந்தார்.

கல்யாண புரோக்கர்.

''என்ன சங்கரா, அப்பா இல்லையா...?''

''இத்தனை நாழி அவர் கோவில்லன்னா இருப்பார். ஆமா எங்க இவ்வளவு தூரம்...?''

''ஒரு கல்யாண புரோக்கர் எதுக்கு வருவான். எல்லாம் வரன் சம்பந்தமாதான்...''

''வரனா...?''

''என்ன வரனான்னு இழுக்கறே...? உனக்கு இல்லை. இதோ பாக்கறாளே இவளுக்குதான்!''

''மைதிலிக்கா...?''

''திரும்ப சந்தேகமா...? ஊமையை எவன் பண்ணிக்கச் சம்மதிச்சான்னு ஆச்சரியமா இருக்கா?''

''ஆமாம்... நம்பமுடியல...!''

''இந்த வெங்க்கி யாரு...? அருமையான பேங்க் மாப்பிள்ளையாவே வந்திருக்கு. என்ன... கொஞ்சம் நகைநட்டு,

சீர்செனத்து எதிர்பார்க்கறா. கடன் பட்டாவது பண்ணிட்டா போச்சு. ஊமையைக் கல்யாணம் பண்ணிக்கறேன்னு சொல்றதே பெருசாச்சே...!''

''என்னென்னமோ சொல்றேள். கேட்கச் சந்தோஷமா இருக்கு... நீங்க கோவிலுக்குப் போய் அப்பாவைப் பார்த்து விஷயத்தைச் சொல்லுங்களேன். அவர் கேட்டா ரொம்ப சந்தோஷப்படுவார்...''

''அப்படியே 'நகைநட்டு, சீர்செனத்திக்கு எங்க போக...? நான் தினசரி சாமி முன்னால தட்டு ஏந்தற சாதாரண பட்டர்'ன்னு சொல்வார். நீதான் தைரியம் சொல்லி 'நான் இருக்கேன்'னு சொல்லணும்.''

''அதுக்காகத்தானே மாமா சிங்கப்பூர் போய் உத்யோகம் பார்க்க நானும் சாமிநாதனும் முயற்சி பண்ணிண்டிருக்கோம்.''

''சபாஷ்...! அப்படிப் போடு. இந்த வரன்கூட சிங்கப்பூர்தான். மாப்ளை சிங்கப்பூர்லதான் உத்யோகத்துல இருக்கான்.''

''அட்ராக்கைன்னானாம். எனக்கும் ரொம்ப செளகர்யமா போயிடும். சரி சரி. நீங்கபோய் விஷயத்தை அப்பாகிட்ட சொல்லுங்கோ...'' என்றான். அவரும் கிளம்பினார். சங்கரன் பார்வை அடுத்து மைதிலி பக்கம்தான் திரும்பியது.

அவள் இன்ப அதிர்ச்சியில் இருந்தாள்.

தோடிபுரம் பஸ் ஸ்டாப்பை ஒட்டி ஒரு கல்மண்டபம்! கல்மண்டபத்துக்கும் அப்பால் காவிரி வாய்க்காலின் ஓட்டம்.

கல்மண்டபத்தில் ''வை ராஜா வை... ஆஞ்சு வெச்சா பத்து... பத்து வெச்சா இருபது.'' என்கிற உற்சாகமான சூதாட்டக் கூக்குரல்.

நட்டு என்கிற நடராஜன்தான் கொஞ்ச நாளாக இந்த மாதிரி மூணு சீட்டுச் சூதாட்டத்தைச் செயல்படுத்தி ஆரம்பித்திருக்கிறான்.

அவனைச் சுற்றியும் ஒரு பத்து பேர். அதில் கோவிலுக்குத் தரிசனத்துக்கு வந்திருந்த ஒரு அயலூர்க்காரரும் இருந்தார்.

அநியாயமாக சம்பளப்பணம் ஆயிரம் ரூபாயை நட்டுவிடம் விட்டுவிட்டு பேந்தப்பேந்த விழித்தபடி நின்றுகொண்டிருந்தார்.

அவனிடமோ படு உற்சாகமான குரல்.

கைகள் இப்படியும் அப்படியுமாக சீட்டை மாற்றிப்போட்டு ஜெகஜ்ஜாலம் செய்து கொண்டிருந்தன.

அவன் பார்வை சுற்றிச்சுற்றிப் பார்த்தது. அங்கிருப்பவர்கள் விளையாட இனி பணம் இல்லை என்பது தெரிந்துவிட்டது. அவ்வளவும் அவனிடம்.

வெளியூர்க்காரர் திரும்பிப்போக பஸ்ஸுக்கு ஒரு பத்து ரூபாய் கேட்டார். ''நடந்து போ!'' என்றான் நிர்தாட்சண்யமாக.

இடையிட்டது மினி பஸ்ஸின் ஹாரன் சப்தம். நிமிர்ந்து பார்த்தான். பஸ் வந்து நின்றது. அதிலிருந்து பலரும் இறங்கினர்.

வித்தியாசமாய் ஒருவரும் இறங்கினார்.

அவர் மண்ணில் காலடி வைத்த நொடி தோடீஸ்வரர் கோவில் கண்டாமணிச் சப்தம் 'டாண்' என்று ஒலித்தது.

சிவப்புக் கச்சமும் மஞ்சள் துண்டுமாய் நெற்றி நிறைய குங்குமத்துடன் பார்க்க ஒரு அம்பாள் உபாசகரைப்போல தெரிந்தவரின் ஒரு கையில் தகரப்பெட்டி ஒன்று. தோளில் ஒரு ஜோல்னா பை.

எவ்வளவோ பேர் இப்படித் தோடிபுரத்துக்குத் தினம் தினம் வருகிறார்கள். இதுதான் க்ஷேத்ரமாயிற்றே? எனவே அவாது தோற்றமோ, வருகையோ அங்கு யாரையும் பெரிதாகப் பாதித்து விடவில்லை. ஆனால் அவர் அவர்களை நோக்கி நடந்ததுதான் ஆச்சரியம்.

நடராஜனோ கையைச் சொடுக்கிக்கொண்டான்.

''டேய் வழிய உடுங்கடா...! யாரோ ஒரு சாமி வரார் பாரு. வா சாமி... அஞ்சு வெச்சா பத்து... பத்து வெச்சா இருவது. அதிர்ஷ்டம் இருந்தா ஐம்பது நூறு இல்ல, ஆயிரம்கூட கெலிக்கலாம் சாமி. இன்னா சொல்ற...?'' என்றபடியே அவர் எதிரில் மூன்று சீட்டை மாற்றி மாற்றிப் போட்டான்.

''சரிதான்...! நான் உன்னாண்ட சீட்டு விளையாட வந்ததா நினைச்சுட்டியா? அதான் இல்லை. இந்த ஊர்ல தங்கறதுக்கு சத்திரம், சாவடி ஏதாவது இருக்கான்னு தெரிஞ்சுக்கத்தான் வந்தேன்.'' என்றார் அவர்.

''ப்பூ... இவ்ளோதானா... நான் கூட மூணு சீட்டு ஆடத்தான் வந்தியோன்னு நினைச்சேன்.'' என்றான் நட்டு.

''நான் ஒரு அம்மன் உபாசகன். எனக்கு எதுக்குப்பா மூணு சீட்டும் நாலு சீட்டும். நீ என் கேள்விக்குப் பதிலைச் சொல்லு...!''

''ஆமா... இது ஒரு ஊரு. இங்க சத்திரம் சாவடிதான் குறை. போய் கோவிலாண்ட கேளு.'' - அவனிடம் அலட்சியமான பதில்.

குறுக்கிட்டது வெளியூர்க்காரரின் அழுகை.

''அய்யா! ஆயிரம் ரூவாயை விட்டிருக்கேன். ஒரு பத்து ரூவா தரமாட்டீங்களா...?''

''சல்லிக்காசு தரமாட்டேன். நான் என்ன நோட்டா அடிக்கறேன். இது என் வரைல பொழப்பு. உனக்கு அதிர்ஷ்டம் இல்லை. அதுக்கு நான் என்ன பண்ணுவேன்.''

நட்டுவின் படுஅலட்சியமான பதில் உபாசகரை அப்படியே கவ்வி இழுத்தது. அவர் பார்வையும் அழுது கொண்டிருந்த அந்த வெளியூர்க்காரர்மேல்தான் சென்றது. மெல்ல நெருங்கி வந்தார். உற்றுப் பார்த்தார்.

''என்ன... ஆயிரம் ரூபா போயிடுத்தா?'' என்றார்.

''ஆமாம் சாமி... அநியாயமா போயிடிச்சு. நான் ஒரு வாட்ச்மேன். என் சம்பளமே அவ்வளவுதான் சாமி...''

''அதுசரி... ஆயிரம் ரூபா சம்பாதிக்கற உனக்கு சூதாடுற ஆசை வரலாமா?''

''தப்புதான் சாமி... புத்தி கெட்டுப் போய் ஆடிட்டேன். இனி சூதை நினைச்சுக்கூட பார்க்கமாட்டேன்.''

''சரி அழாதே... இப்ப உனக்கு என்ன வேணும்?''

''ஒரு பத்து ரூபா. ஊருக்குப் போக பஸ்ஸுக்குக் கிடைச்சா போதும் சாமி.''

''அப்படியா...?''

''ஆமாம் சாமி...!''

''சரி. கொஞ்சம் இரு...'' - உபாசகர் பதிலோடு மூணு சீட்டு நடராஜன் பக்கம் திரும்பினார். அவன் ஒரு பீடியை பற்றவைத்துக் கொண்டு புகையைக் கக்கியவனாக அவரை ஊசிப்பார்வை பார்த்தான். பின் ''என்னா சாமி... அவனுக்கு வக்காலத்து வாங்கப் போறீயா?'' என்றான்.

''வக்காலத்தா... சேச்சே... ஆமா... நான் உன் கூட விளையாட வந்தா சேத்துப்பியா?''

''என்னமோ உபாசகன் கிபாசகன்னே...? எனக்கு எதுக்குன்னே...? அதுங்காட்டியும் பல்டி அடிச்சு ஆட வருட்டுமாங்கிறியே...''

''பல்டியோ, குட்டிக்கரணமோ... என்னோட ஆட வருவியா மாட்டியா?''

''எனக்கு அதானே சாமி தொழிலு. குந்து. ஆனா ஒண்ணு. நீயும் காசை உட்டுபிடடேன்னு வை. பஸ்ஸுக்குக் காசு கொடு, டீ குடிக்கக் காசு கொடுன்னு இந்த ஆள் மாதிரி அழுவக்கூடாது!''

''சேச்சே... நான் அப்படி எல்லாம் நடந்துக்கவே மாட்டேன். நீ தைரியமா சீட்டைப்போடு.''

''ஆமாம்... எவ்வளவு வெச்சிருக்கே...?''

''என்ன... சன்யாசிதானே நான். ஒரு ஐம்பது அறுவது ரூபா இருக்கும்.''

''ப்பூ! இவ்வளவுதானா... மூணு வீச்சுக்கு காணாதே. சரி போடவா...?''

''உம். போடு!''

அவர் ஆமோதிக்க அவனும் கையை வளைத்து ஆட்டி கோலம் போடுகிற மாதிரியெல்லாம் கொண்டுசென்று சக்சக்கென்று சீட்டைத் தரையில் பதித்தான். அதில் எது ராஜாவோ அதன்மேல் வைத்தால் பரிசு. உபாசகர் ஒரு பத்து ரூபாயை எடுத்து பதிலுக்கு அவரும் இப்படியும் அப்படியுமாக கையை ஆட்டிவிட்டு ஒரு சிட்டின்மேல் வைத்தார். அவனும் புரட்டினான். ராஜா! சுருக்கென்றது. அடுத்த நொடி பத்து ரூபாய் இருபது ரூபாயானது.

திரும்ப அடுத்த வீச்சு.

திரும்ப உபாசகரும் இருபதை அப்படியே வைத்தார்.

சீட்டைத் திருப்பிப் பார்த்தான்.

அதே ராஜா!

இருபது ரூபாய் நாற்பதானது.

நட்டுவின் முகத்திலும் கோணல்கள்.

அடுத்து நாற்பது எண்பதானது. எண்பது நூற்று அறுபது ஆனது... கூட்டம் ஆவென்று வாயைப் பிளந்தது. சிலர் படு குஷியாகிவிட்டனர். ஆயிரம் ரூபாயை விட்டிருந்த பக்கத்து ஊர்க்காரர் எகிறிக் எகிறிக் குதிக்கவே ஆரம்பித்துவிட்டார்.

ஒரு கட்டத்தில் இரண்டாயிரம் வரை நட்டு பணத்தை விட்டு விட்டவனாக ஆத்திரத்துடன் சீட்டைக் கிழித்து எறிந்தான்.

முறைத்து முறைத்துப் பார்த்துக்கொண்டே அங்கிருந்து நடந்தான்.

''சாமி... நீங்க பெரிய ஆள் சாமி.'' என்றார் பக்கத்து ஊர்க்காரர்.

''இனி நட்டு இந்த ஊர்ப்பக்கம் மூணு சீட்டு போட மாட்டான். அதுலையும் உங்களைப் பார்த்தா சீட்டையே எடுக்க மாட்டான்'' என்றார் இன்னொருவர். உபாசகர் சிரித்தார். யார் யார் எவ்வளவு விட்டீர்கள் என்று கேட்டு அப்படியே பிரித்துக் கொடுத்தார்.

சிலர் காலிலேயே விழுந்து விட்டனர்.

இறுதியில் அவர் கையில் அவர் எடுத்த பத்து ரூபாய். அதையும் அங்கு கண் தெரியாமல் அமர்ந்திருந்த கிழவி ஒருத்தியின் தட்டில் போட்டுவிட்டு நடந்தார்.

எதிரில் இருந்தது ஒரு பெட்டிக்கடை.

கடைக்காரரை நோக்கி நடந்தார்.

கடைக்காரர் மரியாதையாக எழுந்து நின்று அவரைப் பார்த்தார்.

''இந்த ஊர்ல...''

''சத்திரம் சாவடிதானே சாமி?''

''ஆமாம்...''

''அப்படி எதுவுமில்ல சாமி... கோவில் கல்யாண மண்டபம் ஒண்ணு இருக்கு. அது சும்மாதான் கிடக்கு. அதுல தங்கலாம். ஆனா அதுல தங்க பஞ்சாயத்து போர்டு பிரசிடென்ட்... இல்லாட்டி கோவில் பட்டர் அனுமதி வாங்கணும்.''

''வாங்கிட்டா போச்சு'' என்ற உபாசகர் பெட்டியை அவர் எதிரில் - கடைக்கு அருகில் வைத்தார். பையையும் வைத்தார்.

''நான் எதிர்ல ஆத்துல ஒரு முங்கு போட்டுட்டு வரேன். முதல் முதல்ல இந்த ஊர் கோவிலுக்குப் போகப் போறேன். குளிச்சுட்டுப் போறதுதான் ஸ்லாக்யம்.'' என்றார்.

''போய்ட்டு வாங்க. பொட்டி இங்கையே இருக்கட்டும். நான் பாத்துக்கறேன்'' என்றார். உபாசகரும் அவர் எதிரில் பெட்டியைத் திறந்து ஒரு துண்டை எடுத்துக்கொண்டு நடந்தார்.

அதே சமயம் நட்டு திடீரென்று அங்கே தோன்றி பெட்டிக் கடைக்காரர் எதிரில் ஒரு பீடியை பற்ற வைத்தான்.

''சரிதான்... நீ இன்னும் போகலையா...? இங்கதான் இருக்கியா?''

''எப்படிப் போவேன். என்னை மொட்டைல்ல அடிச்சுப்புட்டான் இந்தச் சாமியார்ப்பய...''

"அதானே... நீ எத்தினி பேத்த வேணா மொட்டை அடிப்பே. ஆனா உன்னையே ஒருத்தர் அடிச்சுட்டார்னா அது சாதாரண விஷயமா என்ன?"

"என்ன கேலிபண்றியா. ஆமா இது என்ன. அந்த ஆள் பெட்டிதானே?" கேட்டபடி அதை நெருங்கித் தொட்டான்.

"வேணாம் நட்டு. தொடாதே. அந்த மனுஷர் என்னை நம்பி ஒப்படைச்சுட்டுப் போயிருக்கார்."

"புடலங்கா... வாயமூடுறா..." அலட்சியமாக அவனை அடக்கிவிட்டு பெட்டிக்குள் இருப்பதைக் களவாடும் நோக்கத்துடன் பெட்டியைத் திறந்தான். ஒரு கணம் அப்படியே விக்கித்துவிட்டான்.

உள்ளே பெட்டியில் நூற்றுக்கணக்கில் நண்டுகள். அதில் ஒன்று அவன் கையையும் கவ்விக்கொள்ள 'ஆ' வென்றபடி உதறி எறிந்தான் அதை.

க்ஷணத்தில் வியர்த்தும் விட்டது.

கடைக்காரரே அதைப் பார்த்து அரண்டுதான் போயிருந்தார்.

உபாசகரும் தலையைத் துவட்டியபடி கச்சிதமாக வந்தார். நட்டுவைப் பார்த்துச் சிரித்தபடியே அவன் எதிரில் பெட்டியைத் திறந்தார். பெட்டிக்குள் வேட்டி துண்டு மற்றும் அவரது பொருட்கள்... சீராக அடுக்கப்பட்ட நிலையில்.

நட்டுவும் கடைக்காரரும் அதைப் பார்த்துவிட்டு தலையைச் சிலிர்த்துக் கொண்டனர்.

உபாசகர் பெட்டியில் இருந்து ஒரு துண்டை எடுத்து மார்புமேல் போர்த்திக்கொண்டு பெட்டியை மூடினார். கடைக்காரனுக்கு நன்றி சொல்லிவிட்டு நடக்க ஆரம்பித்தார்.

பேயறை பட்ட மாதிரி இருந்த நட்டு மெல்ல வாயைத் திறந்தான்.

"டேய்...! இந்த ஆள் லேசுப்பட்ட ஆள் இல்ல. யாரோ மாயாவி!"

# 3



## அன்று

அந்த் நான்கு வீரர்களும் தஞ்சை நகர் வீதி முழுக்கச் சுற்றிச் சுற்றி வந்தபடி இருந்தனர். இறுதியாக பெரிய கோவிலுக்கு வந்து பெரிய கோவில் கோபுரத்தைத் தூர இருந்தே ரசித்தனர்.

பின் உணவு விடுதி ஒன்றில் உணவருந்தலாம் என்று சென்றனர். குதிரைகளை அங்காடிக்கு வெளியே கட்ட வசதியாக மூங்கில் மரங்கள் கட்டப்பட்டிருந்தன. அதில் லகானைப் பிணைத்துக்கட்டி விட்டு உணவு விடுதிக்குள் நுழைந்தனர்.

உள்ளே பலதரப்பட்ட மனிதர்கள் தரையில் உள்ள பாய் விரிப்பில் அமர்ந்து சீனத்து பீங்கான் பாத்திரங்களைப் பயன் படுத்தியும் தாமரை இலைகளைப் பயன்படுத்தியும் உணவருந்திக் கொண்டிருந்தனர்.

அப்பம், பண்ணையம், அரிசிச்சோறு மூன்றும் அங்கே பிரதானமாக இருந்தது. உணவு விடுதிக்காரர் பார்த்துப் பார்த்துப் பரிமாறிக் கொண்டிருந்தார்.

வீரர்களில் ஒருவன் அவரை அருகில் அழைத்தான்.

''நாங்கள் டெல்லியில் இருந்து வருகிறோம்'' என்றான்.

''மிக்க மகிழ்ச்சி. நான் என்ன செய்ய வேண்டும்?''

''எங்களுக்கு உணவளிக்கும் முன் ஒரு கேள்வி.''

''தாராளமாகக் கேளுங்கள்.''

''இந்த விடுதிக்கு யாத்ரீகர்கள் வருவார்களா?''

''யாத்ரீகர்கள் மட்டுமா...? உங்களைப் போன்ற வீரர்கள் முதல் பலரும் வருவார்கள்.''

''நல்லது... இந்த விடுதிக்கு அறுபது வயதில் ஒரு வீணையுடன் முதியவர் ஒருவர் வந்தாரா...? நினைவிருக்கிறதா?''

''முதியவர்... வீணையுடனா...?''

''ஆமாம். அந்த வீணைகூட வித்தியாசமாக இருக்கும். வழக்கமான வீணை போல் இருக்காது.''

''ஆங்... ஞாபகம் வந்துவிட்டது. குறுந்தாடியுடன் தலைப்பாகை தரித்த ஒருவர் வந்தார். கறுப்பாக இருந்தார்... நான்கூட அவரை ஒரு ஹாஜியாக நினைத்தேன். பின் பெரிய இசைக் கலைஞராகக்கூட இருப்பார் என நினைத்தேன்.''

அந்தப் பதில் அந்த வீரர்களை அப்படியே குளிர வைத்தது. முகத்தில் அதீத மகிழ்வும் தொற்றிக்கொண்டது.

''என்று வந்தார்...? எங்கு போனார்? ஏதாவது தெரியுமா?''

''அது... அது... ஆங்... தோடிபுரம் எங்கு இருக்கிறது என்று என்னிடம் கேட்டார். நான்கூட சொன்னேன்.''

''தோடிபுரமா...! அது எங்கே இருக்கிறது?''

''இங்கிருந்து முப்பது கல் தொலைவில் காவிரி ஆற்றங்கரையில்தான் இருக்கிறது. புராணச் சிறப்பு பெற்ற ஊர். அந்த ஊரில் வீட்டுக்கு வீடு இசைக் கலைஞர்கள்தான்.''

''எந்தத் திசையில் இருக்கிறது?''

''இங்கிருந்து கிழக்கில் செல்லவேண்டும். ஆற்றோரமாகச் செல்லலாம். நெடிதுயர்ந்த கோபுரத்துடன் ஊர் தெரியும்.''

''நல்லது... இந்தாருங்கள். பிடியுங்கள் இந்த நூறு கழஞ்சை.''

''நூறு கழஞ்சா... சாப்பிடவில்லையா?''

''உங்கள் பதில் எங்கள் வயிற்றை நிரப்பிவிட்டது அன்பரே... வருகிறோம்...''

அவர்கள் தாவிக் குதித்து புரவியை நெருங்கி அதில் ஏறினர்.

உணவு விடுதிக்காரருக்கு ஒரே திகைப்பு!

அளவில் பெரிய அந்த மயானத்தில் அங்கங்கே சிதை நெருப்பு! அதில் ஒரு சிதையைச் சுற்றி 'காபாலிகர்கள்' என்று ஊரார் அழைக்கும் திரிசடையும் அழுக்கு உடம்பும் அதில் சாம்பல் பூச்சுமான காபாலிக சன்யாசிகள் உடம்பில் பொட்டுத் துணியின்றி ஆட்டபாட்டமுடன் சிதையைச் சுற்றிச்சுற்றி வந்த வண்ணமிருந்தனர்.

அவ்வப்போது சிதையைச் சுற்றி உதிர்ந்து கிடக்கும் பிணச்சாம்பலையும் ஆக்ரோஷமாக எடுத்து பூசியும் கொண்டனர்.

அவர்களது செயல் மிக வினோதமாக இருந்தது. திடீரென்று அவர்களிடையே மிகவும் அமைதி.

அப்படியே எரியும் பிணத்தைச் சுற்றி அமர்ந்தனர். ஒருவர் மட்டும் எங்கோ சென்று ஒரு பானை நிறைய பாலைக் கொண்டு வந்தார். பச்சைப்பால். அதை எரியும் சிதை மேல் அப்படியே விட்டு எரிகிற சிதை நெருப்பைத் தணித்தார்.

அப்பொழுதெல்லாம் அவரது ஜடாமுடியும் திரிசடையும் தரையில் புரண்டு சாம்பல் புழுதி கிளம்பியது. சிதை நெருப்பில் கொஞ்சம் அந்த தலை முடி பட்டுவிட, முடியானது எரிந்து தலை முடிக்கே உண்டான கரிப்பு வாசம் கம்மென்று கிளம்பியது.

பின் பாலால் ஆவர்பவிக்கப்பட்ட அந்தப் பாதி எரிந்தும் எரியாத சடலத்தை அதன் கைகால்களை ஆளுக்கொருவராக அப்படியே பிய்த்து எடுத்து மாமிசத்தை உண்பது போல உண்டனர். சிலர் ஒருவருக்கு ஒருவர் பரிமாறியும் கொண்டனர்.

பார்க்கவே பயங்கரமாக இருந்தது.

பின் அவர்களில் ஒருவர் அருகில் இருந்த உயரமான ஒரு சமாதித்திட்டுமேல் ஏறி நின்று கொண்டு கைகளைக் குவித்து ''ஓம் காபாலிகா...'' என்றார். பதிலுக்கு அவர்களும் ''ஜெய்காபாலிகா.'' என்றனர். பல நிமிடங்கள் இந்த கோஷங்களே அங்கே ஒலித்தன.

பிறகு கோஷம் ஒலிப்பதை நிறுத்தியவர் பேச ஆரம்பித்தார்.

''அருமைக் காபாலிக ஜீவன் முக்தர்களே...! இந்த அர்த்த ராவில் உலகமே உறங்கும் இரவுப் பொழுதில் நாம் துளியும் அச்சமோ, பற்றுதலோ இல்லாமல், சுவை நாற்றம் இவையும் பெரிதாகக் கருதாமல் உயிர்ப்பறவை அடைபட்டிருக்கும் இந்த உடம்பை வளர்க்க இன்னொரு உடம்பையே உணவாகவும் அதிபிரசாதமாகவும் உட்கொண்டு, மயானமூர்த்தியும் உலக ரட்சகனுமான அந்த காபாலிகசிவத்தைத் தொழுதபடி இருக்கிறோம்.

பிறப்பு ஒரு சாபக்கேடு. அதில் ஆசாபாசம் மிகுந்த வாழ்க்கைமுறை ஒரு சஞ்சலம் மிகுந்த விஷயம். அதில் அகப்பட்டவர்களுக்கு விடுதலை இல்லை. வீடுபேறும் இல்லை.

ஆனால் நமக்கு அப்படி இல்லை.

நமது வாழ்க்கை முறை இந்த உலகுக்கு வினோதமானதாக இருக்கலாம். ஆனால் இதுவே உன்னதம். அற்புதம். நமக்கு மறுபிறப்பில்லை. நாம் அந்த ஆதிசிவனின் சத்புத்ரர்கள். அவனது

தரிசனத்தால் முக்தி பெறப் போகிறோம். அவனது தரிசனத்துக்குக் காத்திருப்போம். அதே சமயம் அவனைக் கூவி அழைப்போம். இது அவனது நந்தவனம்.

நமது கூக்குரல் அவனை அழைத்து வரட்டும். அவனது ஆட்டம் இங்கே நடக்கட்டும்.'' பேசிக்கொண்டே போனார் அந்தக் காபாலிகர். கூட்டத்துக் காபாலிகர்கள் அமைதியாக கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது ஒரு ரிஷி கையில் கமண்டலமுடன் அவர்களை நோக்கி வந்தபடி இருந்தார். காவி உடை... நெற்றி நிறைய நீறு... கொக்குச் சிறகாய் தலைமுடியும் தாடியும்... விளக்குச் சுடர்போல் கண்களில் ஒளி.

அவரை அந்தச் சுடுகாட்டில் பார்த்த காபாலிகர்கள் முறைத்தனர். அவரும் பதிலுக்கு அவர்களை உற்றுப்பார்த்தார்.

''எங்கே வந்தீர்...? அதுவும் இந்தச் சுடுகாட்டுப் பக்கம்?'' - ஒரு காபாலிகர் ஆக்ரோஷம் பொங்கக் கேட்டார்.

''பிணந்தின்னிகளான உங்களைக் காணத்தான்!'' - அவரின் பதிலில் முதல் வார்த்தையிலேயே இகழ்ச்சி.

''வயிற்றுப் பசிக்கு உணவல்ல இது... ஆன்மப் பசிக்கான உணவு இது. உங்களைப் போல உயிருடன் சித்ரவதை செய்பவர்களல்ல நாங்கள்...''

''நரமாமிசம் தின்பதற்கு இப்படி ஒரு நியாயவாதமா?''

''போதும்... காபாலிகக் கொள்கைகள் பற்றி அல்பத்தவசியான உங்களுக்கு என்ன தெரியும். வாயை மூடுங்கள்.''

''பெரிய காபாலிகம்... நீங்கள் அழிவுக்சக்திகள், காட்டு மிராண்டிகள். உங்களால் ஒருக்காலும் அந்தப் பரமனை அடைய முடியாது.''

''இதைச் சொல்லத்தான் இந்த நள்ளிரவில் இந்தச் சுடுகாட்டுக்கு வந்தீர்களோ?''

''அதுமட்டுமல்ல... இந்த மண்ணில் இனி நீங்கள் இருக்கக்கூடாது. உங்களால் என்போன்ற தவசிகளைக்கூட மனிதர்கள் சந்தேகிக்கிறார்கள்.''

''ஆ... அதுதான் உங்கள் கவலையா... சரிதான். சுற்றி இருப்பவர்களைப் பற்றிய கவலையும் விசாரமும் உடைய நீங்களா ரிஷி...? ரிஷி என்பவர் அனைத்தையும் துறந்தவர் என்பார்கள். அதாவது எங்களைப் போல...''

காபாலிகர்கள் சொல்லிவிட்டு ஒட்டுமொத்தமாகச் சிரித்தனர். வந்திருந்த முனிவர்பிரானிடம் கோபம் கொப்பளித்தது.

''வார்த்தைக்கு வார்த்தை எதிர்வாதம் செய்யும் உங்களுக்கு நான் ஒன்று சொல்லிக் கொள்கிறேன். காட்டுமிராண்டிகளான நீங்கள் அந்தப் பரமனை ஒருக்காலும் அடைய முடியாது.''

''என்றால் நீங்கள் மட்டும் அவரை விரைவாக அடைந்து விடுவீர்களோ?''

''அதிலென்ன சந்தேகம்? நான் ரிஷி மட்டுமல்ல... சங்கீதத்தில் தேர்ந்தவன்... அந்தப் பரமனும் இசை என்றால் இசைபவன்.

ருத்ரவீணை ஒன்று போதும். அதில் என் ஒரு ராகத்திற்கு மயங்கி அந்தப் பரமன் பிரசன்னமாகிவிடுவான். ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.''

அவர் ருத்ரவீணை என்று சொன்னவுடன் காபாலிகர்கள் முகத்தில் அசுரத்தனமான மாறுதல். ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''என்ன... பேச்சைக் காணோம்? ருத்ரவீணை என்றதும் வாயடைத்துப் போய்விட்டதோ?''

முனிவரின் பதில் கேள்விக்கும் பதிலில்லை. முனிவரும் பெருமூச்சுடன் முறைத்துவிட்டு விலகிட காபாலிகர்களில் தலைவனைப் போன்ற ஒருவரை மற்றவர்கள் சூழந்துகொண்டு நின்றனர்.

அவர்களில் மிக முதிய ஒருவர் கலக்கம் குறையாதபடி பேச ஆரமபித்தார்.

''அந்த முனிவர் பிரான் சொன்னது பேருண்மை. ருத்ரவீணை ஒன்றுபோதும் அந்தப் பரமனை அடைந்துவிட...''

''அதுசரி... அப்படி என்னதான் இருக்கிறது அதில்?''

''சிருஷ்டி ரகசியம்... வேத ரகசியம்... சப்த ரகசியம்.. தேவ ரகசியம்... ஜீவ ரகசியம்... பிரபஞ்ச ரகசியம்... அனைத்துக்கும் மேலான மோட்ச ரகசியம் என்று எல்லாமே அதனுள் அடக்கம்...''

''எப்படி...? எப்படி என்று விளக்கமாகச் சொன்னால்தானே புரியும்?''

''ஆறாம் அறிவு படைத்த மனிதனால் மட்டுமே நான் சொன்ன அந்த ரகசியங்களை அறிந்து கொள்ள முடியும். அதற்கான ஞானம் மனிதனிடம் மட்டுமே உண்டு. அதுவும்கூட ஒரு பிறப்பில்

நிகழ்ந்துவிடாது. பலவிதப் பிறப்புகள்... அதில் பலப்பல புண்ணியச் செயல்கள் இவைகளால் ஒன்பது கோள்களின் கருணையை முதலில் பெற்றிட வேண்டும். அந்தக் கருணையால் அந்தக் கோள்களின் குறிப்பிட்ட ஒரு சஞ்சார வேளையில் பிறப்பு ஒன்று நிகழும். அப்படிப் பிறக்கும் ஒருவராலேயே நான் குறிப்பிட்ட அந்த ஏழு ரகசியங்களையும் அறிந்திட முடியும்...''

''அந்த ரசகியத்துக்கும் வீணைக்கும் என்ன தொடர்பு? வீணை என்பது இசை வாத்தியக் கருவி அல்லவா?''

''மேம்போக்காகப் பார்த்தால் இப்படித்தான் கேட்கத் தோன்றும். நல்ல ஞானமுள்ளவன் இப்படி ஒரு கேள்வியைக் கேட்கமாட்டான்.

ஏன் என்றால் அவனுக்குத் தெரியும், இந்த உலகம் ஒலியில் இருந்துதான் பிறந்தது என்று. இசை என்பது இனிமையான ஒலி. இசைக்கப்படும் போது நம்மைச் சுற்றியுள்ள பஞ்சபூதங்களில் பலவித மாற்றங்கள் நிகழ்கின்றன.

அந்த மாற்றங்கள் மகத்தானவை.

அது அந்த மகாதேவனையே கட்டி இழுத்து வந்து எதிரில் நிறுத்திவிடும்.''

''அப்படியானால் நாம் ஒரு ருத்ரவீணையைச் செய்து இந்த பிரேத வனத்திலேயே ஏன் இசை வழிபாடு செய்து அந்த மகாதேவ பிரபுவை வரவழைக்கக்கூடாது?''

''அது அவ்வளவு சுலபமல்ல... அதிலும் ருத்ரவீணையை அந்த மகாதேவனின் கருணை இருந்தாலே உருவாக்கிட இயலும். உரிய மரம், நரம்புகள் கிடைக்கவேண்டும். சுரம் அமைய வேண்டும். எல்லா சுரத்தாலும் இந்தப் பஞ்ச பூதங்களை நாம் நம் விருப்பத்திற்கு இயக்க முடியாது.

எப்படி ஒரு பூட்டிய பெட்டிக்கு அதற்கான ஒரு சாவிதான் சரியான திறவுகோலோ அப்படி பஞ்சபூதங்களை ஆட்டுவிக்க குறிப்பிட்ட ஒரே ஒரு விதமான நாதத்தால்தான் முடியும். அந்த நாத சப்தத்தை அறிந்தவன் ஒரே ஒருவன்தான்.

அவனே அந்தச் சர்வேஸ்வரன்!

அவன் அதை அன்னை சக்திக்குள் வைத்து அவளையே அந்த ருத்ரவீணையாக மாற்றிவிட்டதாகக்கூட கூறுவார்கள்...''

''அப்படியானால் அன்னை உமைதான் அந்த ருத்ரவீணையா?''

''ஆம்... அது எவர் வசம் இருக்கிறதோ அவரால் நான் கூறிய சப்த ரகசியங்களையும் இசைத்தே உணர்ந்திட முடியும்.

அது மட்டுமல்ல, உரிய பீஜாட்சரங்களை உரிய ராகத்தில் புகுத்தி இசைத்து இந்தப் பிரபஞ்சத்தையே மாற்றிவிடலாம்.''

''ஆச்சரியத்தின் உச்சமாக இருக்கிறதே இந்தச் செய்தி. சரி... அந்த ருத்ரவீணை இப்பொழுது எங்கு இருக்கிறது?''

''இந்தப் பூவுலகின் கயிலை எனப்படும் இமயத்தில் அந்தப் பரமனின் அருள் பெற்ற ஒரு மாமுனி அதை வைத்திருக்கிறார் என்பது மட்டும்தான் எனக்குத் தெரியும்.''

மூத்த காபாலிகரின் பதிலைத் தொடர்ந்து அத்தனை காபாலிகர்களும் அவரைச் சுற்றி நின்று உற்று நோக்கினர்.

அவர்களின் தாடியும் மீசையுமான பிணச் சாம்பல் பூசிய முகத்தில் ஏராளமான சலனம்.

அருகில் அமைதியான முறையில் எரிந்தபடி இருந்தது சடலம் ஒன்று!

## இன்று:

தோடீஸ்வரர் கோவிலில் நல்ல கூட்டம்.

கொஞ்சம் முந்திதான் பாலமுரளியும் வயலின் ஜெயராமனும் வந்துவிட்டுப் போனார்கள்.

வந்தவர்கள், 'வந்தோம் வணங்கினோம்' என்றில்லாமல் கைகளைக் கூப்பி தங்களது நாதத்தால் அந்த ஈசனைக் கிறங்கடித்துவிட்டுத்தான் சென்றிருந்தார்கள்.

பட்டருக்கும் ஒழியவில்லை.

ஆரத்தி காண்பிப்பதும் பிரசாதம் தருவதுமாய் சரியாக இருந்தது அவருக்கு வேலை...

உச்சிப் பொழுதும் உருண்டு வந்திருந்தது.

தலைக்கு நேர் மேலே சூரியன்.

கோவில் வாசலில் உபாசகர் நின்று கொண்டிருந்தார். திவ்யமாய் ஒரு பார்வை பார்த்துவிட்டு உள்ளே நுழைந்தார்.

உச்சிக்கால பூஜையை உத்தேசம் செய்து நாயனக்காரர் இசையை இழையவிட்டுக் கொண்டிருந்தார். மாஞ்சி ராகத்தில் 'மகாதேவ சுதனே...' பெருகி வழிந்து கொண்டிருந்தது.

உபாசகரும் அதில் நின்று மயங்கினார்.

அப்படியே தலை தன்னையறியாமல் ரசனையோடு ஆட அந்தப் பழைய கோவிலைப் பார்த்தபடியே நடந்தார்.

'யாரிடம் சென்று விசாரிப்பது?' என்று ஒரு சின்ன திகைத்தல். நல்லவேளையாக பட்டரே துண்டால் முகத்தை ஒத்திக் கொண்டு எதிரில் வந்தார்.

''நமஸ்காரம்!''

''நமஸ்காரம்... நீங்கோ?''

''அடியேன் பேர் நரசிம்மபாரதி. நான் ஒரு சக்தி உபாசகன். பக்கத்துல திருக்கடவூர்தான் அடியேனோட சொந்த ஊர்.''

''ஆஹா... அபிராமியம்மன் ஸ்தலம்னா அது. சொல்லுங்கோ. நான் எதாவது பண்ணணுமா?''

''ஆமாம்... நான் ஒரு வீணை வித்வானும்கூட. இந்தக் கோவில்ல ஒரு மண்டலம் அதாவது 48 நாள் இங்க அம்பாள் சன்னதியில வீணை வாசிக்கறதா பிரார்த்தனை பண்ணிண்டு இருக்கேன்.''

''அப்படியா... ரொம்ப சந்தோஷம். ஆமா... இங்க ஸ்வாமின்னா விசேஷமூர்த்தி. நீங்கோ அம்பாள் சன்னதியில் வாசிக்கப் போறதா சொல்றேளே...?''

''நமக்குத்தான் ஸ்வாமி வேற... அம்பாள் வேற... ஆனா அவாவரையில இரண்டு பேரும் ஒண்ணுதானே?''

''அதுசரி... இருந்தாலும் அவாளே தங்களுக்குள்ள சண்டை போட்டுண்டு லோகத்துக்கு எவ்வளவோ விஷயங்களைச் சொல்லியிருக்காளே...''

''அதோட சூட்சமம் தெரிஞ்சா நாமல்லாம் பெருசு சிறிசுன்னுல்லாம் பேசவேமாட்டோம்.''

''அதுவும் சரிதான்... சரி 48 நாள் நீங்க இங்க எங்க தங்கப்போறேள்?''

''அதுக்குத்தான் உங்களைப் பாக்க வந்தேன். இந்த ஊருக்குள்ள நான் ஆசார அனுஷ்டானத்தோட அவைகளுக்கு பங்கம் இல்லாம தங்க எதான வீடு வாடைகைக்குக் கிடைக்குமா?''

''வீடா... இந்த ஊர்லையா?''

''ஏன்... என்னவோ நான் முடியாத ஒரு விஷயத்தைக் கேட்டுட்ட மாதிரி இழுக்கறேள். ஊருன்னு இருந்தா வீடு இருக்காதா...? வீடுன்னு இருந்தா வாடகைக்கு விடமாட்டாளா?''

''அதெல்லாம் பிற ஊர்களுக்குப் பொருந்தும். இந்த ஊரைப் பொறுத்து வீடு வாசலை விக்கறதுங்கறதோ. இல்லை வாடகைக்கு விடுறதோ ஒரு தப்பான விஷயமாவே அந்த நாள்ல இருந்து இருந்துண்டுவர்றது. அதான் யோசிக்கறேன்.''

''வீடு வாடகைக்கு விடுறதும் வீடு வாசலை விக்கறதும் ஒரு தப்பான விஷயமா என்ன?''

''நிச்சயம் தப்புதான்... ஏன்னா இது சாதாரண மண்ணு இல்லையே. அதோட இந்த ஊரே இந்தக் கோவில் தோடீஸ்வரனோட சொத்துன்னா...!

இந்த ஊர்ல இருக்கறவாளுக்கும் அவா வம்சாவளிக்கும் அனுபவபாத்யதை மட்டும்தான்.''

''அப்படியா...?''

''ஆமாம்... நீங்க கேள்விப்பட்டதில்லையாக்கும்?''

''இல்லை. இந்தத் தகவல் மட்டும் என்வரைல புதுசு. ஆனா ஒண்ணு மட்டும் நன்னா தெரியும். இது மத்த ஊர் மாதிரி கிடையாது. இது ஓர் அசாதாரணமான ஊர்!''

''அதுல என்ன சந்தேகம்? இந்த ஊர்ல வாழறவா குறைஞ்சது நூறு வருஷம் வாழறா! அந்த அளவு தீர்க்க ஆயுள். வருஷம் மூணு போகம் விளையறது. ஆகையால பசிபஞ்சம் கிடையாது. சந்தோஷத்துக்கும் குறைவில்ல... தினம் தினம் எதான கச்சேரி... சங்கீத ஆலாபனைன்னு காதுல விழுந்துண்டே இருக்கும்.

திருட்டுப் பயமும் கிடையாது. ஏன்னா யாராவது ஒரு சிட்டிகை மண்ணைத் தெரியாம எடுத்துண்டு போனாக்கூட போறும். அவா பரம்பரையே விளங்காமப் போயிடறது.

எவ்வளவோ பெரிய இசைமேதைகள்லாம் தங்களோட கடைசிக் காலத்தை இந்தத் தோடிபுரத்துல கழிக்க நினைச்சா... ஆனா இங்கதான் 'வெளியூர்க்காரா இங்க சொல்ப நாட்கள் தங்கலாம். ஆனா வாழக்கூடாது'ன்னு ஒரு எழுதப்படாத விதி இருக்கே...''

பட்டர் புளகாங்கிதமாக விவரித்துக்கொண்டே போக உபாசகர் முகத்தில் தீர்க்கமான சிந்தனை.

''என்ன ஸ்வாமி சிந்தனை... நம்பமுடியாததையே சொல்றேனேன்னா...?''

''சேச்சே... அப்படி எல்லாம் ஒண்ணுமில்ல. நானும் பல விஷயங்களைக் கேள்விப்பட்டவன்தானே? சரி. நான் தங்க என்னதான் வழி?''

''வாங்கோ... எனக்கு உங்களால உதவ முடியாது. எங்க ஊர் பிரசிடென்ட்கிட்ட உங்களை அறிமுகப்படுத்தறேன். அவர் மனசு வெச்சா நீங்க இந்தக் கோவில் கல்யாண மண்டபத்துலயே தங்கிக்கலாம்.''

பதிலோடு அவரை அழைத்துக்கொண்டு நடந்தார். நீண்ட பிராகாரவெளி. அதில் ஒரு புறமாய் அறுபத்து மூன்று நாயன்மார்களும் கைகளைக் கூப்பியபடி நின்றிருக்க, உபாசகர் பார்வை அவர்களைத் தரிசித்துக்கொண்டே இருக்க, கால்கள் தொடர்ந்து நடந்தன.

ஒரு அதிசயம்போல அறுபத்து மூவர் நாயன்மார் சிலைகளும் முற்றுப் பெற்றுவிட்ட இடத்தில் வீணையும் கையுமாய் ஒருவரின் சிலை. பார்க்க ஒரு முகலாய பக்கிரி போன்ற அந்த மனிதரின் சிலை ஒரு க்ஷணம் உபாசகரைச் சுண்டி இழுத்து நிறுத்தியது.

''என்ன நின்னுட்டேள்?''

''இந்தச் சிலை?''

''இதுவா... இது பாபாவோட விக்ரகம். கேள்விப்பட்டதில்லையா?''

''பாபாவா...? ஷீரடி சாய்பாபாவா இவர்?''

''இல்லையில்லை. அவரைப் போலத்தான். ஆனா இவர் பேர் நவாப் ஜான் பாபா. வடநாட்டைச் சேர்ந்தவர். இருந்தாலும் பதினாலு பாஷையும் பேசுவாராம்.''

''அதுசரி... எப்படி இப்படி ஒரு சிவாலயத்துக்குள்ற இவர் சிலை... அதுவும் அறுபத்து மூவருக்குச் சமமா...?''

''இந்த ஊரைப் பொறுத்து அவரும் ஒரு நாயன்மார்தான். சிலர் இவரைச் சித்தர்னுகூட சொல்றா.''

''மத்தவா சொல்றது இருக்கட்டும். இவர் விக்ரகம் எப்படி இங்க?''

''முந்நூறு வருஷத்துக்கு முந்தி இவர் இந்த ஊருக்கு வந்ததா சொல்வா. அப்ப இந்த ஊரே கடுமையான வறட்சியில இருந்ததாம். பலபேர் அம்மை, வாந்திபேதி சீதபேதின்னு உஷ்ணாதிக்கத்தாலயும் வறட்சியாலையும் செத்துண்டு இருந்த நிலை. அப்ப இவர் வந்து தலைகீழா மாத்தினதா சொல்வா.''

''எப்படி... எதான சித்துவேலை செய்து மாத்தினாராக்கும்?''

''அதான் இல்லை... இதோ கைல வெச்சுண்டுருக்காரே வீணை... இதான் காரணம். இது ருத்ரவீணைன்னா...

இது இருந்தாதான் அந்தப் பரமேஸ்வரனே நேர்ல வந்துடுவானாமே?''

பட்டரின் பேச்சில் ஒரு புதிய செய்தி. உபாசகரின் முகத்திலும் ஒரு புதிய பிரகாசம்.

''ஆமா... இந்த ருத்ரவீணை... அப்புறம் இந்த பாபா என்ன ஆனார்னு தெரியுமா?''

''அது ஒரு பெரிய கதை. அந்த நாள்லதான் இந்து - முஸ்லிம் பேதம் நிறைய இருந்ததே... அதோட இந்த ருத்ரவீணையை அபகரிக்கப் பலரும் போட்டா போட்டி போட்டாளாம்.

ஒரு பக்கம் டெல்லி சுல்தானோட ஆட்கள். மறுபக்கம் காபாலிகா... அப்புறம், சில விதவான்களே வீணையை அபகரிக்க முயற்சி செய்திருக்கா. அப்ப அவருக்கு எல்லா விதத்துலையும் உதவியா இருந்தது, அபராஜித வைஜெயந்திங்கற ஒரு தாசி. அந்த தாசி தன்னோட பங்களாவுலையே இவர் தங்கிட இடமும் கொடுத்திருக்கா.

அப்படி தங்கினவர் ருத்ரவீணைல கீர்த்தனைகள் பாடி இந்த ஊரையே ரட்சிச்சதா சொல்வா.''

''அப்ப இந்தத் தோடிபுரத்துக்குப் பெருமை முந்நூறு வருஷமாதான்னு சொல்லுங்கோ...''

''ஆமா... இந்த முந்நூறு வருஷத்துல ஒரு வருஷம்கூட இங்க மழை பொய்ச்சது கிடையாது. அதே போல இந்த ஊர்ல வியாதியில ஒருத்தர் செத்துப் போனார்னும் சொல்ல முடியாது.

எல்லாம் பாபாவோட ருத்ரவீணை மகிமை.''

'அதுசரி... பாபாவோ ஒரு முஸ்லிம். ருத்ரவீணையோ நம்ம சம்பந்தப்பட்டது. அது எப்படி இவர்கிட்டே...?''

''அதெல்லாம் தெரியாது. ஆனா ஒண்ணு தெரியும். மகான்கள் சாதி மதங்களுக்கு அப்பாற்பட்டவா. பாபா முஸ்லிமா இருந்தாலும் அவர் இந்த தோடீஸ்வரன் மேலகூட பல கீர்த்தனைகள் பாடினதா சொல்வா.

இப்பவும் அவர் இந்த வீணை வாசிச்சுண்டு இந்த ஊரை ரட்சிச்சுண்டு இருக்கார்னா உங்களால நம்ப முடியுமா?''

''என்ன பட்டரே சொல்றேள்? அது எப்படி ஒரு மனுஷர் 300 வருஷமா சாகாம உயிரோட இருக்க முடியும்?''

''ஒரு உபாசகர் நீங்களே இப்படிக் கேட்டா எப்படி? உங்களுக்கெல்லாம் தெரியாத ஜீவரகசியமா? மந்த்ராலயத்துல ராகவேந்திரர் மகாசமாதியான பின்னாலும் ரட்சிச்சிண்டு இல்லியா... அப்படித்தான்.''

பட்டரின் பதில் முடிய அவர் - நாதஸ்வரம் வாசித்து முடித்த நிலையில் சீவாளியை உற்றுப்பார்த்துக் கொண்டிருந்த ஒருவர் முன்னால் போய் நின்றார். அப்படியே-

''கல்யாணசுந்தரம்... இன்னிக்கும் உம்ம வாசிப்பு ரொம்ப பிரமாதம் ஓய்...'' என்றார்.

''நீரும் தினமும்தான் இதையே சொல்றீர். ஆனா என்ன பிரயோஜனம். கலைமாமணி பட்டத்துக்குக்கூட வழியில்லாம இருக்கேன்...''

அவர் குரலில் கலைஞர்களுக்கே உரிய வருத்தம். அப்படியே பார்வை உபாசகரை ஊடுருவியது.

''இவர் ஒரு அம்பாள் உபாசகர். பேர் நரசிம்மபாரதி! பக்கத்துல திருக்கடவூர்தான் இவர் சொந்த ஊர்.''

''நமஸ்காரம்!''

''நமஸ்காரம்... சாமிக்கு நான் எதாவது பண்ணணுமா?''

''ஆமாம், கல்யாணசுந்தரம்.. இவர் ஒரு நாப்பத்தெட்டு நாள் நம்ம ஊர்ல தங்கியிருந்து அம்பாள் சன்னதியில் வீணை வாசிக்கறதா பிரார்த்தனை பண்ணிண்டு இருக்காராம். 'இங்க தங்கணும். வாடகைக்கு வீடு கிடைக்குமா'ன்னுல்லாம் கேட்டார். நம்ம ஊர் பத்தி விவரமா சொல்லி உங்களாண்ட கூட்டிண்டு வந்துருக்கேன்.''

பட்டர் அந்த நாயனக்காரரிடம் வேண்டுகோள் வைத்தது உபாசகருக்கு ஆச்சரியத்தை அளித்தது.

''ஊர் பிரசிடென்ட்டிடம் அழைத்துப் போவதாகச் சொல்லி விட்டு இப்படி ஒரு கோவில் நாயனக்காரரிடம் கூட்டிக்கொண்டு வந்து பேசிக்கொண்டிருக்கிறாரே!'' என்று மனதுக்குள் ஓடியது.

அது பட்டருக்கும் புரிந்திருக்கவேண்டும்.

''என்ன ஸ்வாமி... பிரசிடென்ட்டுன்னு சொல்லிண்டு இவரண்ட பேசிண்டு இருக்கேனேன்னு பார்க்கறேளா? இவர் கோயில்ல பரம்பரை பரம்பரையா நாதஸ்வரம் வாசிக்கிற

குடும்பத்தைச் சேர்ந்தவர். அதே சமயம் இவர்தான் இந்த ஊருக்கே பிரசிடென்ட்டும்கூட...''

அந்த பதில் உபாசகருக்கும் இன்ப அதிர்ச்சியாக மாறியது.

''ஆச்சரியமாக இருக்கே... ப்ரசிடென்ட் ஆனபிறகும் கோவில்ல வாசிக்கறதுன்னா அதுக்குப் பெரிய மனசு வேணுமே?''

''அதெல்லாம் ஒண்ணுமில்ல சாமி. நாங்க பரம்பரை பரம்பரையா நாதஸ்வரக் குடும்பம். இந்த நாதஸ்வரம்தான் எங்களுக்குச் சோறு, தண்ணி, ஊன், உசுரு எல்லாம். இந்த பிரசிடென்ட் பதவி இப்ப வந்த ஒண்ணு.

இதுக்காக சாமிக்கு வாசிக்கற பாக்கியத்தை இழக்கிறது முட்டாள்தனமில்லையா?''

கல்யாணசுந்தரம் என்னும் அவர் அழகாய் மடக்கினார். அப்பொழுது ''அய்யா'' என்று அவரது உதவியாளன் கோலப்பன் அவர் அருகில் வந்து நின்றான்.

''என்னடா?''

''ஒரு நிமிஷம்...'' சற்றுத் தள்ளிச்சென்றவனாய் அவரை அழைத்தான். அவரும் அவனை நெருங்கினார்.

''என்னடா... என்ன விஷயம்?''

''நீங்க பேசிட்டு இருக்கீங்களே ஒரு சாமி...''

''ஆமாம்... அவருக்கென்ன?''

''மனுஷன் பயங்கரமான ஆளுங்க. நம்ம மூணு சீட்டுக்காரனையே புரட்டிப்போட்டுட்டார். கண்கட்டு வித்தையெல்லாம் தெரியும்போல இருக்குது. கைல இருக்குதே பொட்டி... அதுல துணிமணிதான் அவர் திறந்தப்ப இருந்துச்சு. ஆனா அவர் குளிக்கப் போயிருந்தப்ப மூணு சீட்டுக்காரன் நைஸா திறந்து பார்த்தான். உள்ளே கொசகொசன்னு நண்டுங்க! நானும் என் கண்ணால பார்த்தேன்.''

''என்னடா சொல்றே... இப்ப பொட்டில நண்டா இருக்குதுங்கறே?''

''அய்யோ! அப்படி இல்லீங்க. அப்பால இவரே வந்து பொட்டியைத் திறந்தப்போ துணிமணிதான் இருந்துச்சு. அந்த மூணு சீட்டுக்காரனை அரட்டிப்புட்டாரு. ஏதோ ஒரு காரணமாத்தான் மனுஷன் நம்ம ஊருக்கு வந்திருக்காரு...''

''அப்படிங்கறே...?''

''ஆமாங்க. ஜாக்கிரதையா இருங்கன்னு சொல்லத்தான் ஓடிவந்தேன்.''

''சரி. நீ போய் நம்ம தோட்டத்து வீட்டை ரெடிபண்ணு போ.''

''எதுக்குங்க?''

''இவர் தங்கத்தான்...''

''இவருக்கு நம்ம தோட்டத்து வீடா? என்னங்க நீங்க...?''

''சொன்னதைச் செய்யுடா. என் வரைல நான் யாருக்காக இவ்வளவு நாளா காத்திருந்தேனோ அவர் வந்திருக்காருடா. போ... போய்... சொன்னதைச் செய்...''

அவனை அனுப்பிவிட்டுத் திரும்பிவந்தார். உபாசகரை இப்பொழுது கல்யாணசுந்தரம் பார்த்த பார்வையே வேறுமாதிரி இருந்தது.

''சாமி, நீங்க தங்கறதைப் பத்திக் கவலையே படவேண்டாம். நீங்க பேசாம - என் தோட்டத்துல ஒரு குடிசை இருக்கு - அங்கேயே தங்கிக்கலாம். உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லையே?''

''ஆஹா... எப்பேர்ப்பட்ட உபசாரம் இது. அது போதும் எனக்கு.''

''அப்ப கிளம்புங்க. நான் கூட இப்ப தோட்டத்துப் பக்கமாதான் போறேன்.''

''ரொம்ப ரொம்ப சந்தோஷம்...'' என்ற உபாசகர் பட்டரைப் பார்த்தார். பட்டர் முகத்திலும் திருப்தி.

''அப்ப நான் கிளம்பறேன். உங்களால இவரைப் பார்க்க முடிஞ்சது. இவரோ தோட்டத்து வீட்டையே கொடுக்கறேங் கறார்.''

''எல்லாம் அந்தத் தோடீஸ்வரன் க்ருபை.''

''ஏன் அந்த அம்பாளோட க்ருபை இல்லையாக்கும்?'' சிரித்தபடியே தன் மனச்சார்புக்கு ஏற்பக் கேட்டவர் கல்யாண சுந்தரத்தோடு நடக்கத் தொடங்கினார்.

# 4



## அன்று

தோடிபுரம் வீதியே வெறிச்சோடிக்கிடந்தது. வயல் வெளிகளில் மருந்துக்குகூட துளி பச்சையில்லை. தரைப்பரப்புக்கு ஒரு சாணுக்குமேல் அனல்காற்று வீசிக்கொண்டிருந்தது.

சில இடங்களில் கால்நடைகள் அப்படியே சுருண்டு விழுந்து செத்துப் போயிருந்ததில் ஒரே துர்நாற்றம்!

ஊர் எல்லை கடந்து ஊருக்குள்ளான மண்சாலையில் நடக்கத் தொடங்கியிருந்த பாபா ஊரின் கொடிய காட்சிகளைப் பார்த்து நொந்து போயிருந்தார்.

அவரது கரியதேகத்தில் எண்ணெயைப்போட்டு புரட்டியதுபோல வியர்வை.

ஒரு வீட்டின் முன் நின்று குடிக்கத் தண்ணீர் கேட்டார். வீட்டுக்காரரோ ''ஒரு தோலாதங்கம் கேள் தருகிறேன். ஆனால் தண்ணீரை மட்டும் கேட்காதே'' என்றார்.

பாபாவுக்கு அந்த பதில் நெருஞ்சி முள்ளாய்க் குத்தியது. அண்ணாந்து பார்த்தார். சூரியன் தகித்துக்கொண்டிருந்தான். 'உலகின் மிகப்பெரிய கொடியவன் இந்த நொடி நான்தான்' என்கிற மாதிரி தெரிந்தான்.

அதே சமயம் 'ஜல்ஜல்' என்று இரண்டு காளைகள் பூட்டிய வில்வண்டி ஒன்று அவரைக் கடந்து போயிற்று, அதில் திரைச் சீலையால் பின்பகுதி மூடப்பட்டிருந்தது. அதைத் தொடர்ந்து சாரட் ஒன்றும் சென்றது.

சாரட்டோடு சில புரவி வீரர்கள் தொடர்ந்துசென்றதைப் பார்த்த பாபா எதற்கோ, யாருக்கோ பயந்துபோல ஒரு மரத்தின் பக்கவாட்டில் ஒதுங்கி நின்று தன்னை மறைத்துக்கொள்ள, அந்த சாரட்டும் குதிரை வீரர்களும் சென்று முடித்தனர்.

குளம்படிச் சத்தமும் தேய்ந்து முடிய பாபா மீண்டும் மரத்தை விட்டுவிலகி சாலைக்கு வந்தார். பாதசாரிகள் பேசிக்கொள்வது காதில் விழுந்தது.

''குடிக்கத் தண்ணீருக்கு இங்கே நமக்குக் கதி இல்லை. ஆனால் இந்த மந்திரிக்கு அதைப் பற்றியெல்லாம் கவலையே இல்லை. வாரம் தவறினாலும் இவர் தாசி அபராஜிதவை ஜெயந்தியைச் சந்திக்க வருவது மட்டும் தவறுவதேயில்லை...''

''ஹூம்! நாம் புலம்பி என்ன பயன்? அந்த ஆகாய கருணை நமக்கு இல்லாமல் போய்விட்டது. ஆதித்தனுக்கு ஏனோ சோழநாடு பிடிக்காமல் போய்விட்டது. வாட்டி வதைக்கிறான்!''

''உண்மைதான்... செல்வாக்கிலும் அதிகாரத்திலும் உள்ளவர்களுக்குத்தான் கருணையில்லை என்றால் கடவுளுக்கும் கூட கருணை இல்லாமல் போய்விட்டதே...''

அவர்கள் புலம்பிக்கொண்டே சென்றனர். பாபா முகம் அதைக் கேட்டு இருண்டுவிட்டது. ஒரு வினாடி தீர்க்கமாகச் சிந்தித்தவர் அப்படியே நடந்தார். காவிரிக்கரை வெளி எதிரில் கரையோரமாக உள்ள பெரிய மாமரம் ஒன்றின் நிழலில் போய் நின்றார்.

எதிரில் நிர்வாணமாய் பொட்டு நீர் இன்றி பெருமணல் வெளியாய்க் காவிரி! வானமும் கழுவிவிட்டதுபோல துப்புரவான நீலத்தோடு காணப்பட்டது. அதில் கீழே செத்த பிணங்களுக்காகக் காத்திருக்கும் கழுகுகளின் ஆலவட்டச் சிறகடிப்புகள்.

ஒரு ஊருக்குமேல் கழுகுகள் பறப்பது என்பது சாஸ்த்ர ரீதியாகவே துளியும் கூடாத ஒன்று. இன்றோ தோடிபுரம் மேல் நூற்றுக்கணக்கில் கழுகுகள்.

பாபாவின் மனதில் ஒரு விதக் கசிவு.

மரத்தடி நிழலில் - தோளில் கன்னிப்பெண் ஒருத்தி கிடப்பது போல கிடந்த அந்த ருத்ரவீணையை இறக்கிக் கீழே வைத்தார்.

பின் தன் இடதுதோளில் கிடந்த துணி மூட்டையைத் திறந்து அதில் உள்ள பச்சை வஸ்திரத்தையும் வெளியில் எடுத்து நிழலில் விரித்தார். விரித்த அதன் மேல் மண்டியிட்டு அமர்ந்தவராக முகத்தைக் கைகளால் துடைத்துக்கொண்டும் விரித்தும் திறந்தும் பார்த்து தொழுகையைச் செய்ய ஆரம்பித்தார் அதை அதே ஆற்றோரமாய் ஒரு மரத்தின் மேல் வைத்தார். அந்த மரத்தின் மேல் உள்ள ஒரு பறவைக்கூட்டில் இருக்கும் முட்டைகளை

அபகரிப்பதற்காக சென்ற ஒருவனும் ஆச்சரியத்தோடு மரத்தின் மேலிருந்தபடியே பார்த்துக்கொண்டிருந்தான்.

தொழுகையைச் செய்து முடித்த பாபா அப்படியே வீணையை எடுத்து மடிமேல் கிடத்திக்கொண்டு. வாசிக்கத் தயாரானார்!

அதற்குமுன் கூப்பிய கரங்களுடன் ஒரு இறைவணக்கம். பின் அவரது விரல்கள் அந்த வீணையின் தந்தியோடு விளையாட ஆரம்பித்தான்.

அற்புதமான இசை... ராகமோ அமிர்தவர்ஷினி! தந்திகளில் அவரது விரல் மீட்சியும் அமிர்தவர்ஷினியின் உற்பத்தியும் அந்தச் சூழலில் நெடுந்தூரம் எதிரொலித்தது.

குறிப்பாக மரத்தின்மேல் அமர்ந்திருந்தவன் வாயைப் பிளந்தபடி பார்த்துக்கொண்டிருந்தான். மெல்ல நொடிகள் கரைந்து நிமிடங்களாகி நிமிடங்களிலும் ஒரு வளர்ச்சி தோன்ற காவிரிக் கரைக்கு மேலான வெளிறிக்கிடந்த வானத்தில் எங்கிருந்தோ கருமேகங்கள் வந்து மண்ட ஆரம்பிக்கத் தொடங்கின.

வாட்டி வதைத்துக்கொண்டிருந்த சூரியக் கதிர்களைத் தடுத்தபடி அவை தோடிபுரம் மேல் அப்படியே நிழலுக்காகப் பந்தலிடுகிற மாதிரி பந்தலிட்டன. அதுவும் சில நிமிடங்கள்தான்.

பந்தலிட்ட மேகங்கள் அப்படியே கரைந்து மழையைச் சொரியத் தொடங்கின. மரத்துமேல் அமர்ந்திருந்தவனை நோக்கி ஒரு மின்னலும் இடியும்கூட ஒன்றுசேர்ந்து இறங்கப் பார்த்தன. அவன் அப்படியே ஒரு குரங்கைப்போல கீழே குதித்தான். ஓடிவந்து பாபாவின் முன்னால் நின்றான்.

பாபாவோ கொட்டத் தொடங்கிய மழையில் நனைந்தவராய் வீணையை மீட்டிக்கொண்டே இருந்தார்.

மழையும் பருத்துப்போய் பெரிதாகப் பெய்யத் தொடங்கியது!

## இன்று

**தோ**ட்டத்து வீடு என்று கல்யாணசுந்தரம் சொன்ன அந்தக் குடிசைவீடு ஒரு குடோன் போல காட்சியளித்தது. உள்ளே டிராக்டரின் உதிரிச் சாமான்கள், தென்னைமட்டைகள், பிரம்புக் கூடைகள் என்று ஒரே அலங்கோலம்.

விக்ஸ்மிட்டாய் சைஸுக்கு சிலந்திப் பூச்சிகள். சைக்கிள் வீல் சைஸுக்கு தங்களுக்கான வலை வீடுகளை பின்னிக்கொண்டு நடுவில் அமர்ந்திருந்தன.

கல்யாணசுந்தரம் அந்தக் குடிசை அருகே அவரைக் கொண்டு வந்து விட்டவராக உள்ளே சுத்தம் செய்யத் தயாராகிக் கொண்டிருந்த கோலப்பனைக் கூப்பிட்டார்.

அவன் ஓடிவந்தான்.

''என்னடா... இப்படியா... இவ்வளவு மோசமாவா போட்டு வெச்சிருக்கறது?''

''அய்யா...''

''என்ன அய்யா... நான்கூட தோட்டத்து வீடு குடிசையா இருந்தாலும் நல்லா காத்தோட்டமா இருக்கும்னு நினைச்சுகிட்டு தான் சாமியைக் கூட்டிட்டு வந்தேன். இப்ப இங்க வந்து பார்த்தால்ல தெரியுது. சாமி... உங்களுக்கு இந்தக் குடிசை சரியா வராது. பேசாம எங்க வீட்டுக்குவந்து தங்கிடுங்க'' என்றபடியே கல்யாணசுந்தரம் உபாசகரைப் பார்த்தார்.

கோலப்பனிடம் ஆச்சரியமான ஆச்சரியம். 'இந்த நபர் ஒரு மாயாவி என்று சொல்லியும் வீட்டுக்கே அழைக்கிறாரே... எதற்காக இப்படிச் செய்கிறார்?'

அவன் கல்யாணசுந்தரத்தின் அணுகுமுறை தெரியாமல் குழம்பி நிற்கையில் உபாசகரே கல்யாணசுந்தரத்துக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்தார்.

''உங்களுக்கு ஆனாலும் பெரிய மனசு. நான் இந்த ஊருக்குப் புதுசு. என்னைப்பத்தி மாயாவி, மந்திரவாதின்னுல்லாம் எச்சரிக்கைகள் ஒரு பக்கம். இருந்தும் என்னை உங்க வீட்டுக்கே கூப்பிடுற உங்க பெருந்தன்மையை நான் என்னன்னு சொல்வேன்!''

உபாசகர் பதிலோடு அப்படியே கோலப்பனைப் பார்த்தார். அவன் கல்யாணசுந்தரத்தின் காதில் ரகசியமாகச் சொன்னதை அப்படியே எதிரொலிக்கிறாரே!

அவனுக்கு வியர்த்தே விட்டது!

கல்யாணசுந்தரமும் அவர் போட்டபோடில் அதிர்ந்து விட்டார்.

''என்ன சாமி நீங்க... நீங்க மாயாவியா? அப்படியெல்லாம் யாரும் சொல்லலையே...?'' சமாளித்தார்.

''சமாளிக்கறீங்களே பிரசிடென்ட்வாள். போகட்டும். இந்தக் குடிசை வீடே போதும்: இதுக்கு நான் எவ்வளவு வாடகை தரணும்னு மட்டும் சொல்லிடுங்கோ... அதுபோதும்.''

''வாடகையெல்லாம் எதுக்கு சாமி... உங்களை மாதிரி உபாசகர்கள் கால் என் நிலத்துல பட்டா போதாதா...!''

''உங்க நிலமா?''

''என்ன சாமி அப்படிக் கேட்டுட்டீங்க. இது என் நிலம்தான்!''

''அப்படியா... இந்த ஊரே, உங்க ஊர் சிவன்கோவில் சொத்துங்கற மாதிரி பேசிண்டாளே...''

''ஓ..! நீங்க அதைச் சொல்றீங்களா... ஆமாம் சாமி. இதை நாங்க யாரும் விக்கவோ, இல்ல இதை வெச்சுச் சம்பாதிக்கவோ செய்தா எதாவது நடந்துடுது. ஏன்னா சிவன் சொத்து குலநாசம்கறதுதான் உங்களுக்குத் தெரிஞ்ச விஷயமாச்சே.''

''ஆமாமா...!''

''அதுசரி... வீணை வாசிக்கப்போறதா சொன்ன நீங்க வெறும் கையோட வந்திருக்கீங்களே... வீணை என்ன... பின்னால யாராவது கொண்டுகிட்டு வருவாங்களா?''

''நல்ல கேள்விதான் கேட்டிருக்கேள். எனக்குன்னு யார் இருக்கா... கிட்டத்தட்ட நான் ஒரு அனாதை மாதிரின்னு வெச்சுக்கோங்களேன்.''

''அப்ப வீணை...?''

''இந்த ஊர்ல இல்லாத வீணையா என்ன...? இங்கதான் வீட்டுக்கு வீடு சங்கீதம் தாண்டவமாடுறதே. எனக்குத் தேவையான வீணை கிடைக்காமலா போயிடும்...!''

''அப்ப தங்க இடம் மட்டுமல்ல வாசிக்க வீணையும் வேணுமின்னு சொல்லுங்க.''

''ஆமாம்...''

''அதுக்கென்ன... வீட்டுக்குப்போய் என் மகன் சாமிநாதனை அனுப்பறேன். அவனுக்கு இந்த ஊர்ல யார் வீட்ல வீணை இருக்குன்னு நல்லா தெரியும். உங்கள கூட்டிகிட்டுப்போய் காட்டுவான். பாத்து ஒரு வீணையை வாங்கிக்குங்க.''

''ரொம்ப சந்தோஷம். இந்த உபசாரத்தை நான் மறக்கவே மாட்டேன்.''

''என்ன பெரிய உபசாரம்! அப்ப இந்தக் குடிசையிலேயே இருந்துக்கறேங்கறீங்களா?''

''பேஷா... இதுக்கென்ன... என்வரைல இது அரண்மனை!''

''சரிதான்... சரி சாமி. கொஞ்சநேரம் காத்திருங்க. நான் போய் ஆளுங்கள அனுப்பறேன். அவங்க வந்து இருக்கிற தட்டுமுட்டுச் சாமானை எல்லாம் தூக்கிப் போட்டுச் சுத்தப்படுத்தித் தருவாங்க...!'' என்ற கல்யாணசுந்தரம் வேகமாக அங்கிருந்து கிளம்பினார். ஒரு பத்து நிமிடத்தில் நான்கைந்து பேருடன் திரும்பி வந்து பார்த்தபோது அப்படியே விக்கித்துப் போய்விட்டார்.

அந்தக் குடிசை துப்புரவாக சீர்செய்யப்பட்டு ஒரு கோயிலைப்போல காட்சி தந்தது. குடிசைக்குள்ளும் கமகம வென்று சாம்பிராணி வாசம்.

உபாசகரும் ஒரு மினி பூஜையறையை உருவாக்கி அம்பாள் விக்ரகம் ஒன்றை வைத்து அதற்குத் தோட்டத்துச் செடியில் உள்ள பூக்களைக் கொண்டு மாலை எல்லாம் தொடுத்துப் போட்டிருந்தார்.

பத்து நிமிஷம் என்றால் பத்து நிமிஷம்தான்!

எப்படி இத்தனை வேகமாக சாத்தியமாயிற்று?

பத்துபேர் ஓய்வில்லாமல் செயல்பட்டால்கூட மூன்று மணிநேரம் ஆகுமே...

கல்யாணசுந்தரத்தை பிரமிப்பு கவ்விக்கொண்டிருந்தது. கோலப்பன் திரும்ப காதைக் கடித்தான்.

''அய்யா...! நான் சொல்லலை? இப்ப பாத்தீங்களா... சாமி பெரிய மந்திரவாதிதான்!''




## அன்று

**ம**ழை தொடர்ந்து கொண்டிருந்தது!

ஊரில் பள்ளமான இடங்களில் எல்லாம் மழை நீரின் ஆக்ரமிப்பு.

ஆனால் ஒரு ஆச்சரியம்போல தோடிபுரத்தில் மட்டும்தான் மழை. சுற்றுவட்டாரக் கிராமங்களில் பொட்டு மழை இல்லை.

இதை சாரட் ஒன்றில் வந்த தஞ்சை அரண்மனை கணக்காயர் பார்த்துவிட்டு ஆச்சரியப்பட்டுப் போனார்.

அவர் ஏறிவந்த சாரட் நேராக தாசிபங்களா முன்தான் நின்றது.

மழையில் நனைந்தபடியே சாரட்டைவிட்டு இறங்கி பங்களாவினுள் நுழைந்தார். வாசற்படியருகிலேயே உட்கார்ந் திருந்தாள் சேடிக் கிழவி ஒருத்தி.

''வாங்க... வாங்க...'' என்று தன் வெற்றிலை வாயால் வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றாள். உள்ளே பெரிய ஹால். அதில் பெரிதாய் தேக்கு ஊஞ்சல்.

ஊஞ்சல்மேல் பதுமைபோல அபராஜிதவைஜெயந்தி! தஞ்சாவூர் பக்கத்தில் ஆட்டம், பாட்டம் இரண்டிலும் பேர் பெற்ற தேவதாசிப் பெண்.

கணக்காயர் வரவும் ஒரு ஓரப்பார்வை பார்த்தாள். பார்வையா அது... சொக்கவிட்டது.

''வைஜெயந்தி...!'' - கணக்காயரிடமும் வழிசல் குரல்.

''வாருங்கள்...''

''அதான் வந்துவிட்டேனே...''

''ஏது இந்தப் பக்கம் அதிசயமாக...?''

''ஏன்... நான் வரக்கூடாதா... இல்லை வராதவனா?''

''வருகிறவர்தான்... காரணகாரியத்தோடு...''

''சரியாகச் சொன்னாய். நீ புத்திசாலி.''

''இதைச் சொல்லத்தான் வந்தீரோ...?''

''அவசரப்பட்டால் எப்படி... உன் ஆட்டமும் பாட்டமும் விரைவில் தஞ்சை அரண்மனையில் நிகழப்போகிறது!''

''உண்மையாகவா?''

''நான் எதற்குப் பொய்யுரைக்க வேண்டும். மாமன்னர் சிவாஜியின் அருமைச் சகோதரர் சாந்தாஜியின் காதுவரைக்கும் உன்னைப் பற்றிய தகவல் போய் சேர்ந்திருக்கிறது.''

''அடேயப்பா... தஞ்சாவூர் நகரில் இல்லாத தாசிப் பெண்களா என்ன?''

''இந்தச் சோழநாடு முழுக்க தேடினாலும் உன்னைப் போல ஒரு ரதிமகளைக் காணமுடியாதே!'' - கணக்காயர் குரல் குழறியது. பார்வையும் அவள் மேனிமேல் கொஞ்சம் தவறாக ஊடுருவியது.

''கணக்காயரே...!''

''சொல் வைஜெயந்தி.''

''நீங்கள் சொல்வது ஆட்டபாட்டத்திற்குதானே?''

''கணக்காயரே...! உங்களைத்தான். நீங்கள் என்னை தஞ்சைக்கு அழைப்பது ஆட்டபாட்டத்திற்குதானே?''

''ஆமாம். ஆமாம்!...''

''அங்கே வந்தபின் என்னிடம் யாரும் தவறாக நடக்க முயலமாட்டார்களே...?''

''தவறாக... தவறாக... நீ என்ன சொல்கிறாய்?''

''இந்த வைஜெயந்தி அழகாகப் பாடுவாள்... அதைவிட அழகாக ஆடுவாள். இந்த இரண்டையும் எவர் வேண்டுமானாலும் ரசிக்கலாம். ஆனால் இதைமீறி யாராவது என்னைப் பெண்டாள நினைத்தால்...?''

அபராஜித வைஜெயந்தி குரலில் ஒருவிதக் கடுமை. கணக்காயர் முகமும் கறுத்துப் போனது.

''ஏன் வைஜெயந்தி, இப்படி நீ உன்னைக் கூண்டுக் கிளியாகவே வைத்துக்கொண்டிருக்கிறாய்? நீ இப்படிப் பத்தினி விரதம் இருப்பதால் உன்னை இந்த உலகம் பத்தினி என்று சொல்லிவிடப் போகிறதா என்ன?''

''உலகம் சொல்வதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. நான் என் மனசாட்சிக்குக் கட்டுப்பட்டவள். இந்தப் பரம்பரையில் பிறந்துவிட்டதால் என்னைக் குலமகள் இல்லை என்று சொல்வதை என்னால் ஏற்கமுடியாது.''

''மலைமீது ஏறிநின்றுகொண்டு நீ இந்த விருப்பத்தைக் கூறிப்பாரேன். உன்னைக் குலமகளாக யாரும் ஒப்பமாட்டார்கள். பேசாமல் என்னைப்போல செல்வந்தர்களுக்கு இணங்கி சொத்துக்களை சேர்த்துக் கொள்ளப்பார். இல்லாவிட்டால் உன் அந்திமக்காலம் மிகக் கொடுமையானதாக இருக்கும்.''

கணக்காயர் சொல்லிவிட்டுத் திரும்பிச் செல்லத் தொடங்க, சேடிக்கிழவி ஓடிவந்து அவர் காலில் விழாத குறையாகத் தடுத்தாள்.

''அய்யா... அய்யா... சோழநாட்டு அரண்மனை கஜானாவிற்கே காப்பாளர் நீங்கள். உங்களை நோகடித்து அனுப்பிவிட்டாள் என்மகள் என்று ஒரு கெட்டபெயர் எனக்கு

வந்துவிடக்கூடாது. வைஜெயந்தி இல்லாவிட்டால் என்ன... இன்னொருத்தி இருக்கிறாளே... திருமாமகள்!''

''திருமாமகள்...?''

''ஆம்... என் சகோதரி மகள். நாகப்பட்டினத்தில் இத்தனை நாள் இருந்தாள். இப்பொழுது இங்கே வந்துவிட்டாள்!''

''எங்கே இப்பொழுது அவள்...?''

''அதோ அங்கே...'' - அந்த முதியபெண் வேறு ஒரு பெண் என்று கூறி திருமாமகள் என்கிற அழகியபெண் ஒருத்தியைக் காட்ட, கணக்காயர் அவளை நோக்கி ஆசையாகச் சென்றார்.

பார்த்துக்கொண்டே இருந்த அபராஜித வைஜெயந்தி கத்தினாள்.

''அம்மா... உனக்கு அறிவில்லை? அவளும் என்னைப் போலத்தானே? அவளை இந்தக் கிழவனுக்கு விருந்தாக்கப் பார்க்கிறாயே... பெண்ணா நீ?'' கணக்காயரும் அதைக் கேட்டபடி நின்று ஒருபார்வை பார்த்தார்.

''நீங்க வாங்க கணக்காயரே...'' என்ற கிழவி அவரை அறைக்குள் தள்ளி கதவை மூடிவிட்டுத் திரும்பி அபராஜித வைஜெயந்தியிடம் வந்தாள்.

''பைத்தியக்காரி... ஊரே வறண்டு போய்க்கிடக்கு. குடிக்கத் தண்ணி கிடையாது. யார் செஞ்ச புண்ணியமோ இன்னிக்கு மழைபெய்ய ஆரம்பிச்சிருக்குது. இந்த வறட்சியிலும் நீ சாப்ட்டது எப்படின்னு நினைக்கறே?''

கிழவி கேட்டவிதம் அபராஜிதவைஜெயந்தியைக் கட்டிப் போட்டது.

''இன்னிக்கில்ல நாளைக்கு நீ வழிக்கு வருவேறங்கிற நம்பிக்கைல நான்தான் சுத்து வட்டார மிட்டாமிராசுகள் கிட்டல்லாம் ஆள் அனுப்பி நெல்லுமூட்டையும் பருப்பையும் வாங்கிப் போட்டேன்.

ஒண்ணு தெரிஞ்சுக்கோ... உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகாதுடி. நீ என்னதான் உத்தமமா இருந்தாலும் உன்னை உத்தமின்னு இந்த ஊர் சொல்லாது. தாலி எல்லாம் கற்பனையில்கூட நம்ம கழுத்துக்குக் கிடையாது.

கழுதையா பொறந்துட்டா பொதி சுமக்கணும். தாசியா பொறந்துட்டே நீ... நாலுபேருக்கு உன் மடியில இடம் கொடுத்தா தான் உயிரோட வாழவே முடியும். ஞாபகம் வெச்சிக்க...''

கிழவி உபதேசித்துவிட்டுச் செல்ல அபராஜித வைஜெயந்தியின் கண்களை நீர் கோத்துக்கொண்டது.

அதே வேளையில் அறையில் சிரிப்புச் சத்தமும் முத்தச்சப்தமும் காதில் விழுந்து அவள் முகத்தைச் சுளிக்கவிட்டது.

அதற்குமேல் அவளால் அங்கு இருக்க முடியவில்லை. கிளம்பிவிட்டாள்.

மழையையும் பொருட்படுத்தாமல் அந்த பங்களாவைவிட்டு வெளியே கிளம்பியவளை நோக்கிச் சில பல்லக்குத்தூக்கிகள் ஓடினார்கள்.

அவள்முன் பல்லக்குத் தூக்கிவந்து நின்றார்கள். அவளும் ஏறிக்கொண்டாள்.

''தோடீஸ்வரர் ஆலயத்துக்குச் செல்லுங்கள்'' என்றாள். அவர்களும் புறப்பட்டனர்.

தோடீஸ்வரர் ஆலயம். மழைகாரணமாக கூட்டம் இல்லை. பல்லக்கு வரவும் கோபுரவாயிலில் நின்று கொண்டிருந்த சிலர் மட்டும் பார்த்தனர்.

அபராஜித வைஜெயந்தி வருவதைப் பார்த்துவிட்டு ஆவலாக உள்ளே ஓடினார்கள்.

வைஜெயந்தியும் இறங்கி கலங்கிய கண்களுடன் கோயிலுக்குள் செல்லத் தொடங்கினாள். அவளைப் பார்க்கும் சில பெண்களும் முகத்தைத் திருப்பிக்கொள்ள, ஆடவர்கள் ஒருமாதிரி மீசையை நீவிக்கொண்டு சிரித்தனர்.

சன்னதியில் பட்டர் இருந்தார்.

வைஜெயந்தியைப் பார்த்தவர் பரிவாக ''வாம்மா...'' என்றார்.

''நன்றி பட்டரே... நீங்களாவது என்னை ஒரு முழுப்பெண்ணாகப் பார்க்கிறீர்களே...''

''பெண்ணாக மட்டுமா... நீ என் மகளைப் போன்றவள். ஆமாம்... என்ன இது கொட்டும் மழையில்...?''

''மனம் சரியில்லை. முன்பெல்லாம் இந்த வைஜெயந்தி பற்றி இந்த தோடிபுரம்தான் பேசியது. இப்பொழுது என்புகழ் தஞ்சாவூர் அரண்மனைவரை பரவிவிட்டது.

நான் கட்டிக்காத்து வரும் என் பெண்மையை இனியும் எப்படிக் காப்பாற்றிக்கொள்ளப் போகிறேனோ தெரியவில்லை.''

''கவலைப்படாதே... தோடீஸ்வரர் இருக்க உனக்கென்ன கவலை?''

''ஆமாம்.. என் குறை தெரிந்து முதல் காரியமாக அந்தக் கைலாயத்தில் இருந்து இங்கே வந்து என் பிறப்பின் மாசைக் கழுவிச் சுத்தப்படுத்திவிட்டுத்தான் இந்த தோடீஸ்வரர் மறுவேலை பார்க்கப் போகிறார்...''

''விரக்தியில் பேசுகிறாய் நீ. விடு... முதலில் அவனை வணங்கப்பார்.'' - பட்டர் பதிலோடு கருவறைக்குள் சென்று நெய் தீபத்தைக் காட்டத் தொடங்கினார்.

அபராஜிதஃ வைஜெயந்தியும் கண்ணீர் மல்க இறைவனை வழிபட்டாள்.

அப்போது அந்த ஆலய முகப்பில் மழையில் நனைந்தபடி பாபா நுழைந்து கொண்டிருந்தார்.

அவரைப் பார்த்த சிலர் ''ஏய் பரதேசி... யார் நீ? எங்கே செல்கிறாய் உள்ளே...?'' என்று தடுத்து நிறுத்திக் கொண்டிருந்தனர்.

''ஐயா... ஒரே மழையாக இருக்கிறது. ஊரிலும் ஒய்வெடுக்க ஒரு சத்திரம்சாவடி இல்லை. அதனால்தான் ஆலயத்தில் தங்குவோம் என்று வந்தேன். அதுமட்டுமல்ல... இந்த ஆலயத்துக்கு வருவதற்காகவே நான் இமாலயத்தில் இருந்து வருகிறேன்.''

பாபா சொன்னதைக் கேட்ட அவர்கள் பதிலுக்கு எக்காளத்தோடு சிரித்தனர்.

''இமயத்தில் இருந்தா...? நீயா...? சரிதான். ஆமாம் தாடியும் மீசையுமாக இருக்கிறாயே, நீ எந்த மதத்தான்?''

''மதம் எதுவாக இருந்தால் என்ன... மனிதம் பெரியதய்யா...''

''அடேயப்பா...! பெரிய பிரசங்கியைப் போல பேசுகிறாயே, அது என்ன கையில்...?''

''இது... இது வீணை!''

''வீணையா...! எந்த வீணை இப்படி இருக்கும்? ஓ... ஒருவேளை வடநாட்டில் வீணைகள் இப்படித்தான் இருக்குமோ...?''

''அய்யா... இது சாதாரண வீணையல்ல. எனக்கு வழிவிடுங்கள்.''

''நீ யார்..? உன் பெயர் என்ன...? முதலில் அதற்குப் பதில் சொல்...''

''என் பெயர் நவாப் ஜான்...''

''ஓ... நீ ஒரு இஸ்லாமியனா..?''

''ஆம்...''

''உனக்கு இங்கு என்ன வேலை... போ அந்தப் பக்கம்.''

''ஆலயங்களில் பேதம் பார்க்கக்கூடாதய்யா. நான் ஒரு கடமையை நிறைவேற்றுவதற்காக வந்திருக்கிறேன். என்னை விடுங்கள்.''

பாபாவும் அவர்களும் வாக்குவாதம் புரிவது உள்ளே வழிபாட்டில் இருந்த அபராஜித வைஜெயந்தி காதுகளிலும் விழத்தான் செய்தது.

திரும்பிப் பார்த்தாள்.

மழைக்சாரலுக்கு நடுவே பாபா பார்க்கப் பரிதாபமாக தெரிந்துகொண்டிருந்தார்.

ஒரு பார்வையில் அவர் தோற்றமும் அந்த வீணையும் அவளை என்னவோ செய்துவிட்டன.

பட்டரைக்கூட அந்தக் காட்சி கொஞ்சமாய் கசக்கியது. அபராஜித வைஜெயந்தியால் அப்படியே பார்த்துக்கொண்டு நிற்கமுடியவில்லை. பாபாவை நோக்கி நடந்தாள். நீண்ட பிராகாரத்தில் கொலுமண்டபம் கடந்து, கொடிமரம் கடந்து, நுழைமுகக் கோபுரம் கடந்து ராஜகோபுரம் நோக்கி அவள் செல்வதற்குள் பாபா திரும்பி நடக்கத் தொடங்கிவிட்டார்.

ராஜகோபுரக் கதவை ஒட்டி நின்றுகொண்டிருந்தவர்கள் வைஜெயந்தியை ஒரு மாதிரி பார்த்துச் சுழிப்புடன் சிரித்தனர். தொடர்ந்து அங்கே நின்றால் அவர்கள் அவளிடம் வம்புவளர்க்கக் கூடும் என்று அவளுக்கும் புரிந்தது. ஓடிச் சென்று காத்திருந்த பல்லக்கில் ஏறினாள். பல்லக்கும் மழைச்சாரலுக்கு நடுவே விரைய ஆரம்பித்தது.

''ஒரு தாசிக்கு இப்படிப் பல்லக்குத் தூக்குவதற்குக் காவிரியில் விழுந்து சாகலாம்.'' என்று ஒரு குரல் அந்தப் பல்லக்குத் தூக்கிகளின் காதில் விழுந்தது. ஒருமுறை நின்று இயலாமையுடன் முறைத்துப் பார்த்தனர்.

அவர்களில் ஒருவன் தடியாக இருந்தான். அவர்களை நெருங்கிச் சண்டை போட்டு அடித்தே தீருவது என்கிற மாதிரி அங்கிருந்து அவர்களை நோக்கி நடந்தான்.

அதைப் பல்லக்கில் இருந்தபடி பார்த்துக்கொண்டிருந்த வைஜெயந்தி தடுப்பதுபோல அவனை நிறுத்தினாள்.

''வேண்டாம். விட்டுவிடு... நாய்கள் கடித்தால் பதிலுக்கு நாம் என்ன திருப்பியா கடிக்கிறோம்? திரும்பி வா!'' என்றாள். அவர்கள் முறைத்தனர்.

''ஒரு வேசிக்கு வாயைப் பார்த்தாயா...?'' என்று சிலர் குமுறினர். அதற்குள் பல்லக்கு ஆடிக்கொண்டு திரும்பிவிட்டது.

உள்ளே அபராஜித வைஜெயந்தியின் கண்களில் நீர் ஒழுக்கு. மனதில் தனது பிறப்பை உத்தேசித்த கவலை.

பல்லக்கோ இடவலமாய் தாழ்ந்து உயர்ந்து ஆடியபடியே தோடிபுரத்து வீதியில் சென்று கொண்டிருந்தது. சட்டென்று அது நின்றது. என்ன என்று எட்டிப்பார்த்தாள். நடுத்தெருவில் பாபா அந்த உறை போர்த்திய வீணையோடு விழுந்துகிடந்தார்.

''அய்யோ...!'' அவள் மனது பதறியது. பல்லக்குத் தூக்கிகள் அவரைப் பார்த்தனர்.

''என்ன பார்வை? அவரைக் காப்பாற்றுங்கள். பாவம். பசிமயக்கம் போல் இருக்கிறது.''

''மன்னிக்கவேண்டும்... அவரை எப்படிக் காப்பாற்றுவது? இந்தப் பல்லக்கில் ஒருவர்தானே அமர்ந்து பயணம் செய்ய முடியும்?'' அந்தப் பதிலைத் தொடர்ந்து உடனே அவள் கீழே இறங்கிக்கொண்டாள். அவர்களும் புரிந்துகொண்டதுபோல அவரைத் தூக்கி பல்லக்கில் அமர்த்தினர். ஆனால், அந்த ருத்ர வீணையை உள்ளே வைக்க இடமில்லை.

''அதை என்னிடம் தாருங்கள்.'' என்று அபராஜித வைஜெயந்தியே அதைக் கேட்டு வாங்கிக்கொண்டாள்.

பல்லக்கின் யாத்திரை தொடர்ந்தது. வீதியே ஆச்சரியமாய் இந்தக் காட்சியைப் பார்த்தது.

''வைஜெயந்தி தாசியான போதிலும் மிக இரக்கக் குணமுடையவள்'' என்று ஒருவர் முணுமுணுத்ததும் காதில் விழுந்தது.

**தா**சி பங்களா!

வைஜெயந்தி ருத்ரவீணையோடு வர, பல்லக்கு தனித்துவர - கிழவி அதிர்ந்து போனாள்.

''என்னடி இது... மழைல நனைஞ்சுகிட்டு வரே? பல்லக்குத் தனியா வருதே... அதுல யார்?''

அவள் கேள்விக்குப் பதிலாக பல்லக்குத் தூக்கிய ஒருவன் பாபாவை உள்ளிருந்து வெளியே தூக்கி தன் தோளில் சுமந்துகொண்டு பங்களாவினுள் நுழைந்தான். இன்னொருவன் அவரது துணிமூட்டையைக் கொண்டுவந்து வைத்தான்.

''யாருடி இந்த மனுஷன்..? பார்க்கப் பிச்சைக்காரனைப் போலல்ல இருக்கான்...''

''எந்தப் பிச்சைக்காரனம்மா இவ்வளவு பெரிய வாத்தியக் கருவியோடு இருப்பான்...?''

''இது... இது... இது என்ன புதவிதமான வாத்தியக்கருவி மாதிரி இருக்குதே! வீணைமாதிரியும் இருக்கு - இல்லாத மாதிரியும் இருக்கே...!''

''பாவம்... யாரோ ஒரு இசைக்கலைஞர். இஸ்லாமியர் போல் இருக்கிறது. கோவிலுக்கு வந்து சுவாமி தரிசனம் செய்ய ஆசைப்பட்டார். ஆனால் இவரைச் சிலர் தடுத்துவிட்டனர். திரும்பும்போது வழியில் விழுந்துகிடந்தார். பசிமயக்கம் போல் இருக்கிறது. அதனால்தான் பல்லக்கில் இவரை ஏற்றிவிட்டு நான் நடந்துவந்தேன்.''

''அடக் கெரகமே... இப்படிக்கூடவா இருப்பே? இந்தப் பல்லக்கு நம்ம உபயோகத்துக்கா இல்ல இப்படிப் பொதுப் பணிக்கா..?''

''வாயைமூடு! முதலில் இவரது மயக்கத்தை தெளியவைக்கப் பார்ப்போம். பிறகு நீ புலம்பலாம்.''

வைஜெயந்தி மளமளவென்று அவரது மயக்கத்தை நீக்க முயன்றாள். உடம்பைத் துவட்டிவிட்டாள். ஈர உடைகளையும் களைந்து அவருக்கு அணிவிக்க வேறு ஏதாவது வஸ்த்திரம் இருக்கிறதா என்று தனது துணிப்பொறையைத் துழாவினாள்.

ஆண் வசிப்பே இல்லாதவீடு... ஆடை எங்கே இருக்கும்? ஏமாற்றமே மிஞ்சியது. அதே சமயம் நடராஜமூர்த்தியின் விக்கிரகத்துக்கு சாற்றுவதற்கு என்று வைத்திருந்த பட்டு வஸ்திரம் ஒன்றுமட்டும் கண்ணில் பட்டது.

ஆபத்துக்குப் பாவமில்லை என்று அதை எடுத்து வந்து அவருக்கு அணிவித்தாள். பாதம், கைகளை எல்லாம் சூடுபறக்கத் தேய்த்தாள்.

பார்த்துக் கொண்டேயிருந்தாள் கிழவி.

பக்கத்து அறையிலோ கணக்காயர் இன்னமும் கிளம்பிச் சென்றிருக்கவில்லை. வளையல் சப்தமும் சிணுங்கல் சப்தமும் கேட்டுக்கொண்டேயிருந்தது. அது அவளை உறுத்தியது.

பாபாவிடமும் மெல்ல கண்மலர்ச்சி!

கண் மலர்ந்தவர் எழுந்து அமர்ந்தார். மேனிமேல் புதிய வஸ்திரம் இருக்கப் பார்த்து வியந்தார். எதிரே படபடப்பாக பார்த்தபடி இருக்கும் அபராஜித வைஜெயந்தி அவர் முன்னே மலங்கமலங்கப் பார்த்தாள்.

''அம்மணி... நீங்கள்?''

''நான் யாரென்பதா முக்கியம்? நீங்கள் யார்...? அதை முதலில் கூறுங்கள்.''

''நான்... நான்... அய்யோ... என் வசம் இருந்த ருத்ரவீணை எங்கே?''

''ஓ... அது ருத்ரவீணையா... அதோ...'' அவள் அதைத் தெரிந்துகொண்டு வியப்போடு கையை நீட்டிக் காட்டினாள்.

அவளது நாட்டியசாலை நடராஜவிக்கிரகம் முன்னால் அது வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்த வினாடி அவர் கண்களில் ஒரு அசாத்ய பளபளப்பு. ''இறைவா... உன் திருவிளையாட்டை என்னென்பேன்!'' என்றார் நெகிழ்ச்சியோடு.

''ஐயா... நீங்கள் யாரென்று கேட்டேனே?''

''நான் ஒரு பரதேசி அம்மணி. ஆமாம் இது என்ன என் மேனிமேல் பட்டு வஸ்த்ரம்? என் கால்சராயும் மேலங்கியும் எங்கே?''

''அவை மழை ஈரத்தால் நனைந்துவிட்டிருந்தன. காயவைத்திருக்கிறேன்.''

''ஓ... என்னால் உங்களுக்கு எத்தனை சிரமம்!''

''நீங்கள் யாரென்று விரிவாகச் சொல்லுங்கள். உங்களைப் பார்த்தால் இஸ்லாமியர் போல் இருக்கிறது. இந்த ஊருக்கு எதற்கு வந்தீர்கள்? ருத்ரவீணை உங்களிடம் இருப்பது ஆச்சரியமாக உள்ளது. இதை வாசிக்கத் தெரியுமா உங்களுக்கு...?''

''ஒரே சமயத்தில் இத்தனை கேள்விகளா...? சொல்கிறேன் அம்மணி. இந்தப் பரதேசியையும் ஒரு பொருட்டாகக் கருதி அடைக்கலம் கொடுத்து ஆதரித்துக் கொண்டிருக்கும் அந்தப் பண்பிற்காகவே சொல்கிறேன். ஆமாம் நீங்கள் யார் தாயே...?''

''தாயே என்று தாங்கள் பண்புடன் கூப்பிடக்கூடிய அளவுக்குப் பெண்மைக்கான உன்னதத் தகுதியைப் பெற முடியாத ஒரு பாவி நான்.

நான் யாரென்று கூறினால் இங்கே நீங்கள் தொடர்ந்து தங்கியிருப்பீர்களா என்பது என்வரையில் சந்தேகம்...''

''அய்யமே வேண்டாம். என்வரையில் என்னை ஆதரித்த வள்ளல் நீங்கள். உங்களைப் பற்றி சொல்லுங்கள்.''

''என்னை இந்த ஊரில் உள்ளவர்கள் தாசி என்று அழைப்பார்கள்...''

அவள் சொன்னவிதத்தில் மிகுந்த புத்திசாலித்தனம். அதை ரசிப்பது போல் இருந்தது பாபாவின் முகபாவம். அவளைக் கருணை பொங்கப் பார்த்தார்.

''என்ன பெரியவரே... உங்களுக்கு அதிர்ச்சியாக இல்லையா?''

''எதற்கம்மா நான் அதிர்ச்சியடைய வேண்டும்? நீ சொன்ன விதத்தில் இருந்தே நீ உன்னை மிக மிக தற்காத்துக்கொண்டு வாழ்ந்து வருகிறாய் என்பது முதல், ஊரார் உன்னை தாசி என்கிறார்களே என்கிற நெஞ்சார்ந்த வருத்தமும் உன்னிடம் இருப்பது நன்கு தெரிகிறது. கவலைப்படாதே. எல்லாம் மாறிவிடும்...''

''மாறுவதா...? இந்த ஊரா?'' -அவள் விரக்தியாகக் கேட்டாள்.

''ஆம்... அதிலென்ன உனக்குச் சந்தேகம்?''

''எனக்கு நம்பிக்கையில்லை. போகட்டும்... நீங்கள் இந்த ஊருக்கு வந்த காரணம்?''

அந்தக் கேள்விக்கு மட்டும் அவர் பார்வை ருத்ரவீணை மீது சென்றது!

## இன்று:

உற்சாகமாக வீட்டுக்குள் நுழைந்த கல்யாணசுந்தரத்தை ஆச்சரியமாக பார்த்தாள் ரங்காயி. அவர் மனைவி.

''என்ன புள்ள பாக்கறே... ஆமா எங்க நம்ம அருமை மகன்?'' அவர் கேட்கும்போதே வாழைத்தார் ஒன்றுடன் பிரசன்னமானான் சாமிநாதன்.

''சாமி... அந்தத் தாரை வெச்சுட்டுவா, உனக்கு ஒரு முக்கிய வேலை இருக்கு...'' என்றார் கல்யாணசுந்தரம். அவனும் தலை யாட்டியவ்னாக அகன்றான்.

ரங்காயி கேட்டாள்.

''அப்படி என்னங்க வேலை...?''

''சொல்றேன்... சொல்றேன்... உனக்குச் சித்துவேலை பத்தி எதாவது தெரியுமா...? கேள்விப்பட்டிருக்கியா?''

பீடிகை போட்டார் கல்யாணசுந்தரம்.

''இப்ப எதுக்கு அந்தப் பேச்சு... யார் என்ன சித்துவேலை செஞ்சா?''

''விசயம் இல்லாம கேப்பேனா... உபாசகர் ஒருத்தர் நம்ம ஊருக்கு வந்திருக்காரு. நம்ம தோப்பு வீட்டுக் குடிசைலதான் தங்க வெச்சிருக்கேன். மனுஷன் வந்த நிமிஷத்துல இருந்து அசத்து அசத்துன்னு அசத்திக்கிட்டிருக்காரு.

பத்து நிமிஷத்துல அந்தப் பாழும் குடிசையை கோவிலா மாத்திப்புட்டார்னா நம்புவியா நீ?''

''நிஜமாவா?''

''போய்ப் பார்...''

''சரி. அவருக்கு என்ன வேலை நம்ம ஊர்ல...?''

''எதுக்கு இருக்கு நம்ம கோவில்... கோவில்ல வீணை வாசிக்க வந்துருக்காரு.''

''உபாசகர் வீணை வாசிக்கறாரா?''

''விட்டா பெரிய பெரிய சித்துவேலை எல்லாம் செய்வார் போல தெரியுது.''

''அய்யோ... இந்தச் சித்துவேலை செய்யறவங்ககிட்ட சாக்ரதையா இருக்கணும்னு சொல்லுவாங்களே...''

''அதுசரி... உடனேயே பயமா... ஆளைப் பாக்காம எதையும் சொல்லாதே ரங்காயி...''

அவர் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே யாரோ சிலர் அவரைப் பார்க்க வந்தது போலத் தெரிந்தது. அவரும் அவர்களை உள்ளே அழைத்து ரங்காயி அருகிலேயே இருக்க ''என்ன விஷயம்?'' என்று கேட்டார்.

''நீங்கதானே ஊர் பிரசிடென்ட்?''

''ஆமாம்.''

''நாங்க மெட்ராஸ்ல இருந்து வர்றோம். ஒரு கச்சேரி புக் பண்ணணும்.''

''அப்படியா... சந்தோஷம். கோவில் திருவிழாவா இல்ல வேறு விசேஷமா?''

''கோவில் கும்பாபிஷேகத் திருவிழாதான்.''

''என்னிக்கு...?''

''வர்ற தை பத்தாம் தேதி...''

''அதுக்கென்ன... வந்துடறேன்... போக்குவரத்துச் செலவு கொடுத்து மேற்கொண்டு அஞ்சாயிரம் கொடுத்துப்பிடணும்.''

''அய்யா...''

''என்ன... அதிகமா இருக்குதா?''

''இல்லீங்க. நாங்க புக் பண்ண வந்தது உங்களை இல்லீங்க. இந்த ஊருக்கே சாமின்னு கும்புடுறாங்களே தாசி சுந்தராம்பா... அவங்களை...''

அவருக்குச் செவிட்டில் அறை விழுந்த மாதிரி இருந்தது.

''அவளை புக் பண்ண என்கிட்ட எதுக்குய்யா வர்றீங்க?'' என்று கோபம் பொங்கக் கேட்டார்.

''இல்லீங்க... அது வந்து... அவங்ககிட்ட கேட்டோம். அன்னிக்கு பம்பாய் போறாங்களாம். முடியாதுன்னுட்டாங்க. ஆனா நாங்களோ அவங்க ஃப்ரீயா இருப்பாங்கன்னு நினைச்சு நோட்டீஸ்லாம் அடிக்கக் கொடுத்துட்டோம். இந்த நிலைல ஒரு பிரசிடென்ட் நீங்க சொன்னா கேக்கமாட்டாங்களான்னுதான் உங்களைப் பார்க்க வந்தோம்...''

அவர்கள் பதிலில் நியாயம் இருக்கத்தான் செய்தது. ஆனால் கல்யாணசுந்தரமோ ''அவ யார் சொன்னாலும் கேக்கமாட்டாய்யா. ஆமா அவதான் பாடணுமா? ஏன் நாங்க நாதஸ்வரம் வாசிச்சா

நல்லாருக்காதோ...'' என்று தன் நாதஸ்வரப் பற்றுதலைக் காட்டினார்.

''இல்லீங்க... இன்னிக்கெல்லாம் அவங்கள மாதிரி பாட யாருங்க இருக்காங்க? உங்களை யாருக்குங்க தெரியும்?'' அவர்கள் கேட்டது அவருக்கு நெஞ்சில் கலப்பையால் உழுத மாதிரி இருந்தது.

''நான் ஊர் பிரசிடெண்ட். அவளுக்கு பி.ஏ.கிடையாது. அவளும் யார் சொன்னாலும் கேக்கறவ கிடையாது. தெரிஞ்சுக்குங்க. கிளம்புங்க.'' என்றார். அவர்களும் கிளம்பினர். அவரிடமோ மூச்சுக்காற்றில் அனல் அடித்தது. ரங்காயிக்கும் புரிந்து அவரையே பார்த்துக் கொண்டிருக்க - சாமிநாதன் திரும்ப வந்தான்.

''வந்துட்டியா...?''

''உம்...''

''சரி... நீ நேரா நம்ம தோட்டத்து குடிசை வீட்டுக்குப் போ. அங்க புதுசா ஒரு உபாசகர் சாமி வந்து தங்கியிருக்காரு. அவருக்கு ஒரு நல்ல வீணை வேணுமாம். கொஞ்சம் பழைய வீணையாவும் இருக்கணுமாம். நம்ம ஊர்ல யார் வீட்லையாவது இருந்தா வாங்கிக் கொடுத்துரு...''

''அப்பா...''

''என்னடா... ஏன் தயங்கறே?''

''ஒண்ணுமில்ல...''

''என்ன, சும்மா சொல்லு.''

''நம்ம ஊர்ல வீணை வாசிக்கறவங்களே ரொம்பக் குறைவானவங்கதான். வாய்ப்பாட்டுப் பாடறவங்க, மிருதங்கம் வாசிக்கிறவங்கதான் அதிகம். வீணை வாசிக்கற யாரும் அவங்க வீணையை இரவலா கேட்டாக்கூடக் கொடுக்கமாட்டாங்க. இதுல விலைக்கே கேட்டா எப்படிப்பா?''

''இங்க இருந்துகிட்டே நீ எப்படி முடிவுக்கு வரலாம். நம்ப கர்ணம் வீட்ல கூட தான் வீணை இருக்கு. எந்தக் காலத்துல அவர் அதை வாசிச்சிருக்காரு. சும்மா போட்டு வெச்சிருக்கறதுக்கு சாமிக்குக் கொடுக்கலாமே...''

''என்னப்பா நீங்க... வரும்போதே இவர் தஞ்ஞாவூர்லயோ இல்ல கும்பகோணத்துலயோ ஒரு வீணையை வாங்கிட்டு வந்திருக்கறதுக்கு என்ன?''

''பெரியவர்டா அவர். இப்படி எல்லாம் கேள்வி கேக்கறத விட்டுட்டு சொன்னதைச் செய்...''

கல்யாணசுந்தரம் அதட்டலாகச் சொல்லவும் அடங்கிப் போனான் சாமிநாதன்.

மௌனமாய் அவரை ஒரு பார்வை பார்த்துவிட்டு கிளம்பினான்.

அவன் அகலவும் ரங்காயி பிடித்துக்கொண்டாள்.

''உங்க பேச்சு போக்கே சரியாபடலைங்க எனக்கு... அந்த உபாசகர் சாமிக்குக் கல்யாணமண்டபத்துல தங்க இடமிருக்கும் போது எதுக்கு நம்ம தோட்டத்துல இடம் கொடுத்தீங்க...?''

அவள் கேள்விக்கு அவர் பதில் சொல்லவில்லை. ஆனால் அவளுக்குப் புரிந்தது. அதற்கு ஒரே பதில்தான். அது 'தாசி சுந்தராம்பாள்' என்பதுதான்!



## அன்று

**பா**பாவின் பார்வை ருத்ரவீணைமேல் சென்றதை அபராஜித வைஜெயந்தியும் கவனித்தாள். அவர் எதனால் அந்த வீணையைப் பார்க்கிறார் என்கிற கேள்வியும் அவளுக்குள் எழும்பியது.

ஆனால், அவர் பதிலேதும் சொல்லாமல் ஒரு பெருமூச்சு விட்டார்.

''என் கேள்விக்கு இன்னமும் நீங்கள் பதில் ஏதும் கூறவில்லையே?''

''கூறக்கூடிய அளவிற்குப் பெரிய விஷயம் ஒன்றும் இல்லை என்று வைத்துக் கொள்ளேன்.''

அவர் சொன்னவிதத்திலேயே அழகாகச் சமாளிக்க முனைவது தெரிந்தது. அப்படியே ஒரு வழிப்போக்கரிடம் இதற்குமேல் கேட்பதும் தவறு என்று தோன்றியது.

''போகட்டும்... இந்த வீணை எப்பொழுதும் உங்களுடன்தான் இருக்குமா?''

''எதற்குக் கேட்கிறாய்?''

''இல்லை... இதைச் சுமந்துகொண்டே நீங்கள் ஊர் ஊராக எப்படிச் செல்ல முடியும் என்று எனக்குள் ஒரு கேள்வி. அதே சமயம் நீங்கள் ஒரு இசைக்கலைஞரோ என்றும் ஒரு கேள்வி. என்னதான் இசைக்கலைஞராக இருந்தாலும் கச்சேரிகள் இருக்கும் பொழுதுதான் இசைக்கருவிகளை அவர்கள் கொண்டு செல்வார்கள். மற்ற நேரங்களில் அது பாதுகாப்பாக அவர்கள் இல்லத்தில்தான் இருக்கும். ஆனால் நீங்களோ இதைச் சுமந்த படியே வந்ததைக் கவனித்தேன். எனவே எனக்குக் குழப்பமாக இருக்கிறது.'' அபராஜித வைஜெயந்தி தன் மனதில் எதையும் ஒளிக்கவில்லை.

நினைத்ததை எல்லாம் கேட்டாள். அதைக் கேட்டு பாபாவும் சிரித்தார்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''உன் மனம் நினைப்பதை உதடுகள் அப்படியே பேசுகிறது. அதை நினைத்தேன். சிரிப்பு தானாக வந்துவிட்டது.''

''அது சிரிக்கக்கூடிய அளவிற்குக் கேலியான விஷயமா என்ன?''

''இது கேலிச் சிரிப்பில்லை தாயே... மனிதன் பெற்ற மகத்தான வரம் புன்னகை. உலகில் எந்த ஜீவராசிக்கும் இல்லாத சிறப்பு இது. இது பலவிதமான உணர்வுகளை உடையது. நல்ல உள்ளங்களைப் பார்க்கும்போது நமக்குள் எழும் ஆச்சரியம் காரணமாக ஒரு சிரிப்பு உருவாகும். இது அந்தவகை...!''

''பரவாயில்லை... நன்றாகவே பேசுகிறீர்கள்!'' - இருவரும் இப்படி மாறி மாறிப் பேசிக்கொண்டிருப்பதை ஒரு உருவம் மெல்ல எட்டிப்பார்த்துக் கவனித்தது.

''யாரது?'' வைஜெயந்தி கச்சிதமாக அந்த உருவத்தைப் பார்த்துக் கேட்டாள். அந்த உருவம் மெல்ல முகம் காட்டியது. அதுவேறு யாருமல்ல... அந்த வீட்டுப் பணிகளைச் செய்யும் பணிப்பெண் பாஞ்சாலிதான். வைஜெயந்தி கோவில்களில் நடனமாடும் நாளில் அவள்தான் தம்புரா பிடித்து அதன் நரம்புகளை இசைப்பவள்.

''என்ன பாஞ்சாலி... எதற்காக இப்படி ஒளிந்திருந்து பார்க்கிறாய்?''

''ஒன்றுமில்லை, வந்திருப்பது யாரென்று பார்த்தேன்.''

''ஓ... இவரா? இவர் பெயர் பாபாவாம். வடநாட்டிலிருந்து வருகிறாராம். பெரிய இசைமேதை போலத் தெரிகிறது.''

வைஜெயந்தி பாஞ்சாலியிடம் அவரைப்பற்றி மதிப்பாகச் சொல்லவும் பாஞ்சாலி தன் பார்வையால் அவரை ஊடுருவினாள்.

''என்ன பார்க்கிறாய்...? நம்ப முடியவில்லையா?''

''ஆமாம்... இவரைப் பார்த்தால் ஒரு பிச்சைக்காரரைப் போல அல்லவா தெரிகிறார்!''

''வாயைமூடு... நெடுந்தூரம் வந்த களைப்பினால் அப்படித் தெரிகிறார். சாப்பிட்டு ஓய்வு எடுத்தபின் பார். அப்பொழுது இவரை ஒரு வித்வானாகக் கருதமுடியும்.''

''போகட்டும். உங்களுக்கு ஒருவரைப் பிடித்துவிட்டால் உயிரையே கொடுப்பீர்கள் என்பதுதான் தெரியுமே.''

பாஞ்சாலி சொன்ன பதில் பாபாவைச் சிந்திக்கச் செய்தது.

''சரி. நீ போய் இவருக்கும் சேர்த்து இன்று உணவு தயார் செய். இவர் நமது விருந்தினர். சாப்பாட்டில் ஒரு குறையும் இருக்கக்கூடாது...''

வைஜெயந்தி கட்டளையிட்டாள். பாஞ்சாலியும் அதைக் கேட்டு அங்கிருந்து நழுவினாள்.

''சரி... நீங்கள் ஓய்வெடுங்கள். நான் உணவு தயாரானதும் உங்களை அழைக்கிறேன்.'' வைஜெயந்தியும் அவரை விட்டுவிட்டு விலகினாள்.

வெளியே மழை கொட்டிக்கொண்டே இருந்தது.

சாளரம் வழியாக அது நன்கு தெரிந்தது.

அதே சமயம் ''ஹூம்... இப்படி அனர்த்தமாக மழை பெய்தால் எப்படி? ஓங்கிப் பெய்து கேணி குளங்களை நிரப்பி விட்டு நின்றுவிட வேண்டும். அதுதான் நல்ல மழைக்கு அழகு...'' என்று ஒரு குரல் அவர் காதில் விழுந்தது.

குரல் வந்த திக்கைப் பார்த்தார்.

சற்றுத் தொலைவில் சாளரம் ஒன்றை ஒட்டிய இடத்தில் ஒரு முதிய பெண்மணி அமர்ந்திருந்தாள். கைத்தடி ஒன்றைப் பிடித்துக் கொண்டு அவள் அமர்ந்திருப்பது போலத் தோன்றியது.

இவ்வளவு நேரம் அங்கே இருந்ததும் அவளைப் பார்க்காதது ஆச்சரியமாக இருந்தது. அந்த முதிய பெண்மணியும் எழுந்து நின்று

கைத்தடியால் தடுமாறியபடி நடக்க முயன்றாள். அப்பொழுதுதான் அவளுக்குப் பார்வை கிடையாது என்பதே தெரிந்தது.

'அடடா...!' பாபாவுக்குள் பரிதாப உணர்வு வேகமாக சுரக்க, எழுந்து அந்த முதிய பெண்ணை நோக்கிச் சென்றார்.

தடுமாறியபடி வரும் அவளை சமீபித்தவர் ''நமஸ்காரம் அம்மா...'' என்றார்.

''யாரது?''

''நான் ஒரு வழிப்போக்கன் தாயே... இப்பொழுது இங்கே தங்கியுள்ளேன். நீங்கள் யாரென்று அறியத்தான் வந்தேன்...''

''நானா... என்னையறிந்து என்ன செய்யப்போகிறீர்கள்? நீங்கள் வந்த இடத்தில் சுகத்தை அனுபவித்துவிட்டுப் போய்க் கொண்டேயிருங்கள்'' என்றாள் அந்தக் கிழவியும்.

''நீங்கள் தவறாகக் கருதிவிட்டீர்கள் என்னை. நான் தவறான எண்ணமுடன் இங்கு வரவில்லை. ஒரு அதிதியாகத்தான் இங்கே வந்துள்ளேன்.''

''அதிதியாகவா... நீங்களா?''

''ஏன்... நம்ப முடியவில்லையா?''

''அதற்கு எப்படிச் சம்மதித்தாள் என் மகள் மாலி?''

''நீங்கள் யாரைச் சொல்கிறீர்கள்?''

''யாரென்றே தெரியவில்லையா...? அப்படியானால் என் பேத்தி வைஜெயந்தியின் வேலையாகத்தான் இருக்கும். அவளுக்குத்தான் இரக்கம் அதிகம்.''

''இப்பொழுது புரிகிறது நீங்கள் யாரைச் சொல்கிறீர்கள் என்று. எனக்கு ஆதரவு காட்டியது உங்கள் பேத்தியா?''

''அவளேதான்... ஆமாம். உங்கள் தமிழ் எங்கள் தமிழ்போல் ஏற்ற வளைவு நெளிவுகளுடன் இல்லையே? நீங்கள் தமிழறிந்த வடவரோ?''

அந்தக் கேள்வி பாபாவை ஒரு க்ஷணம் அதிசயிக்க வைத்தது.

''ஆம் தாயே... நான் வடவன்தான். ஆனாலும் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பூங்குன்றனாரின் தமிழ்ப் பாட்டையும் நேசத்துடன் படித்தவன்.''

''அதனால்தான் இந்தக் குருடியோடுகூடப் பேசிக்கொண்டிருக் கிறீர்கள். இங்கே என் பேத்தி மட்டும்தான் என்னுடன் பேசுவாள்...''

''உங்கள் பெயர்...?''

''ஒரு காலத்தில் மாணிக்கவல்லி என்றால் இந்தச் சோழ நாட்டுக்கே தெரியும். இப்பொழுது நான்தான் அவள் என்று சொன்னாலும் நம்புவாரில்லை.''

அந்த முதியபெண்மணி தன் பெயரைச் சொல்லும் போது கூட அதில் ஒருவித ஏக்கமும் தான் இப்பொழுது மதிக்கப்படாத வருத்தமும் இழையோடியது.

''ஹூம்... எல்லாம் கர்மவினை. எப்பொழுது கண்போனதோ அப்பொழுதே நான் காலாவதியாகிவிட்டேன்.''

''எப்பொழுது இருந்து இப்படி இருக்கிறீர்கள்...?''

''பதினைந்து வருடங்களுக்கு மேலாகிவிட்டது. கண்ணார அந்தத் தோடீஸ்வரனை வணங்கிய காலம் இனி எங்கே வரப்போகிறது?''

''எதனால் இப்படி ஆயிற்று?''

''எதனால் என்று கூறுவேன்... விஷக் காய்ச்சலில் விழுந்தேன். அதனாலா? இல்லை ஆடி ஆடி ஆடவரைச் சாய்த்த பாவத்தினாலா..? எதனால் என்று கூறுவேன்? தெரியவில்லை.'' சொல்லும்போதே மாணிக்கவல்லி என்கிற அந்த முதிய பெண்மணியின் ஒளிபோன கண்களில் இருந்து நீர் வழிந்தது.

பாபாவையும் அது உருக்கியது.

''கவலைப்படாதீர்கள்... உங்களுக்குப் பார்வை கிடைத்து விடும். அந்த இறைவனைப் பிரார்த்தியுங்கள்.''

''நான் அந்தத் தோடீஸ்வரனைப் பிரார்த்திக்காத வினாடி ஏது? கோடி நாம ஜெபத்தையே நூறு முறைக்கு மேல் செய்திருக்கிறேன். ஆனால் அவனுக்குத்தான் இன்னமும் என்மேல் இரக்கம் பிறக்கவில்லை.''

மாணிக்கவல்லி தொடர்ந்து அழுதபடி சொன்னது பாபாவை மேலும் உருக்கியது. ஒரு க்ஷணம் கண்ணிரண்டையும் மூடி ''இறைவா இது என்ன சோதனை?'' என்று முணு முணுத்தவர் மெல்ல தனது வீணையை நோக்கிச் சென்றார்.

உறையைவிட்டு வீணையை விலக்கியவர், அதை எடுத்து மடிமேல் வைத்துக்கொண்டார். அவர் வாசிக்கத் தயாராகிறார் என்பது விளங்கியது.

அந்த வீணையின் தந்திக்கம்பிகளும் அவரது விரல் நகங்களால் தூண்டப்பட, ஒரு இனிய நாதம் அங்கே மெல்ல உருவாகத் தொடங்கியது.

அழுதுகொண்டிருந்த மாணிக்கவல்லிகூட அப்படியே அமர்ந்து அந்த நாதத்தில் தன்னை மறக்க ஆரம்பித்தாள்.

அவரது வாசிப்பில் 'நயனரஞ்சனி' என்னும் ராகம் வெகு அழகாக உருவாகி மாணிக்கவல்லியை மெல்ல மெல்ல உருக்க, கண்களிலும் நீர் ஆறாகப் பெருக்கெடுத்தது.

நயனரஞ்சனி அந்த வீட்டின் சகலபாகங்களிலும் எதிரொலிக்க வைஜெயந்தி முதல் சகலரும் அங்கு கூட ஆரம்பித்தனர்.

யாரும் தங்கள் மனதில் எந்த ஒரு கேள்வியும் இன்றி தேன்குளத்தில் விழுந்துவிட்ட ஈயானது அதில் தன்னை மறந்து திளைப்பது போல திளைத்து நின்றனர்.

கிட்டத்தட்ட மூன்று நாழிகை நேரம்வரை நீடித்த அந்த ராகம் மெல்ல ஒரு முடிவுக்கு வந்தபோது மாணிக்கவல்லியிடமிருந்து ஒரு உற்சாகமான குரல் கேட்க ஆரம்பித்தது.

''ஆ... எனக்கு இப்பொழுது கண் நன்றாகத் தெரிகிறது. என்னால் பார்க்க முடிகிறது. வைஜெயந்தி... அம்மா வைஜெயந்தி! எங்கேயிருக்கிறாய் நீ..?''

''பாட்டி, இதோ உங்களுக்கு வலதுபக்கத்தில் நிற்கும் நான்தான் வைஜெயந்தி...''

''நீயா... நீயா... சின்னஞ்சிறுமியாக நான் பார்த்த வைஜெயந்தியா இன்று இப்படி இத்தனை பெரியவளாக என் கண்களுக்குக் காட்சி தருகிறாய்? உன்னைப் பார்த்துவிட்டேன். அற்புதம்! எங்கே அந்த அதிதி...?

ஐயா... நீங்கள் சொன்னது பலித்துவிட்டது. எனக்குப் பார்வை கிடைத்துவிட்டது.''

மாணிக்கவல்லி உற்சாகத்தில் பொங்கி வழிந்தாள். ஆனால் அவளது மகளான மாலி என்கிற நடுவயது முதியவளோ பாபாவை விழுங்கி விடுவதைப்போல பார்த்துக்கொண்டிருந்தாள்.

## இன்று

கல்யாணசுந்தரத்தின் தோட்டத்து குடிசை வீட்டு முன் சாமிநாதன் போய் நின்றபோது மாலை வெயில் தங்கச் சொட்டாட்டம்தான் தெரிந்தது.

பாம்பும் தேளும் புரண்டு கிடந்த பாழும் குடிசைப் பார்க்கவே ரம்யமாக கோவில் போல இருந்தது. சாம்பிராணி வாசம் வேறு மூக்கில் புகுந்தது கோவில்தான் என்று ஊர்ஜிதமே செய்தது.

மெல்ல உள்ளே எட்டிப்பார்த்தான் சாமிநாதன். உபாசகர் நரசிம்மபாரதி அவனுக்கு முதுகைக் காட்டியபடி அமர்ந்திருந்தார்.

திரும்பிப் பார்க்காமலே ''யாரது...? உள்ற வரலாம்!'' என்று அவனுக்கும் துளி ஆச்சரிய அதிர்வளித்தார்.

சாமிநாதனும் உள்ளே நுழைந்தான்.

''நீங்கோ...?''

''நான் உங்களுக்கு இங்க தங்க இடம்கொடுத்த கல்யாணசுந்தரத்தோட மகன். என் பேர் சாமிநாதன்.''

''ஓ... ரொம்ப சந்தோஷம். வாப்பா... உக்காரு.''

''பரவால்ல சாமி. நீங்க ஏதோ வீணை வேணும்னு கேட்டுருந்திங்களாமே?''

''ஆமாம்... நல்ல பழைய வீணையா ஒண்ணு வேணும்.''

''அப்ப கிளம்புங்க போகலாம். இந்த ஊர்ல எனக்குத் தெரிஞ்சு ஒரு நாலைஞ்சு பேர் வீட்ல வீணை இருக்கு. போய்ப் பார்ப்போம்.''

''நாலைஞ்சு பேர் வீட்லதான் இருக்கா?''

''எனக்குத் தெரிஞ்சு அவ்வளவுதான்...''

சாமிநாதன் சொன்ன பதிலைத் தொடர்ந்து உபாசகரிடம் ஒரு சிறிய அளவிலான மௌனம்.

''என்ன சாமி சிந்தனை..?''

''ஒண்ணுமில்ல. சரி. வா போகலாம்.''

அவர் அவனுடன் புறப்பட்டார். அவனும் அந்தக் குடிசை வீட்டை ஆச்சரியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு அவரைத் தொடர்ந்தான்.

நடக்கையில் ''எப்படி சாமி இந்த பாழுங்குடிசையை இப்படி மாத்துனீங்க?'' என்று கேட்டான்.

''இதென்னப்பா பெரிய விஷயம். நான் என்ன மலையையா தூக்கிட்டேன்...?'' என்றார் அவரும்.

''ஆமா... சாமிக்கு எந்த ஊர்?''

''உங்கப்பா அதைச் சொல்லலியா?''

''அதை எங்க சொன்னாரு... 'போ... ஒரு உபாசகர் சாமி வந்திருக்காரு. ஒரு நல்ல வீணை வாங்கிக் கொடுத்துட்டு வா'ன்னாரு...''

''ரொம்ப நல்ல மனுஷன் உங்கப்பா. எனக்காக ரொம்பச் சிரமப்படறார்...''

''அது இருக்கட்டும். எந்த தைரியத்துல இந்த ஊர்ல வீணை கிடைக்கும்னு நினைச்சு கையை வீசிக்கிட்டு வந்தீங்க?''

''நீ என்ன கேக்கறே?''

''இல்ல... வரும்போதே தஞ்சாவூர்ல நல்ல வீணையா பார்த்து வாங்கிட்டு வந்திருக்கலாம்ல?''

''பார்த்தேனே... நான் தேடுற மாதிரி வீணை அங்க இல்லையே...''

''சரிதான்... தஞ்சாவூர்லயே உங்களுக்கு வீணை அமையலன்னா இங்க எப்படி சாமி அமையும்? இது கிராமம் சாமி.''

''இருக்கலாம். ஆனாலும் தோடிபுரம்கற கிராமமாச்சே!'' அவரது பதிலில் இரட்டைப் பொருள்.

''தோடிபுரத்துல சாமி இருக்காரு... நல்ல பாடுறவங்க, ஆடறவங்க, வாசிக்கறவங்க வேணா இருக்காங்கன்னு சொல்லலாம். வீணை இருக்குன்னு எப்படிச் சொல்ல முடியும்?''

''இல்லாமலா ஒரு நாலஞ்சுபேர் வீட்ல அது இருக்கறதா சொல்லி நீ என்னைக் கூட்டிண்டு போய்ண்டு இருக்கே?''

உபாசகரின் மடக்கல் சாமிநாதனைக் கொஞ்சம் கட்டத்தான் செய்தது.

அதன்பின் எதுவும் அவரிடம் பேசவில்லை. நேராக விஜயராகவன் என்னும் மிருதங்கவித்வான் வீட்டு முன்னால்தான் போய் நின்றான்.

அந்த நாளைய வீடு பெரியதிண்ணை. ஐந்தாறு சிஷ்யப் பிள்ளைகளுடன் விஜயராகவனும் மிருதங்கத்தோடு சாதகம்

செய்துகொண்டிருந்தார். உபாசகரோடு வரும் சாமிநாதனைப் பார்த்துவிட்டு வாசிப்பதை நிறுத்திவிட்டு ''வாப்பா சாமிநாதா'' என்றார். அவனும் சிரித்தான்.

''எங்க இவ்வளவு தூரம்?''

''உங்களப் பார்க்கத்தான்... அதுக்கு முந்தி ஒரு விஷயம்... இவர் பேர்...''

''நரசிம்மபாரதி அடியேன் பேர். திருக்கடவூர்ல இருக்கேன். அம்பாள் உபாசகன். இந்த தோடிபுரம் தோடீஸ்வரர் சன்னதில ஒரு மண்டலம் வீணை வாசிக்கறதா பிரார்த்தனை பண்ணிண்டிருக்கேன். அதுக்காக வந்துருக்கேன்.''

சாமிநாதனுக்கு சங்கடம் இல்லாதபடி உபாசகர் தன்னைப் பற்றிய அறிமுகத்தைச் சற்று விஸ்தாரமாவே முடித்துக் கொண்டார்.

''ரொம்ப சந்தோஷம்... அதுக்கு நான் எதனா பண்ணணுமா?''

''ஆமாம் சாமி... நம்ப உபாசகருக்கு வாசிக்க ஒரு நல்ல வீணை வேணுமாம். உங்க வீட்லதான் ஒண்ணு இருக்கே. அதான் கூட்டிக்கிட்டு வந்தேன்.'' சாமிநாதன் அப்படிச் சொல்லவும் விஜயராகவன் பதறியவராக ''அய்ய... அது ஆனாலும் ரொம்பப் பழைய வீணைன்னா...'' என்றார்.

''ரொம்பப் பழசுதான் இவருக்கும் வேணுமாம்!''

''ஆச்சரியமா இருக்கே... அது முந்நூறு வருஷத்துக்கு முந்தியவீணை...'' அவர் அப்படிச் சொன்னதுதான் தாமதம் ''அதுதான் எனக்கு வேணும். செத்த காட்றேளா?'' உபாசகர் துள்ளிக் குதித்தபடி முன்னால் வந்தார். அந்தத் துள்ளல் சாமிநாதனுக்கே ஒரு ஆச்சரியம்தான்.

''அது ஆத்துல பரண்மேல் இருக்கு... எடுக்கணும்னா கொஞ்ச நாழியாகும். அப்புறம் நரம்பெல்லாம் அறுந்திருக்கு. உங்களுக்குப் பயன்படறது சாத்யமில்லை.''

விஜயராகவன் சொல்லிமுடிக்கவில்லை. உபாசகர் விறுவிறுவென்று உள்ளே நடந்து அந்த பரண் அருகேயே போய் நின்றுவிட்டார்.

விஜயராகவன் மனைவியும் பொண்ணும் திகைத்து விட்டனர்.

''அம்மா... கொஞ்சம் ஏணி இருந்தா கொடேன். அந்த வீணையை எடுக்கணும்.'' உரிமையோடு அவர் கேட்டவிதம் வேறு அவர்களை மேலும் திகைக்கவிட்டது.

பின்தொடர்ந்து வந்த சாமிநாதன் ''என்ன பயந்துட்டீங்களா... சாமி ஒரு உபாசகர். நம்ம கெஸ்ட்'' என்றான். அதற்குள் விஜயராகவனே பின்பக்கம் சென்று ஏணியை எடுத்து வந்து தர விறுவிறுவென்று அதில் ஒரு சின்னப் பையனைப் போல ஏறியவர் ''எங்கே எங்கே?'' என்கிற படபடப்புடன் மேலே பரணில் பார்வையை விரட்டினார். ஒரு மூலையில் மார்ச்சுவரியில் கிடக்கும் சவம் கணக்காக ஒரு வெள்ளைத் துணியால் மூடப்பட்டு அந்த வீணையும் கிடந்தது.

அது பார்வையில் பட்ட மறுநொடியே ''ஜெகன்மாதா'' என்று உபாசகரிடம் ஒரு முணுமுணுப்பு. அப்படியே ஏணிமேல் நின்றபடியே கைகளைக் கூப்பிவிட்டு அந்தத் துணியை உருவினார். துணி விலக வீணையும் பளிச்சென்று பார்வையில்பட்டது.

ஆனால் அவர் முகத்தில் பலத்த ஏமாற்றம்!

கீழே இறங்கினார்.

''என்ன சாமி... வீணை எப்படி இருக்கு?''

''இல்லப்பா... இதைப் பயன்படுத்த முடியாது...''

''நான்தான் சொன்னேனே அப்பவே...'' - விஜயராகவனும் சுருதி சேர்த்தார்.

''எனக்கு ஒரு நப்பாசை...'' என்ற உபாசகர் பார்வை விஜயராகவன் மகள் மேல் சென்றது. பத்து வயது சிறுமியான அவளது தலையில் மலர்ச்சரம் இல்லாதது உபாசகர் கண்களை உறுத்தியது.

''குழந்தை... வா இப்படி... உன் பேர் என்ன?''

''மகாலட்சுமி.''

''மகாலட்சுமின்னு பேர வெச்சுண்டு தலைல இப்படியா பூவில்லாம இருப்பே... வா இப்படி...'' அவளை அருகே அழைத்தவர் அவளது தலையை ஆசையாக வருடிவிட்டு கையை விலக்கிய மறுநொடி அந்தப் பெண் தலையில் ஒரு அழகிய ரோஜாப்பூ இருந்தது. சாமிநாதன் ''அட, இது என்ன மேஜிக்?'' என்றான் உடனேயே.

''இது உனக்கு மேஜிக்கா தெரியறதா?''

''பின்ன... என்ன மாயாஜாலமா?''

சாமிநாதன் துளியும் ஆச்சரியம் இன்றி சாதாரணமாகக் கேட்டான். அவரிடம் பதிலில்லை.

''சரி... அடுத்த இடத்துக்குப் போவோமா?'' என்றார்.

# 7



## அன்று

விழுங்கி விடுவதைப் போல மாலி பார்த்துக்கொண்டிருக்க, வைஜெயந்தியோ ஓடிப்போய் பாபா எதிரில் பிரகாசமான விழிகளுடன் நின்றாள்.

''என்ன தாயே, அப்படிப் பார்க்கிறாய்?''

''நீங்கள் வந்த நேரம் என் பாட்டிக்கு கண்கள் வந்துவிட்டது!''

''எல்லாம் அவர்கள் அந்த இறைவன் நாமத்தை பலகோடி முறை ஜபித்ததன் எதிரொலி...''

''உண்மைதான். அதே சமயம் உங்கள் வீணை இசைகூட என்னை அப்படியே மயக்கிவிட்டது.''

''அது இசைக்கே உரிய சக்தியம்மா...''

''இந்த நாளை நான் கொண்டாடப் போகிறேன். பாட்டி, இனி உனக்கு ஒரு குறையுமில்லை.''

''ஆமாம் வைஜெயந்தி. எனக்கு இருந்தது ஒரே ஒரு குறைதான். அதுவும் இந்த மனிதர் வந்த நேரத்தால் நீங்கிவிட்டது. இந்த நல்லவேளையில் எனக்கு ஒரு ஆசை...''

''என்ன பாட்டி?''

''நான் உடனே அந்த தோடீஸ்வரரைத் தரிசிக்க வேண்டும். வருகிறாயா என்னுடன்?''

''என்ன பாட்டி இது கேள்வி. கிளம்புங்கள் முதலில்!'' அவள் அப்படிச் சொன்னதுதான் தாமதம் - வெளியே வானில் ஒரு பளீர் மின்னல். மழையும் வலுக்கத் தொடங்கியிருந்தது.

''ஐயோ... இப்பொழுது எப்படிச் செல்வது?''

''எல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம். பார்வை வந்தால் அந்த தோடீஸ்வரனைத்தான் முதலில் பார்க்க வேண்டுமா? ஏன்

இங்கே நான் ஒருத்தி இருக்கிறேனே, நான் கண்ணில் படவில்லையோ?'' மாலியின் ஆதங்கம் இடையிட்டு அவர்களைத் திசை திருப்பியது.

''பேசாதே... எனக்குப் பார்வை போன நிலையில் இருந்து என்னை ஒரு குப்பை போல மூலையில் தூக்கிப்போட்டவள் நீ. என் பேத்தி மட்டும் என்னிடம் அன்பு செலுத்தாமல் இருந்திருந்தால் நான் எப்பொழுதோ இறந்து போயிருப்பேன்'' மாணிக்கவல்லியும் மாலியைப் பார்த்து பதிலுக்குச் சீறினாள்.

''பாட்டி... வேண்டாம். அம்மாவுடன் சண்டையிடாதே. அவள் சுபாவம்தான் உனக்குத் தெரியுமே. இது நல்லவேளை. இவ்வேளையில் நீ வருத்தமாக எதையும் சிந்திக்கக்கூடாது. மழைபெய்தாலும் பரவாயில்லை. தாழங்குடைகள் இருக்கின்றன. அதைப் பிடித்தபடி ஆலயம் செல்வோம். என்ன சொல்கிறாய்...?''

''திரும்பவும் சொல்கிறேன்... நீ இப்படி மழையில் செல்வது ஆபத்து. கோவில் ஒன்றும் ஓடிப்போய்விடப்போவதில்லை. ஞாபகத்தில் வைத்துக்கொள்...!''

''வாயை மூடுகிறாயா.. நான் வெளியே சென்றால் உனக்கென்ன? அந்த தோடூஸ்வதனைத் தரிசனம் செய்யாமல் ஒரு வாய்த் தண்ணீர்கூடக் குடிக்கமாட்டேன் நான்.''

''பாட்டி... எதற்கு உனக்கு இத்தனை ஆவேசம்? நான்தான் உன்னோடு வருகிறேன் என்று கூறிவிட்டேனே. இந்தப் பாழும் வீட்டில் பஞ்சணையில் இருப்பதைவிட பொழியும் மழையில் நனைந்தபடி ஒரு சுடுகாட்டில் இருப்பதுகூட மிக உயர்வானது தான். எனவே நீ அம்மாவுடன் சொல்லாடாமல் என்னுடன் புறப்படு...''

அவர்கள் மூவரும் மாறிமாறி பேசிக்கொண்டதை கேட்டுக்கொண்டிருந்த பாபா, அவர்களை அமைதிப்படுத்தும் விதமாக திரும்பவும் வீணையின் நரம்பை நிமிண்ட, மூவரின் கவனமும் அவர் பக்கம் திரும்பியது.

''உங்களுக்குள் எதற்கு வீண் வாதங்கள்? சற்றே இந்த இசையை அனுபவியுங்கள். அதற்குள் மழையும் நின்றுவிடும். பிறகு எந்தத் தடையும் இன்றி நீங்கள் ஆலயத்திற்கும் சென்று வரலாம்...'' என்று விட்ட இடத்திலிருந்து திரும்பவும் வீணையை மீட்ட ஆரம்பித்தார்.

அதுவும் தனது சக்தியைக் காட்ட ஆரம்பித்தது. முறைத்தபடி இருந்த மாலிகூட மௌனமாக பாபா வாசிப்பதையே கவனித்தாள்.

எவ்வளவு நேரம் அவர் வாசித்தார் என்பதே தெரியவில்லை. ஆனால் பாபா சொன்னது போல வெளியே மழை விட்டிருந்தது. சூரியனும் தன் முகத்தை வானில் காட்டியிருந்தான்.

அவன் கரங்களில் ஒன்றுகூட அந்த தாசி மாளிகையின் உச்சிக் கூரை சாளரம் வழியாக உள்ளே நுழைந்து ஒரு வெளிச்சக்கோடாக பரிமளித்தபடி இருந்தது.

பாபாவும் தன் வாசிப்பை நிறுத்தினார்.

அதன் பிறகுதான் அவர்கள் மழை நின்று சூரியன் வீட்டுக்குள்ளேயே நுழைந்திருப்பதையும் கவனித்தனர்.

வைஜெயந்தி மிகவும் உற்சாகமாகிவிட்டாள். ''பாபாஜி... என்ன ஒரு ஆச்சரியம். நீங்கள் சொன்னது போல மழை நின்று சுள்ளென்று வெயிலும் காயத் தொடங்கிவிட்டதே. உண்மையில் இது ஒரு பெரிய ஆச்சரியம்தான்.

ஆமாம். உங்களுக்கு எப்படித் தெரியும்? எல்லாவற்றையும் முன்பாகவே கூறிவிடுகிறீர்களே!''

அபராஜித வைஜெயந்தியின் கேள்வி பாபாவைச் சிரிக்கத்தான்விட்டது.

''இதற்கும் சிரிப்பா... ஆனால் இது எந்த அர்த்தத்தில் என்று நான் கேட்கமாட்டேன். உடனே நீங்களும் எதையாவது சொல்வீர்கள். எது எப்படியோ... மழை நின்றிருக்கும் இவ்வேளையில் நாங்கள் ஆலயத்துக்குச் சென்று வந்து விடுகிறோம். நீங்கள் ஓய்வெடுங்கள். நாங்கள் வந்தவுடன் விருந்துண்ணுவோம்.''

அபராஜித வைஜெயந்தி பாபாவிடம் சொல்லிவிட்டு புறப்பட முயல, பாபாஜி அவளைப் பார்த்து, ''தாயே, ஒரு சிறு சங்கல்பம்...'' என்றார். அவளும் என்ன என்கிற மாதிரி பார்த்தாள்.

''உன்னோடு என்னையும் அந்த ஆலயத்திற்கு அழைத்துச் செல்வாயா?''

அவர் அப்படிக் கேட்டது அவளிடம் பெருத்த ஆச்சரியத்தை மூட்டினாலும் ''தாராளமாக வாருங்கள். இதிலென்ன இருக்கிறது?'' என்றாள்.

அவரும் வெகுவேகமாக ருத்ரவீணையை நெருங்கி அதை உறையில் போட்டுக் கட்ட முயன்றார்.

''என்ன செய்கிறீர்கள்?''

''இந்த ருத்ரவீணையையும் எடுத்து வரப்போகிறேன் அம்மா...''

''இது எதற்கு...? இது இங்கேயே இருக்கட்டும்!''

''இதைக் கொண்டு அந்தச் சன்னதியில் ஒரு கீர்த்தனை இசைக்க வேண்டும் என்பது என் நெடுநாள் கனவம்மா.''

''அதற்கு ஊர்த் தலையாரியிடம் அனுமதிபெற வேண்டும். கோவில் பட்டரில் இருந்து எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டுமே...''

''நான் வாசிப்பதால் அவர்களுக்கு என்ன குறை?''

''அப்படியில்லை... சரி. வாருங்கள்...''

அரைமனதாக அவள் சம்மதிக்க, பாபாவும் அந்த வீணையுடன் அவளுடன் கிளம்பினார். மாலி மட்டும் அந்த விழுங்கும் பார்வையை விட்டுவிடவேயில்லை. அப்படியே பாபா சொன்னபடியே நடந்துவிட்ட அந்த இருவிஷயங்கள் குறித்தும் அவளுக்குள் ஒரு கேள்வி.

'இது எப்படிச் சாத்தியம்?'

## இன்று

தெருவுக்குள் நுழையும்போதே இனிமையான சண்முகப்ரியா ராகத்தில் அமைந்திருந்த பாட்டு உபாசகர் காதை அடைந்துவிட்டது.

''நாம இப்ப யார் வீட்டுக்குப் போறோம் சாமிநாதா?'' என்று கேட்கவும் ''பாட்டு வாத்தியார் பத்மநாபசிவம் வீட்டுக்கு...'' என்றான் அவனும்.

''பாபநாசம் சிவன் தெரியும்... பத்மநாபசிவம் எனக்குப் புதுசு.'' என்றார் அடுத்த வினாடி.

''எனக்கு பாபநாசம் சிவனை எல்லாம் தெரியாது... இந்த பத்மநாப சிவனைத்தான் தெரியும்.'' என்றான் அவனும்.

ஏனோ அவர் வரையில் பதிலுக்குப் பதில் நல்ல மிளகாய் காரத்தோடு சொல்ல வேண்டும்போல் அவனுக்குள் ஒரு அரிப்பு.

அவருக்கும் அது புரிந்தது. சிரித்துக் கொண்டார்.

''பாபநாசம் சிவன் யாருன்னு தெரியுமோ?'' என்று அவனிடம் மீண்டும் ஆரம்பித்தார்.

''யாரா இருந்த என்க்கென்ன சாமி?'' சாமி எரிச்சலைக் கரைத்தான் தன் கேள்வியில்.

''சும்மா தெரிஞ்சுக்கோ... எல்லாம் ஒரு ஜெனரல் நாலட்ஜ்தான். அவர் ஒரு பெரிய கவிஞர். எம்.கே.டி. பாகவதர் படத்துப் பாட்டை எல்லாம் அவர்தான் எழுதினார்.

எல்லாத்துக்கும் மேலா இரண்டு முதலமைச்சர்களுக்கு அவர் ரொம்ப நெருங்கின உறவு.''

சாமிநாதன், முதலமைச்சர் என்று கூறவும் உபாசகரைச் சற்று கவனித்தான்.

''நம்ப எம்.ஜி.ஆருக்கு மாமனார், ஜானகி எம்.ஜி.ஆருக்கு அப்பா...''

அந்த பதில் நிஜமாலுமே அவனுக்குப் புதிதுதான். ''இவ்வளவு ஜெனரல் நாலட்ஜ் உள்ள நீங்க எதுக்கு மேஜிக் எல்லாம் பண்றீங்க?''

மென்று விழுங்காமல் கேட்டுவிட்டான்.

''என் உபாசனா சித்தியை நீ மேஜிக்னா சொல்றே?''

''வேற அதை எப்படிச் சொல்றதாம்?''

''அதுசரி... நான் அப்படிச் செய்யறதுல உனக்கு என்ன வருத்தம்?''

''எனக்கு ஏமாத்தற விஷயங்களே பிடிக்காது சாமி!'' பட்டென்று உடைத்தான்.

''என்னோட உபாசனா சித்து ஏமாத்துவேலை இல்ல. அது ஒரு அருள். அடுத்தவா நல்லதுக்காக அதை நான் பயன் படுத்தறேன். அவ்வளவுதான்...''

''இப்ப வீணை வாசிக்க வந்திருக்கறது உங்களுக்காகத் தானே?''

அவனிடம் அவரை மடக்கிவிட்டதுபோல ஒரு உணர்ச்சி. உபாசகர் திரும்பச் சிரித்தார்.

வீட்டு வாசலில் அந்த சண்முகப்ரியாவில் சரளிவரிசை கொஞ்ச, தொடை தட்டியபடியே பாடிக் கொண்டிருந்தார் பத்மநாபசிவம் என்னும் அந்தப் பாடகர்.

''அருமையான சாரீரம்... பிசிறு இல்லாத ஸ்ருதி சுத்தம். வளைவு நெளிவும் பிரமாதம்.'' உபாசகர் பத்மநாபசிவமாகிய அந்தப் பாடகருக்கு முதலில் பாராட்டைத் தெரிவித்துக் கொண்டார்.

''ஸ்வாமிகள் யார்ன்னு அடியேன் தெரிஞ்சுக்கலாமா?''

''சாமி... இவர் பேர் நரசிம்மபாரதி. அம்மன் உபாசகராம். நிறைய மேஜிக்கெல்லாம் பண்றாரு. இப்ப இவருக்கு ஒரு வீணை வேணும். உங்க வீட்லதான் ஒரு வீணை இருக்குதே... அதான் காட்டுவோமேன்னு இவரைக் கூட்டிகிட்டு வந்தேன்.''

பதிலை சாமிநாதன் சொன்னான்.

''அப்படியா சங்கதி. சந்தோஷம். ஆனா, நான் அந்த வீணையை விக்கறதா உன்கிட்ட எப்ப சொன்னேன்?'' அவரும் திருப்பிக் கேட்டார்.

''அது இல்ல சாமி... நம்ம உபாசகர் ஒரு மண்டலம் வாசிச்சிட்டுத் திருப்பிக் கொடுத்துடுவார்...''

''அப்படி விவரமா சொல்லு...''

பதிலோடு எழுந்தார் பத்மநாபசிவம். அவர் திரும்பி வரும்போது அவர் கைகளில் அவர் சொன்ன வீணை இருந்தது.

அவர் சுமந்து வரும்போதே பார்த்துவிட்ட உபாசகர் நெருங்கிவிடவும் அதைத் தொட்டுக்கூட பார்க்காமல் ''இது இல்ல நான் வாசிக்க நினைக்கற வீணை'' என்றார்.

''இது நல்ல வீணை ஸ்வாமி. அருமையான நாதம் இதோடது. தந்திக்கம்பில ஒண்ணுகூட இதுவரை அறுந்து வேற தந்தி மாத்தினதில்ல. ரொம்ப ராசியான வீணை இது.'' - பத்மநாப சிவத்தின் பதில் தனக்குத் தேவையற்றது என்கிற பாவனைதான் உபாசகரிடம். சாமிநாதனும் கவனித்தான்.

''ஏன் சாமி... இந்த வீணைக்கென்ன சாமி? இதுல நீங்க வாசிங்க. எங்க தோடீஸ்வரர் ஒண்ணும் சொல்லமாட்டார்'' என்றான் நக்கலாய்.

''என்னை மன்னிக்கணும். உங்களுக்கு நான் சிரமம் கொடுத்துட்டேன். தயவுசெய்து இதை உள்ற கொண்டுபோய் பத்ரமா வெச்சுடுங்கோ...'' என்றார் உபாசகர். அதற்குமேல் அங்கே நின்று காலத்தை விரயமாக்க சாமிநாதனும் விரும்பவில்லை.

மூன்றாவதாக ராவுத்தர் ஒருவர் வீட்டுக்கு அவரை அழைத்துச் சென்றான்.

முகப்பில் ஒரு குதிரைவண்டி ஒரு ஓரமாக நின்று கொண்டிருந்தது. சற்றுத் தள்ளி ஒரு முருங்கை மரம்! அதில் பக்ரீத்துக்காக அவர் வளர்க்கும் ஆடுகள் கட்டப்பட்டு அவை அகத்திக்கீரைக்கட்டு ஒன்றை கரித்துக் கொண்டிருந்தன.

ராவுத்தர் சற்றுத் தள்ளி அமர்ந்திருந்தார்.

சாமிநாதனைப் பார்த்துவிட்டு உற்சாகமாய் ''வா சாமிநாதா...'' என்று வாய் நிறைய வரவேற்றார்.

''எப்படி இருக்கீங்க பாய்?''

''நல்லாருக்கேன். உன் அப்பா எப்படி இருக்காரு?''

''அவருக்கென்ன... கோவில்ல நாதஸ்வரம் வாசிச்சிட்டு தான் உண்டு - தன் வேலை உண்டுன்னு இருக்காரு...''

''அதுசரி. எங்க இவ்வளவு தூரம்?''

''உங்க வீட்ல ஒரு வீணை இருக்குதுல்ல...?''

''ஆமா...''

''அதைக் கொஞ்சம் எடுத்துகிட்டு வர்றீங்களா?''

''என்னப்பா... நீ நாதஸ்வர வித்வான் மகனாச்சே? எப்ப இருந்து வீணைக்கு மாறினே?''

''அட நீங்க ஒண்ணு... வீணை எனக்கு இல்ல. இதோ இவருக்கு...''

அவன் கை உபாசகரை நோக்கி நீண்டது.

''சலாமலைக்கும்...'' உபாசகர் அவர் பார்த்த நொடி அவர்கள் பாணியில் வணக்கம் சொன்னார்.

''அலைக்கும்ஸலாம்... சாமி யாரு...?''

''கேட்டீங்களே கேள்வி... அதுலையே விடை இருக்கு.சாமியார்!''

''சாமியாரா?''

''செத்த சும்மா இரு சாமிநாதா. பாய்கிட்ட இருக்கற வீணைதான் அனேகமா எனக்குப் பயன்படப் போற வீணையா இருக்கணும்.'' என்றார் உபாசகர் சற்று நம்பிக்கையாக...

''அதுசரி... எதுக்கு வீணை...? என்ன பண்ணப்போறீங்க?''

''என்ன பாய் கேள்வி இது? வீணையை வெச்சுகிட்டு கிடாரா வாசிப்போம். எல்லாம் வீணை வாசிக்கத்தான்.''

''ஆமாம் பாய்... எனக்கு ஒரு வீணை இப்ப தேவைப்படறது. நல்ல பழைய வீணைதான் தேவை. அதான் சாமிநாதன் உங்களாண்ட அழைச்சுண்டு வந்தான். அதுசரி... உங்க வீட்ல எப்படி வீணை?''

''ஏன் சாமி... முஸ்லீம்ஸ் வீணை வாசிக்கக்கூடாதா?''

''நான் அப்படிச் சொல்லல. இதுவே வடநாடா இருந்தா இந்தக் கேள்வியே தப்புங்கறது எனக்குத் தெரியும். ஏன்னா அங்க பெரிய பெரிய வீணை விதவான்கள்லாம் முஸ்லீம்கள்தான்.

அவ்வளவு ஏன்...

தான்சேன்கற வீணை இசைக்கலைஞன் வீணை வாசிச்சு எரியாத விளக்கையே ஏற்றி எரிக்கலையா என்ன?''

உபாசகர் கொஞ்சம் சரித்திரமும் பேசினார்.

''நாங்களும் அந்த வம்சாவளிதான் சாமி.'' - அந்த முஸ்லீம் பெரியவரின் பதில் உபாசகர் முகத்தில் பலத்த பிரகாசத்தை வரவழைத்தது.

''அப்படியா?'' - அவர் உற்சாகமாகக் கேட்ட விதம், அதைத் தொடர்ந்து அந்தப் பெரியவர் அருகில் போய் அமர்ந்து கொண்ட விதம் எல்லாமே சாமிநாதனுக்கு மேலும் ஆச்சரியத்தைத்தான் தந்தது. உபாசகர் கொஞ்சம் சரக்குள்ள மனிதர்தான் என்கிற மாதிரியும் தோன்றியது. அந்த முஸ்லீம் பெரியவரும் அதைக் கேட்டு படு உற்சாகமாகிவிட்டார்.

''ஆமா... நீங்க வீணை இசைக் கலைஞரோ?''

''அப்படித்தான்னு வெச்சுக்குங்களேன்...''

''அப்ப உங்ககிட்டையே வீணை இருக்கணுமே?''

''இருக்கு. ஆனா இங்க இல்ல. ஊர்ல!''

''உங்க ஊர்...?''

''திருக்கடவூர்!''

''ஓ... அபிராமி அம்மா ஊரா?''

அவர் கேட்டவிதமே அலாதி அன்போடு தொனித்தது.

''பரவால்ல பாய்... துவேஷமில்லாம இருக்கு உங்க பேச்சு.''

''துவேஷமா... எதுக்கு...?''

''இல்ல... இப்பதான் எங்க பார் ஒரே மதச் சண்டையா இருக்கே?''

''எனக்குத் தெரிஞ்சு உண்மையான இந்துவும் உண்மையான முஸ்லீமும் எந்த நாள்லையும் சண்டை போட்டுக்கிட்டதில்லை. என் அப்பா அடிக்கடி சொல்வார், 'இஸ்லாம்கற வார்த்தைக்கு அர்த்தம் சகிப்புத்தன்மைன்னா இந்துங்கற வார்த்தைக்கு விட்டுக்

கொடுத்தல்னு ஒரு பொருள் இருக்கு'ம்பாரு. சகிப்புத்தன்மையும் விட்டுக்கொடுத்தலும் உடையவங்க எங்கேயாவது சண்டை போட்டுப்பாங்களா?''

அவர்கள் பேச்சு பொறுமையாக போவது சாமிநாதனை உறுத்தியது.

''பாய்... கொஞ்சம் வீணையைக் காட்டி இவருக்கு அது புடிச்சிருக்கா, புடிக்கலையான்னு பார்த்துடுவோமே?''

''வீணைலகூட புடிச்ச வீணை, புடிக்காத வீணைன்னு இருக்குதா என்ன?'' பாய் ஆச்சரியமானார்.

''கொஞ்ச நேரத்துல தெரிஞ்சிக்குவீங்க. இவரை யாருன்னு நினைச்சீங்க?'' - சாமிநாதன் திரும்பவும் நக்கலாகக் கேட்டான்.

உபாசகருக்கும் அது புரியாமல் இல்லை.

சிறிது நேரத்திலேயே பாய் உள்ளே சென்று தன் வீட்டு வீணையை எடுத்து வந்து காண்பித்தார்.

இந்த முறையும் உபாசகர் முகத்தில் ஒரு ஏமாற்றக் கலவை.

''சரி பாய்... இதை பத்ரமா கொண்டுபோய் உள்ற வைங்க. அஞ்சு வீட்ல மூணு வீடு பார்த்தாச்சு. மீதி இருக்கற இரண்டு வீட்டுலையும் இவருக்கு வீணை அமையும்னு எனக்கு நம்பிக்கை இல்ல.'' என்று அலுத்துக்கொண்டான் சாமிநாதன்.

அவன் அலுத்துக்கொண்ட நேரமாகப் பார்த்து செம்போத்து பட்சி ஒன்று அருகிலுள்ள முருங்கைமரத்தில் அமர்ந்திருந்த நிலையில் ''ஹக்கு... ஹக்கு... ஹக்கு...'' என்று தன் பாணியில் குரல் கொடுத்தது.

உபாசகர் முகத்தில் உடனே ஒரு மலர்ச்சி.

''செம்போத்து குரல் கொடுக்கறது... பாய்க்கு ஏதோ நல்ல தகவல் வரப்போறது.'' என்றார் அந்த மகிழ்ச்சியோடு.

''அப்படியா சொல்றீங்க?'' - பாயிடமும் ஒருவிதப் பரவசம்.

''பாய்... இவர் இப்படித்தான் எதாவது சொல்லுவார். சரியான மேஜிக்மேன் இவர். அப்ப நாங்க கிளம்பறோம்.'' சாமிநாதன் குறுக்கில் புகுந்து கத்தரித்தான். அதே வேளையில் உள்ளே தொலைபேசியிடம் இருந்து பாய்க்கு அழைப்பு.

''ஒரு நிமிஷம்'' என்று உள்ளே சென்றார்.

சில நிமிடம் கழித்து திரும்பி வந்தவர் முகத்தில் பரவசமான பரவசம்.

''சாமி, நீங்க சொல்லி வாய் மூடலை. உடனேயே நல்ல தகவல் வந்துடுச்சி...''

''அப்படி என்ன பாய் நல்ல சேதி?''

''சாமி... என் மகன் ஷாஜகானுக்கு ஒரு சினிமாவுக்கு மியூசிக் டைரக்டரா இருக்கற வாய்ப்பு வந்திருக்குதாம். லட்ச ரூபா அட்வான்ஸ் தந்திருக்காங்களாம். அவன்தான் போன் பண்ணான். சாமிநாதா! நீ வந்திருக்கற விஷயத்தையும் சொன்னேன். உடனே உன்னையும் ரொம்ப விசாரிச்சான். குறிப்பா அவன்கூட பள்ளிக்கூடத்துல ஒண்ணா படிச்ச உன் சினேகிதன் சங்கரன் பத்தி ரொம்ப விசாரிச்சான்...''

சாமிநாதன் முகமும் அதைக் கேட்டு விளக்கானது. உபாசகர் மட்டும் ஒரு மர்மச் சிரிப்பு சிரித்தார்.

பாய் உபாசகரின் கையைத் தேடிப்பிடித்து கண்களில் ஒற்றிக்கொண்டார்.

அப்பொழுதே அருகே அவர் விரித்து வைத்திருந்த அவரது மார்க்க புத்தகம் ஒன்று காற்றில் படபடத்தது.

உருதுமொழியிலான அந்த புத்தகத்தை உபாசகரும் ஒரு பார்வை பார்த்தார். அப்படியே கையில் எடுத்தார்.

''ஓ... குணங்குடி மஸ்தான் சாகிபுவோட வாழ்க்கை வரலாறுபோல இருக்கே...'' என்றார்.

''அட... உங்களுக்கு உருதுகூட படிக்கத் தெரியுமா?''

''ஏதோ... கொஞ்சம்போல எழுத்துக்கூட்டிப் படிப்பேன்னு வெச்சுக்குங்களேன்.''

''அப்ப நீங்க பெரிய மேதைதான்...'' பாய் உபாசகரை மனசார பாராட்டினார்.

சாமிநாதனால் மட்டும் அவரைப் புரிந்துகொள்ளவே முடியவில்லை.

இருவரும் பாயிடம் விடைபெற்றுக் கொண்டு திரும்ப வீதிக்கு வந்தும் அவனிடம் ஒருவித மௌனம் தொடர்ந்தது.

''என்னப்பா... என்னைப் பத்தியே யோசிச்சிண்டு இருக்கே போலிருக்கே?'' அவர் அவன் மௌனத்தைக் கலைத்தார்.

''ஆமாம் சாமி... நாம சந்திச்சு சில மணிநேரம்தான் ஆகுது. ஆனா நீங்க ரொம்பவும் என்னை யோசிக்க வெச்சுட்டீங்க.''

''யோசி... அதுல ஒண்ணு தப்பு இல்ல. ஆமா மீதி இரண்டு பேர் வீட்டுக்கு எப்ப போகப் போறோம்?''

''அது... அது...''

''அதுல ஒருத்தர் ஊர்ல இல்லை. இன்னொருத்தர்தான் இருக்கார். அவர் வீட்டுக்கு நாளைக்குப் போனா என்னன்னு நினைக்கறே? சரியா?'' - சாமிநாதன் அவர் கேட்ட கேள்வியால் திக்குமுக்காடிப் போய்விட்டான்.

''என்ன... நான் கேட்டது சரியா...? முழிச்சா எப்படி?''

''சரி சாமி... நாளைக்கே வெச்சுக்குவோம்.''

''நீ ரொம்பதான் உன்னைப் போட்டுக் குழப்பிக்கறே... அது உன் முகத்துல பளிச்சுன்னு தெரியறது. நான் ஒரு சாதாரண மனுஷன்தான். இதுக்குமேல என்னைப்பத்தி நீ யோசிக்க ஒண்ணுமில்ல. அதுசரி... இவ்வளவு பெரிய நெத்தியோட ஒரு திலகமில்லாமலா இருப்பே?''

''அது எனக்கு பொட்டெல்லாம் வெச்சுக்கற பழக்கம் இல்ல சாமி.''

''ரொம் தப்பு. இரண்டு புருவத்துக்கும் நடுவுல குங்குமமோ, விபூதியோ இல்லை செந்தூரமோ கட்டாயமா இருக்கணும்.

இந்துங்கற அடையாளத்துக்காக மட்டுமல்ல. அதுல ஒரு அர்த்தமும் இருக்கு. நெற்றிப்பொட்டுதான் குண்டலினி சக்தியோட பீடம். அந்தப் பீடத்துல கிலேசம்கற துர்நீர் சுரந்துண்டு இருக்கும். இட்டுக்கற திலகம் தான் உலரும்போது அந்த நீரையும் இழுத்துண்டு உலர்ந்து நெற்றிப் பீடத்தை பளிச்சுன்னு வெச்சுக்கும். துர்நீர் விலகினாதான் ஞானம் சித்திக்கும். இந்த உலகத்துல ஒவ்வொரு விஷயத்துக்கும் இரண்டு அர்த்தம் உண்டு. அது பூராவும் புரியும். இல்லேன்னா எல்லா விஷயத்துலையும் ஒரு பக்கத்தைத்தான் இந்தப் புத்தி பார்க்கும். இப்ப நீ என்னைப் பார்க்கற மாதிரி...''

ஒரு புதிய விளக்கத்தோடு கையை ஒரு சொடக்குச் சொடக்கிவிட்டு அவன் நெற்றிப்பொட்டை தன் ஆட்காட்டி விரலால் அவர் தொட்டு முடித்த மறுநொடி அவன் இரு புருவமத்தியில் பளிச்சென்ற ஒரு செந்தூரப்பொட்டு தோன்றியிருந்தது!

அவன் முகமும் பார்க்க முழுவதுமாக மாறிவிட்டிருந்தது. அவனும் மலங்க மலங்க அவரைப் பார்த்துக்கொண்டே நின்றான். ''நடப்போம்?'' என்று கேட்டு நடந்த அவருடன் எதுவும் பேசாமல் நடையைத் தொடர்ந்தான்.




## அன்று

பாபா தன்தோளில் ருத்ரவீணையுடன் உற்சாகமாக நடந்தபடி இருந்தார்.

மாணிக்கவல்லியும் அபராஜித வைஜெயந்தியும் அவருடன் சேர்ந்து நடந்து கொண்டிருந்தனர்.

மழையில் நனைந்து முடிந்திருந்த தோடிபுரமே அவர்கள் மூன்று பேரையும் ஏதோ ஒரு அதிசயத்தைப் பார்க்கிற மாதிரிதான் பார்த்துக்கொண்டிருந்தது.

''யார் இந்த மனிதன்...? அவன் கைகளில் இருப்பது என்ன?''

''அதுதான் எனக்கும் தெரியவில்லை. அனேகமாக அது வீணையாக இருக்கலாம்.''

''இவன் எப்படி இந்தத் தாசியோடு வந்து சேர்ந்தான்?''

''என்ன கேள்வி இது. இவள் ஆட்டக்காரி, அவன் வீணை வித்வானாக இருக்க வேண்டும். இசையும் நடனமும் இணைந்து விட்டதோ என்னவோ?''

''எல்லாம் சரி... அந்தக் கிழவியைக் கவனித்தாயா...? அவள் குருடியாயிற்றே! இப்பொழுது எப்படித் தடுமாற்றமே இல்லாமல் பார்த்தபடி நடக்கிறாள்?''

''எல்லாமே புதிராக இருக்கிறதே...? ஒன்றுமே புரிய வில்லை.''

''வரவர இந்த தோடிபுரமே புதர்புரமாக மாறிக் கொண்டிருப்பது உனக்குத் தெரியவில்லையா. திடீர் என்று மழை வந்தது. அதுவும் இங்கே மட்டும்... யார் செய்த புண்ணியமோ என்று நினைத்தோம். இப்பொழுது அதுவும் நின்றுவிட்டது. வானத்தைப் பார்த்தாயா... சூரியமூர்த்தி என்னமாய் ஜொலிக் கிறார்?''

அவர்கள் நடந்துசெல்லும் வழியில் அவர்களைப் பார்ப்பவர்கள் இப்படித்தான் பேசிக்கொண்டார்கள். ஆலயத்தை சமீபித்துவிட்ட சமயம் எதிரே தோடிபுரத்தின் நிர்வாக அதிகாரி என்றும் ஊர்க்காவலர் என்றும் அழைக்கப்படும் தலையாரி நம்பையா ஒரு குதிரையை ஆரோகணித்தபடி வந்து கொண்டிருந்தார்.

அறுபது வயதுக்கு மேலாகிறது அவருக்கு. மாணிக்க வல்லியின் ஆட்டத்தில் அடிக்கடி சொக்கியவர். அவள் குருடாகி விட்டது தெரிந்து ஏதோ வாழ்க்கையே போய்விட்டது போல சிந்தித்தவர்.

அப்படிப்பட்டவர் கண்கள் பிரகாசத்துடன் விளங்கிய நிலையில் நடந்துவரும் மாணிக்கவல்லியைப் பார்த்து இன்ப அதிர்ச்சிக்கு உள்ளானார். அப்படியே பாபாவையும் அந்த வீணையையும் பார்த்துவிட்டு 'யார் இந்த பக்கிரி?' என்கிற வினாவையும் எழுப்பிக் கொள்ளத் தவறவில்லை.

''என்ன தலையாரி... என்னைத் தெரியவில்லையா? எனக்கு இப்பொழுது பார்வை வந்துவிட்டது'' என்றாள் மாணிக்கவல்லி.

''உண்மையாகவா... என்னால் நம்ப முடியவில்லையே...?''

''நம்பாவிட்டால் போங்கள். நான் பார்த்துக்கொண்டிருப்பது சத்தியம். எல்லாம் அந்த தோடீஸ்வரன் க்ருபை.''

''ஆமாம்... யார் இந்தப் புதிய மனிதர்? நமது தோடிபுரம் இல்லையே அவர்.''

''உண்மைதான். இவரைக் கேட்டால் தன்னை ஒரு நாடோடி என்று சொல்லிக் கொள்கிறார். ஆனால் இவர் சொல்வதெல்லாம் அப்படியே நடக்கிறது. இவருக்கும் நமது தோடீஸ்வரர் சன்னதியில் வீணை வாசிக்க வேண்டும் என்பது ஆசையாம்!''

''அப்படியா?'' கேள்வியும் பார்வையும் பாபாவை விழுங்கியது. பாபாவும் கனிவாகச் சிரித்தார்.

அந்தக் குறுந்தாடியும் உடை அமைப்பும் அவர் இஸ்லாமியர் என்று சொல்லாமல் சொல்லும்போது அந்தச் சந்தேகம் வராமல் போகுமா?

''தங்கள் பெயர்?''

''பாபா... நவாப்ஜான் பாபா!''

''ஓ... முகம்மதியரோ?''

''ஆமாம்...''

''நீங்கள் எங்கள் தோடீஸ்வரர் சன்னதியில் வீணை வாசிக்க விரும்புகிறீர்கள்?''

''ஆமாம்...''

''ஆச்சரியம்... மிகுந்த ஆச்சரியம்!''

''அதுமட்டுமல்ல... இந்த வீணையையும் நான் உங்கள் ஆலயத்துச்சொத்தாக வழங்கிவிட விரும்புகிறேன்.''

''ஓ... இது வீணையா?''

''ஆம்... ருத்ரவீணை.''

''இதுபோன்ற காணிக்கைகளை நாங்கள் ஏற்பதில்லையே?''

''இது ஒரு இசைக்கருவி. ஏற்பதில் என்ன தவறு?''

''தவறில்லை. பராமரித்தல் என்று ஒன்று உண்டல்லவா? சிவன் சொத்தானபின் இதைச் செம்மையாகப் பராமரிக்காவிட்டால் அந்தப் பாவம் எங்களைச் சும்மாவிடுமா?''

''உண்மைதான். அதிலும் இது அந்த ஈசனே செய்த வீணை என்று கேள்விப்பட்டேன்.''

அதைக் கேட்டவுடன் தலையாரிக்கும் சிரிப்பு வந்துவிட்டது.

''என்ன சிரிக்கிறீர்கள்?''

''சிரிக்காமல்...? எங்கள் தோடீஸ்வரர் எப்பொழுது வீணை செய்யும் இசைத்தச்சன் ஆனான் என்று நினைத்துப் பார்த்தேன். சிரிப்பு வந்துவிட்டது.''

''எதற்குச் சந்தேகம்...? அவரிடமே கேட்டுவிடுங்களேன்?''

''சரிதான்... நீங்கள் பக்கிரி என்றுதான் நினைத்தேன். பைத்தியம் என்பதும் இப்பொழுது தெரிந்துவிட்டது.''

தலையாரி தம்பையாவும் பாபாவும் இப்படி ஒரு சாலைமேல் ஒருவருக்கொருவர் செய்து கொண்ட கருத்துவிசாரம் அபராஜித வைஜெயந்திக்குச் சலனத்தை உண்டுபண்ணியது.

''தலையாரி... இப்பொழுது விவாதம் செய்ய நேரமில்லை. ஆலயத்து நடைக்கதவு தாழிடப்படும்முன் நான் என் பாட்டியுடன் சென்று தரிசனம் செய்ய விரும்புகிறேன்.'' என்று அவள் கத்திரித்தாள்.

''நல்லது... நான் ஒன்றும் உங்களை வழிமறித்து தடுத்து நிறுத்தவில்லை. ஆனால் இவர் எப்படி ஆலயத்துக்குள் செல்லலாம் என்பதுதான் விளங்கவில்லை.''

''ஐயா... நான் முகப்பு மண்டபத்தில் அமர்ந்து சில ராகங்களை மட்டும் இசைக்க விரும்புகிறேன். அதன்பிறகு இந்த வீணையை அந்த ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டால் என் கடமை முடிந்தது. அதன்பிறகு இந்த வீணையைப் பார்த்துக் கொள்ள ருத்ரர்கள் வந்துவிடுவார்கள்.''

''அது யார் ருத்ரர்கள்?''

''தெரியாது. நான் வாசித்த பிறகு அவர்கள் தானாக வந்து சேருவார்கள்.''

''எப்படி இப்படித் துளிகூடத் தயக்கமின்றி - தடுமாற்றமின்றி உளறிட உங்களால் முடிகிறது?''

''இது உளறல் இல்லை. பனிமலையில் நான் சந்தித்த சடையாண்டிச் சித்தர் ஒருவர் சொன்ன உண்மை.''

''பனிமலை... சடையாண்டிச் சித்தர்... ஓ! விட்டால் நீ எங்கெங்கோ செல்கிறாயே. ஒன்றைத் தெரிந்துகொள். எங்கள் ஆலயங்களுக்குள் இந்துக்கள் மட்டுமே பிரவேசிக்கலாம். இந்துக்களில் சேரிக்குடியர்கள் நுழையக்கூட அனுமதி கிடையாது.

தீட்டுப்பட்டுவிடக்கூடாது என்று நாங்கள் ஆலயங்களை சாஸ்த்ர ரீதியாக பாதுகாத்து வருகிறோம். ஆகையால் உனது ஆசை எந்த வகையிலும் ஈடேறாது. வேண்டுமானால் ஆலயத்தின் முன்னால் அமர்ந்து வாசித்துவிட்டுச் செல். அதேசமயம் இதை தானம் பெற விரும்புவதும் விரும்பாததும் கோயில் குருக்களின் விருப்பம். நான் தலையிட விரும்பவில்லை.

அவ்வளவுதான் சொல்வேன். வரட்டுமா?'' தலையாரி தம்பையா திரும்பவும் குதிரையுடன் தோடிபுரத்து வீதியில் நடக்கத் தொடங்கினார்.

பாபா முகத்தில் ஏனோ திரும்பத் திரும்ப அந்த மர்மச் சிரிப்பு தோன்றுவதும் மறைவதுமாக இருந்தது.

ஆலய வாசலில் அவர் நினைத்தபடிதான் நடந்தது.

உள்ளே நுழையப் போனவரைச் சிலர் வந்து தடுத்தனர்.

மாணிக்கவல்லியும் அபராஜிதவைஜெயந்தியும் அதைப் பார்த்து வருத்தப்படத்தான் முடிந்தது.

''பரவாயில்லை... நீங்கள் சென்று வழிபாடு செய்யுங்கள். நான் காத்திருக்கிறேன்.'' என்று ஒரு ஓரமாகப் போய் அமர்ந்தார்.

அப்பொழுது பார்த்து தோடிபுரத்திற்கு ஏதோ வர்த்தக காரணத்திற்காக வந்திருந்த ராவுத்தர் ஒருவர் பாபாவைப் பார்த்துவிட்டு நெருங்கினார்.

''சலாமலைக்கும்...''

''அஸ்ஸலாமலைக்கும்...''

''நினைத்தேன்... நீங்கள் நம்மவராகத்தான் இருக்க வேண்டும் என்று!''

பாபா அதைக் கேட்டுச் சிரித்தார்.

''உங்கள் சிரிப்பில் ஏதோ ஒரு இனம் புரியாத பொருள் இருப்ப்துபோல் தெரிகிறதே...?''

''பரவாயில்லையே... நம்மவர், அடுத்தவர் என்று பேசும் உங்களுக்கு என் புன்னகையில் ஒரு புரியாத பொருள் இருக்கிறது என்பதாவது புரிந்ததே.''

''ஹுசூர்... நான் தவறாக ஏதும் கூறிவிட்டேனா?''

''அப்படி எல்லாம் ஒன்றுமில்லை. இங்கே மனிதர்கள் எல்லோரும் எப்படி இருப்பார்களோ அப்படித்தானே அவர்கள் பேச்சும் இருக்க முடியும்.''

''புரியவில்லை... ஆமாம். நீங்கள் எப்படி இங்கே?''

''இப்பொழுதுதான் அவர்கள் கேட்டு முடித்தார்கள். இப்பொழுது நீங்கள்...''

''கொஞ்சம் புரியும்படி பேசுங்களேன். உங்களைப் பார்த்தால் மார்க்க சன்யாசி போல் தெரிவதால்தான் மதித்து பேசிக் கொண்டிருக்கேன்.''

''பாத்திரம் எதுவாக இருந்தால் என்ன... உள்ளிருக்கும் பண்டம் இங்கும் அங்கும் எங்கும் ஒன்றுதானே?''

''திரும்பவும் புரியாமலே பேசுகிறீர்கள்!''

''சரி... நான் ஏன் இங்கே இருக்கக்கூடாது என்கிறீர்கள்?''

''இது அவர்கள் ஆலயம்... நாமோ அந்த அல்லாவை அன்றி வேறு எவரையும் பெரிதாகக் கருதக்கூடாதவர்கள்.''

''இங்கே நான் அமர்ந்திருப்பதாலேயே அந்தக் கருத்தில் இருந்து நான் மாறிவிட்டேன் என்று உங்களுக்கு யார் சொன்னது?''

''அப்படியானால் இங்கே உங்களுக்கு என்ன வேலை?''

''அவசியம் கூறத்தான் வேண்டுமா?''

''நம்மவராக இருக்கிறீரே என்கிற ஒரு ஆதங்கத்தில் கேட்டேன்.''

''மன்னிக்கவும்... நான் ஒரு கடப்பாட்டில் இருக்கிறேன். அது முடியும்வரை என்னால் அதைப் பற்றி பேச இயலாது.''

''அது என்ன கடப்பாடு?''

''மன்னிக்கவும்... அதைப் பற்றியும் கூற என்னால் இயலாது.''

பாபா வெகுநிதானமாகச் சொன்னவிதம் அந்த ராவுத்தரைச் சோர்வுக்குள்ளாக்கியது. 'சரி. இனிமேல் இவரிடம் பேசுவதில் பலனில்லை' என்று நினைத்தாரோ என்னவோ ''நல்லது... உங்களை அந்த இறையருளாளன் ரட்சிக்கட்டும்'' என்றபடியே கிளம்பிச் சென்றார்.

**கா**விரி ஆறு!

வெள்ளிக்குழம்பை உருக்கி ஓடவிட்டது போல மினுமினு வென்று ஓடிக்கொண்டிருந்தது அந்தப் புனித நதி. அங்கும் இங்கும் கெண்டைகள் துள்ளிக்கொண்டிருந்தன. கரைப்புரத்தில் நீராடிக் கொண்டிருந்தார் சதாசிவ தீட்சிதர். இடுப்பளவு நீரில் நின்றபடி அவர் மேற்கில் சரியப் பார்க்கும் ஆதித்தனையும் நமஸ்சரித்து விட்டு கரையேறவும் காத்துக்கொண்டிருந்தது அவரை காவிரிக்கு அழைத்து வந்திருந்த சாரட்வண்டி! வண்டி முன்னால் சாரட்டை இயக்கும் சாரதியாக ஒரு சேரிக்காரன். முனியன்!

தீட்சிதர் வரவும் திரைச்சீலையை விலக்கி உள்ளே அவர் அமர அவன் வழிவகை செய்தான்.

''ஆமாம்... நீ நீராடவில்லையா முனியா?''

''இல்லீங்க...''

''போ... போய் நீராடிவிட்டுவா. இன்று பூஜையில் நீயும் என்னோடு சேர்த்து அமருகிறாய்.''

''சாமீ...''

''உம்... போ... அப்புறம் நெளியலாம்.''

''இந்தப் படித்துறைல நான் குளிச்சா மேல்சாதிக்காரங்க ஏதாச்சும் சொல்வாங்க. நீங்க போங்க... நான் அப்படியே ஒரு ஓரமாப்போய் குளிச்சுட்டு வந்துடறேன்.''

''அடேய்... நீயும் என்னைப்போல ஒரு முழுமனிதன். மிருகமில்லை. இந்த மனிதர்கள் பிடித்துத் தின்னும் மீன் இந்த தண்ணீர்லேயே கிடக்கலாம். மனிதன் நீ இங்கே குளிக்கக்கூடாதா?

யார் தடுக்கிறார்கள் என்று பார்க்கிறேன்
போ... போய் குளித்துவிட்டுவா!''

''சாமி ஈஈ...''

''போகிறாயா, இல்லையா?''

சதாசிவ தீட்சிதரின் அதட்டல் குரல் அவனையும் அங்கேயே அந்தப் படித்துறையில் முழுக்குப்போடவிட்டது. கரை வெளியில் அங்கும் இங்குமாக குளித்துக்கொண்டிருந்த சில மேல் தட்டினர் அவன் குளிப்பதைப் பார்த்து முகம் சுழித்தனர்.

ஒருவர் ''அடேய்ய்...'' என்று அலறிக்கொண்டு அவனை அடிப்பதற்கு வந்தார். வந்தவர் ''யாரது?'' என்கிற தீட்சிதரின் குரல் முன் மடங்கிப்போனார்.

அவனோ நடுங்கிவிட்டான்.

''முனியா... நீ நன்கு ஸ்நானம் செய். இவர்கள் மனித வடிவில் இருக்கும் குரூபிகள். மனதால் இருண்டவர்கள். உண்மையில் இவர்கள் குளிக்கும் இடத்தில்தான் ஒரு நல்ல மனிதன் குளிக்கக்கூடாது.'' என்று அவர்கள் காதுகளில் கேட்பதுபோல பலமாகப் பேசினார்.

அப்பொழுது ஒரு பிராம்மணர் அங்கு வந்தபடி இருந்தார். தீட்சிதரின் பேச்சையும் செயலையும் பார்த்தவர்,

''தீட்சிதர்வாள்... உமக்கே இது நன்னா இருக்கா? இது ஆசாரமாங்காணும்?'' என்று ஆரம்பித்தார்.

''அப்ப எது ஆசாரம்னு நீர்தான் சொல்லுமே?''

''இவாள்லாம் தீண்டத்தகாதவாள். நாம அப்படி இல்ல. இவா பொறந்தது நாம பொறந்தமாதிரி பிரம்மாவோட நாவுல இருந்து கிடையாது. உமக்கு எதுவும் தெரியாதாக்கும்?''

''அப்படின்னா... சிதம்பரத்துல இவாள்ல ஒருத்தனுக்காக நந்தியே விலகி வழிவிட்டுதே அது ஏன்?''

''அது... அது...''

''எது?''

''அது... கட்டுக்கதை. நந்தியாவது வழிவிடறதாவது?''

''அடப்பாவி பிராம்மணா... அது கட்டுக்கதைன்னா இதிகாசம், புராணம் எல்லாமே கட்டுக்கதைன்னு ஆயிடுமேடா...''

''உங்களாண்ட மனுஷா பேசமுடியாது... நீர் ஒரு அரை வேதாந்தி. எதையும் சொனஷ்டையாவே பேசறவர். ஊரைக் கூட்டி முதல்ல உங்களை ஒதுக்கிவெச்சாத்தான் சரிப்படும்.''

''தாராளமாச் செய்யுங்கோ. இந்தத் தோடிபுரத்துல முக்காலே மூணு வீசம் வயல்வெளி எனக்குச் சொந்தம். அதுல விளையறத நானும் அடுத்தவாளுக்கு கொடுத்துண்டு சந்தோஷமா இருப்பேன்.''

தீட்சிதர் பதிலுக்குப் பதில் என்று சொன்னதை நடுங்கியபடி ஈரம் சொட்டச்சொட்ட கேட்டுக்கொண்டிருந்தான் முனியன்.

''போடா... போய் முதல்ல தலையை துவட்டும், அப்பறமா சாரட்டுல ஏறலாம்.'' என்றார். அப்படியே செய்தான். பிறகுதான் சாரட்டும் புறப்பட்டது.

செல்லும் வழியில் தினமும் ஆலயம் செல்வது அவர் வழக்கம்.

அன்றும்...

ஆலய வாசலில் தேங்கி நின்ற சாரட்டில் இருந்து தீட்சிதர் இறங்கினார்.

வெளியே அமர்ந்திருந்த பாபாவும் அவரது ருத்ரவீணையும் தான் முதலில் கண்ணில் பட்டது!

## இன்று

**தோ**டீஸ்வரர் ஆலயம்!

சுமாரான கூட்டம்.

சற்று முன்புதான் சுதா ரகுநாதனும் அதற்கும் முன்பு வீணை காயத்ரியும் வந்து வழிபட்டுவிட்டு உருக்கமாக ஒரு பாட்டும் பாடிவிட்டுச் சென்றதாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பட்டருக்கு சரியாக இருந்தது. ஒழியவேயில்லை. அடிக்கடி அந்த நாளைய கீ கொடுக்கும் கெடிகாரத்தை எடுத்து ஒரு பார்வை பார்த்துக் கொண்டார்.

பார்வை வாசல் புறமும் சென்று மீண்டது.

அவரது உதவியாளன் கிருஷ்ணன் ''யாரை எதிர் பார்க்கிறேள்?'' என்றான்.

''கர்ணம் சந்திரமௌலி 'இன்னிக்கு கோயிலுக்கு வரேன், எங்கையும் போயிடதே'ன்னார். எனக்கோ பக்கத்துல உப்பிலிபுரம் வரை போற சோலியிருக்கு. அதான் பாக்கறேன்...''

அவர் சொல்லும்போதே கோவில் முகப்பில் ஒரு கார் வந்து தேங்கி நிற்க, அதில் இருந்து கர்ணமும் அவர் மனைவியும் இறங்க,

கூடவே அவர்களது த்விதிய குமாரன் கணேசனும் பட்டுவேட்டி சரசரக்க இறங்கினான்.

பட்டருக்கு அவர்களைப் பார்க்கவும் அப்பாடா என்றிருந்தது.

சற்றுத்தள்ளி பட்டரின் இரண்டாவது மகள் காயத்ரி பூ கட்டிக்கொண்டிருந்தாள். கல்லூரியில் இறுதியாண்டு படிப்பவள். லீவு நாட்களில் கோவிலுக்கு வந்து பட்டருக்கு ஒத்தாசையாக இருப்பதுண்டு.

கர்ணமும் அவர் குடும்பமும் வருவதை அவளும் ஒரு பார்வை ப்ார்த்தாள்.

அவள் பார்க்கும் சமயம் உபாசகரும் உள்ளே நுழைந்து கொண்டிருந்தார்.

பட்டருக்கு உபாசகரைப் பார்க்கவும் உற்சாகமாகிப்போனது. கர்ணத்தோடு சேர்ந்து அவரையும் வரவேற்றார்.

''வரணும்... பெரியவா அவ்வளவு பேரும் வரணும்''

''வந்துண்டேன்னா இருக்கோம்... அப்புறம் வைத்தி... எப்படி இருக்கு உன்னோட த்ருஷ்டாந்தமெல்லாம்?''

கர்ணம் சாங்கோ பாங்கமாய் கேட்க

''அமோகமா இருக்கு சந்திரமௌலி...'' என்றவர் உபாசகரை அவருக்கு அறிமுகம் செய்வித்தார்.

''சந்திரமௌலி... இவர் ஒரு அம்பாள் உபாசகர். நம்ம ஊருக்கு வீணை வாசிக்க வந்திருக்கார். தப்புதப்பு... நம்ம கோவில்ல ஒரு மண்டலம் வீணை வாசிக்கறதா பிரார்த்தனை யாம்... அதுக்கு வந்திருக்கார்.'' என்றார்.

உபாசகரும் கைகூப்பினார்.

''பெரியவாளைச் சந்திச்சதுல ரொம்ப சந்தோஷம்.''

''ஸ்வாமி... இவர்தான் இந்த ஊர் கர்ணம். ஊர்ல பாதி நிலம் இவாளதுதான். பெரிய தீட்சிதர் பரம்பரை'' என்று அவரைப் பற்றியும் சொல்லிவிட்டு சன்னதிநோக்கி நடந்தார். அவரை எல்லோரும் பின்தொடர்ந்தாலும் கர்ணம் மகன் கணேசன் மட்டும் சற்றுத் தேங்கி நின்றுவிட்டு ஒரு ஓரத்தில் பூ கட்டியபடி இருக்கும் காயத்ரியை நெருங்கிக் கனைத்தான்.

அவளும் நிமிராமலே ''எல்லாம் தெரியும். ஐயாவுக்கு இன்னிக்கு பர்த்டேங்கறதும் தெரியும். இப்படிக் கோவிலுக்கு.

வரப்போறதும் தெரியும். தெரிஞ்சுதான் ஆத்துல பூ கட்டாம இங்க வந்து பூ கட்டிண்டிருக்கேன்...'' என்றாள்.

''இங்க வந்து பூ கட்றதா எனக்கு முக்கியம்? ஆத்தங்கரை பக்கமா வந்து என்னைக் கட்டிக்கறதுதானே எனக்கு முக்கியம்.''

அவன் ஸ்லேடையாகப் பதில் சொன்னதில் அவள் முகத்தில் வெட்கம் பரவியது.

காயத்ரி நல்ல அழகி.

காஷ்மீர் ஆப்பிளை அறுத்தெடுத்துச் செய்த மாதிரி கன்னங்கள். ஏழை பட்டர் மகளாக இருந்தாலும் கருமுத்துக் கண்கள். வெண்முத்துப் பற்கள், வலம்புரிச் சங்கு கழுத்து, தந்தக்கடைசலாய் கைகள், தங்கம் உருண்டு பழுத்தமாதிரி செழித்த மார்பு, வைத்தால் பார்வையை மீட்க முடியாதபடி அசைபோடும் துடுப்பு இடுப்பு... கொடுத்துவைத்த கொலுசுக் கால்கள். அதில் நகங்கள் எல்லாம் மருதாணியால் சிவந்த செம்பவழங்கள்!

கணேசன் அவளை அமேஸான் காட்டுத்தவளைப் பூச்சியை தன் நீண்ட நாவினால் இழுத்துப்போட்டு விழுங்குகிற மாதிரி விழுங்கிக்கொண்டிருந்தான். இடையிட்டது ''கணேசா... கணேசா...!'' என்கிற கர்ணம் சந்திரமௌலியின் குரல்.

''போங்கோ... அப்றமா ஜொள்ளுவிடலாம். அப்பா கூப்பிடறார் பாருங்கோ...'' என்றாள் காயத்ரியும்.

''இப்ப போறேன். சாயந்தரமா வாய்க்கா பாலத்துக்கிட்ட வழக்கம்போல வந்துடு'' என்றபடியே ஓடினான்.

இதை யார் பார்த்தார்களோ இல்லையோ உபாசகர் பார்த்துக்கொண்டிருந்தார்.

சன்னதியில் கற்பூர ஆரத்தி காட்டி முடித்து ஒத்திக்கொண்டு திரும்புபோது ''தினசரி காயத்ரி ஜெபம் பண்ணு. அம்பாள் அனுக்ரகம் திவ்யமா கிடைக்கும்'' என்று இரு பொருள்படச் சொன்னார். அப்பொழுதுதான் பட்டருக்கும் கர்ணம் வீட்டிலும் ஒரு வீணை இருக்கிற ஞாபகம் வந்தது.

''சந்திரமௌலி... உங்காத்துல ஒரு வீணை இருக்கோல்லியோ?'' கேட்டார்.

''ஆமாம்... எதுக்குக் கேக்கறே?''

''இந்த உபாசகர் ஸ்வாமி ஒரு நல்ல வீணைக்காகத்தான் அலைஞ்சிண்டிருக்கார்.''

''அப்படியா... ஆத்துல அதுவும் சும்மாதான் இருக்கு. இவருக்குப் பயன்பட்டா சந்தோஷம்தான். ஸ்வாமிகள் எப்ப வேணா வந்து பார்க்கலாம்.''

''இப்ப உங்க கூடவே வரலாமா?''

''தாராளமா... நாங்க பாக்யம்ல பண்ணியிருக்கணும்''

கர்ணம் உபசாரமாய் அழைக்க, உபாசகரும் பட்டரை ஒரு கனிந்த பார்வை பார்த்தபடி அவர்களுடன் கிளம்பினார்.

நல்ல பெரிய வீடுதான்.

ஒரு கிராமத்தில் இந்த மாதிரி வீடுகள் இருப்பது இன்று அபூர்வம்!

கருங்கல் அஸ்திவாரமே இடுப்பு உயரம், அதற்குமேல் அந்த நாளைய சுட்ட செங்கல் சுவர் - அதை சுண்ணாம்புக்காரையால் பூசி பின் விளாம்பழம் கடுக்காய்ச்சாறு கொண்டு ஆற்றி வழவழப் பாக்கியிருந்தார்கள்.

வீட்டுக்குள் நுழைந்த உபாசகருக்கே சற்று பிரமிப்பாகத்தான் இருந்தது.

''அந்த நாள் வீடுபோல இருக்கு...'' என்றுதான் பேச்சை ஆரம்பித்தார்.

''ஆமாம் ஸ்வாமி... முந்நூறு வருஷத்துவீடு. மதுரைல நாயக்கர்மகாலைக் கட்டின கொத்தனார் மேஸ்திரியை இங்க வரவழைச்சு என் பாட்டனார்கள்ல ஒருத்தரான சதாசிவ தீட்சதர்ங்கறவர் கட்டினதா சொல்வா...''

கர்ணம் பதிலோடு ஊஞ்சல் இருக்கையைக் காட்டினார். நல்ல கரும்பலகை கிண்ணென்று இருந்தது. உபாசகர் அமரவும் லேசாக ஆடியது. எதிரில் சுவரில் சதாசிவ தீட்சதரின் உருவம்.

அதைப் பார்த்த நொடி உபாசகர் முகத்தில் கொஞ்சம் போல அதிர்வு. அதைக் கவனித்த கர்ணமும் ''இவர்தான் என் பாட்டனார்கள்ல ஒருத்தர். சதாசிவதீட்சிதர்னு சொன்னேனே...''

''ஓ!''

''பெரியவர் பாக்கறது பார்த்தா இதுக்கு முந்தி எங்கேயோ இந்தப் படத்தை பாத்திருக்கேளோ?''

''ஆமாம்...''

''எங்க?''

''சரியா ஞாபகத்துல இல்லை. ஆனா பாத்திருக்கேன்.''

''பெரிய ஞானி. அந்தக் காலத்துலையே சமத்துவம் பேசி வாழ்ந்தும் காட்டியவர்.''

உபாசகர் பார்வை அப்படியே அந்த வீட்டின் மற்ற பாகங்கள் பக்கமும் திரும்பியது. கர்ணம் மனைவி காபிபோட அடுக் களைக்குள் சென்றுவிட கணேசனும் நைஸாக நழுவி வெளியேறி விட்டான்.

உபாசகரின் பார்வையில் பாபா படமும் பட்டதுதான் ஆச்சரியம்.

உபாசகர் நெற்றியில் அதனால் ஒரு வளைசலே விழுந்தது.

''இவரைத் தெரியுமோல்லியோ...? இவர்தான் பாபா! நவாப்ஜான் பாபான்னு சொல்வா. இந்த ஊருக்கே இவர் தெய்வம் மாதிரி...''

''கேள்விப்பட்டிருக்கேன்... ஒரு முஸ்லீம் எப்படி இப்படிங்கறதுதான் ஆச்சரியம்.''

''மகான்களை மதங்களால என்ன பண்ணமுடியும்! அவா சர்வ வியாபி. இந்த உலகத்துல உள்ள எல்லா உயிர்களுக்கும் அவா பொதுவானவான்னா.''

கர்ணம் சந்திரமௌலி அழகாகத்தான் விளக்கம் தந்தார். அப்படியே ''ஒரு நிமிஷம்... இதோ வந்துடறேன்'' என்று அங்கிருந்து விலகினார்.

தனிமை...

உபாசகர் மட்டுமே அமர்ந்திருக்கும் தனிமை.

நிசப்தமாகவும் இருந்தது.

அந்த வீட்டுச்சுவர் பல்லி ஒன்றும் ஆச்சரியமாக உபாசகரை பார்த்துக்கொண்டிருக்க மெல்லிசாய் எங்கோ யாரோ வீணை வாசிப்பது போலவும் தோன்றியது.

அருமையான காம்போதி ராகம்

அலை அலையாக தவழ்ந்துவந்து உபாசகர் காதில் விழ உபாசகரும் தன்னை மறந்து தலையாட்டத் தொடங்கினார்.

கையில் காபியுடன் கர்ணத்தின் மனைவி அன்னபூர்ணி வந்து நின்றதுகூடத் தெரியவில்லை.

''ஸ்வாமி...'' அவள் மெல்லிய குரலில் அழைத்தாள். அப்பொழுதும் அவர் கவனம் திரும்பவில்லை. அதற்குள் கர்ணமே வந்துவிட்டார்.

உபாசகர் தன்னை மறந்து ரசித்துக்கொண்டிருப்பதைப் பார்த்து ''அவரைத் தொந்தரவு பண்ணாதே அன்னம். பாபா வாசிக்கறதை இப்பதான் கேக்கறார் போலிருக்கு...'' என்றதுதான் தாமதம் விருட்டென்று திரும்பியது உபாசகர் முகம்.

''என்ன சொன்னேள்...? என்ன சொன்னேள்?''

''ஓ... நான் பேசினது காதுல விழுந்துடுத்தா?''

''ஆமாம் ஸ்வாமி... உங்களுக்குத் தெரியாது. இப்ப நீங்க கேக்கற இந்த வீணாராகத்தை இந்த தோடிபுரத்துல நீங்க எங்க போனாலும் கேட்கலாம். நன்னா காதுல விழும். ஆத்தங்கரை வரை கேட்கும்னா பாத்துக்குங்களேன்.''

''பஞ்சாயத்து போர்டு பார்க்ல கொழாகட்டி ஒலி பரப்பறாளோ...?''

''சேச்சே... அப்படி எல்லாம் கிடையாது. இது பாபாவே வாசிக்கற ராகம்!''

''பாபா...?''

''ஆமாம்... இதோ படத்துல நீங்க பாக்கறேளே, இவர்தான்.''

''இவர்... இவர்... இன்னுமா உயிரோட இருக்கார்?''

''இவர் மகா சமாதி ஆகி 300 வருஷம் ஆறது. ஆனாலும் இவர் ஆத்ம சொரூபம் இப்படி வீணை வாசிக்கறதா சொல்வா...''

''ரொம்ப ஆச்சரியமா இருக்கே... ஆத்மாவுக்கு ஏது திட சொரூபம்? அது எப்படி வீணையை வாசிக்க முடியும்?''

''இப்படிக் கேட்டா எப்படி... வாசிக்கறார். காதுலயும் விழறது.''

''நம்ப முடியல...''

''நம்ப முடியாதுதான். இந்த மாதிரி நம்பமுடியாத விஷயங்கள் இந்த ஊர்ல எவ்வளவோ இருக்கு.''

''அப்படியா...?'

''ஆமாம்... காபி ஆர்றது பாருங்கோ. முதல்ல அதை எடுத்துண்டுடுங்கோ.''

''ஆகட்டும்...'' என்றபடி காபியை ஒரே விழுங்கு. அதுவே அவருக்கு 'காபி பெரிதில்லை. கர்ணம் சொல்லப் போவதுதான் பெரியது' என்று கர்ணாத்திற்கு உணர்த்தியது.

''ரொம்ப இண்ட்ரஸ்ட்டாயிட்டேள் போல இருக்கு!''

''ஆமாம். முதல்ல அந்த வீணையை பார்த்துடுவோமா?''

உபாசகர் அந்த நிலையிலும் தன் தேடலே குறி என்பதுபோல கேட்க, கர்ணமும் தாமதிக்காமல் அந்த ஹாலில் ஒரு மூலையில் ஒரு வெள்ளைத்துணியால் மூடிய நிலையில் கிடத்தப்பட்டிருந்த வீணையைச் சுட்டிக்காட்டியபடியே பேசினார்.

''அன்னம் எப்பவாவது இதுல சில கீர்த்தனைகளை வாசிப்பா.''

''அப்படியா...?'' என்றபடியே வேகமாய் வீணையை நெருங்கினார்.

துணியை விலக்கிப் பார்த்துவிட்டு ஏமாற்றத்தை முகத்தில் காண்பித்தார்.

''என்ன ஸ்வாமி...''

''இது இல்ல...''

''இது இல்லன்னா...?''

''இல்ல... இந்த வீணை இல்ல நான் தேடிண்டு இருக்கறது.''

''இதுலையும் நன்னா வாசிக்கலாமே...''

''பரவால்ல... விட்றுங்கோ. நான் வேற வீணை பாத்துக்கறேன்.''

உபாசகர் சொல்ல, அதுவரை காதில் விழுந்தபடி இருந்த காம்போதி ராகமும் சட்டென்று நின்றுவிட,

''அந்த வீணை ராகம் நின்னுடுத்தே...?''

''ஆமாம். அப்பப்ப கேட்கும். திரும்ப கேட்கும் பாருங்கோ. இந்த ஊர்லதானே இருக்கப்போறேள்?''

''அதுசரி... நிறைய நம்பமுடியாத விஷயங்கள்னு சொன்னேளே. அது என்னன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

''எங்க ஆத்துலையே ஒரு விஷயம் இருக்கு. வாங்கோ காட்றேன்.''

- உபாசகரை அழைத்துக்கொண்டு கர்ணம் அந்த வீட்டு பூஜை அறை முன்னால் சென்று நின்றார்.

நல்ல அழகான பூஜை அறை!

பஞ்ச தீபம் எரிந்து கொண்டிருந்தது.

சாம்பிராணி புகை துப்பிக் கொண்டிருந்தது. தசாங்கமும் இணை சேர்ந்திருந்தது. எல்லா ஸ்வாமி படங்களும் மலர் மாலைகளுடன் திவ்யமாக சேவை சாதித்தன.

உபாசகர் கைகள் அவரையுமறியாமல் அங்குள்ள ராஜராஜேஸ்வரி படத்தைப் பார்த்து ''ஜெகன்மாதா'' என்று கன்னத்தில் போட்டுக்கொண்டது.

அந்தப் படத்திற்கு முன்னாலே ஒரு பச்சைத்துணியாலான கட்டு புத்தகம் ஒன்றை பச்சைத் துணியால் பார்சல் செய்ததுபோல் இருந்தது.

உபாசகர் பார்வையும் கூர்மையாயிற்று.

''அது என்ன... ஏதோ புஸ்தகம் மாதிரி...?''

''அதுவா... அது முந்நூறு வருஷமா எங்காத்துல இருக்கு. அந்த பாபா எங்க பாட்டனார் சதாசிவ தீட்சிதர்க்குக் கொடுத்ததுன்னு சொல்வா!''

''பாபா கொடுத்த புத்தகமா... அதுல என்ன இருக்கு?''

''தெரியாது. ஆனா ஏதோ ஒரு முக்கியமான விஷயம் அதுல இருக்குன்னு மட்டும் தெரியும். அதை வெச்சு பாதுகாப்பா பூஜிக்கறதுதான் எங்களோட வேலை. மத்தபடி அதைத் திறந்தெல்லாம் பாக்கக்கூடாதுன்னு சொல்வா...''

''என்ன சந்திரமௌலி... நீங்களே இப்படிச் சொன்னா எப்படி? புத்தகம்னா படிச்சு எல்லாரும் தெரிஞ்சுக்கதானே?''

''இருக்கலாம். ஆனா எங்க பெரியவா அப்படி எங்களுக்குச் சொல்லலியே?''

''எல்லாமே புதிரான்னா இருக்கு...?'' பேச்சோடு அந்த புத்தகத்தைச் சமீபித்து அதை எடுத்துப் பார்க்க கைகளையும் நீட்டிவிட்டார்.

நீட்டிய மறுநொடி அவரது விரல்கள் அந்தப் புத்தகத்தைத் தீண்டும் முன் அவரது கரத்தின்மேல் பொத்தென்று நல்ல பாம்பு ஒன்று விழுந்து பயங்கரச் சீறலுடன் படம் விரிக்க ஆரம்பித்தது. தன் உடலால் அவரது கைகளையும் வளைத்துக்கொண்டது.

கர்ணமும் அன்னபூரணியும்கூட ஆடிப்போய்விட்டனர்.

கர்ணம் படபடவென்று கன்னத்தில் போட்டுக்கொண்டு ''நாகராஜா, அவரை விட்ரு. அவருக்கு விஷயம் தெரியாது. விட்ரு அவரை... என்று மன்றாடிய பிறகுதான் அது அவரைவிட்டு விலகியது.

அப்படியே அந்தப் புத்தகத்தைத் தன் உடலால் சுற்றிக்கொண்டு நிமிர்ந்து எழும்பி உபாசகரையும் ஒரு பார்வை பார்த்தது.

இரட்டை நாக்கால் 'ஸ்ருட் ஸ்ருட்' என்று அது சீறி நீட்டிய விதம் உடம்பையே ஒரு உலுக்கு உலுக்கி ரத்தப்போக்கையே அங்கங்கே தேக்கி நிறுத்தியது.

உபாசகர் தெப்பமாய் நனைந்துவிட்டிருந்தார்.

''என்ன ஸ்வாமி... பேசிண்டுருக்கும்போதே அதை எடுக்கப்போய்ட்டேளே. அதை இந்தப் பாம்பு ரொம்ப வருஷமாக காவல் காத்துண்டு இருக்கறத நான் சொல்றதுக்குள்ள நீங்க அவசரப்பட்டுட்டேளே.''

''என்ன... இந்தப் பாம்பு காவல் காக்கறதா?''

''ஆமாம்... இது இந்த வீட்டு மனைப்பாம்பு. கூரைலயே சுத்திண்டு இருக்கும். ஆனா இதுவரை யாரையும் கடிச்சதில்லை.''

''மனைப்பாம்பா...?''

''ஆமாம்...''

''அது இந்தப் புத்தகத்துக்கு காவல்னா நிச்சயம் இதுல ஏதோ விஷயம் இருக்கணும்.''

''ஒரு விஷயம் தெரியும்.''

''என்ன?''

''இதுல சில ராகக் குறிப்புகள் இருக்கு. அதுல ஒண்ணைக் கொண்டு பாபா வீணை வாசிச்சப்போ தங்கமழை பொழிஞ்சதா சொல்வா.''

''என்ன சொன்னேள்...? என்ன சொன்னேள்...?''

''நம்ப முடியலல்ல... ஆனா நான் சொல்றது நிஜம். தங்கமழை ஸ்வாமி. தங்கமழை...''

''இல்ல. நான் நம்பறேன்... நான் நம்பறேன்...'' - உபாசகர் படுவேகமாக ஆமோதித்துவிட்டு ''ஆமாம். இதுதான் உங்காத்து நம்ப முடியாத விஷயமா?''

''ஆமாம்...''

''இவ்வளவுதானா? இன்னும் இருக்கா?''

''நிறைய... எங்க ஊரோட ராசிக்கிணறு அடுத்த அதிசயம். எல்லாத்தைவிட பெரிய அதிசயம் தாசி சுந்தராம்பாளும் அவளோட தாசிபங்களாவும்.''

''தாசி சுந்தராம்பாளா...?''

''ஆமாம்... இந்த ஊரோட காவல் தெய்வம்னா அவ!''

''காவல்தெய்வமா... ஒரு தாசியா?''

''தாசி அவளோட குலம். ஆனா அவளோ அந்தத் தொழில்லாம் பண்றதில்லை. அவ பொண்ணுதான் இந்த ஊரோட லேடி டாக்டர். பேர் பானு!''

''சரி... தாசிபங்களான்னு ஏதோ சொன்னேளே...''

''ஆமாம். ஊருக்கு வெளிய சுடுகாடு தாண்டி காவிரிக்கரை ஓரமா இருக்கு அது. தினமும் தாசியும் அவ வேலைக்காரி திலகமும் மட்டும் அந்த பங்களாவுக்குப் போய்ட்டு வருவா. வேற யாரும் போகக்கூடாது. போறதும் நல்லதில்ல...''

''இது என்ன கூத்து... ஏன்... அங்க அப்படி என்ன இருக்கு?''

''பாபாவோட சமாதி அங்க இருக்கு. பாபா அங்கதான் சமாதி ஆனார். அவர் சமாதி ஆனதுக்குப் பிறகு யாருமே அங்க போறதில்ல. அவரோட ஆத்மா அங்க சுத்தி வர்றதாலயும் அதுக்குப் பங்கம் விளைவிக்கக்கூடாதுங்கறதாலயும் அங்க போகக்கூடாதும்பா...'' உபாசகர் கர்ணம் சொன்னதை எல்லாம் கேட்டு ஸ்தம்பிக்காத குறை.

''உங்க ஊருக்குத் தோடிபுரம்கறதுக்குப் பதிலா புதிர் புரம்னோ இல்ல அதிர்ச்சிபுரம்னோ பேர் வைக்கலாம் நீங்க... சொல்ற ஒவ்வொண்ணுமே ஆச்சரியமான்னா இருக்கு.''

''முதல் முதலா கேட்கும்போது உங்களுக்கு அப்படித் தெரியலாம். ஆனா எங்களுக்குப் பழகிப் போயிடுத்து...''

''ஆமா... இப்ப அந்த தாசி எங்க இருப்பா?''

''அனேகமா இத்தனை நாழி சுந்தராம்பா கோவில்ல இருப்பா. இன்னிக்குக் குறைசொல்ற நாள். எல்லாரும் அவளண்ட குறை சொல்லிண்டு இருப்பா...!

''யாரோட குறையை...?''

''அவா அவா குறைகளைத்தான். நீங்ககூட உங்களுக்கு நீங்க தேடிண்டுருக்கற வீணை கிடைக்கணும்னு அவகிட்ட சொல்லி விண்ணப்பிச்சுண்டா உங்க வீணை கிடைச்சிடும்.''

''குறைகளைத் தீர்த்துவைக்கற அளவு அவ்வளவு சக்தியா அவளுக்கு...?''

''போய்ப் பாருங்கோ தெரியும்...!''

உபாசகரும் கிளம்பத் தயாரானார். மீண்டும் பார்வை பூஜை அறை புத்தகக்கட்டுமேல் சென்றது. அவர் பார்க்கவும் அதுவரை தழைத்துப் படுத்திருந்த அந்தச் சர்ப்பம் 'ஸ்ஸ்' என்றபடி நிமிர்ந்தது.

அடேயப்பா... என்ன ஒரு கூர்மை.

உபாசகர் மிரண்ட விழிகளுடன்தான் கிளம்பினார்!



## அன்று

**தோ**டீஸ்வரர் ஆலயம்!

சதாசிவ தீட்சிதரின் பார்வையும் பாபாவின் பார்வையும் ஒன்றோடொன்று சந்தித்துக்கொண்டன.

இருவருக்குமே ஏதோ ஒரு தெய்வீக ஒளிப்பிழம்பைச் சந்தித்துக்கொண்டது போல ஒரு உள்ளுணர்வு. இருந்தும் தீட்சிதர் பாபாவை 'யாரோ ஒரு தேசாந்திரி' என்பதுபோல நினைத்துக் கொண்டு ஆலயத்துக்குள் நுழைந்தார்.

ஆலயத்துக்குள் சுமாரான கூட்டம்.

வெளியூரிலிருந்தெல்லாம் வந்திருந்தார்கள்.

ஒருவர் மனமுருகப் பாடிக்கொண்டிருந்தார்.

'வஜ்ரகாந்தி' ராகம்.

கேட்பவர்களின் உடம்பில் ஒருவிதக் கிளர்ச்சியை ஏற்படுத்தும் ராகம் அது. சரசமாடும் சமயங்களில் தாசிகள் அந்த ராகத்தில் சில சமயம் பாடுவதுண்டு. சல்லாபிக்க வந்தவனும் அந்த ராகத்தில் மயங்கிக் கிறங்கிப் போவான். அதே சமயம் உடம்பெல்லாம் நரம்பு முறுக்கேற அந்தப் பெண்ணின்பத்தில் ஒரு உச்சத்திற்குச் செல்லவும் முனைவான். அப்படி ஒரு ராகத்தை கோவிலில் அந்தப் பெரியவர் பாடியபடி இருக்க அதன் விளைவாக கோவிலுக்கு வந்திருந்த இளம் ஜோடிகள் சிலர் ஒருவரை ஒருவர் குடைவது போல பார்த்துக்கொண்டிருந்தனர்.

ஒரு இளைஞன் கல்தூண் ஒன்றில் தெரிந்த ஒரு நாட்டியப் பெண்ணின் சிற்பத்துக்கு முத்தமிடவே செய்துவிட்டான். அதை யாரும் கவனித்த மாதிரி தெரியவில்லை. ஆனால் சதாசிவ தீட்சிதர் பார்த்துவிட்டு அடுத்த நொடி முகம் சிவந்துபோனார்.

அவரோடு சாரட்டை ஓட்டிக்கொண்டு வந்த முனியன் மட்டும் வாசலிலேயே தங்கிவிட்டான். அவனெல்லாம் உள்ளே

செல்லக்கூடாது. தீட்சிதராலேயே அவனை உள்ளே தரிசனத்துக்கு அழைத்துச் செல்லமுடியவில்லை. அவனெல்லாம் ஸ்வாமியைத் தரிசிக்க வேண்டுமென்றால் ஸ்வாமி வருஷத்திற்கு ஒரு நாள் தேர் ஏறி தெருவில் வலம்வரும்போது பார்த்துக்கொள்ள வேண்டியதுதான்.

இருந்தும் முனியன் மனசுக்குள் தோடீஸ்வரரை நினைத்துக் கொண்டே மெல்ல நடந்துசென்று பாபா அருகில் அமர்ந்தான். அதே சமயம் உள்ளே சதாசிவ தீட்சிதருக்கும் அந்தப் பாடகருக்கும் ஒரு பெரிய வாக்குவாதமே அரங்கேறிக்கொண்டிருந்தது.

''ஓய்... என்னங்காணும் நீர்? கோவில்ல பாடுற ராகமாங்கா ணும் இது?''

''ஏன் ஸ்வாமி... எந்த ராகத்துல பாடினா என்ன... எல்லா ராகத்துக்கும் மயங்கத்தெரிஞ்சவன் ஸ்வாமி இந்த தோடீஸ்வரன்.''

''அவன் மட்டும் மயங்கினா சரி... ஆனா இங்க இளவட்டமெல்லாம் சுவாமி தரிசனத்தை விட்டுட்டு ஒண்ணை ஒண்ணுன்னா பார்த்துண்டு வழியறதுகள்.''

''அது... அது...''

''கோவிலுங்காணும் இது. அதுலையும் இது என்ன சாதாரண கோவிலா? அந்தப் பிரம்மாவோட பசங்கன்னு சொல்லப்பட்ட ஸனகன், ஸனந்தனன், ஸனாதனன், ஸனத்குமாரன்னு நாலுபேரும் நாரதரோட சேர்ந்து மயனோட உதவியோட கட்டின கோவிலுங் காணும் இது. இது வேற அந்த கைலாசம் வேற கிடையாது.''

சதாசிவ தீட்சிதர் அடித்தொண்டை வரளபோட்ட சப்தம், ஆலயத்துக்குத் தரிசிக்கவந்தவர்களையெல்லாம் ஒரு உலுக்கு உலுக்கி எடுத்தது. எல்லோரும் கூடி நின்று வேடிக்கை பார்க்கத் தொடங்கினார்.

'வஜ்ரகாந்தி' ராகத்தால் பாடல்பாடி எல்லோரையும் வசியப்படுத்த நினைத்த அந்தப் பாடகருக்கோ மிக அவமானமாகி விட்டது.

''போறும் ஸ்வாமி... பெரிய இசைமேதைன்னு உங்களுக்கு நினைப்போ?'' அவரும் பதில் கேள்வி கேட்க ஆரம்பித்தார்.

''அடப்பாவி மனுஷா... நான் ஒண்ணு சொன்னா நீ ஒண்ணு கேக்கிறியே...'

''பின்ன... நீர் என்னவோ சங்கீதத்துக்கே அதிபதி மாதிரியும் நான் என்னமோ ஒண்ணும் தெரியாத பக்கிரி மாதிரியும்

நினைச்சண்டு பேசறேளே. இவ்வளவு பேர் இருக்கா... இவாளுக்குத் தெரியாதது உங்களுக்குத் தெரிஞ்சிடுத்தாக்கும்?''

''நிச்சயமா... அதுல என்ன சந்தேகம்? நீர் பாடினது வஜ்ரகாந்தி ராகம். அதோட பலாபலன்கள் உடம்புல கிளர்ச்சியை மூட்டக்கூடியது. கோவில்ல பாடற ராகம் இல்ல இது. ஆபோகி ராகம் பாடுங்கோ... பூர்வ கல்யாணி ராகம் பாடுங்கோ... சித்த ரஞ்சனி பாடுங்கோ, அவ்வளவு ஏன்... ஸ்வப்ரகாசினி பாடினா அந்த தோடீஸ்வரன் நேர்லையே வந்துடுவானே...''

சதாசிவ தீட்சிதர் தனக்குள்ள இசைஞானத்தை வரிசையாகக் கோடிட்டுக்காட்ட அந்த நபர் அப்படியே திருதிருவென்று விழிக்கத் தொடங்கினார். இதுவரை பொறுமையாக இருந்த பட்டர் மெல்ல நடுவில் மூக்கை நுழைத்தார்.

''சதாசிவண்ணா... உட்றுங்கோ. இவர் ஊருக்குப் புதுசு. உங்களப் பத்தி சரியா தெரியலை.''

சதாசிவ தீட்சிதரும் அதற்குமேல் அவரிடம் வாதாட விரும்பவில்லை. நேராக சன்னதிக்குச் சென்றார். தோடீஸ்வரர் லிங்கஸ்வரூபத்தில் நெய்விளக்குகளின் ஒளியில் பளிச்சென்று தெரிந்தபடி இருந்தார்.

தீட்சிதர் தன்னை மறந்து கைகூப்பினார்.

அப்படியே 'ஸ்வப்ரகாசினி'யில் ஒரு பாடல்! அது சுற்றி இருப்பவர்களை எல்லாம் மெய்மறக்க வைத்தது.

வெளியே அமர்ந்திருந்த பாபா காதுகளிலும் வந்து விழுந்தது. அந்த ராகத்தைக் கேட்ட நொடி பாபாவின் முகத்திலும் ஒரு பிரகாசம். ஒரு கட்டத்திற்கு மேல் பாபாவால் அதைக் காதால் கேட்டபடி மட்டும் இருக்கமுடியவில்லை. தன்வசம் உள்ள ருத்ரவீணையை எடுத்து மடிமேல் வைத்துக்கொண்டவர் உள்ளே தீட்சிதர் வாசித்த ராகத்திற்கு ஏற்ப வாசிக்கத் தொடங்கினார்.

பதிலுக்கு பாபா வாசிக்கும் வீணா நாதமும் கோவிலின் உள்வரை பரவி தீட்சிதர் காதுகளைத் தீண்டியது. ஒருவருக்கு ஒருவர் தெய்வீகமான ஸ்வரப்ரகாசினியில் போட்டி போடத் தொடங்க, ஆலயத்துக்கு வந்தவர்கள் எல்லாம்கூட மெய்மறந்து நின்றனர். யார் வாசிக்கிறார்கள்... யார் பாடுகிறார்கள் என்றே தெரியவில்லை.

இரு ராகமும் பிரவாகமாய் வழியும் அந்த வேளையில் அபராஜித வைஜெயந்தியும் மாணிக்கவல்லியும் ஆலயத்தின் பின்புறமுள்ள பாம்புப்புற்று அருகே இருந்தனர்.

மாணிக்கவல்லி தனக்கு நன்கு பார்வை தெரிந்த நாளில் கோவிலுக்கு வரும்போதெல்லாம் அந்தப் புற்றையும் சுற்றி வந்து தரிசிப்பாள். அதற்காகவென்று கோவிலுக்குத் தரிசிக்க வந்த இடத்தில் மீண்டும் அந்தப் புற்றை நோக்கிச் சென்றிருந்தவர்கள் காதிலும் வீணாநாதமும் தீட்சிதரின் குரலும் வந்து எதிரொலித்தது.

அதைக் கேட்ட அபராஜித வைஜெயந்திக்கு இதயம் உழப்பட்ட மாதிரி ஆகிவிட்டது. கண்ணிரண்டும் ஜில்லிட்டுப் போய் சரசரவென்று கண்ணீர் பெருக ஆரம்பித்தது. காலில் தன்னையுமாறியாமல் அந்த இசைக்கேற்ற அபிநயங்கள் வந்து தொற்றிக்கொண்டன.

மாணிக்கவல்லியும்கூட சொல்லிக்கொள்ளாமல், அங்கிருந்து அந்த நாதம் வந்த தோடீஸ்வரர் சன்னதிநோக்கி வந்தவள், தீட்சிதர் முன்னிலையில் அப்படியே அபிநயம் பிடித்து ஆடத் தொடங்கினாள்.

தீட்சிதருக்கோ அந்த அன்னை உமையே அங்கே அவர்முன் நின்று ஆடுகிற மாதிரி இருந்தது.

நேரமும் இசையும் நடனமுமாய்க் கழியும் அவ்வேளையில் திருச்சன்னதிக்குள்ளும் ஒரு அதிசயம் நிகழத்தொடங்கியது.

தோடீஸ்வர லிங்கத்தின் தலைப்பாகம் தொட்டு சூட்டப் பட்டிருந்த மலர்மாலை அதன் முடிச்சுக்களை யாரோ தொட்டு நீக்கியதுபோல அப்படியே அவிழ்ந்து கீழே விழுந்தது. லிங்கத்தின் நெற்றியில்கூட ஒரு ஜோதி பளிச்சென்று தெரியத் தொடங்கியது. கண்களைக் கூசச் செய்ததுபோல அதன் ஒளி பெருகிக்கொண்டே போனது. கருவறையே ஒரு ஒளிப்புனலாக தோடீஸ்வரரே தெரியாத அளவு மாறியது.

ஒரு கட்டத்துக்கு மேல் தீட்சிதரால் பாடமுடியவில்லை. அபராஜித வைஜெயந்தியும் ஆட முடியவில்லை. பட்டரும் நெக்குருகிப்போய் கைகளைக் கூப்பிக்கொண்டு ''ஈஸ்வர மகாப்பிரபோ...'' என்று மெய்சிலிர்க்க, அவரது குரலைத் தொடர்ந்து பல வருடங்களாக இசைக்கப்படாத நிலையில் பழுதுபட்டிருந்த ஆலய கோபுரத்தின் நடு வரையில் அமைந்திருந்த ராட்சஸ மணியானது 'டாண் டாண்' என்கிற ஒலியை எழுப்பத் தொடங்கியது. அந்த நாதம் ஊர் முழுக்கக் கேட்க ஆரம்பித்தது.

தெருக்களில் நடப்பவர்கள், அங்காடிகளில் வர்த்தகம் புரிந்தபடி இருப்பவர்கள், வீடுகளில் இருந்தவர்கள், வயல் வெளிகளில் நாற்று நட்டுக்கொண்டும் உழுதுகொண்டும்

இருப்பவர்கள் என்று எல்லோர் காதிலும்கூட அந்த மணிச்சப்தம் விழுந்து எல்லோரையும் திரும்பிப்பார்க்க வைத்தது.

அவ்வளவு பேர் முகத்திலும் ஆச்சரியமான ஆச்சரியம்! அதே சமயம் ஊர் எல்லைக்குள் நுழைந்திருந்த டெல்லிப்பட்டணத்து வீரர்கள் நால்வரின் காதுகளிலும்கூட அந்த மணிச்சப்தம் கேட்க, அவர்களும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

பாபாவைத் தேடிக்கொண்டு தஞ்சையைச் சுற்றியுள்ள கிராமங்களுக்கெல்லாம் சென்றவர்கள் இன்று தோடிபுரத்துக்கே வந்துவிட்டார்கள்.

பாபாவைப் பார்த்தால் அவரை அப்படியே அள்ளிப் போட்டுக்கொண்டு டெல்லிக்கு விரையவேண்டும். இதுதான் அவர்கள் முடிவு.

''வந்தால் அவரோடு வாருங்கள். இல்லாவிட்டால் வராமலே எங்காவது போய்விடுங்கள்!'' என்பதுதான் அவர்களுக்கு இடப்பட்டிருந்த கட்டளையும்கூட.

கோவில் மணி ஓசை அந்த வீரர்களையும் வரவேற்றது.

## இன்று

**தோ**டீஸ்வரர் ஆலயம்!

உள்ளே கல்மண்டபம் ஒன்று இருக்கிறது. உற்சவ நாட்களில் ஸ்வாமி அதில்தான் எழுந்தருள்வார். எதிரில் மைதானம் போல பிராகார வெளி... ஒரே சமயத்தில் ஆயிரம்பேர்கூட நிற்கலாம்.

பிரதோஷ காலத்தில் எள்போட்டு எடுக்க முடியாது. அப்படி ஒரு கூட்டம் கூடும்.

இப்பொழுது அவ்வளவு கூட்டம் இல்லையென்றாலும் ஓரளவு இருந்தது. எல்லோரும் யாருக்கோ காத்திருப்பது போல வரிசையாக ஒருவர் பின்னால் ஒருவர் நின்று கொண்டிருந்தனர்.

ஊர் பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் கோவிலின் பரம்பரை வித்வான்... எனவே அவர் உச்சிக்கால பூஜைக்கான முஸ்தீபு களுக்கு நடுவே நாதஸ்வரத்தில் இழைந்து கொண்டிருந்தார். அவருக்கு ஏற்ற ஜோடி முத்தையா பிள்ளை. அந்த நந்தியெம் பெருமானே முத்தையா பிள்ளையாக அவதரித்துவிட்டாரோ என்று நினைக்கும்படி இருக்கும் அவரது மேள வாசிப்பு. மிருதங்கத்திலும் புலி. மொத்தத்தில் நாதஸ்வர வெள்ளம் ஒரு

புனல்போல பெருகி வழிந்தபடி இருக்க - அந்த ஆலய முகப்பில் ஒரு வில்வண்டி வந்து தேங்கிநின்றது. உள்ளிருந்து பட்டுச்சேலை சரசரக்க இறங்கினாள் ஒரு பெண்மணி. ஐம்பது வயது மதிக்கலாம். நல்லதேஜஸான முகம். திருத்தமாக தலைவாரி பின்னி யிருந்தாள். கொத்தாக மல்லிகைச்சரத்தையும் சூட்டிக்கொண் டிருந்தாள். நெற்றியில் திவ்யமாக வட்டப்பொட்டு.

வைரத்தோடும் மூக்குத்தியும் மின்னும் ஜோதிமயமான முகம். கழுத்திலும் நன்கு பருமனான சங்கிலியும் காசுமாலையும் தரித்திருந்தாள். பட்டுப்புடவையால் கழுத்துவரை இழுத்து மூடியிருந்த போதிலும் அவை அவ்வப்போது தெரிந்தன. அவளை ஒட்டி இன்னொருத்தியும் இறங்கினாள். எளிமையான உடையலங் காரத்தில் இருந்த அவள் ஒரு பணிப்பெண் என்பது பார்த்த மாத்திரத்தில் விளங்கிவிட்டது.

அவள் கையில் பூஜைக்கான பிரசாதத் தட்டு இருந்தது. அதில் பூ பழங்கள்!

இருவரும் கோவிலுக்குள் செல்ல ஆரம்பித்தனர். அவள் செல்வதைப் பார்த்த சிலர் அவளை ஒரு பிரதம மந்திரியைப் பார்க்கிற மாதிரி பார்த்து வணக்கம் செய்தனர்.

உள்ளிருந்து வெளியேறிக் கொண்டிருந்த ஒரு இளம்பெண் அவள் காலிலேயே விழுந்துவணங்க, அவளும் எழுந்து நின்ற அந்தப் பெண்ணின் தலையை வருடி ஆசீர்வதித்தாள்.

உள்ளேயும் ''அம்மா வந்துட்டாங்க... அம்மா வந்துட்டாங்க...'' என்கிற முணுமுணுப்புகள். அது லயித்தபடி வாசித்துக்கொண்டிருந்த கல்யாணசுந்தரம் காதிலும் விழுந்தது. ஒரு வினாடி தன் ராக ஆலாபனையை நிறுத்தியவர் திரும்பி ஒரு பார்வை பார்த்தார். எல்லோரும் யாருக்காகக் காத்துக்கொண் டிருந்தார்களோ அந்த தாசி சுந்தராம்பாள்தான் அந்தப் பெண்மணி!

ஏனோ, கல்யாணசுந்தரம் முகத்தில் மட்டும் ஒரு சிறு சலனம். அவள் அவரைப் பார்த்துக் கைகளைக் கூப்பினாள்.

பதிலுக்குத் தலையை மட்டும் அசைத்து அதை அரைகுறையாக அங்கீகரித்துக்கொண்டே கல்யாணசுந்தரம் படுவேகமாக திரும்பவும் நாதஸ்வரத்தோடு கலக்கத் தொடங்கினார்.

அவள் நடந்து நேராக சன்னதிமுன் சென்று நின்றாள். பட்டர் ஓடிவந்தார்.

''வா சுந்தராம்பா... உனக்காகத்தான் எல்லாரும் காத்துண்டுருக்கா...''

''சந்தோஷம் பட்டரே, பூஜையை ஆரம்பியுங்கோ.''

அவள் சாதாரணமாகத்தான் சொன்னாள். பட்டரோ ''உத்தரவு...'' என்றபடி உள்ளே ஓடி பூஜையை ஆரம்பித்தார். கற்பூர ஆரத்தி காட்டி முடித்த பிறகு லிங்கத்தின்மேல் கிடந்த மாலை ஒன்றை எடுத்துக்கொண்டு வெளியில் வந்தார். அதே சமயம் கல்யாணசுந்தரமும் அங்கே வந்து நின்றார்.

பட்டர் மாலையை சுந்தராம்பாளுக்கு அணிவிக்கச்செல்ல - அவள் முதல் முறையாகத் தடுத்தாள்.

''ஏம்மா தடுக்கறே...? இது உனக்கான - வழக்கமான முதல் மரியாதை...!''

''தெரியும் பட்டரே... இனிமே இதை நம்ம நாதஸ்வரவித்வானுக்குத்தான் நீங்க கொடுக்கணும்.''

அவள் பதில் பட்டரை அதிர வைத்தது.

''என்னம்மா சொல்றே...? வழிவழியா இந்த மரியாதை உங்க குடும்பத்துக்குத்தானே செய்யப்படறது?''

''இருக்கலாம். இப்ப நான்தான் சொல்றேன். இனி முதல்மரியாதை இவருக்குத்தான்...''

சொன்னவள் கல்யாணசுந்தரத்தைத் திரும்பிப் பார்த்தாள். அவரோ சற்றுக் குழம்பிப்போயிருந்தார். பட்டரும் அவரை நெருங்கி மாலையைப் போட முயன்றார்.

''இல்ல பட்டரே... புதுசா எந்தப் பழக்கமும் வேண்டாம். நான் எந்த முதல் மரியாதைக்கும் ஏங்கிக்கிட்டு இருக்கலை. அதுலையும் ஒரு பொம்பள விட்டுக்கொடுத்து எனக்கு வர்ற மரியாதை எல்லாம் வேண்டவே வேண்டாம்.''

அவர் பதிலில் பலவிதமான உள்ளர்த்தங்கள். பட்டர் திருதிருவென்று விழித்தார். சுந்தராம்பாள் சிரித்தபடி ''சரி கொண்டாங்க'' என்று அதைக் கேட்டு வாங்கிக்கொண்டாள்.

ஒரு சில வினாடிகள் மௌனம்.

அந்த மாலை அவளுடன் துணையாக வந்த திலகம் என்கிற பெண்ணின் கைக்குப்போய் சேர்ந்தது.

''அப்ப கிளம்பலாமா?''

''பேஷா... குறைய சொல்ல எல்லாரும் காத்துண்டு இருக்கா...''

''அதுக்குதானே வந்திருக்கேன்...'' அவளும் பதிலுடன் நடந்தாள்.

கல்மண்டபம் காலியாக சுந்தராம்பாளுக்காகக் காத்திருந்தது. பட்டு சரசரக்க அவள் நடந்து வரவும் எல்லோரும் விறைப்பாயினர்.

அவள் கல்மண்டபத்தில் ஏறி சப்பணமிட்டு அமரவும் ஒவ்வொருவராக வரிசையாக சென்று அவ்விடம் தங்கள் குறைகளைச் சொல்ல ஆரம்பித்தனர்.

''அம்மா... என்மக பிரசவத்துக்கு வந்திருக்கா. நல்லபடி பிரசவமாகணும்.''

''ஆகும்... கவலைப்படாதே!''

''தாயி... என் கறவை மாடு கவுத்தை அவுத்துகிட்டுப்போய் இரண்டு நாளாச்சு. எங்கனே தெரியல...''

''நாளைக்கே அது திரும்பி வந்துடும். கவலைப்படாதே...''

''அம்மா... ஒரே வயித்துவலி. எவ்வளவு மருந்து சாப்பிட்டாலும் கேக்கமாட்டேங்குது.''

''ஒரு வாரம் ராத்திரி பொழுது பாலும் பழமும் மட்டும் சாப்பிடு. கடகக்கேணி தீர்த்தத்தை எடுத்துக் குடி. சரியாப் போயிடும்.''

ஒவ்வொருவராக குறையைச் சொல்ல சுந்தராம்பாளும் அவர்களுக்கான பதிலைச் சொல்ல - அதைத் தொலைவில் நின்று பார்த்துக்கொண்டிருந்தார் கல்யாணசுந்தரம்.

முகத்தில் இனம் தெரியாத ஒரு சலனம். பட்டர் அருகில் வந்தார்.

''கல்யாணசுந்தரம்...'' - அழைத்தார்.

''என்ன பட்டரே...?''

''சொல்றேனேன்னு தப்பா எடுத்துக்கக்கூடாது.''

''என்ன சொல்லப் போறீங்கன்னு தெரியும் பட்டரே. அந்த தாசியை நான் அலட்சியப் படுத்திட்டதா சொல்லப்போறீங்க.''

''புரிஞ்சா சரி... அவ இந்த ஊருக்கே தெய்வம்.''

''நான் பிரசிடென்ட் பட்டரே.''

''உன் பதவி அடுத்த எலெக்ஷன் வந்தா காலாவதியாயிடும். ஆனா அவ நிலை அப்படி இல்ல. தலைமுறை தலைமுறையாக அவ குடும்பம் இந்த ஊரையே தாங்கிண்டிருக்கு.''

''இப்படியே இன்னும் எத்தனை நாளைக்குத்தான் சொல்வீங்க பட்டரே...?''

''அதுதானே உண்மை! உண்மையை எத்தனை நாள் எத்தனை தடவை வேணா சொல்லலாம் கல்யாணசுந்தரம்.''

''எனக்கென்னவோ அது உண்மையா தெரியல. சித்துவேலையைப் பார்த்து மலைச்சு நின்ன காலமெல்லாம் மலை ஏறிப்போச்சு பட்டரே. இப்ப நடக்கறது விஞ்ஞான யுகம்.''

''இல்ல கல்யாணசுந்தரம். உனக்கு இன்னும் அந்தப் பழைய பகை மறக்கல. அதுதான் அப்பப்ப இப்படி உன்னைப் பேசவைக்கறது.''

''அது பகை இல்ல பட்டரே... வலி!''

அப்பொழுது அங்கே உபாசகரின் பிரவேசமும் நடந்தது. உபாசகர் கல்மண்டபத்தைப் பார்த்தபடியேதான் வந்தார்.

முகத்தில் ஆச்சரியமான ஆச்சரியம்!

''வாங்க சாமி... வீணை கிடைச்சிச்சா?''

''இல்ல பிரசிடென்ட்வாள். ஆமா... இது என்ன கூட்டம்? அது யாரு?''

''அது ஏன் கேக்கறீங்க. மாசத்துல இரண்டு தடவை இப்படி ஒரு கூத்து இங்க நடக்கும்.''

''கூத்தா...? பார்த்தா ஏதோ அருள்வாக்குச் சொல்ற மாதிரி இருக்கு...''

''அதேதான். ஆனா அது அருள்வாக்கா? இல்ல ஹம்பக்காங்கறதுதான் என் சந்தேகம்.''

''நீங்க என்ன சொல்றேள்...?''

உபாசகர் ஒருமாதிரி கேட்க, பட்டரின் முகமும் அடி பட்டது போல அவர் பேச்சால் கலங்கிப்போனது.

இதற்குள் ஒரு கூட்டம் வந்து சன்னதிக்கு அவரை அழைக்கவும் பட்டர் விலகினார்.

கல்யாணசுந்தரம் ஆரம்பித்தார்.

''சாமி... அங்க உக்காந்திருக்கறவ யாருன்னு தெரியுமா உங்களுக்கு?''

''தெரியலியே...''

''அவதான் தாசி சுந்தராம்பா. இந்த ஊரோட நடமாடும் தெய்வம் அவ.''

''அப்படியா... எப்படி?''

''என்ன சாமி இது? பாத்தா தெரியலியாக்கும்? அவ அருள்வாக்குச் சொல்ற அழகென்ன... கூட்டம் கேட்கற பணிவுதான் என்ன?''

''அதுசரி... அந்தம்மா சொல்றதெல்லாம் பலிக்கறதா?''

''ஏன் சாமி? உங்களுக்கு ஏதாவது குறை இருக்கா? அருள்வாக்கு கேக்கணுமா?''

கல்யாணசுந்தரம் சற்றுக் கேலியாகத்தான் கேட்டார்.

''சேச்சே... என்ன நீங்க! ஒரு ஆர்வத்துல அப்படிக் கேட்டேன். நான் நூறுபேருக்குச் சொல்வேன் ஸ்வாமி.''

உபாசகர் பதிலுக்குச் சொன்னது கல்யாணசுந்தரத்தை நிமிர்த்தியது.

''நிஜமா?''

''இது என்ன கேள்வி? அந்த பராசக்தியை சதா தியானம் பண்றவா யாரா இருந்தாலும் பிறத்தியார் மனசுல என்ன இருக்குங்கறதை சாதாரணமா தெரிஞ்சிண்டு அருள்வாக்கு தரலாம். அது தெரியுமா உங்களுக்கு?''

''எனக்கு அந்த உள்கதை எல்லாம் தெரியாது சாமி. உங்களால இவளோட போட்டி போடமுடியுமா? அதைச் சொல்லுங்க...''

பட்டென்று ஒரு கேள்வியை, அதுவும் சற்று ஆபத்தான ஒரு கேள்வியைத்தான் கேட்டார் கல்யாணசுந்தரம்.

''இவாளையே நான் இப்பத்தான் பாக்கறேன். இவகூட நான் எதுக்குப் போட்டி போடணும்?''

''அதுவும் சரிதான்... விடுங்க! நான் ஒரு கிறுக்கன். எனக்கிருக்கற வருத்தத்துல அப்படிக் கேட்டுட்டேன். சரி. உங்க விஷயம் என்ன ஆச்சு?''

''வீணைதானே?''

''ஆமாம். என் மகன் சாமிநாதன் எல்லா வீட்டுக்கும் கூட்டிக்கிட்டுப்போனானா?''

''பேஷா... ஆனா நான் தேடுற அந்த வீணைதான் கிடைக்கல.''

அதே சமயம் பட்டரும் திரும்பவந்தார்.

''கல்யாணசுந்தரம், உன் கோபதாபங்களை இவர்கிட்டையும் கொட்டிண்டு இருக்காம போய் ஆகவேண்டியத பார்...'' என்றார்.

''போறேன் பட்டரே, ஆமா... உங்க வீட்ல ஒரு வீணை இருக்குல்ல?''

''இருக்கு. ஆனா அது பழசுன்னா?''

''பழசா... எவ்வளவு வருஷம் பழசு அது?''

உபாசகர் குறுக்கில் வேகமானார்.

''சரிதான்... உங்களுக்கு இன்னும் வீணை கிடைக்கலியாக்கும்?''

''ஆமாம்...''

''அப்ப எங்காத்து வீணையை வேணும்னா போய் பாருங்கோ. பிடிச்சா தாராளமா எடுத்துண்டுபோய் வாசியுங்கோ. அப்புறமா அதாவது ஒரு மண்டலம் கழிச்சு பத்ரமா திருப்பிக் கொடுத்துடணும்.''

''அதுக்கென்ன... ஆமா உங்க அகம்?''

''இருங்கோ ஆள் அனுப்பறேன்...'' பட்டர் தன் உதவியாளனைத் தேடியபடி திரும்பிச் சென்றார். கல்யாணசுந்தரமும் ''சாமி போய் பாத்துட்டு வாங்க. அப்புறமா பாக்கறேன்'' என்று விலகிக்கொண்டார்.

உபாசகர் பார்வை மீண்டும் கல்மண்டபம் அருகே சென்றது. ஒரு முதிய பெண் சுந்தராம்பாளைவிட வயதில் பெரியவர் சுந்தராம்பாள் முன்னால் விழுந்து வணங்கிக்கொண்டிருந்தாள்.

கர்ணம் வீட்டில் அவர் சொன்னது காதில் எதிரொலித்தது.

'தோடிபுரத்தின் காவல் தெய்வம் இவள்.'

'இவளைவிட பெரிய புதிர் இவளது தாசி பங்களா!'

'அப்படி அதில் என்ன இருக்கும்?'

அவருக்குள் கேள்விகள் அலைபுரளும்போது பட்டரின் உதவியாளன் ரமணி வந்தான்.

''ஸ்வாமி... வாங்கோ, பட்டர் உங்களை அவர் ஆத்துல கொண்டுபோய் விடச் சொன்னார்...''

உபாசகரும் அவன் பின்னால் செல்லத் தொடங்கினார்.

# 10



## அன்று

**அ**ந்த நான்கு டெல்லிப்பட்டணத்து வீரர்களும் மணிச்சப்தம் கேட்டபடியே ஊருக்குள் காலை வைத்தனர்.

சில மணிகளுக்கு முன்பு வரை பெய்திருந்த மழைநீரால் எங்கு பார்த்தாலும் மழைநீர்க் தேக்கம்.

அவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது.

வரும் வழியெல்லாம் கடும் வறட்சி. ஆனால் தோடிபுரத்தில் மட்டும் கனமழை! சில்லென்றுவேறு இருந்தது. அந்தச் சிலுசிலுப்பை ரசித்தபடியே ஊருக்குள் தங்கள் புரவிகளோடு நடக்கும் அவர்களையும் ஊரே ஒருவிதமாகத்தான் பார்த்தது. அதோடு ஊரே ஒருவித அலமலப்பிலும் பரபரப்பிலும் இருப்பது தெரிந்தது.

எல்லோரும் கோவிலை நோக்கி நடந்துகொண்டிருந்தனர். சிலர் ஓடினார்கள்.

என்னவென்று ஒருவரைத் தடுத்து நிறுத்திக் கேட்டபோது கோவிலில் ஒரு அதிசய ஒளி தெரிவதாகச் சொன்னார்கள்.

''ஒளியா?''

அந்த வீரர்கள் முகத்தில் மேலும் ஆச்சரியம்.

சிலரிடம் ''இந்த ஊரில் ஒரு பரதேசியை வீணையுடன் பார்த்தீர்களா?'' என்று கேட்ட போது அவர்கள் திருதிருவென்று விழித்தார்கள். கோவிலுக்குச் செல்லும் வேகத்தில் இருந்ததால் காதிலேயே சரியாக வாங்கிக்கொள்ளாமல் ''பரதேசியாவது... பிச்சைக்காரனாவது...'' என்றுதான் திருப்பிச்சொன்னார்கள்.

வீரர்களுக்குச் சோர்வாக இருந்தது.

இந்த ஊரிலும் ஏமாற்றம்தான் மிஞ்சுமோ என்று தோன்றியது.

சதாசிவதீட்சிதர் சன்னதியில் பரவசமான பரவசத்தில் இருந்தார். அவருக்குமேல் பரவசம் அபராஜித வைஜெயந்தியிடம். மாணிக்கவல்லியும் தனக்குக் கண்கள் திரும்பக் கிடைத்ததே இந்த புதிய ஒளியைக் காணத்தானோ என்று நினைத்து ஒளியைப் பெற்றுவிட்ட கண்களில் ஆனந்தக்கண்ணீரை வழியவிட்டுக் கொண்டிருந்தாள்.

''சதாசிவண்ணா... உங்க பாட்டும் அந்த வீணை இசையும் எம்பெருமானையே மயக்கிடுத்து. அதான் சன்னதியில அப்படி ஒரு வெளிச்சம். கட்டின மாலையே அவிழ்ந்து கீழே விழுந்துடுத்துன்னா பார்த்துக்குங்களேன்...''

பட்டர் பரவசப்பட்டுக்கொண்டிருந்தார்.

''அதுசரி... அசைக்க முடியாத மணி எப்படி பட்டரே அசைஞ்சது? யார் அதை அசைச்சு ஒலி எழுப்பினது?''

''யாரா...? சாட்சாத் எம்பெருமான்தான். வேற யார்?''

''அப்ப மனுஷா இல்லியா?''

''மனுஷாளா... கோபுரத்துமேல ஏறிப்போக வேண்டிய வழிக்கதவை பூட்டி சாவியை நான் வெச்சுண்டிருக்கேன். அப்படி இருக்க, யார் அங்கே போக முடியும்?''

ஆச்சரியங்கள் அலைமோதின.

''ஆமாம்... யார் வீணை வாசிச்சது...?''

''பாபா...'' பட்டென்று பதில் சொன்னாள் வைஜெயந்தி.

''பாபாவா...? இது என்ன புதுப்பெயரா இருக்கு?''

ஆமாம். அவர் ஒரு வடநாட்டவர். அவரைக் கோவிலுக்குள்ற அனுமதிக்காததால அவர் வெளியவே இருக்கார்... அவர் ஒரு முகம்மதியர்!''

''என்ன ஒரு ஆச்சரியம். அவருக்கு எப்படி நான் பாடின பாட்டு தெரியும்? ராகம் தெரியும்?''

''இது என்ன கேள்வி... அவருக்குத் தெரியாததே இல்லைன்னுதான் நாங்க நினைக்கறோம். என் பாட்டிக்கு கண் தெரக்கூட காரணம் அவர்தான். அவர் வாசிச்ச ஒரு ராகம் பாட்டியோட கண்ணுல நீரை வரவழைச்சது. கண்ணீரோட பார்வையும் வந்திடுச்சு...''

அபராஜித வைஜெயந்தியின் விளக்கம் தீட்சிதரை கோவிலுக்கு வெளியே இழுத்துச்சென்றது. அமைதியாக அமர்ந்திருந்தார் பாபா. அருகில் முனியன்.

''நீங்கள்தான் வீணையை வாசிச்சவரா?''

தீட்சிதர் கேட்க பாபா மௌனமாக ஆமோதிப்புப் பார்வை பார்த்தார். அடுத்த நொடி தீட்சிதர் பொதேரென்று சாஷ்டாங்கமாக அவர் காலில் விழ, பாபாவுக்கு சற்றுத் துணுக்கென்றது. அவரை எழுப்பி கைகளைப் பிடித்துக்கொண்டார்.

''என்னங்க இதெல்லாம்?''

''நீங்க ஒரு தெய்வீகக் கலைஞர். என் பாட்டு, உங்க வீணை இசை இரண்டும் அந்த ஈஸ்வரனையே குளிர வெச்சுடுத்து.

இது ஒரு இசை பூமி. புராணகாலத்துல இங்க பல அதிசயங்கள் நடந்ததா சொல்வா. ஆனா கலியுகத்துல அதை கதைன்னு நினைச்சோம். இன்னிக்கு அது கதை இல்ல நிஜம்னு உணர்ந்துட்டோம். இந்த வீணைதானா நீங்க வாசிச்சது?''

''ஆமாம்...''

''பார்க்க வித்தியாசமா - ருத்ரவீணை போல இருக்கே?''

''சரியா சொன்னீங்க. இது ருத்ரவீணைதான்! இதை ருத்ரவீணைன்னு பார்த்த மாத்திரத்துல சொன்ன முதல் இசைக்கலைஞர் நீங்கதான்!

பரந்த இசையறிவும் இறையருளும் உள்ளவர்களுக்கே இதோட பெருமை தெரியும்னு அந்தச் சடையாண்டிச் சித்தர் சொன்னது உண்மைன்னு நிரூபிச்சிட்டீங்க...''

''சடையாண்டிச் சித்தரா... அவர் யார்?''

''பேசுவோம். எல்லாத்த பத்தியும் பேசுவோம். நான் எங்க போயிடப் போறேன்?''

''அப்ப வாங்கோ நம்ம ஆத்துக்குப் போகலாம்...''

தீட்சிதர் அழைக்க, பாபாவின் பார்வை அபராஜித வைஜெயந்தியைப் பார்த்தது. அவள் 'போய்வாருங்கள்' என்கிற மாதிரி சமிக்ஞை தந்தாள்.

பட்டரும் கூட்டத்தில் இருந்தார்.

பழைய துவேஷப் பார்வை இப்பொழுது அவரிடம் இல்லை. அவரிடம் மட்டுமில்லாமல் பாபாவை முன்பு ஒரு பிச்சைக்கார பக்கிரியாகப் பார்த்த எவரிடமும் இல்லை. அந்த நொடி பாபா ஒரு சரக்குள்ள மனிதராகத்தான் தெரிந்தார்.

தீட்சிதர் தன் சாராட்டில் அவரை ஏற்ற முயன்றார். முனியன் ஓடிச்சென்று முன்னால் ஏறி சாரதிக்கான ஆசனத்தில் அமர்ந்தான்.

அப்பொழுது வைஜெயந்தி பட்டரிடம்,

''அவரை இப்பொழுதாவது ஆலயத்துக்குள் அனுமதியுங்கள். அவர் நமது தோடீஸ்வரரைத் தரிசித்துவிட்டுச் செல்லட்டும்...'' என்றாள்.

பட்டருக்குக் கொஞ்சம் சுருக்கென்றது.

''இவர் நம்ம ஈஸ்வரனைச் சேவிப்பாரா?''

ஆவலாகக் கேட்டார். அது பாபாவின் காதிலும் விழுந்திருக்கவேண்டும். அவர் முகத்தில் ஒரு மந்தகாசமான புன்னகை. தீட்சிதரும் அதைக் கவனித்தார்.

''எங்க வேதம் இறைவனுக்கு வடிவத்தைக் கொடுக்கல. அவனை ஆதிஅந்தம் இல்லாதவனா பேரருளாளனாத்தான் வர்ணிக்குது. லிங்கரூபமும் வடிவமில்லாத ஒரு வடிவம்தான். அதைப் பார்க்கற விதமா பார்த்தா அதுல சிலுவையும் தெரியும். எங்க மசூதியும் தெரியும். இவைகளை எல்லாம் கடந்து இறைவனை மெய்யன்போட பாக்கறதுதான் முக்கியம். ஆசாரங்களோட தெய்வத்தை அணுகறது வெளியுலக வாழ்க்கைல உள்ளவர்களுக்குச் சரியா இருக்கலாம். நான் துறவி...''

பதிலோடு நடந்து பாபா அந்த ஆலய கோபுரவாசலில் கால்வைத்த நொடி எதிரே கோவில் பலிபீடத்தின்மேல் பச்சைக்கிளி ஒன்று வந்து அமர்ந்தது.

பலர் புடைசூழ நடந்தவர் அதைப் பார்த்துக் கையை நீட்டினார். ஏதோ பழகியதுபோல அது அவர் கையில் வந்து அமர்ந்தது.

அத்துடன் நடந்தார். கூட்டம் ஆச்சரியப்பட்டது. தீட்சிதரும் வியப்புடன்தான் நடந்தார். பாபா நேராக கல்மண்டபம் அருகே சென்றார். அங்கிருந்து நேராக சற்று தூரத்தில் இருந்த தல விருட்சமான வில்வமரத்தைப் பார்த்தார். அது இடிபாய்ந்ததில் பட்டுப்போயிருந்தது.

'பாபா... போ... அந்தத் தலவிருட்சத்தைத் துளிர்க்க வை. நீ இசைக்கற 'சதாரி' யால அது துளிர்க்கணும்.'

பாபாவின் காதுக்குள் சடையாண்டிச் சித்தரின் குரல் உள்ளுக்குள் ஒலித்தது. அப்படியே கல்மண்டபத்தைப் பார்த்தார். ஒரு தேவபீடமாகத்தான் அது அவர் கண்களுக்குத் தெரிந்தது. அதில் ஏறி அமர்ந்தவர் மீண்டும் வீணையை எடுத்து இசைக்கத் தொடங்கினார்.

பட்ட மரங்களையும் துளிர்க்கச் செய்யும் 'சதாரி' ராகத்தில் அற்புதமான கீர்த்தனை ததும்பி வழிய ஆரம்பித்தது.

சாரிசாரியாக கோவில் நோக்கி வந்தவர்கள் எல்லாம் அப்படியப்படியே நின்றனர். எவ்வளவோ மனிதர்களின் மனது பாறையாக இறுகிப்போய் இருக்கிறது. சிலர் வரையிலோ ஆனாலும் குறுகல். அதிலும் குதர்க்கம் வேறு. அவர்கள்கூட மௌனமாக நின்றனர்.

அவர்களை அந்த சதாரி நிற்கவைத்தது.

கோபுரத்தில் சாதாரணமாக ஒரு ஐம்பது அறுபது புறாக்கள் இருக்கும்.

ஆனால் எங்கிருந்து வந்ததோ என்றே தெரியாதபடி நூற்றுக்கணக்கில் அங்கே புறாக்கள், கிளிகள்! அற்ப ஜந்து என்று மனிதன் வர்ணிக்கும் பறவையினங்களின் சேர்க்கையும் அதிகரித்துக்கொண்டே போனது.

முதல் முதலாக தன்னை மறந்தநிலையில் முனியனும் கோவிலுக்குள் நுழைந்திருந்தான்.

''அடேய் பாவி... போடா வெளியே!''

என்று அலறும் குரல் கேட்கவில்லை. அலற வேண்டியவர்களை 'சதாரி' அமுக்கிக்கொண்டிருந்தது. இசை என்பது மயங்கவைக்கக்கூடியது. அது மனதை மயக்குவதற்கு ஜாதிபேதம் பார்ப்பதில்லை. மனிதன், விலங்கு என்று பாகுபாடும் பார்ப்பதில்லை. இதுதான் அதுநாள்வரை உலகம் அறிந்த உண்மை. முதல் முறையாக அது உயிரினத்தை ஸ்தம்பிக்கவைக்கும் என்பது அங்கே நடக்கத் தொடங்கியிருந்தது.

'என்ன பெரிய இசை... புடலங்காய்.' என்று நாதஸ்வரத்தையும் வாய்ப்பாட்டையும் புறந்தள்ளிவிட்டு தங்கள் பாட்டையில் போய்க்கொண்டிருந்தவன்கூட அப்படியே ஸ்தம்பித்திருந்தான்.

அவன் நாடிநரம்புகளில் இசையின் ஊடுருவல்! பசிக்குப் பிறகு கேளாமலே மனிதனை ஆட்டுவிக்கும் ஒரு சக்தியும் இந்த உலகில் இருக்கிறது என்பதே அப்பொழுதுதான் அவர்களுக் கெல்லாம் தெரிந்தது.

**அ**ந்த 'சதாரி' ராகம் ஊர் எல்லையில் ஒரு மரத்தடியில் இளைப்பாறிக்கொண்டிருந்த அந்த டெல்லிப் பட்டணத்து வீரர்கள்

காதுகளில்கூட விழுந்ததுதான் ஆச்சரியம். அருகிலேயே ஒரு பெரிய கிணறு.

ஒரு வீரன் தாகசாந்திக்காக அதன் அருகே சென்றான். அவன் மனமோ அந்த மெல்லிய ராகத்தில்தான் இருந்தது.

ஒருவரோடொருவர் அரட்டையடித்துக் கொண்டிருந்த வர்கள் 'சதாரி' காதில் பாயவும் பேச்சை நிறுத்திக்கொண்டு விட்டார்கள்.

கிணற்றருகே சென்ற வீரன் கிணற்றை எட்டிப்பார்த்தான். 'மீனக்கேணி' என்கிற எழுத்தும் மீனராசிக்குரிய மூர்த்தி விக்ரகமும் கிணற்றின் உட்புறம் பூஜிக்கப்பட்ட நிலையில் கண்ணில்பட்டது. அருகில் ஒரு கயிறும் அதன் படியில் ஒரு கலயமும் கட்டப் பட்டிருக்க 'சதாரி'யை கேட்டபடியே அந்தக் கலயத்தைக் கிணற்றில் விட்டு நீரை மொண்டு பின் வெளியே இழுத்து அதைப் பருக விழைந்தான். ஏனோ பின் பருகாமல் அப்படியே அந்தக் கலயத்தைத் தண்ணீரோடு வைத்துவிட்டு திரும்பிவந்தான். அவன் சகாக்கள் கண்களை மூடி ராகலயிப்பில் இருந்தனர்.

அவனும் அவர்களுடன் சேர்ந்து கொண்டான்.

'சதாரி'யின் குணம் கல்லைக்கூட கரையவைப்பது. இவர்களோ உணர்வுகளால் நிரம்பிய மனிதர்கள். இவர்கள் கரைவதில் ஆச்சரியம்தான் என்ன!

## இன்று

பட்டர் வீட்டில் ஒரே கலாட்டா!

பக்கத்து வீட்டுச் சுட்டிப்பெண் அலமு, பட்டரின் இளைய மகளிடம் கணக்குப் பாடம் படித்துக்கொண்டிருந்தாள். ஏனோ கணக்கு அவள் வரையில் மகா பிணக்காக இருந்தது. கண்களோ அவ்வப்போது டி.வி.பக்கம் போய் அதை ஒரு பார்வை பார்த்தது.

மூத்தவள் மைதிலி பூ கட்டிக்கொண்டிருந்தாள். சங்கரன் எங்கோ வெளியே போயிருந்தான்.

''ஒழுங்கா கணக்குப் போடுடி... ஊருக்கே அஞ்சும் மூணும் எட்டுன்னா உனக்கு மட்டும் எப்பவும் அது ஏழு, இல்லேன்னா ஒன்பது. ஏண்டி இப்படி இருக்கே?'' - காயத்ரியிடம் அலுப்பு.

''ஐயோ அக்கா... நான் என்ன பண்ணுவேன்... எனக்கு வரமாட்டேங்கறதே...!''

''எப்படிடி வராது. கவனமா படிச்சா வரும். இப்படி நீ கணக்குப் போட்டே அவ்வளவுதான். இந்த வருஷம் நீ எட்டாங்கிளாஸ் பாஸ் பண்ணின மாதிரிதான்.''

''அதெல்லாம் ஒண்ணும் ஆகாதுக்கா. எனக்கு முன்னால் ஹரி உக்காருவான். அவனைப் பார்த்துப் பார்த்தே நான் எழுதிடுவேன்.''

''கழுதை... காப்பி அடிப்பேன்கறியே, வெக்கமா இல்லை உனக்கு?''

''ஆமால்ல... பொம்மனாட்டி ஆத்துல காப்பி போடலாம். ஆனா அடிக்கக்கூடாதோ?'' அலமு புத்திசாலித்தனமாய் பேசுவதாக நினைத்துக்கொண்டு கேட்க, மைதிலி நிமிர்ந்து ஒரு அழமான பார்வை பார்த்தாள். இடையில் அலமுவின் பாட்டியான கோமதி கையில் ஒரு கரண்டியுடன் உள்ளே நுழைந்தாள்.

பாட்டி வரவும் ''ஹிட்லரி வந்துட்டா... ஹிட்லரி வந்துட்டா...'' என்று முணுமுணுத்தாள் அலமு.

''ஹிட்லரியா...?'' காயத்ரி நெற்றியைச் சுருக்க, ''ஆமாம்... ஹிட்லரோட பெண்பால்'' என்று சொல்லி களுக்கென்று ஒரு சிரிப்பு சிரித்தாள்.

''போட்டேன்னா...'' பளாரென்று கையை ஓங்கினாள் காயத்ரி.

''என்ன சொல்றது அந்தக் கோட்டான்?''

பாட்டிதான் கேட்டாள்.

''உங்களுக்குப் புதுசா ஒரு பேர் வெச்சிருக்கா பாட்டி!''

''வேற வேலை? படிக்கறது தவிர எல்லாம் பண்றா! ஆமா இன்னிக்கு எனக்கு என்ன பேர்?''

''ஹிட்லரியாம்...'' - அது மைதிலி முகத்தில்கூட சிரிப்பை வரவழைத்தது.

''ஆத்துக்கு வா... வெச்சுக்கறேன்! அப்றமா மைதிலி... ஒரு கரண்டி நெய் கொடு. நெய் தீர்ந்துடுத்து. அப்றமா வாங்கினப்பறம் தரேன்.'' - பாட்டி கரண்டியை நீட்ட மைதிலி உள்ளே சென்று அது நிரம்ப உறைந்த நெய்யை நிரப்பிக்கொண்டு வந்து தந்தாள்.

பாட்டியும் முறைத்துக்கொண்டே விலகிச் சென்றாள். பாட்டி விலகவும் ரமணியும் உபாசகரும் உள்ளே நுழைந்தனர்.

இருவரையும் பார்த்த மைதிலியும் காயத்ரியும் எழுந்து நிற்க, ரமணி அறிமுகம் செய்தான்.

''காயத்ரி... மைதிலி... இவர் ஒரு அம்பாள் உபாசகர். வீணைக் கச்சேரி பண்ண நம்ம ஊருக்கு வந்திருக்கார். அதுக்கு இவருக்கு ஒரு வீணை வேணும். நம்ப ஆத்துலதான் ஒரு வீணை இருக்கே. அதை அப்பா காட்டச் சொன்னார். அதான் அழைச்சுண்டு வந்திருக்கேன்...''

ரமணி முடித்தான். மைதிலி உடனேயே பரபரப்பாகி ஒரு பாயை எடுத்து விரித்தாள். உபாசகரை அதில் அமரச்சொன்னாள்.

அலமு வெறித்துப் பார்த்தபடி இருந்தாள். காயத்ரிக்கும் இப்படி ஒருவர் வந்து வீணை கேட்பது புதிதாக இருந்தது.

மைதிலி ரமணியிடம் சைகை பாஷையில் 'காபி போடட்டுமா?' என்று கேட்டாள். அது உபாசகருக்குப் புரிந்தது.

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்... வீணையைக் காட்டினாபோறும்'' என்றவர் ரமணி பக்கம் திரும்பி ''ஆமா, இந்தப் பொண்ணு என்ன வாயத்திறந்து பேசமாட்டேங்கறா? மௌன விரதமா?'' என்றார். ரமணி முகத்தில் மெலிதாய் கசங்கலாக ஒரு மாற்றம்.

''இல்ல ஸ்வாமி... மைதிலியால பேசமுடியாது... அவ ஒரு ஊமை!''

ரமணிக்கு விவேகம் போதாது. இப்படி ஒரு பதிலை உரத்த குரலிலா சொல்வான். மைதிலி அதைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். முகத்தில் ஒருவித சோகம். காயத்ரி உடனே சமாளித்தாள்.

''அது வந்து... அக்கா நன்னா பேசிண்டுதான் இருந்தா. அம்மா காவிரியில மூழ்கி இறந்துபோனப்ப பேச்சு போயிடுத்து...''

''ஆமாம் ஸ்வாமி... இவளுக்கு 12 வயசு இருக்கும்போது நடந்தது. அதுல இருந்து பேச்சு, படிப்பு எல்லாமே போயிடுத்து.'' ரமணிதான் மறுபடியும்...

''ஓஹோ...'' உபாசகர் முகமும் சோகத்துக்கு மாறியது.

''நீர்தான் உபாசகராச்சே... மைதிலிக்குப் பேச்சு திரும்ப வருமா? அந்த அம்பாளாண்ட கேட்டுச் சொல்லுமே...'' ரமணி இப்படிக் கேட்டது உபாசகருக்குள் இடி இடித்தது.

கண்களை ஒரு வினாடி மூடியவர் அம்பாளைத் தியானித்து விட்டு கண்களைத் திறந்தார்.

அதற்குள் மைதிலி உள்ளே போய் வீணையை எடுத்து வந்திருந்தாள்.

வீணையுடன் அவள் நிற்கும் கோலம் சரஸ்வதி கோலமாய் இருந்தது.

உபாசகர் கைகள் தானாகக் கூப்பின.

''அம்மா தாயே... ஜெகன்மாதா...'' - உதடுகள் பரவசமாய் உச்சரித்தன. காயத்ரிக்கும் அலமுவுக்கும் அவரது செயல் லேசான அதிர்ச்சியைக்கூட தந்தது. சட்டென்று கைகளைக் கூப்பி பரபரவென்று தேய்த்துவிட்டு வலதுகையை மைதிலியை நோக்கி நீட்டினார். மளுக்கென்று அவர் நீட்டிய உள்ளங்கையில் ஒரு கற்பூரத்துண்டு தோன்றி அது அவர் உற்றுப்பார்த்த நொடி பற்றிக்கொண்டு எரியவும் செய்தது.

ரமணிக்கே அவரது செயல் வெலவெலப்பைத் தந்துவிட்டது.

ஒருமுறை தெய்வத்தை ஆராதிப்பதுபோல கற்பூரத்தால் ஆராதித்தவர் அப்படியே அதை விழுங்கிவிட்டு மீண்டும் கண்களை மூடினார்.

பிறகு திறந்தவர் காயத்ரியை பார்த்து,

''நான் ஊரைவிட்டுப் போகும்போது உங்கக்கா பேசுவா...'' என்றார்.

''எப்படி?'' ரமணியின் குரல் இடையிட்டது.

''போகப்போக பாக்கத்தானே போறேள்...''

''என்னென்னமோ சொல்றேளே. அதுசரி வீணை?''

''இது நான் தேடிவந்த வீணை இல்ல.''

''இதுவும் இல்லன்னா இந்த ஊர்லயே வேற வீணை கிடையாது. நீங்க எல்லா வீணையும் பார்த்துட்டதா கேள்விப்பட்டேன்.''

''என்ன செய்யறது, எங்காவது எனக்குன்னு ஒண்ணு கிடைக்காதா என்ன?''

''காசு கொடுத்தா நூறு வீணை வாங்கலாம். அது என்ன பெரிய விஷயம்?''

ரமணி அழம் பார்ப்பதுபோல பேசினதைத் தொடர்ந்து உபாசகர் பார்வை ரமணியை ஊடுருவியது.

மைதிலி அதை எல்லாம் கேட்டு அதிர்ந்திருந்தாள். அதற்குமேல் காயத்ரி.

அலமு மட்டும் சிறுபிள்ளைத்தனம் மாறாமல் ''மாமா மாமா... எப்படி நீங்க கற்பூரம் வரவழைச்சு எரிச்சுக் காட்டினேள்?'' என்று ஆரம்பித்தாள்.

அவர் சிரித்தார்.

''சொல்லுங்கோ மாமா...''

''எல்லாம் அந்த அம்பாளாலடா குழந்தை...''

''அம்பாள் இப்படி மேஜிக்லாம் பண்ண வைப்பாளா?''

''இது என்ன... அவ நினைச்சா ஒரு மலையே இடம் மாறுமே...''

''அவ்வளவு தூரம் சக்தி இருக்குன்னா அவகிட்டையே உங்களுக்கு ஒரு வீணை வேணும்னு கேட்கலாமே...?''

அலமுவின் கேள்வி அவர் பொட்டில் அடித்தது. தெரிந்து கேட்டாளா... தெரியாமல் கேட்டாளா என்பதுதான் தெரியவில்லை. உபாசகர் முகத்திலும் தடுமாற்றம். ரமணியும் உள்ளுக்குள் 'சபாஷ்' என்று சொல்லிக்கொண்டான். ''ஆமா... உனக்கு என்ன பிடிக்கும்?''

உபாசகர் பேச்சை மாற்றுவது போலக் கேட்டது உடனே அவளையும் மாற்றியது.

''லட்டு.'' என்றாள் வேகமாக.

''கைய நீட்டு...!''

அவளும் நீட்டினாள்.

அவர் அவள் நீட்டிய கையின் மேல் தன் தோளில் இருந்த துண்டைப் போட்டு மூடினார். ஏதோ முணுமுணுத்தார். சரியாக மூன்று நொடிதான். சரேலென்று துண்டை எடுக்கவும் அவள் கையில் ஒரு திருப்பதி லட்டு இருந்தது.

அலமு முகத்தில் பலத்த ஆச்சரியம்.

அது கலைவதற்குள் கிளம்பிவிடுவது உத்தமம் என்று உபாசகருக்குத் தோன்றியதோ என்னவோ விறுவிறுவென்று ரமணியுடன் வெளியேறி விட்டார். காயத்ரியும் மைதிலியும் அந்த லட்டை வியந்துபோய் பார்த்தனர்.

''அக்கா... திருப்பதி லட்டுக்கா. கமகமன்னு இருக்கு...'' அலமு குஷியோடு கத்தினாள். சப்தம் கேட்டு பாட்டிகூட வந்துவிட்டாள்.

''என்ன இது?''

''பாட்டி... லட்டு, திருப்பதி லட்டு!''

''ஏதுடி...?''

காயத்ரி உடனே உபாசகர் வந்ததை, மைதிலியை ஆராதித்ததை, வீணையைப் பார்த்ததை, பின் லட்டு வர வழைத்ததை வரிசையாகச் சொல்ல - பாட்டி முகம் பதட்டத்திற்குத் தாவியது.

''ஏன் பாட்டி... ஏன் உங்க முகம் இப்படி மாறிடுத்து...?''

''மாறாம...? இந்தச் சித்துவேலை பண்றவாகிட்ட ஜாக்கிரதையா இருக்கணும். அதுலயும் இப்படி லட்டு பூந்தின்னு வரவழைக்கறவா பொம்மனாட்டியாண்ட தப்பா நடந்துப்பான்னு கேள்விப்பட்டிருக்கேன்.''

பாட்டி தன் சந்தேகத்தைப் போட்டு உடைத்தாள். அப்படியே அந்த லட்டைப் பிடுங்கி வாசற்புறம் எறிந்தாள்.

''பாட்டி ஈ... ஈ...!''

''வாய மூடு. இனிமே யாராவது ஏதாவது கொடுத்தான்னு வாங்கினே தெரியும் சேதி. காயத்ரி, மைதிலி... பாத்துடிம்மா... இனிமே அவர் வந்தா நீங்க உள்ற போய்டுங்கோ. அதுலயும் தாயில்லாக் குழந்தைகள் நீங்கோ'' பாட்டி சொல்லச்சொல்ல இருவருக்கும் வயிற்றில் புளியைக் கரைத்தது.

அப்பொழுது பார்த்து சங்கரன்வேறு உள்ளே வந்தான். நடந்ததைக் கேட்டு தாடையைத் தடவினான். பாட்டி திரும்பவும் ஒருமுறை எச்சரித்துவிட்டுப் போனாள்.

காயத்ரி மட்டும் ஒரு விஷயத்தை திரும்பத் திரும்பச் சொன்னாள்.

''அண்ணா... அவர் சொன்னார். அவர் இந்த ஊரைவிட்டுப் போறதுக்குள்ற அக்கா பேசிடுவாளாம்!''

''அப்படியா சொன்னார்...?'' சங்கரனும் வியந்துதான் போனான். அப்போது தரகன் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தான்.

மைதிலிக்கு வரன் பார்ப்பதற்காக பட்டர் அவனிடம் சொல்லியிருந்தார்.

''சங்கரா... அப்பா இல்லியா?''

''என்ன விஷயம்...? என்கிட்டையே சொல்லும்.''

''நான் என்ன காளைமாடு கன்னு போட்டுதுன்னா சொல்லப்போறேன்? உன் தங்கை மைதிலிக்கு அட்டகாசமா ஒரு வரன் வந்திருக்கு. மாப்ளை துபாய்ல இருக்கார். பேங்க் உத்யோகம். ஒண்ரை லட்சம் சம்பளம். என்ன சொல்றே?''

சங்கரன் வாய் பிளந்தான்!

# 11



## அன்று

சதாசிவ தீட்சிதரின் வீடு.

வீடு அல்ல அது... மாளிகை. முன்னும் பின்னுமாக பெரிய தோட்டம்! நாகலிங்க மரங்களும் மனோரஞ்சித மரங்களும் தழைத்திருந்தன.

நாகலிங்கமும் மனோரஞ்சிதமும் எல்லா இடத்திலும் வளர்ந்துவிடாது. சரியான ஊற்றுப்பாதை ஒன்று வேரோடும் இடத்தில் இருந்தாகவேண்டும். அத்துடன் அந்த மண்ணில் எந்த தோஷம் இருக்கக்கூடாது. மண்ணுக்குக்கூட தோஷமா என்கிற கேள்வி எழும்பும். மண்ணுக்குத்தான் தோஷமே... பஞ்சபூதத்தில் நிலமானது கண்ணுக்குப் புலனாகும் ஒரு பிரதான பூதம். இதில் மற்ற பூதங்களின் சேர்க்கை எப்படி இருக்கவேண்டும் என்று ஒரு விதி இருக்கிறது. அதெல்லாம் வாஸ்து ரகசியங்கள்.

ஆனால் எங்கே நாகலிங்க மரம், மகிழமரம், மனோரஞ்சிதம், வேம்பு, பன்னீர் மரம் இவையெல்லாம் துளிர்க்கிறதோ அவை தோஷமில்லாத இடங்கள். அங்கே நிச்சயம் யாராவது ஒரு முனிவர் தவம் செய்திருப்பார். இல்லாவிட்டால் பசுமாடு கன்றினை ஈன்றிருக்கும். இல்லையேல் ஏதாவது அறச்செயல்கள் நடந்திருக்கும்.

அப்படி ஒரு தோஷமில்லாமல் திகழந்த சதாசிவ தீட்சிதரின் வீட்டு முன்னால் சாரட் தேங்கி நின்றது. முதலில் அதிலிருந்து இறங்கிய சதாசிவ தீட்சிதர் திரைச்சீலையை விலக்கிப்பிடிக்க பாபாவும் இறங்கினார். அவரது பார்வை இறங்கிய நொடி சுற்றிச் சுழன்றது. நெற்றியில் வரிகள் விழுந்து அவர் யோசிப்பதை சுட்டிக்காட்டின.

''வாருங்கள் பாபாஜி... இதுதான் என் வீடு...''

தீட்சிதர் முகமன் படித்தார்.

''ஆஹா... எத்தனை அழகான ஒரு ஷாலிமார் உங்கள் இல்லம்...'' - பாபாவிடம் சிலாகிப்பு.

''ஷாலிமாரா... அப்படி என்றால்...?''

''எங்கள் நகரங்களில் மிக அழகிய தோட்டங்களை நாங்கள் ஷாலிமார் என்போம். ஷாலிமார்களில்தான் இறைவனும் குடியிருக்கிறான்...''

''உண்மைதான். எனக்குச் செடிகொடிகள் என்றால் பிரேமை அதிகம்...''

பேசியபடி முன்னே சென்றார். முனியன் சாராட்டில் இருந்து குதிரைஸ்ய அவிழ்த்து விடுவிக்கத் தொடங்கியிருந்தான்.

வீட்டுவாசற்படி அருகே சென்றுவிட்ட தீட்சிதர் திரும்பினார். முனியனைப் பார்த்துக் கத்தினார்.

''முனியா... குதிரைக்கு முதல்ல தண்ணிகாட்டு. தீவனமும் கொடு. நாளைவரை அதுக்கு ஓய்வுதான். அதைப் படுத்தக் கூடாது...''

தீட்சிதர் பதிலை பாபா ரசித்தார். தீட்சிதர் வீடும் ரசிக்கும்படியாக இருந்தது. திரும்பிய பக்கம் எல்லாம் தெய்வத் திருமேனிகள். தசாங்க வாசம். தீட்சிதரின் பார்யை பார்வதி பாபாவைப் பார்த்தவுடன் காலில் விழுந்து நமஸ்கரித்தாள்.

பாபாவுக்குப் புல்லரித்தது.

''நான் எங்கும் காணாத பண்பு இது...'' என்றார்.

''வயதில் பெரியவர்கள் இல்லத்திற்கு வந்தால் நமஸ்காரம் செய்வது எங்கள் குடும்ப வழக்கம்...''

தீட்சிதர் விளக்கமளித்தார்.

''தீண்டாமை என்பது உங்கள் வரையில் இல்லை என்று கூறுங்கள்...''

''ஆம்... நான் தீண்டாமையைத் தீண்டத்தயாரில்லை!''

ஊஞ்சலில் அ;மர்ந்தபடி தீட்சிதர் பேச, பாபாவும் அருகில் அமர்ந்தார். பேச்சைத் தொடர்ந்தார்.

''ஒருவகையில நாம் இருவரும் ஒத்த கருத்துடையவர்கள்.''

''ஆம்... நானும் அப்படித்தான் நினைக்கிறேன்.''

''நமது எண்ணங்களின் அலைவரிசை நம்மை ஒன்று சேர்த்துவிட்டதாகத் தெரிகிறது.''

''உண்மைதான். இன்று என் வாழ்க்கையில் ஒரு பொன்னாள்.''

''உங்களுக்கு மட்டுமல்ல... எனக்கும்தான்!''

''உங்களைப் பற்றி விரிவாக நான் அறியலாமா?''

''தாராளமாக. டெல்லியில் என் தந்தையார் ஒரு வணிகர். மார்க்கப்பற்று மிக்கவர். எதனாலோ எனக்கு மார்க்கப்பியாசங்களில் அவ்வளவாக பற்றுதல் இல்லை. என் குடும்பம் ஒரு இசைக் குடும்பமும்கூட. என் தந்தையார் அற்புதமாக வீணை வாசிப்பார். தபேலாவும் வாசிப்பார். ஹிந்துஸ்தானி, கஜல் சதா சர்வகாலம் என் இல்லத்தில் ஒலித்தபடி இருக்கும். என் தாயும் ஒரு நல்ல பாடகி.''

''மிகவும் மகிழ்ச்சி. எங்கள் வம்சாவளியும் அப்படித்தான்.''

''இதில்கூடவா நமக்குள் ஒற்றுமை...''

''எல்லாம் அந்த ஈஸ்வர க்ருபை.''

''உண்மைதான். அதுதான் என்னை இங்கே அனுப்பியுள்ளது.''

''புரியும்படி சொல்லுங்கள்.''

''நான் வீணை, சிதார் இவைகளில் தெளிவு பெற விரும்பினேன். அதே சமயம் ஏகாந்தம் தேடி அடிக்கடி பனிமலைகளின் பக்கம் செல்ல ஆரம்பித்தேன். அந்தக் குளுமையும் அமைதியான சூழலும் என்னை மிகக் கவர்ந்தது. இதனால் எனக்கு இல்வாழ்க்கைகூட பிடிக்கவில்லை. இந்த நிலையில் ஒருசமயம் பனிமலையில் எதிர்பாராத ஒரு விபத்து எனக்கு நேரிட்டது...''

பாபா விபத்து என்று கூறவும் தீட்சிதர் ஆவலோடு அவரிடம் ஊன்றினார்.

''என்ன பயந்துவிட்டீர்கள்... இறைவனுக்கு என்மேல் அதிக கருணை. எனவேதான் அந்த விபத்தை ஏற்படுத்தினான்...''

''விபத்து இறைவனின் கருணையா?''

''நிச்சயமாக. எந்தச் செயலையும் அதன் முடிவை உணராமல் தவறாகக் கருதிவிடக்கூடாது. அந்த விபத்தில்தான் நான் ஒரு அதிசயமான மனிதரைச் சந்திக்க நேர்ந்தது.

''அதிசயமான மனிதரா...? யார் அவர்?''

''வாழ்க்கையில் எந்தப் பற்றுதலும் இன்றி, பந்தம், பாசம், பணம், காசு, புகழ், மோகம் என்று எதுவும் இன்றி அவ்வளவு

ஏன் - உடம்பில் ஒரு முழுத்துண்டுடன் காற்றை மட்டுமே உண்டு உயிர்வாழ்பவர் அதிசய மனிதர்தானே?''

''நிச்சயமாக... அப்படி ஒருவரைச் சந்தித்தீர்களா?''

''ஆமாம்... நான் சந்தித்தேன் என்பது பொய். அவர்தான் என்னைச் சந்தித்தார். ஒரு பனிப்புயலில் சிக்கி பெயர்ந்து விழுந்த பனிப்பாளங்களின் அடியில் சிக்கிக்கொண்ட என்னை அவர்தான் காப்பாற்றினார். உறைந்துவிட்ட என் உடலில் வெப்பத்தை உருவாக்கி, போகத் தெரிந்த என் உயிர்மூச்சையும் இழுத்துப் பிடித்தவர் அவரே...!''

''ஓ... சடையாண்டிச் சித்தர் என்று நீங்கள் சொன்னது அவரைத்தானோ?''

''அவரேதான்...! என் உயிரைக் காப்பாற்றிய அவர் ஒரு இசைமேதை என்பது இன்னொரு வியப்பான விஷயம்.''

''அப்படியா...! என்ன ஒரு ஆச்சரியம்.''

''ஆம். என்னைக் காப்பாற்றிய அவருக்கு நன்றி காட்டும் விதமாக நான் அவருக்குச் சில பணிவிடைகளைச் செய்தேன். ஏனோ அவர் வாயைத் திறந்து பேசுவதேயில்லை. 'மௌனம் சர்வ ஔஷதம்' என்பது அவர் எண்ணம் போலும்.''

''சில மகான்கள் அப்படித்தான். அவர்கள் மௌனமாக இருப்பதில் ஆழ்ந்த பல அர்த்தங்கள் உண்டு. அது நமக்கு விளங்கவும் விளங்காது.''

''எனக்கு விளங்கிற்று. உலகியலில் லோகாயத வெற்றிகளை அடைய நினைப்பவர்ளுக்குத்தான் பேச்சு ஒரு ஆயுதம். அதைக் கடந்தவர்களுக்கோ அந்தப் பேச்சே ஒரு தடைக்கல். அதுமட்டுமல்ல - பேசியதைப் புரிந்துகொள்ள மௌனம் மிகமிகத் தேவை. எதையும் மௌனத்தில் சிந்தித்துப் பார்த்தாலே புரிந்துகொள்ள முடியும்.''

''அதுவும் உண்மைதான்...''

''அவரிடம் நான் பலப்பல புதிய ராகங்களைக் கற்றேன். ஆண்டுக்கணக்கில் பயிற்சி பெற்றாலும் கைவராத சில ராகங்கள் எனக்கு ஓரிரு நாளிலேயே வசப்பட்டுவிட்டன.''

''எல்லாம் குருவருள்... குருவருள் இருந்தால் எல்லாம் தன்னால் நிகழும். பூர்வஜென்ம பாக்கியமும் துணை நிற்கவேண்டும்.''

''துணை நின்றது என்றுதான் கருதுகிறேன். ஒருமுறைகூட என்னிடம் 'நீ யார்... எந்த மத்தைச் சேர்ந்தவன்' என்றெல்லாம் கேட்கவில்லை.''

''அப்படிக் கேட்டால் அவர் எப்படித் துறவியாக உலகையே வென்றவராக முடியும்? மகான்களுக்கு மனிதர்களில் பேதங்கள் கிடையாது. உயர்ந்தவர் தாழ்ந்தவர் கிடையாது.''

''ஆமாம் தீட்சிதரே... அவருக்குப் பிறகு உங்களையும் நான் அப்படி ஒருவராகத்தான் பார்க்கிறேன்.''

''சிவசிவா... என்ன இது? பனிமலைக்காட்டில் குளிரையும் மழையையும் ஜெயித்து வாழும் ஆசையே இல்லாத அவர் எங்கே... நான் எங்கே...? என்னைப் போய் அவரோடு பொருத்திப் பார்க்கிறீர்களே...!''

''ஆடையும் துணியும் புறத்திற்குதான். அகத்தில்தானே எல்லாம் இருக்கிறது.''

''என்னைப் புகழாமல் நீங்கள் தொடர்ந்து அந்தச் சித்த புருஷர் பற்றி கூறுங்கள்...''

''கூறிக்கொண்டுதானே இருக்கிறேன். அந்த மலைக்காட்டில் ஒரு குகையில் இருந்தது இந்த ருத்ரவீணை.'' பேச்சோடு பாபா வீணை பற்றி சொன்ன தகவல் தீட்சிதர் முகத்தில் ஒரு அதிர்ச்சி மின்னலை உருவாக்கிற்று.

''என்ன சொல்கிறீர்கள்...? இது அந்த இமயமலையில் குகையில் இருந்ததா?''

''ஆமாம். இது இருந்த இடத்தில் ஒரு சிவலிங்கமும் இருந்தது. எனக்குப் புரிந்துவிட்டது. யாரோ ஒருயோகி இந்த வீணையால் இசை வழிபாடு செய்திருக்கிறார் என்று... ஆனால் என் குருநாதரோ வேறுவிதமாக நினைத்தார் என்றே கருதுகிறேன். அவர் என்னிடம் பேசாமல் பேசினார். எது நினைத்தாலும் அது எனக்குள் என் காதுகளில் மட்டும் கேட்டது.

அதன்படி 'இந்த ருத்ரவீணை ஒரு அபூர்வமான வீணை. இது சிவன் சொத்து' என்று அவர் சொன்னதும் காதில் எதிரொலித்தது.''

''சிவன் சொத்தா?''

''அப்படித்தான் அவர் கூறினார். 'இந்த பூமியில் உண்மையில் இது இருக்கவேண்டிய இடம் தோடிபுரம்' என்றார்.''

''ஓ... என்ன ஒரு ஆச்சரியம். அந்த மகானுக்கு எங்கள் தோடிபுரம்பற்றி தெரிந்திருக்கிறதா?''

''புவனங்களை எல்லாம் அறிந்தவருக்குத் தோடிபுரம் தெரியாதா... இந்த வீணைகூட மனிதன் செய்ததல்ல... அந்த இறைவனே அன்னை சக்தியின் துணைகொண்டு செய்தது. சொல்லப்போனால் நீங்கள் போற்றி வணங்கும் ஆதிசிவன் தன் இசைச் சாதகத்திற்குச் சக்தியின் தயவோடு செய்துகொண்ட வீணை.

இந்த வீணையைப் பொறுத்தமட்டில் அந்தச் சிவனே தச்சன்!''

''ஓ... இந்த விஷயங்களை எல்லாம் அவரா கூறினார்?''

''ஆம்... என்னுள் பேசாமல் பேசினார். 'இந்த பூமி உள்ளான கோள்கள் ஈர்ப்பு விசையால் மட்டும் சுழலவில்லை. இசைச் சிறப்பாலும்' என்பது அவர் சொன்னது.

அணுவைக்கூடப் பிளக்கவல்லது இசையொலி! சப்தமே மனிதன் தன்னை இயக்கிக்கொள்ளப் பயன்படுத்தும் பிரதான சாதனம். அதில் வலிமை மிகுந்தது இசை. அதனினும் வலிமையுடையவை மந்திரங்கள். அந்த மந்திரச் சப்தங்களை இந்த வீணையால் உருவாக்கினால் இந்தப் பிரபஞ்சத்தில் பல மாற்றங்கள் நிகழுமாம்.

தண்ணீரானது எப்படி பள்ளம் கண்டால் துள்ளி ஓடுமோ, காற்றானது எப்படிக் கடல்மேல் மோதி அலை எழுப்புமோ அப்படி ஒரு இயற்கையான இயல்புதான் இது.

இதெல்லாம் என் கருத்தல்ல தீட்சிதரே... என் குருநாதர் எனக்குள் மௌனமாய் உணர்த்தியவை.''

''அது சத்தியமான உண்மைதானே... இல்லாவிட்டால் நானும் நீங்களும் இன்று இசைத்துப் பாடிய ஸ்வரப்ரகாசினி ராகம் அந்த ஈசனைக் குளிர்வித்திருக்குமா...? அசைக்கவே முடியாத கோவில் கோபுரமணிதான் ஆடி அசைந்திருக்குமா?''

''ஆமாம் தீட்சிதரே... இதன் சக்தியை நானும் பல விதங்களில் உணர்ந்துவிட்டேன். அவரது ஆக்ஞைப்படி இதைச் சுமந்துகொண்டு இந்த ஊருக்கும் வந்துவிட்டேன். இதை அந்த தோடீஸ்வரனிடம் ஒப்படைக்க வேண்டும். அது மட்டும் நிகழ்ந்து விட்டால் போதும். என் குருநாதர் எனக்கிட்ட கட்டளையை ஈடேற்றியவனாக மீண்டும் இமயத்திற்குப் பயணமாகிவிடுவேன்.''

''ஓ... எத்தனை அரிய செல்வம் இது...!''

சொன்ன கையோடு மளமளவென்று பூஜை அறைக்குச் சென்று கொத்து மலர்களை அள்ளி எடுத்து வந்து அந்த

வீணைமேல் போட்டு அப்படியே சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார் தீட்சிதர். அவர் மனைவியும் விழுந்து வணங்கினாள்.

''நாங்கள் கொடுத்துவைத்தவர்கள். அந்த ஈசன்தானே இந்த வீணை வடிவில் அன்னை உமையோடு இங்கே வந்துவிட்டான்.

ஒலியால் ஆனது உலகம் என்பார்கள்.

அந்த ஒலியால் ஆனதே இந்த வீணை.

இது என் இல்லம் ஏக நான் கொடுத்துவைத்திருக்க வேண்டும்.''

தீட்சிதர் கண்கள் பனித்தன.

''ஒரு விஷயம்...''

''சொல்லுங்கள்.''

''இந்த உண்மை ஊருக்குத் தெரிவது நல்லதல்ல...''

''அப்படியா... ஏன் அப்படிக் கூறுகிறீர்கள்?''

''இதை ஒரு மாயப்பொருளாகக் கருதி சுயநலம் உள்ளவர்கள் அபகரித்துச் சென்றுவிடக்கூடும்.''

''ஒரு மனிதன் அபகரிக்கக்கூடிய அளவிற்கா இதன் சக்தி மலினமானது?''

''தண்ணீரை யார் அருந்தினாலும் அவர்கள் தாகத்தை தீர்ப்பது நீரின் இயல்பு. அது அருந்துபவரின் குறை நிறைகளுக்கு ஏற்ப தன்னை மாற்றிக்கொண்டு பயன் தருவதில்லை. அப்படித்தான் இதுவும்... இசையின் சிறப்பைப் புவனத்திற்கு உணர்த்தவென்றே உள்ள இந்த வீணை பஞ்சபூதங்களையே ஆட்டிப் படைக்கவல்லது. இதைக் கொண்டு தீ மூட்டலாம். மழை பொழிய வைக்கலாம். அவ்வளவு ஏன் அவரவர் இஷ்ட தெய்வங்களையே இதன்மூலம் தரிசனம் செய்துவிடலாம் என்பதெல்லாம் அந்த அருளாளர் எனக்குள் உணர்த்தியவை. இந்த வீணை ஒரு கட்டை போல் கிடத்தல் ஆகாது. இது அனுதினமும் இந்த மண்ணில் இசைக்கப்பட வேண்டும். அதே சமயம் இது தனிமனித சுயநலத்திற்குத் துளியும் பயன்படுதல் கூடாது,''

''ஓ... இதன்பின்னால் இவ்வளவு சிறப்புகள் உள்ளனவா?''

''ஆம்... நான்கூட ஊரின் நலன் கருதியே இன்று ஆலயத்தில் 'சதாரி' வாசித்தேன். அந்த ராகம் பட்டுப்போன ஆலயத்து ஸ்தலவிருட்சத்தைத் துளிர்க்கச் செய்துவிடும். என்னை முதலில் அவ்வாறு செய்யச் சொன்னவரும் என் குருநாதர்தான். அதே சமயம்

அபிஷேகம் செய்யக்கூட நீரற்ற நிலையில் இந்த மண் இருப்பது கண்டே அமிர்தவர்ஷினி இசைத்தேன். அதனால்தான் இங்கே மட்டும் மழை பொழிந்தது.

தாசியாக இருந்த போதிலும் கோடிதீபம் ஏற்றி வழிபட்டவள் அந்த மாணிக்கவல்லி என்பது எனது திருஷ்டியால் உணரப்படவே இந்த வீணையால் அவள் பார்வையும் பெற்றாள்.

பொதுநலன்... பொதுநோக்கு... அதே வேளையில் பாதுகாப்புடன் இது இருக்க வேண்டும்.''

''அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?''

''கூறுகிறேன். இதை அபகரிக்க வழிமுழுவதும் சிலர் என்னைப் பின்தொடர்ந்தனர். இப்பொழுதுகூட ஒரு நான்குபேர் ஊர் எல்லையில் அமர்ந்துள்ளனர்.

மனித இனத்தின் இயல்பே அபூர்வமானதை சாதாரணமாக்கி அதை மலினப்படுத்திவிடுவதுதான். கர்மவினை காரணமாகவே உயிர்கள் பிறக்கின்றன. அவை அந்த வினைகளை அனுபவித்து தீர்ப்பதில்தான் உலக இயக்கம் உள்ளது. இன்பத்தைத் துன்பமாக்கு வதும் துன்பத்தை இன்பமாக்குவதும் செயல்வினைகளே. இதைப் போன்ற பஞ்சபூதங்களையே ஆட்டுவிக்க வல்ல சாதனங்கள் அந்தச் செயல்வினைகளை வேறு விதமாக்கிவிடும். எனவே இது பயனோடு அதேசமயம் பாதுகாப்புடன் சிவாலயத்தில் இருக்க வேண்டும். உத்தமரான நீங்கள் அதற்கு ஒரு வழி காணுங்கள்!''

பாபாவின் நீண்ட பேச்சின் எதிரொலியாக தீட்சிதர் தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தார்.

''யோசித்து ஒரு முடிவுக்கு வாருங்கள். நான் புறப்படுகிறேன்.'' பாபா வீணையுடன் வந்த வேலை முடிந்தது என்பதுபோல கிளம்பத் தலைப்பட்டார். அப்பொழுது அவர் பார்க்கும்படியாக அந்த வீட்டுக் கூரையில் பருத்த பன்னிரண்டடி நீள நாகம் ஒன்று... சரசரவென்று ஊர்ந்து சென்றபடி இருந்தது.

பாபாவுக்கே ஒரு வினாடி கருக்கென்றது.

தீட்சிதர் அதற்குப் பதிலளிப்பதுபோல பேசினார்.

''அது மனைப்பாம்பு. இங்கே சில இல்லங்களில் மனிதர்களளோடு சேர்ந்து இப்படிச் சர்ப்பங்களும் வாசம் செய்வது உண்டு. வாழும் பாம்பு என்றும் கூறுவோம். நாம் அதைத் தீண்டாத வரை நம்மையும் அது தீண்டாது!''

தீட்சிதரின் விளக்கத்தைத் தொடர்ந்து பாபா முகத்தில் ஒரு அர்த்தமுள்ள புன்னகை வந்து தேங்கியது!

## இன்று

மதியநேரம்!

கோவிலில் இருந்து திரும்பிக்கொண்டிருந்தார் பட்டர். நடையைச் சாற்றிய சாவி இடுப்பில் தொங்கிக்கொண்டிருந்தது.

எதிரிலேயே கல்யாணத் தரகர் வெங்க்கி...! அவரைப் பார்க்கவும் சிரித்தான்.

''இப்பத்தான் ஆத்துக்குப் போய்ட்டுவரேன்...''

என்று ஆரம்பித்தான்.

''என்ன அந்த சிங்கப்பூர் வரன் விஷயமாவா?''

அவரும் ஆரம்பித்தார்.

''இல்லண்ணா... நான் தப்பா சொல்லிட்டேன். மாப்பிள்ளை சிங்கப்பூர் இல்ல. துபாய் பக்கம்...''

''எந்த ஊருங்கறதுலயே இவ்வளவு குழப்பமா?''

''அதான் இல்ல. சிங்கப்பூர்லதான் பேங்க்ல இருந்தார். இப்ப அரபு நாட்டுப் பக்கம் வந்தாச்சு. இங்கே கூட சம்பளம்!''

''அப்ப பெரிய இடம்னு சொல்லு...''

''சந்தேகமென்ன?'' நடந்தபடியே பேச்சு வளர்ந்தது.

''அப்படி ஒரு பிள்ளையாண்டானுக்கு அந்தஸ்தே இல்லாத நான் தோதுப்படுவேனா வெங்க்கி?''

''அவா அந்தஸ்து பாக்கறவா இல்லை. குணத்தைத்தான் பாக்கறவா.''

''கமிஷனுக்காக நீ என்னத்தையாவது அடிச்சுவிடாதே...''

''அண்ணா... அப்படியெல்லாம் சொல்லப்படாது. அருமையான இடம். விட்றாதேள்.''

அவன் அழுத்தம் கொடுக்க வீடும் வந்துவிட்டது. இருவருமாய் உள்ளே நுழைந்தனர். சங்கரன் ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட்டிக்கொண்டிருந்தான். ஏற இறங்கப் பார்த்தான்.

பட்டர் கால் கழுவியபடியே தன் கருத்தைச் சொல்லத் தொடங்கினார்.

''மைதிலிக்கு வயசாயிடுத்துங்கறது வாஸ்தவம்தான். ஆனா ஒரு ஊமைப்பொண்ணை ஒரு பேங்க் மாப்ளை கல்யாணம் பண்ணிக்கச் சம்மதிக்கறான்னா இடிக்கறதே...''

பட்டர் தன் நியாயமான சந்தேகத்தைத்தான் கேள்வியாக்கினார். அது சமையல்கட்டில் இருந்த மைதிலி காதில் விழவும் அறை விழுந்தமாதிரி ஆனாள்.

எட்டிப் பார்த்தாள்.

கண்களில் நீர்த்துளிகள்.

பட்டரும் கவனித்தார். புரிந்துவிட்டது. காயத்ரி, சங்கரன்கூட கவனித்தனர். அப்பா ஊமை என்று சொன்ன வலி அவர்களிடம்... ''அட என்னண்ணா நீங்க. இருபத்தஞ்சு பவுன் நகை போட்டு நன்னா கல்யாணம் பண்ணிக் கொடுக்கமுடியாதா உங்களால...?''

வெங்க்கி இழுத்துப் பிடித்தான்.

''இருபத்தஞ்சு பவுனா...?'' - வாயைப் பிளந்தார் பட்டர்.

''தோளுக்கு ஒசந்த பிள்ளை இருக்கச்சே இருபத்தஞ்சு பவுன் ஒரு விஷயமாக்கும்?''

''வெங்க்கி! நீ விஷயம் புரியாம பேசறே... நான் கோவில்ல மணி ஆட்ற சாதாரண பிராம்மணன். என் பசங்கதான் என் சொத்து. இவாளைத் தவிர என்னாண்ட கால் காசு கிடையாது... எனக்குச் சேத்து வெச்சுக்கவும் தெரியலைடா...''

''எவ்வளவு பெரிய சங்கீதக்காரால்லாம் கோவிலுக்கு வரா. அவாகிட்ட மைதிலிக்குக் கல்யாணம்னா அள்ளிக்கொடுக்க மாட்டாளா என்ன? ஆளுக்கு ஒரு கை... அம்பது பவுனா தேத்திடலாமே.''

''சரிதான். என்னைப் பிச்சை எடுக்கச் சொல்றியா?''

''தப்பென்ன...? அப்பத்தானே பொண்கள கரை சேர்க்க முடியும்.''

''போறும். நீ கிளம்பு. என்னால முடியாது.''

இருவரும் மாறிமாறிப் பேசிக்கொள்ளும்போது பக்கத்து வீட்டு கோமாப்பாட்டியின் தலை தெரிந்தது. அவள்வரையில் பட்டர் கூடப்பிறந்த சகோதரனைப்போல... பேர் சொல்லித்தான் அழைப்பாள்.

''வா கோமா...''

''நான் வர்றது இருக்கட்டும். வெங்க்கியை பார்த்துட்டுதான் வரேன். ஏற்கெனவே ரெண்டுதடவை வந்துட்டுப் போய்ட்டான் போல இருக்கே...''

''ஆமாம் மாமி. நீங்களே சொல்லுங்க. ஒரு இருபத்தஞ்சு பவுனுக்கு ஊமைப்பொண்ணுன்னுகூட பார்க்காம யார் இந்தக்

காலத்துல கல்யாணம் பண்ணிப்பா... சொல்லுங்கோ பாக்கலாம்.''

''எல்லாம் கேள்விப்பட்டுத்தான் வந்திருக்கேன். நீ போய் அவா என்னிக்குப் பொண் பார்க்க வரலாம்ன்னு தகவல் கொடு. இருபத்தஞ்சு பவுன் என்ன முப்பது பவுனே போடுறோம். உனக்கு இப்ப சந்தோஷம்தானே?''

''அப்படிச் சொல்லுங்கோ... பக்கத்தாத்து மனுஷான்னா இப்படித்தான் இருக்கணும்.''

வெங்கி உற்சாகமானான். வந்த வேலை முடிந்துவிட்ட சந்தோஷத்தோடு கிளம்பினான்.

பட்டர் கிட்டத்தட்ட உறைந்துபோயிருந்தார்.

''ஏ கோமா... நீ என்ன நினைச்சிண்டிருக்கே? இருபத்தஞ்சு முப்பதுன்னுண்டு. நான் எங்க போவேன். அவ்வளவு நகைக்கு? கல்யாணச் செலவு வேற இருக்கு. அவன் வேலைக்குப் போனாலாவது பரவாயில்ல. அதை நம்பிக் கடன் வாங்கலாம். இவனோ 'இனிமேதான் சிங்கப்பூர் போகப்போறேன். அங்கதான் வேலைக்குப் போவேன்'னு டெல்லி விசாவுக்குத் தவம் இருந்துண்டு இருக்கான்.''

பட்டர் படபடத்தார். கண்டங்கழுத்தெல்லாம் வியர்த்து வழிந்தது.

கோமாப் பாட்டியோ துளியும் சலனமின்றி சிரித்தாள்.

''என்ன சிரிக்கறே... விரலுக்குத் தகுந்த வீக்கம்தான் தாங்கும். மீறி ஆசைப்பட்டா வெடிச்சுடும்.''

''வாயமூடு வைத்தி... எனக்கு உன் குடும்பநிலை தெரியாதாக்கும்? என்னமோ எனக்குப் பெருசா சொல்ல வந்துட்டே...?''

''நீ பேசறதைப் பார்த்தா தெரிஞ்ச மாதிரியே தெரியலியே எனக்கு.''

''தோடிபுரத்துல இருந்துண்டு, அதுலையும் தோடீஸ்வரன் கிட்டயே இருந்துண்டு இப்படிக்கூடவா இருப்பே?''

''இப்படிக்கூடவான்னா...? புரியல.''

''இந்த ஊரோட சக்தி தெரியலியே உனக்கு. இந்த ஊர்ல பொறந்து வளர்ந்த யாருக்கும் எந்தக் கஷ்டமும் வராதுங்கறது உனக்குத் தெரியாதா?''

''நான் ஒண்ணு சொன்னா நீ ஒண்ணு சொல்றியே கோமா...''

''நான் சரியாத்தான் சொல்றேன். இப்ப என்ன... உனக்கு நகைதானே வேணும்?''

பட்டர் அப்படிக் கேட்ட கோமாப்பாட்டியை அலமலப் போடு பார்த்தார். சங்கரனும் அதற்குமேல் பார்த்தான்.

மைதிலி தூணோடு தூணாக ஒட்டிக்கொண்டு நின்றிருந்தாள். கண்களில் நீர் துளிர்த்து உலர்ந்துவிட்டிருந்தது. காயத்ரியும் கிட்டத்தட்ட அதே போஸில்...

''எதுக்கு ஆளாளுக்கு என்னை இப்படிப் பாக்கறேள். வாங்கோ என் கூட...''

''எங்க...?''

''என் ஆத்துக்குத்தான்!''

''எதுக்கு?''

''வா. சொல்றேன்.''

அவள் வேகமாக நடந்தாள்.

அவர்களும் அவளைப் பின்தொடர்ந்தனர்.

அந்த வீடும் பழையகாலத்து வீடுதான். நீண்ட வெராண்டா. நடுவில் முற்றம். நான்கு புறமும் சரிந்த கூரை. நல்ல காற்றுப்போக்கு சூரியவெளிச்சம் இவைகளோடு கடப்பைக் கல்லால் வேய்ந்த தரைப்பரப்போடு உள்ளே நுழைந்தவர்களை வரவேற்றது அந்த வீடு. கோமா நேராக சமையல்கட்டு அருகே சென்று நின்றவள் மேலே உள்ள பரணைப் பார்த்தாள். பின் திரும்பி சங்கரனை அழைத்து ''சங்கரா, செத்த இந்த பரண்மேல ஏர்றியா?''

''எதுக்குப் பாட்டி...''

''ஏறு. சொல்றேன்.''

''கோமா... எதுக்கு இப்படி விஷயத்தைச் சொல்லாம கண்டதை செய்யச் சொல்றே. அந்தப் பரண்ல அப்படி என்ன இருக்கு காலங்காலமா நீங்க போட்டு வெச்சுருக்கற பழசு பட்டத்தவிர...?''

''செத்த சும்மா இரு வைத்தி நீ... சங்கரா, நீ மேலே ஏறு.''

அவள் அப்படிச் சொன்னதைத் தொடர்ந்து விறுவிறுவென்று மேலே ஏறினான் சங்கரன். கும்மிருட்டாக இருந்தது. கண்ணைக் கரித்தது. ஏறி கை வைத்த வேகத்தில் புழுதி பறந்தது. தும்மினான்.

''அங்க ஒரு கல்சட்டி இருக்கும் பார்...''

''எங்க பாட்டி...?''

''மூலைல பார்...!''

பார்த்தான். இருந்தது. இழுத்தான்.

''உள்ற ஒரு பித்தளைச் சம்படம் இருக்கும் பார்.'' பார்த்தான். இருந்தது. வெளியே எடுத்தான்.

''அதை அப்படியே என் கைல தா...''

தருவதற்காக திரும்பி கையைக் கீழிறக்கினான். பாட்டியும் பிடிக்க முயன்றாள். நழுவியது. சம்படமும் கீழே விழுந்தது. மளமளவென்று உருண்டு ஓடிய அதன் மூடி திறந்துகொள்ள அதனுள் இருந்து மின்னும் பளபளப்புடன் சில தங்க நகைகள் பட்டுத் தெறித்தன. தெறித்தவையும் 'நாங்கள் உனக்குத்தான் மைதிலி' என்கிற மாதிரி நின்றுகொண்டிருந்த மைதிலியின் காலடியில் போய் விழுந்தன!

விக்கித்து விட்டாள் மைதிலி!




## அன்று

**அ**ந்த நான்கு வீரர்களும் அதிகநேரம் ஓய்வெடுத்து விட்டதுபோல உணர்ந்து புறப்பட்டனர். ஊரிலும் பரபரப்பு சற்று அடங்கினதுபோல தெரிந்தது. எதிர்ப்பட்ட சிலரிடம் காரணத்தைக் கேட்டனர்.

''இன்று எங்கள் ஊர் ஆலயத்தில் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. ஒரு பேரொளி தெரிந்தது'' என்றனர்.

''பேரொளியா... அப்படி என்றால்?''

''இது என்ன கேள்வி? இறைவனே நேரில் ஒளிவடிவில் தோற்றம் தந்தானய்யா!''

அந்த பதில் அவர்களைச் சிரிக்க வைத்தது. நால்வரும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு சிரித்தபடியே அது குறித்த கருத்துக்களைப் பகிர்ந்துகொள்ள ஆரம்பித்தனர்.

''அடேய் நெடு மூக்கா... கேட்டாயா இந்தக் கூத்தை? ஒளிவடிவில் இறைவன் வந்தானாமே...?''

''ஏதோ நடந்திருக்கிறது. எதாவது தீப்பிடித்து எரிந்திருக்கும். அதை இவர்கள் தவறாகப் புரிந்துகொண்டிருப்பார்கள்!''

''இல்லை... அப்படியெல்லாம் இல்லை. பல வருடங்களாக இசைக்காமல் இருந்த மணியே அவ்வேளையில் இசைத்துச் சப்தமிட்டது. ஊர் முழுக்க அந்தச் சப்தம் கேட்டதே...!''

''ஆமாம்... நாங்கள்கூட கேட்டோம். அதைக்கூட யாராவது அசைத்து ஒலியெழுப்பியிருக்கலாமில்லையா?''

''முடியாது. ஒலிபெழுப்ப முடியாத நிலையில்தான் அது கோபுரத்தின் மையத்தில் தொங்கிக்கொண்டிருந்தது.''

''அப்படியானால் இறைவன்தான் வந்தான் என்று எல்லோரும் நம்புகிறீர்கள் என்று சொல்லுங்கள்.''

''அதிலென்ன சந்தேகம்? எங்கள் தீட்சிதரின் பாட்டும் அந்த வடநாட்டு பாபாவின் வீணை இசையும்தான் எல்லோரையும் ஸ்தம்பிக்க வைத்துவிட்டதே...!''

இந்த பதில் அந்த நான்கு வீரர்களையும் அப்படியே பிடரியைப் பிடித்து உசுப்பியது.

''பாபாவா? யார் அவர்?''

''யார் என்று தெரியவில்லை. புதிதாக வந்திருக்கிறார். பார்ப்பதற்குப் பக்கிரிபோல தெரிகிறார். இத்தனைக்கும் அவரும் உங்களைப்போலத்தான் உடை அணிந்திருக்கிறார்.''

அவர்கள் அந்த பதிலால் அடுத்த நொடி உச்சி குளிர்ந்து போயினர்.

''இப்பொழுது அவர் எங்கிருக்கிறார் என்று கூறமுடியுமா?''

கண்களை அகட்டிக்கொண்டு நால்வரில் ஒருவன் கேட்டான்.

''அவரா...? அனேகமா தாசி அபராஜிதம் வீட்டில்தான் இருக்க வேண்டும்.''

''தாசி வீட்டிலா?'' பதிலுக்குத் திருப்பிக் கேட்டவிதமே மிகக் கொடுமையாக இருந்தது.

''ஆமாம்... அவள்தானே அவருக்கு அடைக்கலம் தந்தவள். மற்றவர்கள் அவரை மிலேச்சர் என்று கேலிதானே செய்தனர்.''

''ஓ... இப்படிப் போகிறதா கதை... நல்லது.''

அவர்கள் பாபா இருக்குமிடம் பற்றிய உண்மைகளை முழுவதுமாகத் தெரிந்துகொண்டுவிட்டது போல் தங்களை உணர்ந்தனர். முகத்தில் ஒரு புதுப்பொலிவு வந்து தொற்றிக் கொண்டது. பலநூறு மைல்கள் பிரயாணம் செய்து வந்தது வீண்போகவில்லை என்றும் தோன்றியது.

அவர்களில் ஒருவன் குதிரையின் கழுத்துப் பாகத்தில் ஒரு பட்சிக்கூட்டைக் கட்டித் தொங்கவிட்டிருந்தான்.

அதில் பந்தயப் புறா ஒன்று தன் நீல விழிகளால் கொட்டக் கொட்டப் பார்த்துக்கொண்டிருந்தது. அதன் ஒரு காலில் ஒரு உலோகக்குப்பி.

பாபாவைச் சந்தித்துவிட்ட மறுநொடி அந்தக் குப்பியில் செய்தியோடு அந்த புறா டெல்லிநோக்கிப் பறக்கத் தொடங்கிவிடும். அவர்களின் தபால் வழிச் சேவகன் அதுதான்.

''நண்பர்களே... நல்ல சேதி கிடைத்துவிட்டது! கிளம்புங்கள் உடனே அந்த தாசி வீட்டிற்கு. பாபாவைப் பார்த்து முதலில் அவரை அழைத்துக்கொண்டு செல்வதுதான் பிரதான பணி. எவ்வளவு வேகமாகக் கிளம்ப முடியுமோ அவ்வளவு வேகமாய்க் கிளம்புவோம்'' என்று அவர்களில் ஒருவன் படுதுரிதமானான்.

தெருவின் முனையிலேயே ஜதி சொல்லும் சப்தம் கேட்டது. கிட்டே நெருங்க நெருங்க பலவிதமான நறுமணங்களும் கமழ்ந்தன. அந்த நறுமணமும் ஜதிசப்தமுமே அது தாசிகள் வசிக்கும் வீதி என்பதைச் சொல்லாமல் சொல்லிவிட்டன. மனிதர்களில் இசைக்கலைஞர்கள் தனிரகம். வித்தியாசமான ஆசாபாசங்களை உடையவர்கள் அவர்கள். அவர்களில் சிலருக்குக் கணிகையர் சுகம்தான் பிரதானமே. அப்படிப்பட்டவர்களுக் கென்றே சிலபெண்கள் இருந்தாலும் அபராஜித வைஜெயந்திதான் தோடிபுரத்து தாசிகளிலேயே எல்லோராலும் மிக நேசிக்கப் படுபவள்.

அவளோ 'அந்த ஈசனைத் தவிர வேறு ஒருவரையும் நான் மனதாலும் நினைக்கமாட்டேன்' என்பவள். அவள்தான் ஜதிக்கு ஏற்ப ஆடிக்கொண்டிருக்கிறாளோ என்றுகூட அந்தத் தெருவில்

நடந்தபடி இருக்கும் அந்த டெல்லிப் பட்டணத்து வீரர்களுக்குத் தோன்றியது.

அந்தப் பக்கமாய் யார் வந்தாலும் வரவேற்பு மிகபலமாக இருக்கும். வீதிலேயே ஆள்பிடிப்பதில் சில அலிகள் கைதேர்ந்த வர்கள். அவர்கள் ஆட்களைப் பிடித்து அழைத்து வருவார்கள். மற்றதை இல்லத்துப் பெண்கள் பார்த்துக்கொள்வார்கள்.

அந்த நான்கு பேரையும்கூட உல்லாசிக்க வந்ததாகக் கருதி ஒரு அலி வழிமறிக்க, அவர்கள் அந்த அலியை புறத்தில் தள்ளிவிட்டனர்.

இருந்தும் அவர்களில் ஒருவன் ''இங்கே உல்லாசமாக இருக்க எவ்வளவு பொன்?'' என்று கேட்டான்.

''உங்கள் மனம் போல தாருங்கள். பொன்னா பெரியது? தங்களின் வருகைதானே எங்கள்வரையில் பிரதானம்!'' என்ற அலியின் பதிலை ரசித்துவிட்டு ''இங்கே எது அபராஜித வைஜெயந்தி இல்லம்?'' என்று கேட்டான். உடனேயே அந்த அலியின் முகம் வாடியது போல மாறிவிட்டது. ''அவள்தான் அழகியா? அவளைவிட பேரழகிகள் எல்லாம் இங்கே உள்ளனரே?'' என்று பதிலளித்த அலியைப் பார்த்துச் சிரித்தான் ஒரு வீரன்.

அதை எல்லாம் ஒருவன் பார்த்துக்கொண்டே இருந்தான். கள்குடித்த நிலையில் சற்றே போதையில் இருந்தாலும் அவன் கவனமெல்லாம் அந்த நால்வரின் மேலேயே இருந்தது. அவர்களை நெருங்கிவந்தான். பார்ப்பதற்குச் சீமான் வீட்டுப் பிள்ளைபோல இருந்தான். பட்டு அங்கவஸ்த்ரம் தரித்து கைகளில் கங்கணமெல்லாம் பூட்டியிருந்தான்.

கழுத்தில்கூட ஒரு தங்கச் சங்கிலி அணிந்திருந்தான். ஏனோ தலைப்பாகையை அணியாமல் அதை அக்குளுக்கு இடையே வைத்திருந்தான்.

நால்வரும்கூட அவனைப் பார்த்தனர்.

''உங்களுக்கு யார் வேண்டும்?''

''நாங்கள் தாசி அபராஜித வைஜெயந்தி இல்லத்திற்குச் செல்லவேண்டும்.''

''உல்லாசத்திற்குதானே?''

''இல்லை...''

''என்றால்...?''

''அவர்கள் இல்லத்தில்தான் நாங்கள் தேடி வந்திருக்கும் பாபா என்பவர் தங்கியிருக்கிறாராமே?''

அவன் முகம் அதைக் கேட்டு உடனே கசங்கியது.

''என்ன சிந்தனை?''

''நீங்கள் யார்...? அவரை எதற்குத் தேடிக்கொண்டு வந்திருக்கிறீர்கள்?''

''நாங்கள் டெல்லிப் பட்டணத்தைச் சேர்ந்தவர்கள். அங்கு இமாம்தாராக உள்ள ஒருவரின் நகரப்படையில் வீரர்களாக இருக்கிறோம்.''

''ஆச்சரியமாக இருக்கிறதே... உங்கள் பாஷையே புரியாதே! ஹிந்தியில் அல்லது உருதுவில்தானே நீங்கள் பேசுவீர்கள்?''

''தவறு... எங்களுக்கு மட்டும் ஏழு பாஷைகள் தெரியும். அதில் தமிழ் மொழியும் ஒன்று.''

''ஆச்சரியம். படை வீரர்களுக்கே இவ்வளவு பாஷைகள் தெரியுமா?''

''ஆமாம். எங்கள் இமாம்தார் பதினாறு மொழிகள் பேசுவார். அதில் சீனமும் அடக்கம்.''

''தாங்கள் அந்தப் பக்கிரியைப் பார்க்க வந்த காரணம்?''

''அவரை தயவுசெய்து பக்கிரி என்று கூறாதீர்கள். அவர் எங்கள் வரையில் இறைத் தூதர்...''

''தூதர்தானே... இறைவனில்லையே...?''

''தூதர்தானே இறைவனைவிட பெரியவர். இதை நான் கூறவில்லை. பெரியவர்கள், சான்றோர்கள் கூறுவது அதைத் தானே...!''

''வேடிக்கை... அவர் இங்கே வந்து முழுவதுமாக ஒருநாள் கூட ஆகவில்லை. அதற்குள்தான் இங்கே எத்தனை வேடிக்கைகள்.''

''வேடிக்கையா?''

''ஆமாம்... ஆலயத்தில் ஒளி தெரிந்தது, ஆடாத மணி ஆடியது என்று எத்தனை வேடிக்கைகள். அவ்வளவு ஏன்... என் பாட்டிக்குக் கண்ணைக் கொடுத்ததுகூட அவர்தான் என்று அவர் காலில் விழத் தொடங்கிவிட்டனர்.''

''என்னது...? தங்கள் பாட்டிக்குக் கண் கொடுத்தாரா பாபா?''

''அப்படி அவர்கள் சொல்கிறார்கள். நான் நம்பவில்லை. என்னால் நம்பவும் முடியவில்லை.''

''நம்புங்கள். அவர் ஒரு மேதை. மகாஞானி. டெல்லியிலேயே பல அற்புதங்கள் செய்தவர். எங்கள் டெல்லி அரசவை அமைச்சர் மகளும் பேச்சிழந்து ஊமையாக இருக்கிறாள். அவளைப் பேசவைப்பதே எங்கள் நோக்கம். அதற்கு பாபாவை விட்டால் எங்களுக்கு வேறு கதியில்லை.''

''அப்படியானால் அவரை ஒரு மாயாவி என்று கூறுங்கள்!''

''இறைத் தூதர் என்றே கூறினோம். மாயாவி என்று நீங்கள் கூறினால் அதற்கு நான் பொறுப்பாக முடியாது. இப்ராகீம்! இவனுடன் என்ன பேச்சு... அந்த வீடு எங்கே என்று...''

நால்வரில் பதில் சொன்னவன் ஒருவிதக் கோபத்தோடு திசைமாறினான். அது அந்த இளைஞனைக் கீறிக் காயப்படுத்தியது.

''அவசரப்படாதீர்கள்... நான் யார் என்று தெரிந்தால் இப்படிப் பேசமாட்டீங்கள்'' என்றான் அவன்.

''நீ யார்...? இந்த தஞ்சைப் பட்டணத்துக்கே அரசனோ...? பேசாமல் வழியைவிடு.''

''தவறு... நீங்கள் யார் வீட்டுக்குச் செல்லத் துடிக்கிறீர்களோ அந்த வீட்டின் ஒரே ஆண்மகன் நான்...''

''என்ன உளறுகிறாய்?''

''உளறவில்லை... என்னுடன் வாருங்கள். நான் யார் என்பது உங்களுக்குத் தானாய் தெரிந்துவிடும்.''

அவன் பதிலோடு முன்னால் நடந்தான். அவர்களும் ஆவலாகப் பின்தொடர்ந்தனர்.

**வை**ஜெயந்தியே பாபாவுக்கு உணவு பரிமாறிக் கொண்டிருந்தாள். சம்பா அரிசியில் சோறு... மிளகுக் குழம்பு, வாழைக்காய் வதக்கல், சுட்ட அப்பளம் என்கிற எளிய உணவுதான்.

பாபா அதைப் பிரமாதமாய் ரசித்துக் சாப்பிட்டார்.

மாணிக்கவல்லி அதைக் கண்ணில் நீர் பெருகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வாசலில் பெரிய பட்டியக்கற்களால் வேய்ந்த ஒரு திண்ணை. அதற்கும் அப்பால் ஒரு வேனற்பந்தல். பந்தலுக்குள் பல்லக்கு

வைக்கப்பட்டிருந்தது. அருகில் உள்ள வேப்பமரத்தில் இரு குதிரைகள் கட்டப்பட்டு அவைகளுக்குக் காய்ந்த புற்கள் உணவாகப் போடப்பட்டிருந்தன. ஆனால் அவையோ அந்தப் புற்களை உண்ணாமல் வாலைக் குழைத்தபடி எங்கோ பார்த்துக் கொண்டிருந்தன. மரத்துக்கு அப்பால் ஒரு வைக்கோல் படப்பும் படப்பை ஒட்டி ஒரு சாரட் வண்டியும் தெரிந்தன. சாரட்டில் ஒரு சக்கரம் இல்லை. பழுதடைந்து சீர் செய்யப்படுவதற்காக அது கொல்லனின் பட்டறைக்குச் சென்றிருந்தது.

திண்ணையில் சிலர் காத்திருந்தனர்.

அவர்களில் தலையாரி தம்பையாவும் இருந்தார். தொடக்கத்தில் பாபாவை அலட்சயமாகப் பார்த்தவர். அந்தத் தவறை உணர்ந்து திருந்தி வந்ததுபோல் தெரிந்தார்.

'எல்லோரும் பாபா எப்பொழுது வருவார். அவரை எப்பொழுது பார்ப்போம்' என்று துடித்துக்கொண்டிருப்பது நன்றாகத் தெரிந்தது.

இந்த நிலையில் அந்த இளைஞன் டெல்லிப் பட்டணத்து வீரர்களுடன் வந்து சேர்ந்தான்.

''வா வீரேந்திரா... யார் இவர்கள்?'' - தலையாரி அவனை விசாரித்ததில் அவன் பெயர் வீரேந்திரன் என்பது விளங்கியது.

''இவர்கள் டெல்லிப்பட்டணத்து வீரர்கள். எங்கள் வீட்டில் தங்கியிருக்கும் பக்கிரியைப் பார்க்க வந்திருக்கின்றனர்.'' என்றான் வீரேந்திரன் என்கிற அவனும்.

''அவரை அப்படிச் சொல்லாதே... அவர் தெய்வீக புருஷர்.''

''சரிதான்... நீங்களும் அவர் பக்கம் சாய்ந்துவிட்டீர்களா?''

''இறைவன் அவர் பக்கம் இருக்கும்பொழுது நான் எம்மாத்திரம்?''

''சரி சரி... அவர்தான் ஏதோ மாயசக்தியை வைத்துக் கொண்டு சித்துவேலைகள் செய்கிறார் என்றால் நீங்கள் அதற்குமேல் இருக்கிறீர்களே...''

வீரேந்திரன் சலித்துக்கொண்டான்.

அவர்கள் அவனுக்குப் பதில் சொல்லிவிடும்பாடில்லை. அவன் எதிலுமே இப்படித்தான்... எந்த ஒரு விஷயத்திலும் ஊரோடு ஒத்துப்போனதேயில்லை.

தலையாரி முகத்தை வேறுபக்கமாய் திருப்பிக்கொண்டார். அவனோ படுவேகமாக உள்ளே நுழைந்தான். கொட்டைப் பாக்கை

நைந்துகொண்டு பாபாவையும் வைதுகொண்டிருந்தாள் மாலி அபராஜித வைஜெயந்தியின் தாய்க்காரி.

''வரவர இந்த வீடு பஜனைமடம்போல ஆகிவிடும்போல் இருக்கிறது... இசையும் நாட்டியமும் பொங்கிப் பெருக வேண்டியவீடு... இப்பொழுது பஜனைப்பாட்டுக்கு மாறியிருக்கிறது. சீமான்கள் வந்து காத்துக்கொண்டிருக்க வேண்டிய இடத்தில் இப்பொழுது பண்டாரங்கள் வந்து காத்திருக்கிறார்கள்...''

வீரேந்திரன் என்னும் அவன், தாயின் புலம்பலைக் கேட்டுச் சிரித்தான்.

''நீ எதற்கடா சிரிக்கிறாய்...?''

''சிரிக்காமல்...? இதற்குத்தான் அபராஜிதாவை ஆரம்பத்திலேயே அடக்கிவை என்றேன்...''

''நீ வேறு... எரியும் நெருப்பில் எண்ணெயை ஊற்றாதே...!''

''எண்ணெயை ஊற்றவில்லை. அணைக்கத்தான் வந்திருக்கிறேன். ஆமாம்... எங்கே பாபாஜி?''

''பக்கிரி என்று சொல்... பாபாஜியாம் பாபாஜி!''

''சரியம்மா... எங்கே அந்த ஆசாமி?''

''இசை ஆசிரியனாக மாறி உன் அக்காவுக்குப் பாட்டு சொல்லிக்கொடுத்துக் கொண்டிருக்கிறான். அதற்கு உன் பாட்டியும் உடந்தை. அந்தக் கிழவி பேசாமல் குருடியாகவே இருந்திருக்கலாம்.''

''கவலைப்படாதே... டெல்லியில் இருந்து நான்கு பேர் வந்திருக்கிறார்கள். அவர்கள் அந்த பாபாவை அழைத்துப் போகத்தான் வந்திருக்கின்றனர்.''

''அப்படியா... அவர்களுக்கு எதற்கு இந்த பக்கிரி?''

''நீ பக்கிரி என்கிறாய்... அவர்களோ இவரை சித்துவேலை தெரிந்தவராக நினைக்கிறார்கள்.''

''எப்படி வேண்டுமானாலும் நினைத்துவிட்டுப் போகட்டும். முதலில் அவன் போனால் போதும். நமக்குப் பிழைப்பு நடக்க வேண்டும். நாளைக்கு பாபநாசம் மிட்டாதார் வருவதாக தாக்கீது அனுப்பியிருக்கிறார்...''

''தஞ்சை சாந்தாஜியே வந்தாலும் அக்காவிடம் எதுவும் நடக்கப்போவதில்லை. எதற்கு வெட்டிப்பேச்சு?''

''அதுதான் இனி என்னிடம் நடக்காது... அபராஜிதா இனி என் பேச்சைக் கேட்காவிட்டால் அவளுக்கு இனி சிறைவாசம் தான்...''

''அம்மா...''

''நீ போ... முதலில் அந்த டெல்லி வீரர்களைக் கவனி. அவர்கள் அந்தப் பக்கரியைப் பிடித்து இழுத்துக்கொண்டு செல்லட்டும்...''

''எதற்கும் அந்த மனிதர் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்று பார்க்கிறேன்.''

வீரேந்திரன் நகர்ந்தான்.

''அடேய்... இந்தக் காரியத்தையாவது உருப்படியாக செய். என் வயிற்றில் பெண்ணாகப் பிறப்பதற்கு பதிலாக ஆணாக தவறிப்போய் பிறந்துவிட்டவன் நீ... உன்னால் இதுவரை ஒரு கால் பொன்னுக்கும் பிரயோஜனமில்லை. இன்றாவது எனக்குப் பயன்படு...''

அவன் புலம்பலைக் கேட்டபடியே மரக்கட்டைப் படிகளில் மேலேறி அந்த இல்லத்தின் மச்சுப்பகுதிக்குச் சென்றான். செல்லும்போதே காதில் ஒரு சங்கீத ஆலாபனை எதிரொலித்தது.

மேலே விஸ்தாரமான நாட்டியப் பயிற்சிக்கான வட்டவடிவ தளம். ஓரிடத்தில் நடராஜமூர்த்தி விக்ரகம்.

எதிரில் அபராஜித வைஜெயந்தி ஆட, மாணிக்கவல்லி ஜதி சொல்லிக்கொண்டிருந்தாள். சரேலென்று குறுக்கில் போய் நின்றான். ஒரு ஓரத்தில் பாய் ஒன்றில் அமர்ந்து ரசித்துக் கொண்டிருந்தார் பாபா.

வீரேந்திரனை 'இவன் யார்?' என்கிற மாதிரிப் பார்த்தார். அபராஜித வைஜெயந்திக்கோ அவனைப் பார்த்த வினாடி பதட்டம் தொற்றிக்கொண்டது.

''நீ எப்பொழுது வந்தாய்?' என்று ஆரம்பித்தாள்.

''நான் எப்பொழுது வந்தால் உனக்கென்ன...? அதோடு நான் உன்னைக் காணவும் வரவில்லை. இதோ இந்த பாபாஜியைப் பார்க்கத்தான் வந்தேன்...'' என்றான் அவனும்.

பாபாஜியும் 'என்னையா' என்கிற மாதிரி பார்த்தார்.

''பாபாஜி, இவன் என் சகோதரன்...''

''அப்படியா... மகிழ்ச்சி.''

''உங்கள் மகிழ்ச்சி எனக்கு அவசியமில்லை. நீங்கள் இங்கே எங்கள் பிழைப்பைக் கெடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களைக் காண டெல்லியில் இருந்து நான்கு பேர் வந்திருக்கிறார்கள்... கீழே காத்திருக்கிறார்கள்...''

அதைக் கேட்ட பாபாஜியின் முகமும் மாறியது.

''அவர்கள் மட்டுமல்ல... உங்களைக் காண தலையாரி முதல் எல்லோரும் காத்திருக்கின்றனர்...''

வீரேந்திரன் படு அலட்சியமாகப் பேசினான்.

பாபாஜி பதிலுக்கு எதுவும் பேசாமல் அங்கிருந்து அவர்களைக் காணப் புறப்பட்டார்.

கீழே வந்தவரைப் பார்த்து எல்லோரும் வணங்கினார்கள். அவர்களில் தலையாரி தம்பையாவின் வணக்கம் மிக வித்தியாசமானதாகவும் அதீதப் பணிவோடும் இருந்தது.

அந்த நான்கு டெல்லி வீரர்களும்கூட ''சலாமலைக்கும் பாபாஜி... சலாமலைக்கும்...'' என்றனர். பாபாஜியும் வணங்கினார். அந்த வீரர்களைக் கைகளைக் காட்டி பொறுத்திருக்கச் சொல்லிவிட்டு மற்றவர்களிடம் சென்றனர்.

சிலர் காலில் விழுந்து வணங்கினார்.

சிலர் தங்கள் குறைகளைக் கூறினர்

''எல்லாவற்றையும் இறைவனிடம் கூறுங்கள். நான் சாதாரண மனிதன்.'' என்று அவர்களிடம் சொல்லிவிட்டு இறுதியாக தம்பையாவிடம் வந்தார்.

''மன்னிக்க வேண்டும். உங்கள் அருமை தெரியாமல் நான் நடந்து கொண்டுவிட்டேன்.''

''நான் அதை அப்பொழுதே மறந்துவிட்டேன்...''

''உங்களுக்குப் பெரிய மனது... இறைவன் உங்களிடம் இருப்பதை இப்பொழுது இந்த ஊரே உணர்ந்துவிட்டது.''

''அவன் என்னிடம் மட்டுமா? உங்களிடமும்தான் இருக்கிறான்.''

''உங்களோடு பேசிக்கொண்டே இருக்கலாம் போல் இருக்கிறது. தங்கள் பாதம் ஒரு நாள் என் இல்லத்தில் படவேண்டும்.''

''அதற்கென்ன... வந்துவிட்டால் போகிறது.''

''தங்களை ஒரு மகாத்மாவாய் பார்க்கிறேன். ஆனால் நீங்களோ இப்படி ஒரு வேசி வீட்டில்...''

''தவறு... இவர்கள் வேசிகளாய்த் திகழ காமம் மிகுந்த ஆண்கள்தானே காரணம்.''

''உண்மைதான்... ஆனால், நீங்கள் இங்கே இருப்பது சரியில்லை.''

''சரியில்லை என்கிற இடம்தானே எனக்கு முதலில் அடைக்கலம் கொடுத்தது...''

''ஆம்... அதை நான் மறுக்கவில்லை. உங்களுக்கு நான் வேண்டுமானால் ஒரு தனி இல்லத்தையே ஏற்பாடு செய்து தருகிறேன்.''

''உங்கள் அன்புக்கு நன்றி. தேவைப்படும் பொழுது சொல்கிறேன்.''

ஒரு வழியாக தம்பையா கும்பிடுபோட்டுவிட்டுக் கிளம்ப, இறுதியாக பாபா அந்த டெல்லி வீரர்கள்முன் வந்தார்.

அவர்கள், ''பாபாஜி! உங்களுக்காக இமாம்தார் காத்திருக்கிறார். கிளம்புங்கள்.'' என்றனர்.

பதிலுக்குப் பாபாஜியிடம் ஒரு சிரிப்பு.

## இன்று

**மை**திலியின் காலடியில் அந்த நகைகள்!

கல்தோடு... காசுமாலை, சந்திரபிரபை, சூரியப்பிரபை, மயில்கண் மோதிரம், தங்கமெட்டி... தாலிக்கொடி, முத்துமாலை, வைரமூக்குத்தி... ஓ! அவ்வளவு நகைகளும் ஜொலிஜொலி யென்று ஜொலித்தன.

எல்லோருடைய கண்களையும் பறித்தன.

''காயத்ரி... பாத்துண்டே இருந்தா எப்படி? அவ்வளவையும் எடுடி...'' கோமாப்பாட்டி காயத்ரியைத் தூண்ட காயத்ரியும் மளமளவென்று குனிந்து அவைகளை எடுத்து சம்படத்தில் போட்டாள்.

''எல்லாம் மைதிலிக்குத்தான்... எடுத்துக்குங்கோ...'' கோமாப்பாட்டி அடுத்து சொன்னது பட்டரை வாயைப் பிளக்க வைத்தது.

''கோமா... என்ன இது? ஏது இவ்ளோ நகை உன்னாண்ட?''

''சொல்றேன்... இது நகையில்ல... மைதிலி மாதிரி நிர்கதியா நிக்கறவாளுக்குன்னே முந்நூறு வருஷத்துக்கு முந்தி பாபா கொடுத்தது...''

''பாபாவா?''

''ஆமாம்... இதே ஊர்ல இருந்தும் வைத்தி, உனக்கு இது தெரியலையா?''

''புரியற மாதிரி சொல்லு... எது?''

''ப்பாபா தான் வெச்சிருந்த ருத்ரவீணைல கனகதாரா ஸ்தோத்ரம் வாசிச்சு சொர்ணமாரி பொழிஞ்சதா சொல்வா... அப்ப அப்படிப் பொழிஞ்ச சொர்ணம்தான் இது...''

''எனக்கு எல்லாமே புதிரா இருக்கு... இதெல்லாம் முந்நூறு வருஷத்து நகையா என்ன?''

''பின்ன... ஒரு நொண்டிப்பொண்ணைக் கரை சேர்க்க நகைநட்டு இல்லாம ஒருத்தர் சிரமப்பட, அந்தப் பொண்ணும் தற்கொலை செய்துக்கப் பார்க்க, அப்ப பாபா ருத்ரவீணை மூலமா கனகதாரா ஸ்தோத்ரம் வாசிச்சு இந்த நகை வந்ததா சொல்வா...''

''அதுசரி... இது எப்படி உன்கிட்ட?''

''என் கல்யாணம் மட்டும் எப்படி நடந்ததாம்...? நானும் நிர்கதியா நின்ன ஒருத்திதானே... அப்ப இது என் அப்பா கைக்கு வந்து அவருக்கு உதவி செய்தது. வரும்போதே ஒரு கண்டிஷனோடதான் வந்தது. இதை எந்த நிலையிலும் வித்து சாப்பிடக்கூடாது... அப்படியே வெச்சு பயன்படுத்தலாம். ஒரு நாள் கல்யாண கஷ்டம் படறவாளைப் பார்க்கும்போது அவாகிட்ட இதைத் தானமாக் கொடுத்துடணும்கறதுதான் அந்த கண்டிஷன். எனக்கு 14 வயசுல கல்யாணமாச்சு. இப்ப எனக்கு எழுபத்தஞ்சு வயசாறது... கிட்டத்தட்ட அறுபத்து ஒரு வருஷமா இது என்கிட்டதான் இருக்கு. இதுநாள் வரைல என் கண் எதுக்க யாரும் 'நகைநட்டு இல்ல, அதனால கல்யாணம் பண்ணமுடியலை'ன்னு சொல்லல. இன்னிக்கு நீ சொன்ன நிமிஷம் ஞாபகம் வந்தது... எடுத்துக் கொடுத்துட்டேன்...'' கோமாப்பாட்டி ஒரு பெரிய பிரசங்கமே பண்ணி முடித்தாள். வைத்தியநாத பட்டர் சிலிர்த்து விட்டிருந்தார். சங்கரன் அதற்குமேல். மைதிலியோ முதல் காரியமாக அவள் காலில்தான் விழுந்தாள்.

''எழுந்திரு... எழுந்திரு... நீ அமோகமா இருப்பே...'' கோமாவும் அவளை வாழ்த்தினாள்.

''கோமா... உன்னை ஒண்ணு நான் கேட்கலாமா?''

''என்ன வைத்தி...?''

''உனக்கொரு பேத்தி இருக்கும்போது மைதிலிக்குக் கொடுக்கறேன்கிறியே, இவளுக்கு என்ன பண்ணுவே...?''

பட்டர் அலமுவைக் காட்டிக் கேட்டார்.

''அதுக்குள்ற சங்கரன் வேலைக்குப் போய் சம்பாதிக்க மாட்டானா...? இல்லை இவளோட அப்பன்தான் இவளுக்குச் சேத்து வைக்கமாட்டானா...? அதுக்கு இன்னும் எவ்வளவோ நாள் இருக்கு. இப்ப முதல்ல யாருக்குக் கஷ்டம்னு கவனிக்கணும். முதல்ல அந்த வரனை முடி. 'நகைநட்டு இல்லை. அதனால கல்யாணம் நடக்கலை'ன்னு இனி நீ சொல்லக்கூடாது...''

பாட்டியின் செல்லமான அதட்டல் சங்கரனின் கண்களில் நீரையே வரவழைத்துவிட்டது.

''கட்டாயமா பாட்டி, நான் சம்பாதிச்சு அலமுவுக்குப் பண்ணுவேன். அவளும் எனக்கொரு தங்கை மாதிரிதான்'' என்றான்.

''இந்தப் பாசமும் நேசமும் ஒவ்வொரு பக்கத்து வீட்லையும் இருந்துட்டா யாருக்கும் எந்தக் கஷ்டம் வந்துடமுடியும்? சொல்லு பார்ப்போம்...''

பாட்டி நெகிழ்ந்தாள். வைத்தியநாத பட்டர் நகைகள் கொண்ட அந்தச் சம்படத்துடன் தன் வீட்டிற்குக் கிளம்பினார். ''சங்கரா... அந்த வெங்க்கிகிட்ட சொல்லி மாப்ளை ஆத்துக்காராள பொண்பார்க்க வரச்சொல்லு...'' பட்டர் உத்தரவும் போட்டு விட்டார். மைதிலியின் முகத்தில் வெட்கத்தின் சிவப்பு.

**சா**ப்பிட உட்கார்ந்திருந்தான் சாமிநாதன்.

ஒரே மகன்... எனவே தினமுமே விதவிதமாகச் சமைப்பாள் ரங்காயி. அவன் அம்மா.

இலையை விரித்துப்போட்டு அவள் பரமாறுவதைப் பார்க்க வேண்டும். அதற்கெல்லாம் நிறைய கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்றுதான் எல்லோரும் நினைப்பார்கள்.

ஒரு நாள் பளிச்சென்று வேட்டிசட்டை அணிந்தாலும் போதும் உடனே சுற்றிப்போட்டுவிடுவாள். திருஷ்டி பட்டிருக்குமாம்!

இதே கதைதான் சனிக்கிழமைகளில்.

வழியவழிய எண்ணெய் வைத்து அண்டா நிறைய வெந்நீரும் வைத்துத் தருவாள். இவ்வளவுக்கும் பிறகு முதுகு தேய்த்து விடவும் அவள்தான் வரவேண்டும்.

அவ்வளவு பாசம் பிள்ளைமேல்... அவனுக்கும் அம்மா என்றால் உயிர். ஏனோ அப்பா என்றால் மட்டும் கொஞ்சம் உப்பு கூடுதலாகிவிட்ட ஏதோ ஒரு பதார்த்தத்தைச் சாப்பிட்டமாதிரி உணர்வான்.

எப்பொழுது பார் 'நாதஸ்வரம் வாசி... அது நம் குலத்தொழில்!' என்று அவர் சொல்வதால்கூட இருக்கலாம். ரங்காயிக்கு எல்லாவகையிலும் அவர் நேர் எதிர். அன்பாக ஒருநாள் பேசியதில்லை. ஒரு ஐந்து பத்தும் தந்தது கிடையாது. வார்த்தைக்கு வார்த்தை ''இப்படி இருந்தா நீ எப்படிடா உருப்படப் போறே?'' என்றுதான் கேட்பார்.

''உருப்படுகிறேன். உருப்பட்டுக் காட்டுகிறேன் பார்!'' என்று இதனால் ஒரு வைராக்கியமே சாமிநாதனுக்குள் உருவாகிவிட்டது. அதுதான் சிங்கப்பூர், மலேசியா என்று பறந்து சென்று லட்சம் லட்சமாகச் சம்பாதிக்கத் தூண்டியபடியும் உள்ளது. ஏனோ அது ரங்காயிக்குத் துளிகூடப் பிடிக்கவில்லை. ''இங்கே என்ன இல்லை என்று சிங்கப்பூருக்கும் மலேசியாவுக்கும் போக ஆசைப் படுகிறாய்?'' என்று கேட்டும் பார்த்துவிட்டாள்... இதோ சாப்பிட உட்கார்ந்திருக்கும் இப்பொழுதுகூட அவள் மனதில் அந்தக் கேள்விதான். உருளைக்கிழங்கை சிவக்க பொரித்திருந்தாள். நல்ல பொன்னிறம். அதை கோலி உருண்டைபோல இலையில் வைத்தபடி ''ஏண்டா கண்ணு... இந்த வெளிநாடு போவுற ஆசைக்கு மூட்டை கட்டிட்டியா?'' என்று நிதானமாகக் கேட்டாள்.

அம்மாவை ஒரு பார்வை அழமாகப் பார்த்தான்.

''எதுக்கும்மா கேக்குறே...?'' அவனும் திருப்பிக் கேட்டான்.

''இல்ல... உங்க அப்பாருக்குத் துப்புரவா நீ போறது புடிக்கல அதான்...!''

''அவருக்கு நான் நாதஸ்வரம் வாசிக்கணும். அதுவும் அவரைப் போலவே கோவில்ல வாசிக்கணும்னு ஆசை. ஆனா, அதனால என்ன கிடைக்கும் கோவில் வித்வான்கற பேரத்தவிர...?'' திருப்பிக் கேட்டான்.

''அதுபோதாதா கண்ணு...இந்தத் தோடீஸ்வரருக்குத் தினம் நாதஸ்வரம் வாசிக்கணும்னா கொடுத்துல்ல வெச்சிருக்கணும்.''

''இதெல்லாம் நீங்களா கற்பிச்சுகிட்டதும்மா. இப்பல்லாம் ஸ்டீரியோ ப்ளேயரும் சி.டி. கேசட்டுன்னும் கண்டது வந்துருச்சு. அதுல ஒண்ணைப் போட்டு உட்டுட்டா தானா மேள சப்தம் கேட்கப்போகுது. இதுக்கு எதுக்கு ஒரு வித்வான் - அவருக்கு ஒரு தேங்காமூடி பழம்?'' - சாமிநாதன் சர்வசாதாரணமாகச் சிந்தித்தபடி பேசினான். உருளைக்கிழங்கு பொரியல் படு சுவையாக இருந்தது. இலையில் வைக்க வைக்க உள்ளே தள்ளிக்கொண்டிருந்தான். கச்சிதமாக அப்பொழுது சங்கரனும் வந்து சேர...

''வா சங்கரா... சாப்பிடு.''

''இல்லம்மா... இப்பதான் சாப்டுட்டு வரேன்...''

''டேய் சாப்பிட்றா... உருளைக்கிழங்கு பொரியல் சூப்பரா இருக்கு.''

''அதுசரி... வயித்துல இடம் இருக்கணுமே...?''

''அப்ப இந்த உருளைக்கிழங்கையாவது சாப்பிடு.'' - அவன் தன் எச்சில் கையாலேயே ஒரு உருளைக்கிழங்கை எடுத்து அவன் வாயில் திணிக்க, சங்கரனும் அதை விழுங்கினான். பார்த்துக் கொண்டேயிருந்த ரங்காயிக்குக் கண்கள் பனித்துவிட்டன.

''என்னம்மா... நீங்க எதுக்கு அழுவறீங்க?''

''உங்க இரண்டு பேரையும் நினைச்சேன். இந்த ஸ்நேகமும் அன்பும் எப்பவும் இருக்கணும்.''

''அட... இதுக்குத்தானா இந்த பரவசமும் அழுகையும்...? ஆங்... அப்புறம் ஒரு முக்கியமான விஷயம்...''

''என்னப்பா?''

''என் தங்கை மைதிலிக்கு ஒரு நல்ல இடத்துல இருந்து வரன் வந்திருக்கம்மா...''

''அப்படியா... பையன் எந்த ஊர்...? என்ன உத்யோகம்?''

''துபாய்ல பேங்க்ல இருக்கறதா கேள்வி.''

''என்னடா சொல்றே... துபாய்லையா... அப்ப நமக்கு அங்க வர உதவி பண்ணுவாப்படின்னு சொல்லு.''

''டேய் இருடா. இன்னும் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக்கக்கூட இல்ல. அதுக்குள்ற கனவு காண்றியே...''

''ஒரு ஆசைதான்...''

''நீ கவலைப்படாதே சங்கரா... நாங்கெல்லாம் இருக்கோம். பணம் காசுன்னு எது வேணும்னாலும் கேளு.''

''நிச்சயமாம்மா. இப்போதைக்கு ஒரு குறையும் இல்ல. மைதிலியோட அதிர்ஷ்டம். அந்தக் காலத்து பாபா நகைகளே அவளுக்குக் கிடைச்சிடுத்து...''

''பாபா நகைகளா?''

''ஆமாண்டா... முந்நூறு வருஷத்துக்கு முந்தி ருத்ரவீணையால கனகதாரா ஸ்தோத்ரம் வாசிச்சாராம் பாபா. அப்ப கிடைச்ச நகைகளாம்.''

''இந்த அம்புலிமாமா கதையை உனக்கு யாருடா சொன்னது?''

''அது ஒண்ணும் அம்புலிமாமா கதை இல்ல. நடந்த ஒரு விஷயம். கடைசி கடைசியா கோமாப்பாட்டி கல்யாணத்துக்கு அந்த நகைதான் உதவிச்சுன்னு சொல்வாங்க. இப்ப அது மைதிலிக்கு வந்திருக்குதாக்கும்?'' ரங்காயி தனக்கும் அந்த உண்மை தெரியும் என்கிற மாதிரி பேசினாள். சாமிநாதன் அவளைப் பதிலுக்குப் படு ஆச்சரியமாகப் பார்த்தான்.

''என்ன பாக்கறே?''

''இல்ல... இந்த ஊர்ல இந்த மாதிரி எத்தனை கதைம்மா இருக்கும்?''

''கதை இல்லடா, சத்யம். இந்த ஊரைப்பத்தி உனக்கு என்ன தெரியும்? இது புண்ய பூமி.''

''அவங்கவங்களுக்கு அவங்கவங்க பூமி புண்ணிய பூமிதான்,''

''ஏன்தான் இப்படி எதுலையும் நம்பிக்கை இல்லாம பேசறியோ?''

''நம்பற மாதிரி இருந்தா நம்பலாம். ஆனா நம்ப முடியாதபடில்ல சொல்றே?''

''சரிடா... சாப்ட்டு முடி!''

சங்கரன் தூண்ட சாப்பிட்டு முடித்தான். ஒரே குஷியாக இருந்தான். கைகழுவ குழாயைத் திறந்தபோது சிவப்பாக காவிரி நீர்!

''என்ன இது... காவிரில புது வெள்ளமா பாய்ஞ்சுகிட்டு இருக்கு.''

''உனக்குத் தெரியாதா...? மேட்டூர் பக்கம் சரியான மழையாம். டேமை திறந்துவிட்டு இந்த கரைக்கு அந்த கரைக்குமா தண்ணி போறது...''

''அட... போய்ப் பார்ப்போமா?''

''பாக்கறது என்ன... குளிச்சுட்டே வருவோம்.''

''இப்பதானேடா சாப்ட்டுருக்கேன். குளிச்சா தூக்கம் வரும்டா...''

''வரட்டுமே... எந்த ஆபீக்குப் போய் நீ ஃபைல் பாக்கணும்.''

பேச்சோடு போய் சங்கரனே அவன் மொபட்டை எடுத்து ஸ்டார்ட் பண்ண, சாமிநாதன் பின்னால் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

காவிரியிடம் அசுரப் பாய்ச்சல்.

திமுதிமுவென்று லட்சம் சிவப்புக் குதிரைகள் ஒன்றோ டோன்று ஒட்டிக்கொண்டு ஓடிவருகிற மாதிரி வந்து கொண்டிருந்தாள்.

நல்ல மத்யான வெயில்பட்டு ஒரே ஜொலிப்பு வேறு. கரையோரமாக மொபட்டை நிறுத்திவிட்டுப் பார்த்த சாமிநாதனுக்கும் சங்கரனுக்கும் ஒரே உற்சாகமாசிவிட்டது.

சாமிநாதன் சட்டையைக் கழட்டி மொபட் பக்கத்தில் வைத்துவிட்டு ஒரே ஓட்டமாய் ஓடி பாலத்தின் மேல் இருந்து ஒரு டைவ் அடித்தான்.

இப்படி அவன் விழுந்தால் மேலே வர வெகுநேரம் ஆகும். எங்கே எழுந்து வருவான் என்பதும் தெரியாது. தண்ணீருக்குள் அந்த அளவுக்குத் தம் கட்டுவான். சங்கரனும் எண்ண ஆரம்பித்து விடுவான். சமயங்களில் ஐந்நூறு வரைகூட எண்ணியிருக்கிறான். சாமிநாதனுக்கு அந்த அளவுக்கு மூச்சுக் கட்டும் சக்தி. சங்கரனால் அந்த அளவெல்லாம் தம்கட்ட முடியாது. இருந்தாலும் போட்டி போடுவான்.

தண்ணீரில் ஓடிப்போய் குதித்து மறுகரையில் தலை எடுத்து ஆசுவாசித்த சாமிநாதன் ''சங்கரா, வாடா'' என்று கத்தினான்.

''இதோ...'' சங்கரனையும் ஆவல் விடவில்லை. பாலத்தின் மேல் ஒரே ஓட்டமாய் ஓடிச்சென்று தண்ணீரில் விழவும் தண்ணீர்த் தாரைகள் பாலமளவு எகிறித் தெளித்தன. அதே சமயம் அதே பாலத்தின்மேல் உபாசகரும் வந்து கொண்டிருந்தார். சாமிநாதன் மறுகரையில் இருந்தபடியே அவரைப் பார்த்தான். அவரும் பார்த்தார்.

''என்ன சாமி குளிக்கவா?'' உரத்தகுரலில் கத்திக் கேட்டான்.

''ஆமாம்ப்பா... அதுக்கேதான்.'' அவரும் பதிலோடு கரையில் கால்வைத்தார். ஜிலேபிகெண்டைமீன்கள் ஏதோ மாநாட்டுக் கும்பலைப்போல நீந்திக்கொண்டிருந்தன. கணுக்காலைக் கடிப்பதில் அவைகளுக்கு எப்பொழுதுமே ஒரு ஆனந்தம். உபாசகருக்கும் அதனால் கொஞ்சம் கூசியது!

சாமிநாதனோ தண்ணீப்பரப்பில் சங்கரனைத் தேடிக் கொண்டிருந்தான். தண்ணீருக்குள் பாய்ந்தவன் இந்த நொடி வெளிப்பட்டிருக்கவேண்டும். ஆனால் தலையே தெரியவில்லை. சாமிநாதனை மெல்ல அச்சம் ஆக்ரமிக்க ஆரம்பித்தது.

''சங்கரா...!'' அலற ஆரம்பித்தான்.

உபாசகரும் திரும்பிப் பார்த்தார்.

''டேய்ய்... எங்கடா போய்ட்டே?'' அவனிடம் திரும்பவும் அலறல்.

உபாசகருக்குப் புரிந்துவிட்டது.

''சாமிநாதா... யாரைத் தேடறே?'' கேட்டார்.

''என் நண்பனை சாமி... நீங்க வரும்போது ஓடிவந்து குதிச்சானே...?''

''ஓ அவன்தானா...?''

''ஆமாம் சாமி! எனக்குப் பயமா இருக்கு. ஓட்டம் வேற அதிகமா இருக்கு. சுழல்லகிழல்ல சிக்கிட்டானா?'' கேள்வி யோடு எழுந்து கரை ஓரமாகவே கத்திக்கொண்டு ஓடினான்.

''சங்கரா...!''

''சங்கரா...''

ஊஹூம்... அங்கங்கே கரை ஓரமாய் சோப்புப்போட்டுக் கொண்டும் தலைமுழுக்குப் போட்டபடியும் இருக்கும் சிலர்தான் திரும்பிப் பார்த்தனர். நீரோ பொங்கிப் புரண்டபடி ஓடிக் கொண்டிருந்தது. எங்கிருந்தோ அடித்து வரப்பட்டிருந்த ஒரு மரக்கிளை தபதபவென்று உருண்டு ஓடியபடி இருந்தது. சாமிநாதனுக்குப் பயமாகிவிட்டது. நிச்சயம் சங்கரன் ஆற்றுக்குள் சுழலிலோ இல்ல புதைமணலிலோ சிக்கக்கொண்டிருக்க வேண்டும் என்று தோன்றியது.

''அய்யோ... இந்தக் காவிரி தினம் இப்படி ஒருவரைப் பலி வாங்கிவிடுகிறதே... போன வாரம் கூட தமிழாசிரியர் ஒருவரைக் கொண்டுபோய்விட்டது. உடம்புகூடக் கிடைக்கவில்லை...!''

''சங்கரா... டேய்...!'' சாமிநாதனுக்கு குரல் உடைந்து போனது. எல்லோரும் பரிதாபமாகப் பார்த்தார்கள்.

''பட்டர் மகனா ஆத்துல மூழ்கிடிச்சு?'' என்று ஒருவர் ஈனசுரத்தில் கேட்டார்.

சாமிநாதன் பதில் சொல்லாமல் நீர்ப்படுகைமேலேயே பார்த்தான்.

''டேய்... சின்னப்பசங்க மாதிரி நாம குதிச்சிருக்கக்கூடாது.'' என்றும் வாய்விட்டான். அப்பொழுது தோள்மேல் ஒரு கரம்.

திரும்பிப் பார்த்தான். உபாசகர்தான்!

''சாமி ஈ...''

''என்ன... சினேகிதன் போய்ட்ட கவலையா?''

''சாமி... அப்படி எல்லாம் சொல்லாதீங்க. அவனுக்கு எதுவும் ஆகிடக்கூடாது. அப்புறம் இந்தக் காவிரியை நான் சும்மா விடமாட்டேன்.'' - குரல் உடைந்துபோக ஒருமாதிரி செருமலுடன் பேசினான்.

''உன் நண்பன்மேல் அவ்வளவு பற்றுதலா?''

அவர் என்னவோ எந்தப் பதட்டமும் இன்றி படு நிதானமாகக் கேட்டார்.

''நகருங்க சாமி... வந்தா சங்கரனோட வரேன். இல்ல நானும் போயிடறேன்'' சாமிநாதன் அவரைத் தள்ளிக்கொண்டு பாயப் போனான். உபாசகர் தடுத்தார்.

''அவசரப்படாதே... அவன் விதி வேற உன் விதி வேற!''

''அட என்னங்க சாமி... இந்நேரம் அவன் போயே சேர்ந்திருப்பான். வழிய விடுங்க...''

ஒரே பாய்ச்சலாகப் பாயப்போனவனை மீண்டும் தடுத்த உபாசகர் அவன் எதிரிலேயே மெல்ல நீருக்குள் இறங்கினார்.

கொஞ்சம் கொஞ்சமாக அவர் உடம்பும் மூழ்கத் தொடங்க ''தைரியமா இரு... உன் நண்பனோட வரேன்.'' என்று சொன்ன படியே மூழ்கினார். நீர்ப்படுகைமேலேயே சாமிநாதன் பார்வை இருந்தது. கூடவே மேலும் சிலர் சேர்ந்துவிட்டனர்.

''நீரோட்டம் இன்னிக்கு அதிகம். உடம்பு மண்ணுல சொருகியிருக்கும்'' என்றார் ஒருவர்.

''இதே ஊர்ல இருந்துகிட்டு இந்த ஆத்தை புரிஞ்சுக்கலையே நீங்க.'' என்று குத்திக்காட்டினர் ஒருவர்.

சாமிநாதனுக்கு அழுகை அழுகையாக வந்தது. சற்று முன்தான் மைதிலிக்குக் கல்யாணம் என்று ஒரே சந்தோஷமாக இருந்தான். அதற்குள் இப்படியாகிவிட்டதே... அவனுக்கு அழுகை என்றால் என்ன என்றே தெரியாது. அப்படிப்பட்டவன் கண்களில் இருந்து நீர் பீறிட ஆரம்பித்தது. அதே சமயம் ஆற்றில் தண்ணீர்ப் படுகை மேல் உபாசகர் தலையும் தெரிந்தது. கூடவே, அவர் தோளில் சங்கரன்! தலை முடியெல்லாம் மணல் திப்பிகள். அவன் ஆற்றுமணலுக்குள் புதைந்துவிட்டான் என்பதை அதுவே சொல்லாமல் சொன்னது.

''சாமீஈ...'' அதைப் பார்த்து ஒரு அலறு அலறிவிட்டான் சாமிநாதன். அவரும் கரையில் உடம்பைக் கிடத்தினார்.

'போய்ச் சேர்ந்துட்டான்...' என்கிற மாதிரி பார்த்தார். சாமிநாதன் உடனே தலையில் அடித்துக்கொள்ளத் தொடங்கினான். ''சங்கரா... அநியாயமா இப்படிப் போய்ட்டியேடா...'' என்றபடியே மார்புமேல் விழுந்து அலறினான். உபாசகர் அவனை இழுத்து பின்னால் விட்டவர், ''கொஞ்சம் பொறு... இன்னும் சில நாடிகள் துடிக்கறது. ஜீவமூச்சைத் திரும்பத் தூண்ட முடியுமான்னு பாக்கறேன்'' என்று அவன் வாயோடு வாய்வைத்து ஏதோ செய்யத்தொடங்கினார்.

அதே சமயம் அந்த அதிசயமும் நடக்க ஆரம்பித்தது. சங்கரன் கால்களில் விரல்கள் அசைந்தன. பின் மெல்ல காலே அசைந்தது. ஒருசில நிமிடங்களில் எல்லாம் அவன் கண்திறந்து பார்த்தான்.

''இது இவனுக்கு மறுஜென்மம். இனி இவனுக்கு நூறு வயசு.'' என்றார் சாமிநாதனைப் பார்த்து. பதிலுக்கு சாமிநாதன் அவர் கைகளைக் கண்ணில் ஒத்திக்கொண்டான்.

ஈரஉடம்பும் காயாத தலையுமாக நடந்துகொண்டிருந்த உபாசகர் எதிரில் ஒரு பயங்கர காட்சியாய் சுந்தராம்பாளும் திலகமும் சுடுகாட்டுப்பாதை ஒன்றில் நடந்தபடி இருந்தனர். உபாசகரை அது சுண்டி இழுத்தது.

'எங்கே போகிறார்கள்?' கேள்வியும் பிறந்தது. அப்படியே கால்கள் அவர்களைப் பின்தொடரத் தொடங்கிவிட்டன. திலகம் இடுப்பில் ஒரு கூடையை வைத்திருந்தாள். அதில் என்ன இருக்கிறது என்று தெரியவில்லை. இந்த நிலையில் அவளைப் பார்க்கும் சிலர் காலில்கூட விழுந்து எழுந்தனர்.

உபாசகரிடம் ஆச்சரியம் அதிகமாகியது.

இதற்குள் அவர்கள் சுடுகாட்டுக்குள்ளேயே நுழைந்து விட்டிருந்தனர். உபாசகருக்குச் சுடுகாட்டுக்குள் நுழைய அசூயையாக இருந்தது.

'இப்பொழுதுதான் குளித்திருக்கிறோம்... சுடுகாட்டுத் தீட்டு திரும்ப குளிக்கவைக்கும்' என்று சிந்திக்க வைத்தது. இருந்தும் இரண்டு பெண்கள் ஒரு மாலைவேளையில் இப்படித் தனியாகச் செல்வது என்னவோபோல் தோன்றியது. நிச்சயம் அதற்குப் பின்னால் ஒரு மர்மம் இருக்க வேண்டும் என்று கருதியவர், துணிச்சலாய் அவர்களைப் பின்தொடர ஆரம்பித்தார்.

ஒரு பிணம் மிக நிதானமாக வேக்காட்டில் இருந்தது. படுசன்னமாய் ஊதுபத்திப் புகைபோல கீற்றுப்புகை மூக்கைச் சிணுப்பியது. துண்டால் மூக்கை மூடிக்கொண்டு நடந்தார். அங்கங்கே சில இடங்களில் மனித உடலின் சில எலும்புத் துண்டுகள். ஒரு இடத்தில் மண்டை ஓடு ஒன்றே கிடந்தது.

உபாசகருக்கு அதெல்லாம் ஒரு பொருட்டாகவே தோன்ற வில்லை.

அவர்களோ சுடுகாட்டுக்குள் புகுந்து அதன் ஒற்றையடிப் பாதை வழியாக சுடுகாட்டுக்கு அந்தப் பக்கமாகச் செல்லும் தாசி பங்களா நோக்கி நடந்தபடி இருந்தனர்.

'அதுதான் தாசிபங்களாவா?' உபாசகர் ஓங்கி உயர்ந்து நிற்கும் மரக்கூட்டங்களுக்கு நடுவில் தாசிபங்களாவைப் பார்த்துவிட்டு தனக்குள் கேட்டுக்கொண்டார். சரேலென்று ஒரு கரம் இடையில் நீண்டது. வெட்டியான் நாதமுனியின் கை அது.

''ஏய், யார் நீ...? எதுக்கு அந்தப் பக்கம் போறே?''

அவன்தான் உபாசகரைக் கேட்டான்.

''அவசியம் சொல்லணுமா?'' - இது உபாசகர்.

''ஆமாம்...''

''அதுசரி... அந்த இரண்டு பெண்கள் இன்னும் கொஞ்ச நேரத்துல இருட்டப்போற நிலைல - எங்க போறாங்க?''

''அது உனக்குத் தேவையில்லாத விஷயம்...''

''நீ என்னைத் தடுத்து நிறுத்தறதுகூடத்தான் உனக்குத் தேவையில்லாத விஷயம்...''

''அவங்க, அவங்க பங்களாவுக்குப் போறாங்க. நீ திரும்பிப்போ...''

''அதைச் சொல்ல நீ யார்...?''

''நான் இந்தச் சுடுகாட்டு வெட்டியான். உன் நல்லதுக்குச் சொல்றேன்... திரும்பிப்போ.''

''என்னைச் சொல்ற நீ, அவங்கள ஏன் சொல்லல...?''

''இந்தச் சுடுகாடு, அந்த பங்களா எல்லாமே அவங்க சொத்து. அவங்கள என்னால சொல்லமுடியாது.''

''மீறிப்போனா என்ன செய்வே?''

''நான் ஒண்ணும் செய்யமாட்டேன். அங்க இருக்கற பாபாவோட ஆவியே கவனிக்க வேண்டியத கவனிச்சிடும்...

வெட்டியான் நாதமுனி தீர்க்கமாகத்தான் சொன்னான்.

''அப்ப அந்த ஆவியே என்னைக் கவனிச்சுக்கட்டும்... நீ எனக்கு வழியை விடு...'' உபாசகர் அவனைத் தாண்டி நடக்கத் தொடங்கினார்.

''வேண்டாம்... என் கண் எதிர்க்க ஒருத்தர் சாகப்போறதை என்னால் பார்க்க முடியாது...'' அவன் மீண்டும் முன்னால் சென்று கழியைக் கொண்டு மறித்தான்.

உபாசகருக்கும் சங்கடமாக இருந்தது. அவன் தன் கடமையைச் செய்வதாக உணர்ந்தவர் ஒரு முடிவுக்கு வந்த மாதிரி அவனை முறைத்துவிட்டு திரும்பிச் செல்லத் தொடங்கினார்.

அவன் முகத்திலும் நிம்மதிப் பெருமூச்சு.

நடுவில் எரிந்துகொண்டிருந்த சிதை ஒன்று உடம்பின் கொழுப்புகள் அப்படியே சுண்டி இழுக்கப்பட எழுந்து அமர்ந்தது. இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் கையில் இருக்கும் கருவேலந்தடியால் பிணத்தின் மார்பில் தொம்மென்று ஒரு அடி அடித்தால் அது அப்படியே நொறுங்கிப் பொலபொலத்து விழும்... சடசடவென்று சப்தமும் கேட்கும்.

இப்பொழுதும் அப்படித்தான் ஆனது.

அதே சமயம் அவன் காதில் ஒரு பெண்ணின் ''காப்பாத்துங்க. என்னைக் காப்பாத்துங்க!'' என்கிற அலறல். அவனுக்கே பகீர் என்றது. அப்படியே சப்தம் வந்த திக்கு நோக்கி வேகமாக ஓடினான். ஒரு சமாதியைக் கடந்து அவன் ஓடி முடிக்க அந்தச் சமாதியின் பின்னால் இருந்து உபாசகரும் வெளிப்பட்டார். அவர் முகத்தில் மர்மமான ஒரு சிரிப்பு... அவர்தான் தன் சித்துவேலையால் அப்படி ஒரு சப்தத்தை எழுப்பியவர். மளமளவென்று அந்த மயான ஒற்றையடிப் பாதையில் நடக்க ஆரம்பித்தார்.

காவிரித் தண்ணீரின் ஊட்டத்தில் சுடுகாட்டு மரங்களிடம் நல்ல ராஜவளர்ச்சி. ஒரே அடர்த்தியாக இருந்தது. சுடுகாட்டு முடிவில் பரந்த ஒரு மைதானம் ஆரம்பமாக, அந்த மைதான முடிவில்தான் தாசிபங்களா இருந்தது. தாசிபங்களாவுக்கு பக்கத்திலேயே பெரிதாக கிராதிக் கதவு போட்ட ஒரு நந்தவனம். நந்தவனத்தில் நிறைய செம்பருத்தியும் செவ்வரளியும் பூத்துக்குலுங்கிக் கொண்டிருந்தன. மாளிகை நடுவில் ஜன்னல் வழியே திலகம் கொண்டு சென்றிருந்த பெட்ரோமாக்ஸ் விளக்கின் வெளிச்சக்கசிவு. உபாசகர் நின்று நிதானமாக அந்த மாளிகையை ஏறிட்டார். மிகப்பெரிய மாளிகை. 'நிச்சயம் அரசர்களால்தான் கட்டப்பட்டிருக்க வேண்டும். சுந்தராம்பாளின் வம்சாவளியில் யாருக்காவது எழுதிக் கொடுத்திருக்க வேண்டும்' என்று தோன்றியது. அதனால்தான் ஊரும் அதை தாசிபங்களா என்று கூறியிருக்கவேண்டும்... காரணப் பெயர்களே இப்படித்தானே?

சிந்தனைகளோடு நடந்தார். கிராதிக்கதவு வழியாக நந்தவனத்தை எட்டிப்பார்த்தார். ஒரு சமாதியும் அதன்மேல் பச்சைத்துணி ஒன்றும் ¸ பார்த்தப்பட்டு அது ஒரு தர்கா என்று சொல்லாமல் சொன்னது. பக்கத்திலேயே குட்டிக் குட்டியாக மண்டபங்கள். மண்டபமையத்தில் ஒரு சாண் உயர சிவலிங்கங்கள்!

ஆச்சரியம் அப்பி எடுத்தது.

இஸ்லாமியருக்கு அவருக்கு ஏற்ற விதத்திலும் இந்துவுக்கு அவருக்கு ஏற்ற விதத்திலும் சுதந்திரம் அளித்து நிறுவப்பட்டது போலத் தெரிந்தது. அந்த தர்கா சமாதி அனேகமாக பாபாவுடையதாக இருக்கலாம்.

அந்த லிங்கங்கள்?

அவருக்குள் அவை குழப்ப மூட்டின.

ஒரே இடத்தில் இரண்டு கலந்து இருப்பதும் ஏன் என்று தெரியவில்லை.

புதிரான காட்சி... அந்த நேரத்து உணர்வுகளை அதிகரிப்பதுபோல திடும்மென்று மெலிதான வீணை இசையும் கேட்க ஆரம்பித்தது.

உபாசகரிடம் மெலிதான ஸ்தம்பிப்பு

அந்த வீணை இசை தாசிபங்களாவில் இருந்துதான் வரவேண்டும். அதுவும் சாதாரண வீணை இசை இல்லை அது... ருத்ரவீணைதான் இப்படி நெடுந்தூரம் கேட்கும் விதமாய் சப்தம் எழுப்பும்.

'அப்படியானால் நான் தேடி வந்திருக்கும் ருத்ரவீணை இங்கேதான் இருக்கிறதா...?' அவருக்குள் கட்டுப்படுத்த முடியாத அளவு உணர்ச்சிகள் கிளர்ந்து எழத் தொடங்கின.

'கையில் கூடையுடன் சென்ற திலகமும் தாசி சுந்தராம்பாளும் உள்ளே என்ன செய்து கொண்டிருப்பார்கள்?' கேள்வி எழும்பியது. எல்லாவற்றுக்கும் ஒரு விடையைத் தெரிந்துகொள்ளாமல் போகக்கூடாது என்கிற உந்து சக்தி அவரை அந்த பங்களா நோக்கித் தள்ளியது.

பூனைபோல் நடந்து பங்களா முகப்பில் போய் நின்றார். முன்னாலே பெரிய கிராதிக்கதவு. அதைத் தொடர்ந்து ஒரு இருபதடி தூரத்துக்கு நடைபாதை. பின் நான்கு படிகளில் ஏறினால் வராண்டா. வராண்டா முடிவில் பெரிய நிலைக்காலும் தேக்குக் கதவும் கடைசல் வேலையில் பிரம்மத் தச்சர்களுக்கே சவால் விடுவது போன்ற கலைநயம். கதவு மூடப்பட்டிருந்தது. அருகே ஒரு முழம் அளவிற்கு பூட்டு சாவியுடன் எடுத்து வைக்கப் பட்டிருந்தது. உள்ளே போன நிலையில் தாழிட்டுக் கொண்டு விட்டார்கள் என்பது விளங்கியது.

'உள்ளே என்னதான் செய்கிறார்கள்...?' சட்டென்று வீணை இசைவேறு நின்று நிசப்தம் காதை அடைத்தது.

திரும்பவும் பூனைபோல நடந்து அந்தக் கதவருகே சென்றார். குனிந்து சாவித்துவாரம் வழியாக பார்ப்பதற்காக முனைந்துபோது 'ஸ்ஸ்ஸ்...' என்கிற காற்றின் சீற்றம்...!

எங்கிருந்து?

மெல்லிய இருளில் சப்தம் வந்த திசையை உணர்ந்து பார்த்தபோது பகீர் என்றது. பன்னிரண்டு அடி நீளத்திற்கு குறைவில்லாத நாகம் ஒன்று அவர் தலைக்குமேல் நிலைக்கால் விட்டத்தில் அமர்ந்த நிலையில் அகட்டலான படத்துடன் சீறிக் கொண்டிருந்தது.

'கதவைத் தொட்டுப்பார்... கொத்து விழும்' என்று எச்சரிக்கிற மாதிரிகூட இருந்தது.

என்னதான் மந்திரசித்தியும் மாயங்களும் வசப்பட்ட மனிதராக அவர் இருப்பினும் அந்தத் தோற்றமும் சீற்றமும் அவர் மனதின் அடியாழம்வரை நுழைந்து பீதிப் புயலை உருவாக்கியது. அதற்குமேல் தைரிய வயப்பட்டு அந்தத் துவாரம் வழியாகப் பார்க்க மனது இடம் தரவில்லை. அப்படியே நழுவி பக்கவாட்டில் நடந்தார். அங்கும் 'ஸ்ஸ்ஸ்' சப்தம். ஜன்னல் கம்பியில் உடம்பை

வளைத்துக் கட்டிக்கொண்டு நெளிந்துகொண்டிருந்தது இன்னொரு நாகம். அதே வேளையில் அந்தக் கம்பிகளின் இடைவெளி வழியாக உள்ளே நல்ல விளக்கின் ஒளியில் ஒரு படம் தெரிந்தது.

கையில் வீணையுடன் அமர்ந்து வாசிப்பது போன்ற படம் அது. கீழே நவாப் ஜான் பாபா என்கிற எழுத்துக்கள் வேறு!

படத்தை உற்றுப் பார்த்தவருக்குள் நினைவுகள் எங்கெங்கோ பின்நோக்கிச் செல்ல ஆரம்பித்தன. இந்தப் படத்தை இதற்கு முன்பும் எங்கோ பார்த்திருப்பதாகத் தோன்றியது.

அதேசமயம் கதவு திறக்கப்படும் அரவம்.

சுந்தராம்பாளும் திலகமும் திரும்பத் தொடங்கியிருந்தனர். அவர்கள் தன்னைப் பார்த்துவிட்டால் ஆபத்து என்று தோன்றவே படுவேகமாக அங்கிருந்து நழுவ ஆரம்பித்தார்.

இருந்தும் திலகம் அவரை ஒரு கரிய உருவமாக இருளுக்குள் பார்த்துவிட்டாள்.

''அம்மா, யாரோ வந்துட்டுப் போறாங்க...'' என்றாள் சுந்தராம்பாளிடம். சுந்தராம்பாளோ எந்தப் பதட்டமும் இன்றி ''அந்த நபர் வந்து அரைமணி நேரமாச்சு. எல்லாம் எனக்குத் தெரியுண்டி.'' என்றாள்.

திலகத்திடம் உறைவு!




## அன்று

எல்லோரையும் அனுப்பிவிட்டு அந்த டெல்லி வீரர்களிடம் இறுதியாக வந்து நின்றார் பாபா. அவர்களும் அவரைப் பணிவாக வணங்கிவிட்டு ''உங்களைச் சந்திக்கவேண்டும் என்பதற்காக எத்தனை நாட்கள் எவ்வளவு தூரம் பயணம் செய்து வந்திருக்கிறோம் தெரியுமா?'' என்றுதான் பேச்சையே ஆரம்பித்தனர்.

''காரணம்?''

''உங்களை எங்கிருந்தாலும் கையோடு அழைத்து வரச்சொல்லி டெல்லி இமாம்தாரின் உத்தரவு...''

''என்னை எதற்கு அவர் அழைத்துவரச் சொல்கிறார்?''

''பாபாஜி... நீங்கள் மூன்று காலத்தையும் உணர்ந்தவர். நாங்கள் சொல்லித்தானா தெரியவேண்டும்?''

''இது என்னைப்பற்றிய மிகையான எண்ணம். நீங்களே காரணத்தைக் கூறுங்கள்.''

''இமாம்தாரின் செல்ல மகள் மிகவும் உடல்நலமில்லாமல் இருக்கிறார். அன்று வீணை இசைக்கலைஞர் தான்சேன் இசையாலே விளக்கெரித்து நோயுற்றுக் கிடந்த ராணியாரையும் எழுப்பியது போல நீங்களும் செயல்படவேண்டும் என்று இமாம்தார் எதிர்பார்க்கிறார்.''

''தான்சேன் ஒரு மகா இசைமேதை. எல்லாம் வல்ல அந்த அல்லாவின் பெருங்கருணைக்கு முழுவதும் பாத்திரமானவர். நான் அவ்வளவு பெரியவனில்லை.''

''உங்கள் பெருமை உங்களுக்குத் தெரியாது. நாங்களே அறிவோம். அருள் கூர்ந்து உடனே கிளம்புங்கள்...!''

''மன்னிக்கவேண்டும். எனக்கு உயிர்ப்பிச்சையளித்த என் குருநாதர் இங்கே எனக்கு ஒரு பணியை அளித்திருக்கிறார். அதை நான் முடிக்காமல் எங்கும் வர இயலாது.''

''இப்படி எல்லாம் நீங்கள் சொல்லக்கூடாது. உங்களுடன் நாங்கள் செல்லாவிட்டால் நாங்கள் சிறையில் தள்ளப்படுவோம்.''

''இது சர்வாதிகாரம். நான் காற்றைப் போல பொதுவானவன். அன்புக்கு மட்டுமே தலை வணங்குவேன். அம்மட்டில் ஜாதிமத பேதங்கள் எனக்குக் கிடையாது. அத்துடன் நான் முன்பே சொன்னதுபோல எனது கடமையை ஈடேற்றாமல் நான் வரஇயலாது.''

''உங்கள் கடமைதான் என்ன?''

''மன்னிக்கவும். அதை உங்களுக்கு நான் கூறத் தேவையில்லை.''

''நாங்கள் ராஜ்ய வீரர்கள். நீங்கள் எங்களைப் புறக்கணிப்பது உங்களுக்கு நல்லதல்ல.''

''நீங்கள். புறப்படலாம்...''

''இமாம்தார் உங்களைக் கடவுளாக நினைக்கிறார்.''

''அவர் மகளுக்காக நான் இங்கிருந்தே கடவுளைப் பிரார்த்திக்கிறேன். அந்த அல்லாமாலிக் என் பிரார்த்தனைக்குச் செவிமடுப்பார். அந்தப் பெண்மணி குணமாவார். நீங்கள் புறப்படலாம்.''

''ஒருபுறம் அல்லாவைத் தொழுது கொண்டு எப்படி இந்து ஆலயத்துக்குள்ளும் சென்று வழிபாடு செய்கிறீர்கள்?''

''என் கடமையைக் கொச்சைப்படுத்தாதீர்கள். ஒருவரின் இறைமார்க்கத்தைக்கூட அந்த இறைவனே தீர்மானிக்கிறான். அதை அவரவர்கள் பிறப்பே தீர்மானிக்கிறது. அம்மட்டில் அவரவர் மார்க்கத்தில் தளராத பற்று வைத்து, அதே சமயம் பிறர் மார்க்க வழிமுறைகளையும் மதித்துச் செயல்படுபவன்தான் உண்மையான மனிதன். நான் எனது மார்க்கநெறிமுறையை துளியும் மீறாதவன். அதே வேளையில் எனது குருநாதரின் கட்டளைக்கு ஏற்ப நான் நடக்கும்பொழுது நிகழும் அற்புதங்களுக்கும் எனக்கும் சம்பந்தமில்லை. அது அவரது கருணை.''

''அப்படியானால் ருத்ரவீணையால் நமது வேத புத்தகத்தின் இறைத் துதியை அதாவது பாங்கினை ஓதுவீர்களா?''

''தாராளமாக... அது கருவி. அதற்கு ஹிந்தி, தமிழ், உருது என்கிற பாகுபாடெல்லாம் கிடையாது.

இசையை மொழியால் அடக்க நினைக்காதீர்கள்.''

''இல்லை. நீங்கள் சமாளிக்கிறீர்கள்.''

''எப்படி வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுங்கள். இப்பொழுது கிளம்புங்கள்.''

''எங்களை இப்படி ஏமாற்றத்துடன் அனுப்புவது தகுமா?''

''மீண்டும் கூறுகிறேன்... இன்றைய எனது தொழுகைப் பிரார்த்தனைகள் அவ்வளவையும் இமாம்தார் மகளின் குணப்பாட்டுக்கே சமர்ப்பிக்கிறேன். இறைவன் என் குரலுக்குச் செவிமடுப்பான். நீங்கள் டெல்லி சென்று அரண்மனைக்குள் நுழையும் சமயம் அவரது மகள் பூரண குணம் பெற்று ஆடுவாள் - பாடுவாள். இது சத்தியம். நீங்கள் செல்லலாம்...''

பாபா உறுதியாக அவர்களுக்கு உத்தரவிட்டுவிட்டு திரும்பினார். அந்த நான்கு வீரர்களின் முகத்திலும் ஏமாற்றம். அவர்களின் ஏமாற்றத்தை வீரேந்திரனும் பார்த்துக்கொண்டுதான்

இருந்தான். சாலையில் இறங்கிக் குதிரையை அவிழ்த்துக்கொண்டு சோகமாக நடையிடத் தொடங்கிய அவர்கள் முன் போய் நின்றான்.

அவர்கள் பதிலுக்கு வெறித்தனர்.

''என்ன... ஏமாற்றமாக இருக்கிறதா?''

''ஆம்... பலத்த ஏமாற்றம்.''

''அவரைப் போய் இவ்வளவு பணிவாகக் கூப்பிடுகிறீர்களே. கூப்பிட்டால் வருபவரா அவர்?''

''பின் என்ன செய்யச் சொல்கிறாய்?''

''கட்டி இழுத்துச் செல்லுங்கள்...!''

''பைத்தியக்காரா... நாங்கள் ஒழுங்காக ஊர் போய்ச் சேர்வது உனக்குப் பிடிக்கவில்லையா?''

''இப்பொழுது மட்டுமென்ன... ஒழுங்காகவா போய்ச் சேரப் போகிறீர்கள்?''

''என்ன உளறுகிறாய்...?''

''உளறவில்லை. டெல்லி எங்கோ இருக்கிறது... நீங்கள் எங்கோ இருக்கிறீர்கள். நிற்காமல் சென்றாலும் மூன்று மாத காலமாகுமல்லவா?''

''உம்...''

''அதுசரி... அதுவரை அங்கே நீங்கள் சொன்ன அந்தப் பெண்மணி காத்திருப்பாரா... அதற்குள் அவருக்கு ஏதாவது ஆகிவிட்டால்...?''

''வாயை மூடு. இப்பொழுதே நாங்கள் கதிகலங்கிப்போய் கிடக்கிறோம். இதில் நீ வேறு...''

அப்பொழுது அங்கே படுவேகமாய் ஒருவன் புறாக்கூண்டு ஒன்றுடன் வந்து சேர்ந்தான். கூண்டுக்குள் ஒரு பந்தயப்புறா!

''அடடே... செஞ்சி நகரத்து தபால்காரன்... நீ எங்கே இங்கே?''

''உங்களைப் பார்க்கத்தான் வந்தேன். தளட'தி தாவூத் உங்களை அழைத்து வரச்சொன்னார். இதோ இந்தப் புறா செய்தியுடன் டெல்லியில் இருந்து வந்தது...'' சேணத்தில் தொங்கிக்கொண்டிருந்த கூண்டை விடுவித்து நான்கு பேரை நோக்கி நீட்டினான். புறாவின் காலில் ஒரு சிறுகுழல். அதில்தான் முக்கியச் செய்தி இருக்கும். வேகமாக அந்தப் புறாவை விடுவித்து காலில் உள்ள குழலில் இருந்து செய்தியைப் படித்தபோது படித்தவன் முகத்தில் அதிக பட்சமாய் ஒரு பரபரப்பு.

''ஏய்... என்ன செய்தி... யாரிடம் இருந்து?''

''நமது அரண்மனையில் இருந்துதான்! நமது இமாம்தார் மகள் முழுக்கக் குணமாகிவிட்டாராம். பாபாவே நேரில் வந்து ருத்ரவீணையால் இசை எழுப்பி குணப்படுத்தினாராம். நாம் திரும்பலாமாம்..''

''என்ன சொல்கிறாய்?... நாம் தேடிவந்த பாபா இங்கே இருக்கிறார். இவர் எப்படி டெல்லிக்குச் சென்றிருக்க முடியும்? நம்மிடம்கூட 'நான் இங்கிருந்தே பிரார்த்தனை செய்கிறேன்' என்றுதானே கூறினார்.?''

''ஆமாம்...''

''அந்தச் செய்தி நமக்குத்தானா...? நன்றாகப் பார்.''

''செய்தி நமக்குத்தான். முத்திரை தெளிவாக இருக்கிறது.''

''இது என்ன விந்தை... இவர் இங்கே இருக்கும்போது அங்கு எப்படிச் சென்று வரமுடியும்?''

''எதற்கு இப்படிக் குழப்பிக்கொண்டு... அவரிடமே கேட்டுவிடுவோம்...''

நால்வரும் திரும்பினர். வீரேந்திரனோ வாய் பிளந்திருந்தான். அவனுக்கு நடக்கிற எதையும் நம்பமுடியவில்லை. அவர்களுடன் அவனும் தொடர்ந்து பங்களாவுக்குள் நுழைந்தான்.

பாபா மிகவும் களைத்துவிட்டவர் போல ஒரு ஓரமாக படுத்துவிட்டிருந்தார்.

''பாபாஜி...!'' அழைத்தனர்.

அவரும் கண்களைக் கசக்கிக்கொண்டு எழுந்து வந்தார்.

''பாபாஜி! உங்களுக்கு ஒரு மகிழ்ச்சியான செய்தி.''

''என்ன... இமாம்தார் மகள் குணமாகிவிட்டாரா?''

''ஆம்... தகவல் வந்துள்ளது. நீங்கள் அங்கு சென்று குணப்படுத்தியதாகக் கூறுகிறது தகவல். எப்படி பாபாஜி?''

பாபாஜி பதிலுக்குச் சிரித்தார்.

''இப்பொழுது நீங்கள் அமைதியாகப் பயணிப்பீர்கள் என்று நம்புகிறேன்.'' என்றார்.

''உண்மைதான். ஆனால் இங்கிருக்கும் நீங்கள் எப்படி டெல்லிக்குச் சென்றீர்கள்? இது என்ன மாயம்?''

''நான் எங்கே சென்றேன்? என் சார்பில் அந்த இறைவனே சென்றிருப்பான். நிகரில்லாத கருணை உள்ளவன் அல்லவா அவன்?''

''பாபாஜி...!''

''எங்கள் கேள்விகளுக்கு நேரடியாகவே பதில் கூறமாட்டீர்களா?''

''நான் இப்பொழுது என்ன சுற்றி வளைத்தா கூறினேன்...?''

''ஆம்... எப்படி... எப்படி அங்கு சென்று வரமுடிந்தது?''

''அவனருள் இருந்தால் காற்றில் கரையலாம், நீரில் நடக்கலாம். இதெல்லாம் அற்பம். நீங்கள் புறப்படுங்கள்!''

அவர்கள் அதற்குமேல் அவரிடம் பேச சக்தியற்றவர்களாக அவரை மீண்டும் வணங்கிவிட்டுப் புறப்பட்டார்கள். வீரேந்திரனுக்கு எல்லாமே மிகமிக வியப்பாக இருந்தது. 'இது எப்படிச் சாத்யம்?' என்கிற கேள்வியும் உள்ளே ஓடியது.

அப்படியே வெளியில் வந்தான்.

அவனுக்கென்று அஷ்டமங்கலப் புரவி ஒன்றை மாலி வாங்கித் தந்திருக்கிறாள். நல்ல வெள்ளைப் புரவி. அதில் ஏறிக் கொண்டு ஊரைச் சுற்றி வருவதுதான் அவன் வேலை. அடிக்கடி ஆற்றோரமாக இருக்கும் தஞ்சை அரசர்களுக்குச் சொந்தமான நவக்கிரகமாளிகைக்குச் சென்றுவிடுவான். இப்பொழுது அங்குதான் புறப்பட்டான்.

அது ஒரு விசித்திரமான மாளிகை.

அந்த மாளிகைக்குள் சாமான்யர்கள் யாரும் நுழைய முடியாது. கிட்டத்தட்ட அரசர்களின் அந்தப்புரமாளிகையைப் போன்றது அது. ஆடி அமாவாசை, பங்குனி உத்திரம், மகர சங்கராந்தி போன்ற நாட்களின் போது தஞ்சாவூரிலிருந்து ராஜ குடும்பத்துப் பிரதிநிதிகள் வந்து தங்குவார்கள். அப்படியே தோடீஸ்வரர் ஆலயத்துக்கும் வந்து வணங்கிவிட்டுச் செல்வார்கள். சுற்றிலும் மராட்டிய வீரர்கள் சுற்றி வந்து காவல் காத்துக் கொண்டிருப்பார்கள். அவர்களில் சிலர் வீரேந்திரனுக்கும் பழக்கம்.

அவர்களாகப் பழகவில்லை. வீரேந்திரன்தான் அவர்களோடு பழக்கம் வைத்துக்கொண்டான். அரண்மனையில் உயர் மட்டத்தில் உள்ள பலர் தங்கள் இல்லத்திற்கு உல்லாசமாக இருக்க வந்து செல்வதாகக் கூறி, அவர்களோடு தனக்கு நல்ல தொடர்பு இருப்பது போலெல்லாம் காட்டிக்கொண்டதால் அவர்கள் பயந்து பழகினார்கள்.

அந்த மாளிகைக் கதவு எப்பொழுதும் மூடியபடியே இருக்கும். முகப்பில் ஒரு வேனற்பந்தல். அதன்கீழ் அமர்ந்து அவர்கள் பரமபதம் விளையாடுவார்கள்.

அந்த விளையாட்டில் வீரேந்திரனும் கலந்துகொள்வான். இன்றும் அவன் புரவி மீதமர்ந்து வந்தபோது அந்த வீரர்கள் விளையாடிக் கொண்டிருந்தனர்.

வீரேந்திரன் வரவும் நிமிர்ந்து பார்த்தனர்.

அவர்களில் ஒருவன் பெயர் சாந்தாராம். வடநாட்டைச் சேர்ந்தவன். மகாராஷ்ர பாஷைதான் தாய்மொழி. ஆனாலும் தமிழும் நன்கு பேசுவான். வீரேந்திரன் வருவதை வைத்தே ஏதோ அவனுக்குள் மன உளைச்சல் என்று தீர்மானித்துவிட்டான்.

''என்னப்பா... என்ன அசதி? ஏதோ தீவிர சிந்தனையில் இருக்கிறாற்போல் இருக்கிறதே?'' - கேட்கவும் செய்தான்.

''ஆம்... தீவிரமான சிந்தனைதான். சில விஷயங்களை நினைத்தால் மிகவும் வியப்பாக இருக்கிறது. எனக்கு இருக்கும் அறிவைக் கொண்டு அதைப் புரிந்துகொள்ளவும் முடியவில்லை.''

''அப்படி என்னப்பா அந்த விஷயம்?''

''ஊருக்குள்ளே ஒரு புதிரான மனிதர் வந்திருக்கிறார் தெரியுமா?''

''யாரது...?''

''அதுசரி... உங்களுக்கு இந்த மாளிகையைவிட்டு நகர முடிந்தால்தானே? அப்படி என்னதான் உள்ளே புதையல் இருக்கிறதோ?''

''ஆரம்பித்துவிட்டாயா... இந்த மாளிகையைப் பற்றியோ, இதன் உள்ளே என்ன இருக்கிறது என்றோ எதுவும் பேசக்கூடாது என்று கூறுயிருக்கிறேன்தானே?''

''அப்படியானால் நான் மட்டும் எதற்கு அந்தப் புதிரான மனிதர்பற்றி உங்களிடம் பேசவேண்டும்?''

''பேசாதே... யார் உன்னைப் பேசச் சொன்னது?''

அந்த பதில் வீரேந்திரனைப் பொசுக்கென்று சுருக்கிவிட்டது.

''எவ்வளவு பழகினாலும் நீங்கள் என்னை மூன்றாவது மனிதனாகவே பார்க்கிறீர்கள்...'' என்று முனகினான்.

''எங்கள் உறவினர்களே வந்தாலும் அவர்களை அப்படிப் பார்க்கச் சொல்லி உத்தரவு. அதற்கு நாங்கள் என்ன செயய?''

அவர்கள் அவனைப்போல முனகாமல் பளிச்சென்றே பதில் தந்தார்கள். அவன் அதற்குமேல் அங்கு நிற்கப் பிடிக்காமல் மீண்டும் புரவிமேல் ஏறினான். அதை வேகமாகவும் செலுத்தினான்.

அதுவும் கால்போன போக்கில் போயிற்று.

வழியில் மயானம் இடையிட்டது.

பிணம் ஒன்று எரியும் புகையின் வியாபிப்பு எங்கும்... அவன் புரவியை 'எதற்காக இந்த மயானத்துக்குள் புகுந்தாய்' என்கிற மாதிரி குதிங்காலால் தொடைமேல் உதைத்தான். அது தேங்கி நின்றது. கனைத்தது. முன்னிரண்டு காலை உயர்த்தி எழும்பி அவனைக் கீழே தள்ளப் பார்த்தது. அவனும் கீழே விழுந்தான்.

ஆவேசமாக ''நன்றிகெட்ட குதிரையே'' என்று அதன் சேணத்தை அடக்கிப் பிடித்து அடிக்க முயன்றான். அருகில் நிறைய சமாதிகள். அந்தக் குதிரையின் குளம்படி பட்டு சமாதி மேடுகள் கலைந்தன. ஒரு இடத்தில் சற்றும் அவன் எதிர்பாராத விதமாக ஒரு சமாதி மேட்டைப் பிளந்து கொண்டு ஒரு மனிதன் எழுந்து நின்றான்.

வீரேந்திரனுக்கு ரத்தமே உறைந்துவிட்டது!

## இன்று

உபாசகர் தனது குடிசையில் இருந்தார்.

அப்பொழுதுதான் நுழைந்திருந்தார். மிக வேகமாக வந்திருக்கிறார் என்பது வியர்த்திருந்த அவரது உடம்பைப் பார்த்தாலே தெரிந்தது.

வந்தவர் படுவேகமாய் தான் தோடிபுரத்துக்குள் நுழையும் பொழுது கொண்டுவந்திருந்த அந்த டிரங்குப்பெட்டியைத்தான் எடுத்தார். அதைத் திறந்து அதில் பழைய புத்தகம்போல் ஒன்றை வெளியே எடுத்தார்.

தலைப்பில் 'வாக்கேயக்காரர்கள் சரிதம்' என்று இருந்தது. பக்கங்களைப் புரட்டுகையில் பலவித மனிதர்களின் உருவப் படங்கள் அதில் இருந்தன. 'பீமண்ணராஜா... பொன்னுச்சாமி தளகர்த்தர், வீரராஜேந்திர நாட்டார், மகேந்திர மனுவாடி, அபயாம்பாள் என்னும் அமிர்தவல்லி என்று பக்கத்துக்குப் பக்கம் இதுநாள் வரையில் இந்த உலகம் பார்த்த பல வாக்கேயக்காரர்கள் பெயர்.

*இசைத்துறையில் புதிய கீர்த்தனைகளைக் கண்டுபிடித்து, இசைக்காகவே வாழ்க்கையை அர்ப்பணம் செய்துகொண்டு நாடோடி போல வாழ்ந்த பலருடைய வாழ்க்கைக் குறிப்புகள் அந்தப் புத்தகத்தில் இருந்தன. அதில் பாபாவின் உருவப்படமும் குறிப்புகூடக் காணப்பட்டது. அந்தப் பக்கத்திற்கு வந்த உபாசகர் அப்படியே அந்தப் படத்தை ஊன்றிப் பார்த்தார். தாசிபங்களாவில் ஹாலில் தெரிந்த அதே உருவப்படம். கீழே குறிப்பு காணப்பட்டது.*

## நவாப்ஜான் பாபா... காலம் 1625 - 1703.

வடக்கிந்தியரான இவர் ஒரு இஸ்லாமியர். இசையார்வம் இவரை மதங்களைக் கடந்த மனிதனாக்கியது. இவரது இசைக்குரு ஒரு சிவயோகியாவார். பல சித்துக்கள் அறிந்த அந்த சிவயோகியின் அருளால் பாபாவும் சித்தர்போல சாகசங்கள் புரிந்தார் என்பர். 'ருத்ரவீணை' மீட்டுவதில் நிகரற்ற சாதனையாளர். பல புதிய ராகங்களைக் கண்டறிந்து அதை இவர் ருத்ரவீணையில் மீட்டியபோது பல அற்புதங்கள் நிகழ்ந்ததாகக் கூறுவர். இவர் அபூர்வ ராகங்களை உடைய தொகுப்பு ஒன்றையும் எழுதி அதைத் தனது மிகுந்த நம்பிக்கைக்குரிய ஒருவரிடம் கொடுத்து வைத்திருந்தார் என்றும் தெரியயவருகிறது. ஆனால் அது யாரிடம் உள்ளது என்பதைக் கண்டறிய இயலவில்லை. நாடு முழுவதும் நாடோடியாகத் திரிந்து இசையால் பல நன்மைகளைச் செய்த இவர் இறுதியில் தோடிபுரம் என்னும் ஊரில் சமாதியானார்!

*- குறிப்பைப் படித்த உபாசகரின் கண்களில் விளக்கெரிந்தது. முகம் ஜோதி போல மாறியது. 'நான் சரியான இடத்துக்குத்தான் வந்திருக்கேன்' என்று ஒருமுறை சொல்லிக்கொண்டார். அப்படியே அந்த வீணை தாசிபங்களாவில்தான் இருக்கவேண்டும் என்றும் முடிவுக்கு வந்தவர் அதை வாசிப்பது யாராக இருக்கும் என்ற கேள்விக்கு மட்டும் விடைதெரியாமல் தவிக்கத் தொடங்கினார்.*

***சா**தாரணமாக சித்து அறிந்தவர்கள் எதிராளிகளின் மனோ நிலையை அப்படியே கிரகித்துச் சொல்லி அசத்திவிடுவார்கள். கண்ணில் பார்க்காமலே காதில் ஒருவர் குரல் விழுந்தமாத்திரம் அவர்கள் அணிந்திருக்கும் உடையிலிருந்து அவர்கள் சட்டைப் பாக்கெட்டில் எவ்வளவு பணம் வைத்திருக்கிறார்கள் என்றும் கூறிவிடுவார்கள்.*

சித்துக்களில் பல அடுக்குகள் உள்ளன.

சில சித்துக்கள் தானே வசமாகும். அதற்குப் பூர்வஜென்ம செயல்பாடு பெரும் காரணமாக இருக்கும். சில சித்துக்களை கல்லூரிப்பாடம் போல கற்கவேண்டும். இம்மட்டில் கல்லூரியாகவும் ஆசானாகவும் திகழும் பலர் இந்தப் பூமியில் உண்டு. ஆனால் அவர்கள் தங்களை வெளிக்காட்டிக் கொள்ளமாட்டார்கள். அப்படிப்பட்டவர்களின் பார்வையில் பட்டு அவர்களின் கருணையைப் பெறவேண்டும்.

சித்து அறிந்தவர்கள் உலகின் மாயையைப் புரிந்தவர்களாக இருப்பார்கள். எனவே அவர்கள் இறைவனை நெருங்கிய நிலையில் காண்பவர்கள் எனலாம். ஆயினும் பலர் சித்துக்களாலேயே தங்களை அழித்துக்கொண்டதும் உண்டு. சித்து வசப்படும்வரை கட்டுப்பாட்டில் இருந்த மனம் அதன்பின் தங்களையே தெய்வமாக நினைக்க வைத்து, கர்வம் கொள்ள வைத்து அவர்களை அழித்திருக்கிறது. அனைத்திற்கும் அடிப்படை கர்மவினைதான். அடுத்து, அமைகிற குருநாதர் எப்படிப்பட்டவர் என்பதும் மிக முக்கியம். ஒருவகையில் சித்து வேலை என்பது மிகச்சாதாரணமான ஒன்றும்கூட. ஒரு மனிதனைவிட எல்லாவகையிலும் பெரிதாகவும் பாரமாகவும் உள்ளது ஒரு விமானம். அதை வானில் பறக்க வைத்து பின் பூமியில் இறக்கிக் காட்டி நம் விருப்பத்திற்கு ஆட்டி வைக்கிறோம். அதற்கு பைலட் என்று ஒருவர் இருக்கிறார். விமானம் ஓட்டுவது என்பது பழகாதவரை விமானத்தில் பறப்பது, அதை இயக்குவது, கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பது என்பதெல்லாம் நினைத்துப் பார்க்க முடியாத ஒரு விஷயமாகவே தெரியும். ஆனால் தீவிரப்பயிற்சியால் பைலட்டாகிவிட்ட பிறகு அது தினமும் நாம் குளிப்பது, சாப்பிடுவது போல செய்யப்படும் ஒரு சாதாரண விஷயமாகிவிடும். அதை நினைக்கும்போது அது ஒரு பெரிய செயலாகத் தெரியாது. சித்துக்களும் இப்படித்தான். கற்றுக் கொள்வதில்தான் உள்ளது. ஒரு விதத்தில் இது விஞ்ஞானத் தத்துவங்களைச் சார்ந்தது.

பல அணுக்கள் ஒன்றுசேர்ந்தே எந்த ஒரு உயிரும் - எந்த ஒரு பொருளும் உருவாகிறது. ஒன்றுசேர்ந்து என்று கூறும்பொழுதே பிரிந்து என்கிற எதிர்நிலையும் அதில் தெரிகிறது. சேர்த்ததைப் பிரித்தால் வடிவம் போய்விடும். இதை ஒரு வீடு கட்டும் செயலுடன் பொருத்திப் பார்க்கலாம். பல ஆயிரம் செங்கற்கள், மணல், சிமெண்ட் இவைகளைக் கூட்டிக்குவித்தே ஒரு வீட்டைக்

கட்டுகிறோம். இடித்துத் தள்ளும்போது இவை பிரிகின்றன. இல்லாமலும் போகின்றன.

கட்டுவது,இடிப்பது என்று இரு செயல்களால் தோற்றம், மறைவு நிகழ்கிறது. அதேபோலத்தான் தாயின் கருவிற்குள் மிகச் சிறிய அளவில் தொகுக்கப்பட்டு பின், தொகுக்கப்பட்டவை களேயே வைத்து வளர்த்து நமக்கு உருவம் தரப்பட்டிருக்கிறது. நாளுக்கு நாள் நம் உடலில் வளர்ச்சி நிகழ்ந்தபடிதான் உள்ளது. பழைய திசு சாவதும் புதிய திசு தோன்றுவதுமாய் உயிர்ப் பயணம் நடந்தபடி உள்ளது. ஒரு கட்டத்தில் நமது கட்டுப்பாட்டில் இல்லாத அது தன் வளர்ச்சியில் அல்லது திசு மாற்றங்களில் மாற்றத்திற்கு - இயலாத தன்மையை அடையும்போது நம் உடலில் உயிர்போய்விட்டதாகக் கூறுகிறோம்.

ஒரு மனிதன் புறத்தில் எவ்வளவோ விஷயங்களை இயக்குகிறான். ஆகாசத்தில் பறந்து மாற்றுக்கிரகத்திற்குகூட சென்று வந்துவிடுகிறான். ஆனால் அவன் வசம் உள்ள ஒரு தலைமுடி எப்பொழுது வெளுக்கும் என்றோ, அது எப்பொழுது உதிரும் என்றோ அவனால் கூறுவே முடியாது. காரணம் அவன் உடல் என்பது அவன் கட்டுப்பாட்டில் இல்லாத ஒன்று. அவன்தான் அதன் கட்டுப்பாட்டில் இருக்கிறான். அதனால்தான் என்று எது நிகழும், உயிர் எப்பொழுது பிரியும் என்று ஏதும் தெரியாத ஒருவனாக அவன் உள்ளான்.

தன் வசம் இருக்கும் தன் உடலை அறியாத ஒருவனா உலகை உணரப் போகிறான்? உணர்வதால்தான் பயனுண்டா? அதனாலேயே யோகியர் முதலில் தங்கள் உடலை அறிய முயன்றனர். எது இயக்குகிறது, எது வளர்கிறது, எது எப்படிப் பணியாற்றுகிறது என்று தங்களுக்குள் உள்ள சக்தியைத் தேடிப் பயணித்தனர். சாப்பிட்டு, சாப்பிடும் பொருளால் ஏற்படும் சக்தியால் இயக்குகிறோமே அதைவிடப் பெரிய பெரிய சக்தி எல்லாம் உடம்புக்குள் மூலைக்கு மூலை தூங்குவதாக உணர்ந்தனர். அதைத் தட்டி எழுப்பினர். அதற்குமுன் யோகப்பயிற்சியும் புலனடக்கமும் மேற்கொண்டனர். தாங்களே தங்களுக்குள் புகுந்தனர். முதலில் பசியை ஜெயித்தனர். பின் நீர் அருந்தாமல் வாழக் கற்றனர். ஒரு கட்டத்தில் சுவாசிக்கக்கூட தேவையில்லை என்று புரிந்தனர். சமாதியாகினர். உடம்பு ஒரு பளு... அது ஒரு வீடு என்பதெல்லாம் பிறகே தெரிந்தது. இந்தப் புரிதலும் ஒரு விஞ்ஞானமே. மருத்துவ விஞ்ஞானம் இதே விஷயங்களை வேறுவிதமாக அணுகுகிறது. உறுப்புக்களுக்கு அது பெயர்

வைத்திருக்கிறது. அது இயங்கத் தேவையான சக்திகளை வகைப்படுத்தி விட்டமின் A, B, C, D என்று பிரித்துள்ளது. எது இருக்கிறது, எது இல்லை என்று மட்டும்தான் விஞ்ஞானத்தால் கூறமுடியும். அதால் உடம்பைத்தான் கூறுபோட்டுப் பார்த்து மரபணுவரை செல்ல முடிந்தது. ஆனால் மனது...? அந்த மனதால் உடம்பில் நிகழும் மாற்றங்கள், மனதைக் கொண்டு உடம்பை கட்டுப்படுத்தும் செயல்பாடுகள் எல்லாம் விஞ்ஞானத்தால் தன்னம்பிக்கைச் செயல்பாடு என்று மட்டும்தான் வர்ணிக்கப் படுகிறது... ஆனால் பல சித்த புருஷர்கள் இம்மட்டில் எண்ணிப் பார்க்க முடியாத சாகசங்களைச் செய்து காண்பித்து விஞ்ஞானத்திடம் 'இதெல்லாம் மிராகிள்' என்று சர்டிபிகேட்டை மட்டுமே பெற்றுள்ளனர்.

பகவான் ரமணருக்குப் புற்றுநோய்...

அது கர்மவினையால் வந்தது என்பது அவருக்கு விளங்கி விட்டது. வினைகள் இரு வகை. காலத்தால் பரிகாரங்களுக்கு உட்பட்டு வேறுவிதமாக மாறுபவை ஒரு விதம். அப்படி மாறாமல் உடம்பிலேயே தங்கி உடம்பை மொத்தமாய் அழிப்பது ஒரு விதம். புற்று இரண்டாவது வகை. உடம்பை ஜெயித்த ரமணர் இதைப் புரிந்துகொண்டார். எனவே அதை அனுபவித்துத் தீர்ப்பதே சிறந்தது என்று கண்டுகொண்டு அந்த வலியை, இன்பத்தை அனுபவிப்பதுபோல அனுபவித்தார்.

எந்த ஒரு துன்பமும் இல்லாமல் போக உள்ள ஒரு வழி, அதை மனதார ஒப்புக்கொண்டு அதைவிட பெரிய துன்பத்தை எதிர்பார்க்கத் தொடங்கிவிடுவதுதான்.

ரமணரும் புற்று வலியை அனுபவித்தார்.

அனுபவிக்க அனுபவிக்க அந்த கர்மக்கணக்குக் கழிவதை உணர்ந்தார். பல லட்சம் பக்தர்கள் தங்கள் துன்ப அலைகளால் அவருக்குள் உருவாக்கியதுதான் புற்று. அவரால் பக்தர்களின் கர்மத்துயரங்களை பெற்றுக்கொள்ள முடிந்தது. தாங்கிக் கொள்ளவும் முடிந்தது. அது மட்டுமில்லை. அவருக்கு அதற்கான மருத்துவ சிகிச்சை செய்தபோது அவர் மயக்க மருந்து உட்கொள்ளவில்லை.

மனோசக்தியின் உச்சத்தில் அவர் இருந்தார்.

அவர் வசிக்கும் இடத்திற்கு வருபவரை அமர்ந்த இடத்தில் இருந்தே அவரால் அறிய முடிந்தது. திருவண்ணாமலை ரயில்வே ஸ்டேஷனில் கால் வைத்தார். இதெல்லாம் உடம்பு புரிந்த

அதாவது உடம்பாகிய சித்தம் புரிந்த மனிதர்களின் அதாவது சித்தர்களின் - சாதாரணச் செயல்.

சித்தம் புரிந்தாலே சித்தன் என்பர்.

கல்வியில் 'பி.ஏ., எம்.ஏ.' என்று பல உயர் வகுப்புகள் உள்ளது போல சித்தக் கல்வியும் பெரிது. அடுக்கடுக்காய் அதில் அறிய வேண்டியது ஆயிரம் உள்ளது. உபாசகர் நரசிம்மபாரதி அதில் எங்கே இருக்கிறார் என்பது தெரியவில்லை.

ஆனாலும் ஒரு சம்பவம் அவரை பாடாய்ப் படுத்திவிட்டது. 'சித்து' என்கிற வார்த்தை காதில் விழும்போதெல்லாம் அவருக்கு அது ஞாபகத்தில் வந்துவிடுகிறது.

அது அவமானமா... இல்லை உந்துசக்தியா என்பதில் மட்டும் இந்த நொடிவரை அவருக்குள் குழப்பம் உண்டு. எல்லாம் சரி... அப்படி என்னதான் நடந்தது?

திருக்கடவூர் ஸ்ரீ மடம், ஸ்ரீ மடங்களிலேயே சற்று பெரியது என்றுதான் கூறவேண்டும். மடாதிபதி ஜெயந்திநாத ஸ்வாமிகளுக்கு எண்பது வயதாகிறது. ஐம்பது வயதில் பட்டத்துக்கு வந்தார்.

ஸ்ரீ மடத்து மடாதிபதிகள் இல்வாழ்க்கையை அனுபவித்து பிள்ளை குட்டிகளை பார்த்தவர்களாய் இருப்பதை ஒரு சிறப்பாகக் கருதுகிறது.

சக்தியைத் தனியே தேடி அலையத் தேவையில்லை.

ஒரு கட்டத்தில் மனைவியிடமே அவளைக் காணும் பாக்யம் ஏற்பட்டுவிடும். ஜெயந்திநாதரும் அப்படித்தான்... மடாதிபதியாவதற்கு முன்புவரைதான் அவரது மனைவியைப் பெயர் சொல்லி அழைத்தார். மடாதிபதியான பின்னாலோ அதை அப்படியே மாற்றிக்கொண்டு 'அம்மா' என்றுதான் அழைக்க ஆரம்பித்தார். ஜெயந்திநாதருக்கு ஒரே பிள்ளைதான். இத்தனைக்கும் ஜெயந்திநாதருக்கு நிறைய சொத்து பத்துக்கள். காவிரிக்கரை ஓரமாக நஞ்சை நிலம் மட்டுமே நூறு ஏக்கர் தேறும். அதுபோக ஸ்ரீ மடத்து சொத்துக்கள் தனி.

மடத்தில் சரியாக பதினெட்டு சிஷ்யர்கள். இதில் முதலாவதாக வந்து சேர்ந்தவர்தான் நரசிம்மபாரதி. ஸ்ரீமடத்தைப் பராமரித்துக் கணக்கு வழக்கு பார்த்து ஒரு மேனேஜர் போல நல்ல நிர்வாகியாகவும் ஒருவர் தேவை என்று ஆசைப்பட்டபோது கனகச்சிதமாய் எதிரில் வந்து நின்றவர் நரசிம்மபாரதி.

பி.ஏ., பி.எல். படித்து ஒரு தனியார் நிறுவனத்தில் பர்சனல் டிபார்ட்மென்ட்டில் பணியாற்றியிருந்த அனுபவம் கை கொடுத்தது.

நரசிம்மபாரதிக்குச் சொந்த ஊர் திருக்கடவூருக்கு தெற்கில் புல்மேடு என்கிற கிராமம். புல்மேட்டில் அய்யனார் மிகப் பிரசித்தம். ஊருக்குள் நுழையும்போது முகப்பிலேயே பார்க்கலாம். ஆகிருதியாக ஒரு கல்குதிரை மேல் அமர்ந்தபடி இருப்பார். நரசிம்மபாரதி அங்கே பிறந்தாரே ஒழிய, வளர்ந்த தெல்லாம் சென்னை மைலாப்பூரில் உள்ள அவரது மாமா ரங்கநாதன் வீட்டில்தான்... ஸ்ரீ மடத்து வேலையை மாமா சொல்லித்தான் ஏற்றுக்கொண்டார். மாசம் மூவாயிரம் சம்பளம் என்று தீர்மானிக்கப்பட்டது. ஆனால் நரசிம்மபாரதி முதல் மாசமே சம்பளத்தை வாங்கிக்கொள்ளவில்லை. ஸ்ரீமடத்துச் செயல் பாடுகள் அவரை இது தொழில் புரியும் இடம் இல்லை என்றாக்கி விட்டது. முதல் மாச சம்பளத்தை அப்படியே மடத்துக்குக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டு ''இந்த நிமிஷம் நான் அம்பாளின் அணுக்கத் தொண்டன்'' என்று கூறிவிட்டார்.

இந்த நிலையில்தான் மாமா மகள் செண்பகத்தையே மணக்கும் ஒரு நிலையும் ஏற்பட்டது. எனவே குடும்பஸ்தனாகி விட்ட நரசிம்மபாரதிக்கு ஜெயந்திநாதர் மாதாமாதம் ஒரு தொகையைக் கொடுத்து தனது பிரதான சிஷ்யனாகவும் ஆக்கிக் கொண்டார்.

ஸ்ரீ மடத்தில் ஒரு குட்டி லைப்ரரி உள்ளது.

அதில் இல்லாத புத்தகங்களே இல்லை.

அவ்வளவையும் வெறியோடு படித்தபடியே நரசிம்மபாரதியும் மடத்துச் செயல்பாடுகளைப் பழுதின்றி செய்து வர ஆரம்பித்தார். ஒரு பக்கம் கல்வி ஞானம். மறுபக்கம் வாசிப்பு ஞானம். எல்லாவற்றுக்கும் மேலாக மடாதிபதி ஜெயந்திநாதரின் பிரத்யேக அன்பு இந்த மூன்றுமே அவரை புடம்போட்டுக் கொண்டிருந்தபோதுதான் அந்தச் சம்பவமும் நிகழ்ந்தது.

உபாசகர் என்று சொல்லிக்கொண்டு ஒருவர் ஸ்ரீமடத்துக்கு வந்து மடாதிபதி ஜெயந்திநாதரை வழிபடும்போது ஆகாயத்தில் இருந்து முத்து, பவழம், வைரம் என்று நவரத்னமாலைகளை வரவழைத்து ஜெயந்திநாதரின் கழுத்தில் போட்டது நரசிம்மபாரதியை வியப்பில் ஆழ்த்துவிட்டது.

இது எப்படிச் சாத்யம் என்கிற கேள்வியில் விழுந்தவர் இதை அவரிடமே கேட்கவும், அவர் அந்தக் கேள்விக்குப் பதிலைக் கூறாமலே ''நீயும் வரவைக்கலாம்... கத்துக்கிறியா?'' என்று கேட்டார்.

''நிச்சயமா... எனக்கு அது என்னன்னு தெரியணும். எப்படின்னு தெரியணும்...''

''அப்ப வா என் கூட...''

''எங்கே?''

''நான் இப்ப பத்ரி, கேதார்ன்னு யாத்திரை போறேன். எனக்கு சிஷ்யனா வந்து சேவை பண்ணு. ஆறே மாசம். உன்னை ஒரு சித்தனாக்கிடறேன்.''

'''சித்தன்'னா?''

''பஞ்சபூதங்களை ஆட்டிப்படைக்கலாம். ஒன்பது கிரகங்களையும் கூப்பிட்டுச் சேவகம் செய்ய வைக்கலாம்.''

''நிஜமாவா?''

''நம்ப முடியலையா?''

''ஆமாம்... இயற்கையை ஆட்டிப்படைக்க முடியுமா என்ன?''

''இப்ப நான் என்ன செஞ்சா நீ நம்புவே?''

அப்பொழுது வானில் ஒரு மூலையில் கொஞ்சம் போல கார்மேகம் திரண்டிருந்தது. மற்ற இடமெல்லாம் நீலவானமாகக் காட்சியளித்தது.

''அந்த கார்மேகத்தை அந்த மூலைல இருந்து என் தலைக்கு மேல வரவழைக்க முடியுமா?''

''ஃப்பூ... இவ்வளவுதானா?''

அவர் அலட்சியமாக பதிலைச் சொல்லிவிட்டு கையில் சின்முத்திரை காட்டி ''இதைப் பார்'' என்றார். அவரும் பார்த்தார். லேசாய் மயக்கம் வருகிற மாதிரியும் வானில் பறக்கிற மாதிரியும் மிதக்கிற மாதிரியும் பல மாதிரி இருந்தது அவருக்கு. எல்லாம் ஒரு சில நிமிடங்கள்தான். அதன்பின் கண்ணைத் திறந்து அண்ணாந்து பார்த்தவருக்குத் தூக்கிவாரிப்போட்டது. அவர் தலைக்கு நேரே வானில் அதே அளவு கார்மேகம்.

''ஸ்வாமி ஈ... ஈ...'' பரவசமானார் நரசிம்மபாரதி.

அவரோ சிரித்தார்.

எங்கிருந்தோ இவற்றைப் பார்த்துக்கொண்டிருந்தார் ஜெயந்திநாதர்.

நரசிம்மபாரதியைத் தனியே அழைத்து ''இந்த மாதிரி சித்துக்களில் மயங்கிவிடாதே. எல்லாம் கண்கட்டு'' என்று சொல்ல விரும்பி சிறிது நேரம் கழித்து அழைத்தபோது நரசிம்மபாரதி இல்லை.

''எங்க போய்ட்டான் அவன்?''

''உங்களைத் தரிசனம் பண்ண வந்த அந்த உபாசகரோட வடக்க யாத்ரை கிளம்பிட்டார்...''

''அடக்கிரகசாரமே... என்னண்ட சொல்லிக்கவே இல்லையே...?''

''சொல்லிண்டா நீங்க அனுமதிக்கமாட்டேளே...''

''அய்யோடா... நரசிம்மபாரதி இப்படி மயங்கக்கூடாததுக்கு மயங்கிட்டானே...''

ஒரு பக்கம் ஜெயந்திநாதர் கவலையில் விழ, மறுபக்கம் நரசிம்மபாரதியின் வடஇந்திய யாத்திரை அமோகமாய் நடந்தேறியது. அந்த உபாசகருக்குக் கால் அமுக்கிவிட்டு அவர் துணிகளைத் துவைத்துப் போட்டு அவரது சுமைகளைச் சுமந்து ஒரு அடிமையாகவே ஆகிவிட்டார் நரசிம்மபாரதி.

அது வீண் போகவில்லை என்றுதான் கூற வேண்டும். அந்த உபாசகர் மனமும் ஒரு நாள் கரைந்தது! ''நரசிம்மபாரதி... நீ நிஜமாலுமே ஒரு நல்ல சிஷ்யன். என்னை மாயாவி, மாந்திரீகன், பைராகின்னு பலவிதமா நினைச்சு யாருமே எனக்கு சிஷ்யனாகலை. ஆனவாளும் கொஞ்சநாள்கூட தாக்குப் பிடிக்கலை... ஆனா நீ அப்படி இல்லை... நான் வெச்ச நான்கு பரீட்சையிலேயும் தேறினே. உன்னை ஏமாத்த நான் பிரியப்படலை. என்னோட மந்திர தந்திரங்கள் அவ்வளவையும் நான் உனக்குத் தத்தம் பண்ணப்போறேன்.'' என்றவர் அவ்வாறே செய்தார். அதுவும் கங்கைக்கரையில் வைத்து. அதன்பின் ஒரு முழுக்குப் போடலாம் என்று கங்கைக்குள் சற்றே உள்சென்றவர் திரும்பவே யில்லை.

நரசிம்மபாரதிக்கும் அவரது முடிவு அதன்பின் விளங்கியது. அவர் ஜலசமாதி ஆகிவிட்டார். அதுவும் அவராகவே விரும்பி... கங்கையில் ஜலசமாதி ஆக கொடுத்துவைத்திருக்கவேண்டும். இருந்தாலும் இன்னும் சிலகாலம் இருந்திருக்கலாமோ என்று தோன்றியது.

சோகமாய் அங்கிருந்து விலகினார்.

அதே சமயம் எந்த மாதிரி சித்திகளை எல்லாம் குருநாதர் அருளியுள்ளார் என்பது தெரியாது. இருந்தும் காசி நகரத்து கல் சந்துகளில் நடந்து வந்தபோது எதிரில் ஒரு யானை. மாவுத்தன் அதை பிச்சை எடுக்க விட்டிருந்தான். அதைப் பார்த்த நரசிம்மபாரதிக்குக் கோபமாகவும் ஆத்திரமாகவும் வந்தது.

'இந்த வேழம் எத்தனை பெரியது... ராஜமிருகம்... விக்னேஸ்வர சொரூபம் வேறு. ஞானகாரகன் கேதுவின் அம்சமான இதைப் போய் இந்த மாவுத்தன் பிச்சை எடுக்க விட்டிருக்கிறானே...?

இந்த வேழமும் எடுக்கிறதே... **தன் பலத்தைக் காட்டி** அவனைத் தூக்கி எறியவேண்டாமா?'

அவர் நினைத்து முடித்த மாத்திரம் அந்தச் சம்பலம் நடக்கத் தொடங்கியது. நரசிம்மபாரதி நினைத்தது மாதிரியே அந்த வேழம் அந்த மாவுத்தனை தன் துதிக்கையால் தூக்கி வீசி எறிந்தது.

உபாசகர் நரசிம்மபாரதிக்குத் தான் நினைத்தது போலவே நடந்ததில் சொல்லமுடியாத அளவு சந்தோஷம். ஒருவேளை தற்செயலான ஒரு சம்பவத்தைத் தான் நாம் முன்கூட்டியே நினைத்துப் பார்த்தோமா என்றும் தோன்றியது.

'உண்மையில் நாம் நினைத்ததால்தான் அது நடந்தது என்றால் இந்த யானை எனக்கு இப்பொழுது மாலை சூட்டவேண்டும். அப்படிச் சூடினால் இது என் எண்ண சக்தியால்தான் நிகழ்கிறது என்று நான் நம்புவேன்' என்று அவர் அடுத்து நினைக்க - அதுவும் ஈடேற ஆரம்பித்தது.

பக்கத்திலேயே ஒரு பூக்கடை. பூக்கடைக்காரர் மாலைகள் கட்டிக் கடையில் தொங்கவிட்டிருந்தார். அதில் ஒரு மாலையை அப்படியே உருவி அந்த வேழமானது உபாசகரின் கழுத்தில் போட்டது.

நரசிம்மபாரதி திக்குமுக்காடிப் போய்விட்டார். உள்ளுக்குள் 'நான் இனி சாதாரண நரசிம்மபாரதி இல்லை... சித்தன் நரசிம்மபாரதி' என்று மனங்குளிரச் சொல்லிக்கொண்டார்.

இதெல்லாம் காசியில் நடந்துகொண்டிருந்த அதே சமயம் திருக்கடவூர் மடத்திலும் சில விசேஷமான சம்பவங்கள் நிகழத் தொடங்கியிருந்தன. அது...

ஆலயப் பிரவேசம் முடிந்து ஜெயந்திநாதர் ஸ்ரீமடத்துக்குள் நுழைந்தபோது மாவட்ட கலெக்டரும் தாசில்தாரும் ஆர்.டி.ஓ.வும் தரிசனத்துக்காக வந்திருந்தார்கள். ஒரு காரியமாகவும் வந்திருந்தார்கள்.

''வாங்கோ... என்ன விசேஷம்... கலெக்டர் ஆபீஸே இங்க இடம்பெயர்ந்து வந்த மாதிரி இருக்கே?'' என்று ஸ்வாமிகளும் கேட்டார்.

அவர்களும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்துவிட்டுப் பேச ஆரம்பித்தனர். குறிப்பாக கலெக்டர்தான் பேசினார்.

''சாமி... இந்த முறை நம்ம மாவட்டமே தண்ணிப் பஞ்சத்துல தவிக்கறது உங்களுக்குத் தெரியும். ஆத்துல சொட்டுத் தண்ணி கிடையாது. ஆகையால லாரிலதான் சப்ளை செய்தாக வேண்டிய ஒரு நிலைமை. அதுக்காக தண்ணி உள்ள கிணறுகளைத் தேடிக்கிட்டு இருக்கோம். உங்க ஸ்ரீமடத்துக்குச் சொந்தமான கிணறு ஒண்ணுல எப்பவுமே தண்ணி வத்தாதுன்னு கேள்விப் பட்டோம். அதுல இருக்கற தண்ணியை லாரில எடுத்துக் கிட்டுப்போக நீங்க அனுமதியளிக்கணும்...''

ஸ்வாமிகள் பதிலுக்கு ஒரு உண்மையான பார்வை பார்த்தார். உடனே சரி என்று சொல்ல ஏனோ நிரடியது.

''என்ன சாமி தயக்கம்? இந்த முறை வறட்சியைச் சமாளிக்க இந்த ஊர்ல கிணத்தையும் தோடிபுரத்தையும்தான் நம்பியிருக்கோம்...''

''தோடிபுரமா...?''

''ஆமாம் சாமி... அது என்ன அதிசயமோ தெரியல, அங்கமட்டும் எப்படியோ மழை பெய்ஞ்சிடுது. நேத்துகூட பாருங்க, ஒரு மணிநேரம் சக்கை மழை. முந்நூறு வருஷத்துல ஒரு நாள் ஒருபொழுது அந்த ஊர்க்காரங்க தண்ணிக் கஷ்டம் அது இதுன்னு அனுபவிச்சது கிடையாது.''

''அது எப்படி?'

''அதைத்தான் எல்லாரும் ஒரு அதிசயமா நினைக்கறாங்க. அது அந்த ஊர் தோடீஸ்வரர் அருள்னு சிலரும் 'அதெல்லாம் இல்ல. அந்த ஊர்ல இருக்கற தாசிகுடும்பம் செய்யற பூஜையாலதான்'னு சிலரும் சொல்றதெல்லாம் கேக்கவே ஆச்சரியமாயிருக்குது.''

''நான்கூட தோடிபுரம் பத்தி கேள்விப்பட்டிருக்கேன். ஊர்ல எங்க வேணா எப்ப வேணா வீணை வாசிக்கற சப்தம் கேக்கும்னு சொல்வா, அப்படித்தானே?''

''ஆமாம் சாமி... நாங்க தோடிபுரம் போயிருந்தப்பகூட வீணை ராகம் எங்க காதுலையும் விழுந்துச்சு.''

உடனேயே ஸ்வாமிகள் முகத்தில் ஒருவிதச் சலனம்.

''என்ன சாமி யோசிக்கிறீங்க?''

''எனக்கே அது புதிரா இருக்கு. அதான்! இங்க நான் ஸ்ரீமடத்துல பண்ணாத பூஜையையா அங்க அந்த தாசி குடும்பத்துல பண்றா...''

''அதான் சாமி புரியல. அதே சமயம் அந்த ஊரே தாசியை சாமியாத்தான் நினைக்கறாங்க.''

ஸ்வாமிகள் அதைக் கேட்டுப் பெருமூச்சுவிட்டார்.

''என்ன சாமி... போயும் போயும் ஒரு தாசியைப் போய் கும்புடுறாங்களேன்னா...?'' தாசில்தார் குறுக்கில் புகுந்துவிட்டார்.

''இல்லயில்ல... அப்படிச் சொல்லாதேள். தேவதாசிகளைப் பத்தின இந்த உலகத்தோட பார்வையே ரொம்ப தப்பானது. உண்மைல ஒவ்வொரு தேவதாசியும் அப்படியே அந்த அம்பாளோட சொரூபம். கோயில்ல கற்சிலையா இருக்கறவதான் தாசியா - உயிர்ச்சிலையா நடமாடுறா. அவாளோட ஆட்டம்கறது இயக்க சக்தி. அவாளை ஆசையா பார்த்தா அதுக்கு ஒரு பலன். பக்தியோட பார்த்தா அதுக்கு ஒரு பலன். அவாள்ளாமும் ரிஷிகளைப்போலத்தான். எந்த தேவதாசி காமமா பாக்கப்படாம வணக்கத்துக்குரியவளா பாக்கப்படுறாளோ அவதான் சாட்சாத் அம்பாள். அம்பாள் இருக்கற இடம் கோலாகலமாத்தானே இருக்கும்? அங்க மழைதான் பெய்யாம போகுமா... இல்ல தீர்த்தம்தான் இல்லாமப் போகுமா?''

''உங்க பதிலே வித்தியாசமா இருக்கே... தாசின்னாலே ஆண்களோட காமப்பசிக்குத் தீனி போடுறவங்கன்னுதானே அர்த்தம்?''

''எல்லாமே தப்பு... தாசிகள் விஷயத்துல சூட்சமமா நிறைய விஷயங்கள் இருக்கு. அது எல்லாருக்கும் புரியாது. சரி... நீங்க கிளம்புங்கோ. நீங்க தாராளமா அந்தக் கிணத்துல இருந்து ஜலத்தை எடுத்துக்கலாம்.'' ஸ்வாமிகள் அனுமதியளிக்கவும் அவர்களும்

மிக மகிழ்வுடன் வணக்கம் சொல்லிவிட்டுக் கிளம்பினர். அவ்வளவையும் ஒதுங்கியிருந்து கேட்டுக்கொண்டிருந்த நீலகண்டன் என்கிற ஸ்வாமியின் சிஷ்யன் அவரை நெருங்கி வந்தான்.

''ஸ்வாமி...''

''நீ என்ன கேக்கப்போறே?''

''தோடிபுரத்துல அப்படி என்ன மகிமை...?''

''அது சிவபட்டணம்.''

''அப்படின்னா காசி, ராமேஸ்வரம் மாதிரி ஏன் பெரிய ஸ்தலமா அது இல்லாம போச்சு?''

''சங்கீதக்காராளோட காசியும் ராமேஸ்வரமும் தோடிபுரம் தான். அவா வந்துட்டுப் போனா போறும்னு அந்த தோடீஸ்வரன் நினைக்கறான்.''

''இவ்வளவு விஷயம் தெரிஞ்ச நீங்க அப்பப்பகூட அந்த ஊருக்குப் போனதில்லையே...?''

''போயிருக்கேன்... என் சிறு பிராயத்துல! அங்க அம்பாளுக்குப் பெரிய விசேஷமில்ல... ஈசான மூலை நவக்கிரகங்களுக்கான இடத்துல சின்னதா ஒரு சன்னதியைக் கொடுத்துட்டா. அம்பாளும் அதுல அடக்கமா இருக்கா. அவளை இப்படி ஓரம்கட்டிட்டாளேங்கற ஆதங்கத்துல நான் அங்க போறதில்ல...''

''எல்லாம் சரி... அந்த சிவபட்டணம் அவ்வளவு செழுமையா இருக்க, இங்க மட்டும் ஏன் வறட்சி? அம்பாளுக்கு கருணை இல்லையா?''

''அதுக்கு வேற காரணம் இருக்கு. உனக்குச் சொன்னா புரியாது. சொல்லவும் கூடாது.''

''பல சமயங்கள்ல இப்படி ஒரு பதிலைச் சொல்லிடறேள். அதுசரி... அங்க எப்படி வீணைசப்தம் கேக்கறது?''

''வீணை வாசிச்சா கேட்கத்தானே செய்யும்?''

''ஊருக்கே கேக்கற அளவுக்கு ஒருத்தரால வாசிக்க முடியுமா என்ன?''

''கேக்கறதே... அப்ப முடியும்னுதானே அர்த்தம்?''

''அதான் எப்படி...?''

''அதான் ருத்ரவீணையோட சக்தி...''

''ருத்ரவீணையா. வீணை கேள்விப்பட்டிருக்கேன். அது என்ன ருத்ரவீணை?''

''ருத்ரனாகிய அந்த சிவனே வாசிச்சதால காரணப் பெயரா வந்திருக்கலாம்... இல்லே சாதாரண வீணையைவிட பெரிசா, தந்தி பலமும் அதிகமா உள்ளதாலயும் வாசிக்கத் தெரியலேன்னா கையை அறுத்துடற அளவுக்கு ரௌத்ரமா இருக்கறதாலையும் ரௌத்ரவீணைன்னு சொல்லி காலப்போக்குல அது ருத்ரவீணைன்னு ஆகியிருக்கலாம்.''

''அப்ப சாதாரண வீண்ணையைவிட பெருசா...? விசேஷமானதா?''

''நிச்சயமா... அதை வாசிக்க அபாரமான ஆண்மை வேணும். பெண்கள் வாசிக்கக்கூடாதுங்கறது ஐதீகம். ஒரு ஆண் அதை வாசிக்கும்போது பார்த்தா ஒரு பெண்ணை மடியில போட்டுண்டு கொஞ்சி விளையாடுற மாதிரி இருக்கும்.

ஆணும் பெண்ணும் கொஞ்சினா காமம் தலை எடுக்கும். காமம் தலையெடுத்தா உயிர் துளிர்விடும். ருத்ரவீணையும் அப்படித்தான். அதன் ராகங்களும் பல விஷயங்களைச் சுற்றித் துளிர்விடச் செய்யும்.''

''அப்ப அந்த வீணையாலதான் அதன் இசையாலதான் தோடிபுரம் க்ஷேமமா இருக்கா?''

''இருக்கலாம்... இசையோட சக்திக்கு ஒரு ஊரே சான்றா - உதாரணமா இருக்கக்கூடாதா என்ன?''

''இன்னும் என்னவெல்லாம் அதுல இருக்கு...?''

''நான் இவ்வளவு பிரஸ்தாபிச்சதே அதிகம். நீ போய் வேலையைப் பாரு...''

''ஒரே ஒரு கேள்விக்கு மட்டும் பதில் சொல்லுங்கோ.''

''என்ன?''

''ருத்ரவீணையால க்ஷேமமா இருக்கற ஊர் அந்த வீணைக்குத்தானே நன்றி சொல்லணும். ஏன் ஒரு தாசிக்கு நன்றி சொல்றது?''

''நான் உனக்கு முந்தி சொன்ன பதில்தான்... போய் வேலையைப் பார். இதுக்குமேல் எதுவும் நீ கேட்கக்கூடாது...'' ஸ்வாமிகள் அப்படிச் சொன்னபிறகு நீலகண்டனாலும்

மீறமுடியவில்லை. அதன்பிறகு நீலகண்டன் போய்விட்டான். ஆனால், அவன் கேட்ட கேள்விகள் அவருக்குள் சுற்றிச் சுற்றி வந்தன. பழைய நினைவுகள் சிலவும் ஞாபகத்தில் அலைமோதத் தொடங்கின.

ஜெயந்திநாத ஸ்வாமிகளின் குருநாதர் சக்திநாதர் ஒருநாள் அவரிடம் சொன்னது காதில் அலைமோதியது.

'அந்த அம்பாளோட அனுக்ரஹத்துக்காக, அவளோட தரிசனத்துக்காக இந்தப் பூலோகத்துல எவ்வளவோ பேர் தவமா தவமிருக்கா... ஆனா, அவளோ ஒரு வீணைக்குள்ளே குடியிருக்கா. அந்த வீணை மட்டும் கிடைச்சா, அதுல அவளோட பீஜாட்சர மந்திரத்தை வாசிச்சா அடுத்தநொடி அவதரிசனமும் அதன்பின் கேட்ட வரமெல்லாமும் கிடைக்கும். மாற்று மதத்தைச் சேர்ந்தவனுக்கும் அவ ரட்சனை பண்ணியிருக்கா. அது எப்படின்னு தெரிஞ்சுக்கணும்னா தோடிபுரத்துக்குப் போகணும்.'

அன்று சக்திநாதர் சொன்னது... இன்று ஜெயந்திநாதருக்குள் அலைமோதியது. 'ஊர் உலகமே தண்ணீர் இன்றித் தவிக்கிறது. ஆனால் தோடிபுரம் மட்டும் செழிப்பாக இருக்கிறது. அம்பாளின் ரட்சனை அந்த ஊருக்கு மட்டும்தானா? இந்த திருக்கடவூருக்குக் கூடாதா என்ன? அபிராமபட்டருக்குக் காதுத்தடாங்கத்தைத் தூக்கிப்போட்டு நிலவைக் காட்டி அருளியவளுக்கு அந்த வீணையை அருளும் சக்திதான் இல்லையா என்ன?

எதற்கு யோகம், யாகம் என்று அன்றாட ஆசாரங்களில் சிக்கிக்கொண்டு... வீணை இருந்தால் நொடிப்பொழுதுகூட அதிகமே... அவள் தரிசனம் கிடைத்துவிடுமே...? ஜெயந்திநாதர் புறப்படத் தயாரானார். எப்பொழுதும் பரிவாரசகிதம் வெளியே செல்பவர், ரகசியமாக ஊரே தூங்கும் இரவுப் பொழுதில் ஸ்ரீ மடத்தைவிட்டுக் கிளம்பினார்.

ஸ்ரீ மடத்து சாரட் ஒரு புறம் தனியே நின்றிருந்தது. குதிரை, லாயத்தில் இருந்தது. அதை ஓசையின்றி அழைத்துவந்து சாரட்டில் பூட்டி அவரே சாரதியாகவும் ஏறிக்கொண்டு கிளம்பிவிட்டார்!

# 14



## அன்று

சமாதியைப் பிளந்துகொண்டு வெளிப்பட்ட உருவத்தைப் பார்த்து வீரேந்திரன் ஒரு வினாடி நடுங்கிவிட்டான். குதிரையும் கனைத்துக்கொண்டு அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் ஓடியது.

குதிரையே ஓடும்பொழுது வீரேந்திரன் மட்டும் ஓடாமல் இருப்பானா என்ன? அவனும் பேயோ, பிசாசோ, இல்லை உயிர்பெற்று எழுந்துவிட்ட பிணமோ என்று ஓட, ''நில்!'' என்று கத்தியது அந்த உருவம். ஆனால் அதையெல்லாம் அவன் காதில் வாங்கவில்லை. தொடர்ந்து ஓடினான்.

''சொன்னால் கேள்... ஓடாதே... திரும்பிவா. இல்லாவிட்டால் உன் கால்களைச் செயலிழக்க வைத்துவிடுவேன்.''

அந்த உருவம் பலமாகக் கத்தியது.

வீரேந்திரனும் தேங்கி நின்றான். அச்சம் குறையாதபடி நடுங்கினான். அந்த உருவம் அவனை நோக்கி நடந்துவருவதைச் சருகுகள் அதன் காலடியில் பட்டு போடும் சப்தத்தின் மூலமாக உணரமுடிந்தது. வந்த உருவம் எட்டி அவன் தோளைத் தொட்டது. நடுங்கிக் கத்திவிட்டான் வீரேந்திரன்.

''அச்சப்படாதே... நானும் உன்னைப்போல மனிதன் தான்...'' - அந்த உருவம் அப்படிப் பேசவும்தான் சற்றுத் தைரியம் வந்து திரும்பினான். நேருக்கு நேராகப் பார்த்தான். தலையில், முகத்தில், மார்பில் அங்கங்கே மண்திப்பிகள் ஒட்டியிருக்க - அந்த உருவம் ஒரு மாதிரி சிரித்தது. சிரிப்பே பயங்கரமாக இருந்தது. உடம்பும் நன்கு வளர்ந்த உடம்பாக ஆகிருதியாக இருந்தது. இடையில் ஒரு அழுக்கு கெளபீனம், வலது கையில் மனித உடலின் ஒரு எலும்புத் துண்டு. அனேகமாக அது முதுகெலும்பாக இருக்கவேண்டும். ''யார்.. யார்... நீ?'' - வீரேந்திரன் திணறலோடு கேட்டான்.

''நானொரு காபாலிகன்...''

''கா... காபாலிகனா...? அப்படியானால்?''

''சைவன், வைஷ்ணவன், பௌத்தன், கிறித்தவன், இசுலாமியன் போன்றவன்தான் காபாலிகனும்... ஆனால் அவர்களைப்போல போலி ஆசாரங்கள் எதுவும் என்னிடம் கிடையாது.''

''புரியவில்லையே...?''

''புரிந்து என்னாகப் போகிறது உனக்கு? நீதான் உடம்பை வளர்த்துக்கொண்டு உண்டு கொழுத்து உல்லாசமாய் திரிவதை வாழ்க்கையாக நினைப்பவன் ஆயிற்றே?''

''நான்... என்னை... என்னைப்பற்றி உனக்கெப்படி தெரியும்?''

''உன்னைப்பற்றி மட்டுமா... உன் பரம்பரையையே எனக்குத் தெரியும். நீ ஒரு தேவதாசிமகன்... சரிதானே?'

''ஆ... ஆமாம்...''

''பெண்ணாகப் பிறக்காமல் ஆணாகப் பிறந்துவிட்டதால் உன்னைத் தவிட்டுக்கு விற்கத் துணிந்தவள் உன் தாய். தெரியுமா?''

''அப்படியா... எனக்கு அப்படி எதுவும் தெரியாதே...''

''உனக்கு எதுதான் தெரியும்... மனிதப்பிறப்பில் நீ ஒரு களங்கம். அனர்த்தம்...''

''போதும் நிறுத்து... ஊருக்குள் படுக்க வக்கின்றி ஒரு மயானத்தில் பிணங்களோடு படுத்துறங்கும் நீ என்னைக் களங்கம் என்கிறாயா?''

''பரவாயில்லையே... தைரியமாகப் பேசத்தொடங்கி விட்டாயே... உனக்குச் சொரணைகூட இருக்கிறதே?''

''என் சொரணையைப் பற்றி பேசுவதைவிடு. என்னை எதற்கு அழைத்தாய்?''

''சமாதி நித்திரையில் இருந்த என் உறக்கத்தைக் கலைத்த உன்னைச் சபிக்கத்தான்...''

''சபிக்கவா... நீ என்ன பெரிய ரிஷியா...?''

''காபாலிகன் என்பவன் ஆயிரம் ரிஷிகளைவிட மேலானவன். இந்த மாய உலகின் எந்த இன்ப துன்பங்களும் அவனை எதுவும் செய்யமுடியாது. இல்லாவிட்டால் இத்தனை தைரியமாக இந்தச் சுடுகாட்டில் இருக்க முடியுமா என்னால்?''

''நான் கூடத்தான் இருக்கிறேன்...''

''அப்படியா... உயிரைவிட்டும் வானகம் செல்ல இயலாதபடி இங்கே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும் ஆத்மாக்களைப் பார்த்துவிட்டு அதன்பின் இங்கே இருக்க முடியுமா என்று சொல்...''

அந்தக் காபாலிகன் அவன் நெற்றியில் தன் கட்டை விரலால் அழுத்தித் தீண்டிய மறுநொடி வீரேந்திரன் கண்களுக்கு ஒரு புதிய சக்தி கிடைத்ததுபோல அந்த மயானத்தில் அங்கும் இங்குமாய் அலைந்துதிரிந்தபடி இருக்கும் சில கோரமான உருவங்கள் கண்ணில்பட்டன. அப்படியே அவற்றின் விசித்திரமான அழுகுரலும் ஊளைச்சப்தமும்கூட காதில் விழுந்தது. அவற்றின் சில உருவங்கள் மிகமிக விகாரமாக இருந்தன. மிக நீண்ட நகங்கள், கோரைப்பற்கள், அளவில் பெரிய கண்கள், கரிய நிறம் என்று எண்ணிப் பார்க்க முடியாத அளவில் இருந்தன.

சில உருவங்கள் அவன் அருகே வந்து அவனைப் பார்த்து வெறித்தன... ஐயோ... பார்வையா அது? வீரேந்திரனுக்குள் தன் கண்களுக்கு புலனாவது கனவா இல்லை நனவா? இல்லை மாயாஜாலமா என்றெல்லாம் கேள்விகள் எழும்பின.

வியர்த்து ஒழுகத் தொடங்கினான்.

அதைப் பார்த்த அந்தக் காபாலிகன் மேலும் கொடூரமாய் சிரித்து ''இப்பொழுது காட்டு உன் தைரியத்தை...'' என்றான். அந்தப் பிசாசு உருவங்கள் அவனைச் சுற்றிவரத் தொடங்கின. கூரிய நகமுள்ள தங்கள் கைகளால் அவனைக் குத்திக்கிழித்து ரத்தம் குடிக்க விரும்புகிற மாதிரி பாவனைகளும் புரிந்தன.

''ஐயோ... வேண்டாம்... வேண்டாம்...'' அலறத் தொடங்கினான் வீரேந்திரன். சிறிது நேரத்தில் எல்லாமே அடங்கி ஒரு நிசப்தத்தில் அவன் குறுகிய நிலையில் அமர்ந்திருக்க, எதிரில் அந்தக் காபாலிகன் சப்பணமிட்டு அமர்ந்திருந்தான் அதுவும் அவனையே பார்த்தபடி. கண்திறந்த வீரேந்திரன் திக்கல் திணறலுடன் ''காபாலிகனே... நீ யாராக இருந்தாலும் சரி. என்னை விட்டுவிடு'' என்று கெஞ்சத் தொடங்கினான்!

''அச்சப்படாதே... மனித வாழ்வின் உணர்ச்சி நரகம்தான் அச்சம். அதற்கு மட்டும் ஒருவர் ஆட்படவே கூடாது...''

''நீ ஏதேதோ சொல்கிறாய்... ஆனால் என்னால் முடியவில்லையே...''

''முடியும். காபாலிகத்தைப் புரிந்துகொண்டால் உன்னால் முடியாதது எதுவும் இல்லை!''

''காபாலிகம் என்றால்...?''

''சொல்கிறேன்...''

''அதைத் தெரிந்து நான் என்ன செய்யப்போகிறேன். உன் யோகநித்திரையை நான் தெரியாமல் கெடுத்துவிட்டேன். என்னை மன்னித்துவிடு. நான் இங்கிருந்து கிளம்புகிறேன். எனக்கு இந்த மயானச்சூழலே பிடிக்கவில்லை.''

''அப்படிச் சொல்லாதே... ஆண்டி முதல் அரசன் வரை ஒருநாள் இங்கு வந்துதான் தீரவேண்டும்.''

''உயிரற்ற பிணமாய் இங்கே வருவதற்கும் உயிரோடு வருவதற்கும் வேறுபாடு இல்லையா என்ன?''

''நிறைய இருக்கிறது. அது என்ன என்று உரைப்பதுதான் காபாலிகம். இந்த உலகின் ஒரே கடவுளான அந்த ஆதிசிவனின் வழிநடப்பவர்கள்தான் காபாலிகர்கள். சிவம் ஒன்றே கடவுள்... அதுவே சித்தம் நிரம்பியிருக்கவேண்டும். அந்தச் சிவத்தின் பிரகிருதிதான் பைரவமூர்த்தி. அவரே இந்த உலகைப் படைத்தவர். உன்னைப் படைத்தவர். என்னையும் படைத்தவர். மது, மங்கை, மாமிசம் என்று இவற்றையும் படைத்தவர். அவ்வளவு ஏன்... நமக்குள்ளேயே ஆயிரமாயிரம் இன்பங்களை ஒளித்தும் வைத்திருப்பவர். இப்பொழுது பார் உனக்கு ஒரு இன்பக்காட்சியைக் காட்டுகிறேன்.''

அந்தக் காபாலிகன் வீரேந்திரனின் கையைப் பிடித்து தரதரவென்று இழுத்துச்சென்று அந்த மயானக் குடிசை ஒன்றுக்குள் பிடித்துத் தள்ளினான்.

உள்ளே ஒரு பருவப்பெண். உடம்பில் ஒரு பொட்டுத்துணி இல்லை. ஆனால் பூரிப்பான வளர்ச்சி. தலைமுடி மட்டுமே புட்டம் கடந்திருந்தது. அதையே ஆடைபோல முன்னும் பின்னும் பரத்தி மூடியிருந்தாள். இருந்தும் அதில் விலகியிருந்த பாகங்களில் அவளது உடல் முழுமையாகத் தெரிந்தது.

அவள் கண்களில் ஒருவித போதை.

ஒரு கரத்தில் மண்டை ஓடு ஒன்றை வைத்திருந்தாள். அதில் கள் தளும்பிக்கொண்டிருந்தது. அருகில் நிறைய கள்ளுப் பானைகள், அவளைப் பார்த்த மாத்திரத்தில் வீரேந்திரனுக்கு உடம்பு விடைத்துக்கொண்டு ஒருவிதமாக நடுங்கியது. அவள் இழுத்து அணைத்தாள். அப்படியே கள்ளை அவனுக்குள் செலுத்தினாள்.

''ஜெய் பைரவா... காமினி, அவனை விட்டுவிடாதே. நீ தரும் சுகத்தால் அவன் இந்தச் சுடுகாட்டைவிட்டே செல்லக் கூடாது. இவனது சகோதரிதான் நாம் பலியிடத் தேடும் சௌந்தர்ய கன்னிகை...'' என்று அவள் காதில் ஓதிவிட்டும் சென்றான். வீரேந்திரன் காதில் அதெல்லாம் விழவில்லை. அவன் வெறியோடு அவளைப் பற்றி சுவைக்கத் தொடங்கியிருந்தான்!

**கா**விரி ஆற்றில் புதுவெள்ளம்.

காலம் கருணைசெய்யத் தொடங்கிவிட்டதுபோல தஞ்சை முழுக்க மழை பெய்து காவிரி நிரம்பி ஓடத்தொடங்கியிருந்தது.

கரைவெளியில் சூரிய நமஸ்காரத்திலும் பின் சந்தியாவந்தன கர்மாவிலும் இருந்தார் சதாசிவ சாஸ்த்ரிகள். அப்பொழுது அங்கேயே அவரைப் பார்க்க சிலர் வந்து கைகட்டிக்கொண்டு காத்திருந்தனர். சாஸ்த்ரிகளும் கர்மா முடிந்து கரை ஏறும்போது அவர்களைப் பார்த்தார்.

''என்ன விஷயம்... கூட்டமாக வந்திருக்கிறீர்கள்?''

''ஒரு முக்கியமான விஷயத்துக்காகத்தான்...''

''என்ன...? ஆமாம்... நான் உங்களுக்கு அவ்வளவாக பிடிக்காத பிராமணன் ஆயிற்றே... என்னிடம் எந்த முக்கிய விஷயத்தைக் கூறி என்ன பயன்?''

அவர்கள் அந்த பதிலால் மெல்ல குத்தப்பட்டதுபோல் ஆகி தலையைச் சொறிந்தனர்.

''சரி சரி. சொல்லுங்கள்...''

''ஊருக்குள் அழகிய இளம்பெண்கள் பலரைக் காணவில்லை.''

''என்ன... இளம் பெண்களைக் காணவில்லையா?''

''ஆமாம்... அவர்களில் திருமணநாள் குறிக்கப்பட்ட இரண்டு பிராமணப் பெண்களும் அடக்கம்.''

''அப்படியா...? என்னாயிற்று...? யாராவது கடத்திச் சென்றார்களா? தலையாரியைச் சந்தித்து புகார் கூறினீர்களா?''

''எல்லாம் முடிந்தது. தலையாரியும் ஒரு இளைஞர் படையை நியமித்து தேடச் சொல்லியிருக்கிறார். அதே சமயம் ஊருக்குள் புதிது புதிதாக சிலர் தென்பட்டு பயமுறுத்தியபடி உள்ளனர்...''

''யார் அது...? நீங்கள் பாபாவைக் கூறுகிறீர்களா?''

''ஐயோ! அவரைச் சொல்வோமா...? அவர் மகான், மகத்தான மனிதர் என்பதைத்தான் பார்த்துவிட்டோமே... நாங்கள் குறிப்பிடுவது அவரையல்ல...''

''என்றால்?''

''ஊருக்குள் சில காபாலிகர்களைச் சிலர் பார்த்திருக்கின்றனர்.''

''என்ன... காபாலிகர்களையா?'' சதாசிவ சாஸ்த்ரிகள் கேட்ட விதத்திலேயே அவர் ஆழ்ந்த பதட்டத்திற்கும் அதிர்ச்சிக்கும் உள்ளாவதை அவர்களால் உணரமுடியாது.

''ஆம்... 'அழிந்துவிட்டார்கள், இனி தோன்றவே மாட்டார்கள்' என்று இந்த உலகம் கருதிக்கொண்டிருக்கும் காபாலிகர்கள்தான. அவர்கள்தான் நரபலியின் நிமித்தம் பெண்களைக் கவர்ந்து சென்றிக்க வேண்டும் என்று தோன்றுகிறது.''

- சாஸ்திரிகள் அப்படியே படித்துறையில் ஒரு ஓரமாக போய் உட்கார்ந்துவிட்டார்.

''இன்னொரு விஷயம்...!''

சாஸ்திரிகள் சோர்வுடன் நிமிர்ந்து பார்த்தார்.

''அவர்களைப் பழிப்பது, நிந்திப்பது, ஒதுக்குவது மகாபாவம் என்று சிலர் இங்கே பேச ஆரம்பித்துள்ளனர். அவர்கள்தான் சிவச்செல்வர்களாம். அவர்கள் வருகையின் விளைவாகவே நமது ஆலயத்தில் நீங்கள் பாடியபோது ஜோதி வடியில் இறைவன் தெரிந்தானாம்... மணியும் ஒலித்ததாம்...''

அவர்களில் ஒருவர் சொன்னது சாஸ்திரிகளை அறைந்தது போலாக்கியது. அப்படியே கண்கள் சிவக்கத் தன்னை நோக்கிப் பேசியவர்களைப் பார்த்தார்.

''யார் சொன்னது...? காபாலிகம் ஒரு காட்டு மிராண்டித்தனம். காபாலிகர்கள் மனித நெறிமுறைகளே இல்லாதவர்கள். சிவபெருமான் அன்பே வடிவானவன். இவர்களோ நரமாமிசம் தின்று, பலிகொடுத்து, மதுவருந்தி, சரீர சுகங்களில் வெறித்தனமான பற்றுதல் கொண்டவர்கள்... உயிரில்லாத பிணங்களைப் புணர்வதை ஒரு ஒழுக்கமாகக் கருதுபவர்கள். சிவத்துக்கு எதிரான அரக்கவாசிகள். மனிதப் பிறப்பில் வந்து பிறந்துவிட்ட மிருகங்கள். இவர்களைப் பார்த்து

அச்சப்படுவது, இவர்களை நிந்திப்பதை பாவமாய்க் கருதுவ தெல்லாம் மடமை...

ஆனானப்பட்ட பல்லவ மகாசக்கரவர்த்தியான மகேந்திரப் பல்லவச் சக்கரவர்த்தி எழுதிய 'மத்தவிலாச'த்தை படித்தால் தெரியும். காஞ்சியில் ஏடுகாப்பகத்தில் இன்றைக்கும் அதன் படிகள் கிடைக்கும். காபாலிகர்களை ஞானிகளாக நினைப்பவர்களை காஞ்சிக்கு அனுப்பிப் படிக்கச் சொல்லுங்கள். புரியும்.''

சதாசிவ சாஸ்திரிகள் ஒரு நீண்ட கோபக்கனலைக் கக்கிமுடித்தார். வந்து நின்றவர்களும் சிலவினாடிகள் வரை எதுவும் பேசவில்லை. மௌனமாக ஒருவரை ஒருவர் வெறித்தனர்.

''சரி... என்னைப் பார்த்து இதையெல்லாம் எதற்குக் கூறுகிறீர்கள்...? - சாஸ்திரிகளே திருப்பிக்கேட்டார்.

''காபாலிகர்கள் இங்கே வந்திருப்பதற்குப் பலமான காரணம் இருக்கும்போல் தெரிகிறது. அத்துடன் டெல்லி நகரிலிருந்து தஞ்சையிலிருந்து, செஞ்சியிலிருந்துகூட பலர் இங்கே வந்து நடமாடிக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் பாபாவை பின்தொடர்ந்து வந்திருப்பதாகவும் அவர்வசம் உள்ள வீணைதான் அவர்களது குறி என்றும் கேள்விப்பட்டோம்...''

சாஸ்திரிகள் இதைக் கேட்ட மறுநொடி விதிர்த்துப்போய் நிமிர்ந்தார்.

''ஆம். சாஸ்திரிகளே... அவரது வீணை அபாரசக்தி உடைய ஒன்றாமே...? அதுதான் அந்த தாசிக்கிழவி மாணிக்கவல்லிக்கு கண்பார்வை தந்ததாம்... அதுதான் இந்த ஊரில் மழையையும் வரவழைத்ததாம்... அதுவே, உங்களோடு இசை பாடி கோயில் மணியையும் இசைத்ததாம். அவ்வளவு ஏன்... ஆலயத்தில் பட்டுப்போன ஸ்தலவிருட்சத்தையே அது துளிர்க்க வைத்து விட்டதே...?''

அந்த பதில் சாஸ்திரிகளை முட்டுக்கொடுத்ததுபோல தூக்கி நிறுத்தியது.

''நிஜமாகவா...? ஸ்தல விருட்சம் துளிர்த்துவிட்டதா?''

மிக ஆவலாகக் கேட்டார்.

''ஆம்... துளிர்த்துவிட்டது. இத்தனை வல்லமை பெற்ற அவராலேயே காணாமல்போன கன்னிப்பெண்களைக் கண்டறிய முடியும். அவர்களை உயிருடன் மீட்க முடியும். இப்பொழுது இந்த ஊருக்கு பாபாவின் தயவு தேவை...!''

அவர்கள் கோரிக்கையைத் தொடர்ந்து எழுந்தவர் ''சரி. நீங்கள் செல்லுங்கள்... நான் பாபாஜியைப் பார்த்துப் பேசிவிட்டு பிறகு உங்களைச் சந்திக்கிறேன்.'' என்றபடியே புறப்பட்டார்.

அவ்வளவு நேரமும் ஒரு ஓரமாய் இருப்பது தெரியாமல் இருந்த முனியன் ஓடிவந்து சாரட்டில் ஏறிக்கொண்டு அவரோடு சாரட்டைக் கிளப்பத் தொடங்கினான்.

சாரட்டும் நல்ல வேகம் எடுத்தது.

முனியன் சவுக்கினால் குதிரையின் பின்தொடையில் விளாசினான். உள்ளிருக்கும் சாஸ்திரிகள் காதில் அது விழுந்தது.

''முனியா... நிதானமாகப் போ. அந்த வாயில்லாத ஜீவனை அதிகம் துன்புறுத்தாதே...'' என்றார். அதே வினாடி சாராட்டும் தேங்கிநின்றது... உள்ளே ஒரே குலுக்கல். சாஸ்திரிகள் எகிறி வெளியில் விழும் அளவு வந்துவிட்டார்.

''முனியா... என்ன இது? எதற்காக இப்படி சாரட்டை நிறுத்தி என்னைச் சோதிக்கிறாய்.'' என்று கத்தியபடியே வெளியே பார்த்தார். அதன்பிறகே அவருக்குக் காரணம் புரிந்தது.

தஞ்சை மகாராஷ்ட்ரப் படை வீரர்கள் சிலர் சாலையின் குறுக்கில் சாரட்டை வேல்கம்புகள் கொண்டு மறித்திருந்தனர்.

தோடிபுரம் சாலையும் வெறிச்சோடிக் காணப்பட்டது. தஞ்சை அரண்மனையில் இருந்து யாராவது வருகிறார்கள் எனும்போதுதான் இப்படி எல்லாம் வீரர்கள் பாதசாரிகளையும் பயணிகளையும் மறித்து நிறுத்துவார்கள். இன்று யார் வருகிறார்கள்? முனியனும் அந்த வீரர்களிடமே கேட்டுவிடுவது என்கிற முடிவுடன் ''அரண்மனை வீரர்களே... யார் வருகிறார்கள் என்று மறிக்கிறீர்கள்?'' என்று கேட்க அந்த மஹாராஷ்ட்ர வீரனும் ஒரு மாதிரி ஏளனப்பார்வை பார்த்தவனாக ''வங்காளத் திலிருந்து ஜோதிட சக்ரவர்த்தி ஒருவர் வருகிறாராம்.'' என்றான்.

''ஹும்... ஒரு ஜோதிடர் வருகைக்கா இத்தனை கூத்து?''

''அதிகம் பேசுகிறாய் நீ... அவர் ஜோதிடர் மட்டுமல்ல. ராஷ்ட்ர குல திலகர், வீர மார்த்தாண்டர், இந்த நாவலந்தேசத்தின் நற்றவத்தலைவர் மாவீரர் சிவாஜியின் அத்யந்த குருவும் அவரே...''

''எல்லாம் சரி... வங்காளத்து ஜோதிடருக்கு இந்த தமிழகத்து தோடிபுரத்தில் என்ன வேலை?''

''இங்கேதானே ராசிக்கிணறுகள் உள்ளன...''

அவன் சொன்னபிறகே சாஸ்திரிகளுக்குக்கூட அந்த ஜோதிடர் எதற்கு வருகிறார் என்பது புரிந்தது. விடிந்தால் மஹாளய அமாவாசை. நிறைந்த நாள். அரசவம்சாவழியினருக்கு தோஷங்கள் ஏதும் இருப்பின இந்த நாளில்தான் ஜோதிடர்கள் அதற்குப் பரிகாரம் காணுவார்கள். அதிலும் பூஜ்ஜிய இராஜ்ஜியத்தில் பன்னிரண்டு ராசிக்குரிய தோஷம் நீக்கும் ராசிக்கிணறு என்னும் புண்ணிய புஷ்கரணிகள் உள்ள தோடிபுரம்தான் அதற்கு ஏற்ற இடமும்கூட...

அவர்கூட 'அந்த ராசிக்கிணறுகளில் நாமும் நாளை நீராடி கிரகசாந்தி செய்துகொள்ள வேண்டும்' என்கிற முடிவிற்கு வந்தபோது அலங்கரிக்கப்பட்ட சாரட் ஒன்றின் முன்னும் பின்னும் வீரர்கள் அணிவகுத்து வர அந்த சாரட்டும் அவர்களைக் கடந்து ஆற்றோரமாய் சுடுகாடு கடந்து இருக்கும் நவக்கிரக மாளிகை நோக்கிச் செல்லும் பிரத்யேகப் பாதைவழி சென்றது.

அதைப் பார்த்த மு னியனும் ''சாமி... மர்மமாளிகைலதான் இந்த ஜோசியரும் தங்கப் போறார் போல இருக்கு...'' என்றான். சாஸ்திரிகள் அவன் ரசனையோடு சொன்னதற்காக சிரித்துக் கொண்டார். அந்த மகாராஷ்ட்ர படைவீரர்களும் வேல்கம்புகளை விலக்கி வழிவிட்டனர்.

சாஸ்திரிகளின் சாரட்டும் சீற்றத்துடன் புறப்பட்டது.

''சாமி... வீட்டுக்குதானே?'' முனியன் சாரட்டை செலுத்தியபடியே கேட்டான்.

''இல்ல முனியா... அபராஜிதா வீட்டுக்கு சாரட்டைவிடு'' என்றார் சாஸ்திரி.

''சாமிஈ...''

''என்ன?''

''அந்த தாசி வீட்டுக்கா...?''

''அதனால் என்ன?''

''பார்ப்பவங்க என்ன நினைப்பாங்க...?''

''பைத்தியமே... அபராஜிதா அற்புதமானபெண்... அவள் கிருகத்தில்தான் இப்பொழுது பாபாவும் இருக்கிறார். அவரைக் காணத்தான் செல்கிறேன்.''

''இல்ல சாமி... நான் சொல்றேனேன்னு நினைக்காதீங்க. பனை மரத்தடியில் நின்னு என்னதான் பாலைக் குடிச்சாலும் கள்ளுன்னுதானே ஊரும் உலகும் சொல்லும்.''

''சரி... என்ன செய்யச் சொல்கிறாய்...?''

''நீங்க நம்ம வீட்டுல இருங்க. நான் போய் பாபாஜியை கூட்டிக்கிட்டு வ்ரேன். என்னைக் கேட்டா பாபாஜியும் அங்க இருக்கறதவிட நம்ம வீட்ல இருக்கறதுதான் நல்லது.''

''நீ ஊரைப்பற்றி நினைத்துக் கவலைப்பட்டுப் பேசுகிறாய். அவர் இந்த ஏச்சுப் பேச்சு ஏளனங்கள் எல்லாவற்றையும் ஜெயித்த மகாமனிதர். அன்புக்கு மட்டுமே கட்டுப்படுபவர். அபராஜிதா அவரை உண்மையான அன்புடன் நெருங்கினாள். அதனால் இன்று அவர் அவள் இல்லத்தில் இருக்கிறார்.''

''எல்லாம் சரி... உங்க அன்புல மட்டும் என்ன தோஷமா இருக்கு? சொன்னாக் கேளுங்க...''

''முன்பெல்லாம். நான் சொன்னதை நீ கேட்டாய். இப்பொழுது நீ சொல்கிறாயா?''

''என்ன சாமி... நீங்கதானே நான்ங்கற அகங்காரம் கூடாதுன்னு சொல்வீங்க?''

முனியன் அவரை சாதுர்யமாக மடக்கினான். சாஸ்திரிகளும் சிரித்தார்.

''சரி சரி... உன் விருப்பப்படியே செய்...'' என்றார். அவனும் தோடிபுரம் அக்ரஹாரத்தில் முல்லைக்கொடி பரவிய அவரது வீட்டுமுன் சாரட்டை நிறுத்தி அவரை இறக்கிவிட்டான். அப்படியே திருப்பி அபராஜித வைஜெயந்தியின் வீடு இருக்கும் தாசியர் தெருப்பக்கம் அதைச் செலுத்தத் தொடங்கினான்.

சாஸ்திரிகளும் அவன் செல்வதைப் பார்த்தபடியே வீட்டினுள் நுழைந்தார். கால்கள் தரையில் என்ன இருக்கிறது என்று பாராதபடி நடக்க, கண்ணிரண்டும் முனியன் சாரட்டை செலுத்திக்கொண்டு செல்வதில் கவ்னமாக இருந்ததில் ஒரு பெரிய விபரீதம் ஒன்று நடக்கத் தொடங்கியது.

சாஸ்திரிகளின் மனையின் கூரையிலும் பின்கொல்லை யிலுமாய் திரிந்தபடி இருக்கும் மனை நாகம் அப்பொழுது அவரது வீட்டின் முகத்துவாரத்தில் வராண்டாவில் ஊர்ந்து கொண் டிருந்தது. சாஸ்திரிகள் அது ஊர்ந்து கொண்டிருப்பது தெரியாமல் அதை மிதித்துவிட - அது வலியோடு சீறியபடி நிமிர்ந்தது. சப்தம் அவரையும் கீழே குனிந்து பார்க்கவைக்க அவர் பார்த்த நொடிப் பொழுதில் அந்த கோதுமை நாகம் ஓங்கி ஒரு போடு போட்டது.

அதை சாஸ்திரிகளின் மனைவியும் பார்த்துவிட்டு பதறி அடித்துக்கொண்டு ஓடிவந்தாள்.

## இன்று

திருக்கடவூர் பேருந்துநிலையத்தில் ஒரு பேருந்தில் இருந்து இறங்கிய நரசிம்மபாரதியின் முகம் முழுக்க ஆறு மாசத்து ரோமம். தாடியும் மீசையுமாய் அவர் உருவமே மாறிப்போய் இருந்தது. கையில் ஒரு துணிப்பை. யாருக்கும் அவரை ஒரு துளிகூட அடையாளம் தெரியவில்லை. இந்த நிலையில் அவரை வீசிக்கொண்டு ஒரு போலீஸ் ஜீப் நின்றது. அதிலிருந்து திபுதிபு வென்று போலீஸ்காரர்கள் இறங்கி அவரைச் சுற்றிவளைத்து நின்றனர். நரசிம்மபாரதிக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர்களே ஒரு பார்வை பார்த்துவிட்டு அப்படியே ஒரே அமுக்காக அமுக்கிப் பிடித்து ஜீப்பில் போட்டனர். வீதியே வேடிக்கை பார்த்தது. ஜீப்புக்குள் நரசிம்மபாரதி புலம்பினார்.

''சார்... என்ன இது? என்னை எதுக்குப் பிடிச்சுண்டு போறேள்...?''

''பேசாதடா... நாயே... தாடியும் மீசையும் வளர்ந்துட்டா உன்னைத் தெரியாமப் போயிடுமா...?''

கேள்வியோடு முகத்தின்மேல் ஒரு குத்து...

''ஐயோ, சார்... நான் இந்த ஊர் ஸ்ரீமடத்தைச் சேர்ந்தவன்.''

''என்னடா கதை உட்றே... ஆமா... இப்ப என்ன பேர் உன் பேர்?''

''எப்பவும் என் பேர் நரசிம்மபாரதிதான்...''

''நரசிம்மபாரதிதான்... அப்ப உங்கப்பாம்மா வெச்ச மாதையன்கற பேர் என்னாச்சு?''

''மாதையனா?'' அப்படிக் கேட்கும்போதுதான் அவருக்குப் புரிந்தது அவர்கள் யாரோ ஒரு தீவிரவாதியாக தன்னைப் பார்த்திருக்கிறார்கள் என்பது...

''சார்... நான் மாதையன் கிடையாது... நான் நரசிம்மபாரதி. ஸ்ரீ மடத்து சிஷ்யன். வடநாட்டுப் பக்கம் யாத்திரை போய்விட்டு வர்றேன். இப்ப நான் ஒரு உபாசகனும்கூட... என்னைத் துன்பப்படுத்தி நீங்க சிரமப்படாதேள்...''

''என்னடா... பெரிசா உபாசகன் அது இதுன்னு ரீல்விடுறே?'' -கேட்கும்போதே போலீஸ் ஸ்டேஷன் வந்துவிட அவரை இறக்கி உள்ளே இழுத்துச் சென்றனர். திறந்து கிடந்த லாக்கப்பிலும் தள்ளிப் பூட்டினர்.

உடனடியாக எஸ்.பி. ஆபீசுக்கு போன் செய்து ''சார், தீவிரவாதி மாதையனைப் பிடிச்சுட்டு வந்திருக்கோம்'' என்றனர். அடுத்த பதினைந்தாவது நிமிடமே சர்சர் என்று வாகனங்கள் சீறிக்கொண்டு வந்து ஸ்டேஷன் வாசலில் நின்றுவிட்டன.

எஸ்.பி. ஒரு வாலிபனைப் போல குதித்து ஓடிவந்தார். லாக்கப்பின் உள்ளே நுழைந்தார். நுழைந்த வேகத்தில் அலறிக்கொண்டு வெளியே வந்தார்.

எல்லோரும் அவர் எதற்காக் அப்படி ஓடிவந்தார் என்று அவரைப் பார்த்தனர். எஸ்.பி.யால் எதுவும் பேசமுடியவில்லை. அவர் பயந்து அலறுமளவு அப்படி என்ன அந்த லாக்கப் அறையில் இருக்கிறது என்று எட்டிப்பார்த்த சிலரும்கூட மிரண்டுபோய் விட்டனர். இறுதியாக கான்ஸ்டபிள் ஒருவர் எட்டிப்பார்த்தபோது சிங்கம் ஒன்று பிடரியைச் சிலிர்த்தபடி லாக்கப் அறையின் ஒரு மூலையில் அமர்ந்திருந்தது.

கான்ஸ்டபிளுக்கு வியர்த்துவிட்டது. அதே வேளையில் தொலைபேசி வேறு சப்தித்து அவர்களை அழைத்தது.

காதைச் கொடுத்தபோது தீவிரவாதி மாதையனை கோவை மாவட்ட போலீஸ் சுற்றி வளைத்துப் பிடித்திருப்பதாக தகவல் வந்து சேர்ந்தது. 'அப்படியானால் லாக்கப்பில் பிடித்து வைத்திருப்பது நிஜமாலுமே நரசிம்மபாரதி என்கிற உபாசகர் தானா?' இன்ஸ்பெக்டரிலிருந்து எல்லோரும் அசடு வழிந்தனர். ''சார், தப்பு பண்ணிட்டோம்...'' என்று கைகளைப் பிசைந்து கொண்டனர்.

''பரவால்ல... இனிமேலாவது என்னைத் திறந்து விடுங்கோ...'' என்று நரசிம்மபாரதியின் குரலும் கேட்டது. திரும்பிப் பார்த்தனர். லாக்கப் கதவின் கம்பிகளுக்குப் பின்னால் அவர்தான்...! ஏதோ அப்பொழுதுதான் ஆற்றுக்குப்போய் குளித்துவிட்டு படுசுத்தமாக வந்து நிற்பது போல நின்று கொண்டிருந்தார்.

கதவைத் திறந்துவிட்டு 'பொதேல்' என்று காலில் விழுந்தார் இன்ஸ்பெக்டர். சிரித்தார் நரசிம்மபாரதி.

''என்னைக் கஷ்டப்படுத்திட்டேள். இருந்தாலும் அதுக்கு ஒரு சரியான காரணம் இருந்ததால நான் உங்களைத் தப்பா நினைக்கல. இனியாவது அப்பாவிகளைப் படுத்தாம நல்லவிதமா சர்வீஸ் பண்ணப்பாருங்கோ...'' என்று கூறிவிட்டு ஸ்ரீமடம் நோக்கித்தான் நேராக நடந்தார்.

ஸ்ரீ மடத்தில் நுழைந்த அவரை யாரோ மூன்றாவது மனிதரைப் பார்க்கிற மாதிரிதான் எல்லோருமே பார்த்தனர்.

''ஏன் எல்லாரும் இப்படிப் பாக்கறேள்...? நான் உங்க நரசிம்மபாரதி...''

''தெரியும்... நீர் நரசிம்மபாரதிங்கறது நன்னா தெரியறது. ஆனா எங்க நரசிம்மபாரதி இல்லை. ஓடிப்போன நரசிம்ம பாரதி...'' ஸ்ரீமடத்து அக்கவுண்டண்ட் ஜகன்னாத அய்யரின் விமர்சனம், உபாசகர் மனதைக் கொஞ்சம்போல குத்தி வலியை ஏற்படுத்தியது.

''ஜகன்னாத அய்யர்வாள்... எதனால என்மேல இப்படி ஒரு கோபம்?''

''கோபப்படாம...? மடத்தோட பிரதான சிஷ்யன் நீர். இப்படித்தான் ஒரு சித்து வேலைக்காரன் பின்னால சொல்லிக்காம கொள்ளாம ஓடிப்போவீரா?''

''தப்புதான்... அதுக்காக நானும் வருத்தப்பட்றேன். ஆனா நான் அப்படிப் போயிருக்கலைன்னா சாதாரண நரசிம்மபாரதி உபாசகர் நரசிம்மபாரதியா ஆகியிருக்க முடியாது...''

''உபாசகனா...?''

''ஆமாம்... நான் இப்ப ஒரு அம்பாள் உபாசகன். அவள் அனுக்ரஹத்தால பல சித்துக்களும் விளையாடுவேன்...''

''ஐயய்யோ...'' - அக்கவுண்டண்ட் ஜகன்னாத அய்யர் முகம் கோணிக் கொண்டது. ''சித்து என்றால் இவர் ஏன் இப்படி முகத்தைக் கோணிக் கொள்கிறார்?'' நரசிம்மபாரதி குழப்பத்தோடு நிற்க, மற்ற சிஷ்யர்களும் மடாதிபதி ஜெயந்திநாதரின் தர்ம பத்தினியான நீலம்மாளும் எதிரில் வந்து அவரை வெறித்தனர்.

''மாமி...''

''ஞாபகம்கூட இருக்கா என்னை...?''

''அப்படி எல்லாம் பேசக்கூடாது... உங்களுக்காக நான் காசியில் இருந்து செம்பவழ மாலையும் அன்னபூரணி விக்ரகமும் கொண்டுவந்திருக்கேன்...''

''எங்க?''

''கையை நீட்டுங்கோ சொல்றேன்...'' நரசிம்மபாரதி மாமியிடமும் சித்து விளையாட்டைக் காட்டத் தொடங்கினார். மாமியும் தயங்கியபடி கைகளை நீட்ட, கைமேல் தன் தோள் துண்டைப் போட்டு விலக்கினார். விலக்கின நொடி மாமியின்

கைகளில் ஒரு அன்னபூரணி விக்கிரகமும் செம்பவழ மாலையும் இருந்தது. எல்லோரும் அதிர்ந்து போனார்கள்.

''நரிசிம்மா... நீயா இப்படிச் சித்து பண்றது?'' மாமிகூட நெகிழ்ந்தாள்.

''எல்லாம் அந்த அம்பாள் க்ருபை மாமி... ஆமா ஸ்வாமிகள் எப்படி இருக்கார்?''

இறுதியாக நரசிம்மபாரதி மடாதிபதி ஜெயிந்திநாதர் விஷயத்துக்கு வர மளுக்கென்று மாமியின் கண்களில் நீர் துளிர்த்தது. நரசிம்மபாரதிக்குப் பகீரென்றது. ''என்ன மாமி... ஏன் அழறேள்...? ஸ்வாமிகளுக்கு என்ன?''

''போய்ப் பார்...'' - மாமி விலகிவிட நரசிம்மபாரதி, அவர் எப்பொழுதும் தரிசனம் தந்தபடி அமர்ந்திருக்கும் ஸ்ரீமடத்து பஜனை மண்டபம் நோக்கி வேகமாகச் சென்றார். செல்லும்போதே எதிரில் திருக்கடவூரைச் சேர்ந்த டாக்டர் ஒருவரும் தஞ்சாவூர் டாக்டர் ஒருவரும் அவரைப் பார்த்தபடியே கடந்துபோனார்கள்.

உள்ளே ஸ்வாமிகள் ஒரு சாய்வு நாற்காலியில் ஸ்மரணையே இல்லாதபடி படுத்திருந்தார். கண்கள் மட்டும் திறந்திருந்தன. ஆனால் கை கால்களில் அசைவு இல்லை. உள்ளே நுழைந்த நரசிம்மபாரதியைப் பார்த்த அவரது கண்கள் துடித்தன.

''ஸ்வாமிஈ..'' நரசிம்மபாரதி நெகிழந்த குரலோடு அப்படியே அவரது கால்களில் விழுந்தார். பின் எழுந்து அவரை நெருங்கி கைகளைப் பற்றிக்கொண்டார். அது ஐஸ்கட்டிபோல ஜில்லென்று இருந்தது.

''என்னாச்சு ஸ்வாமி... எதனால இப்படி?''

அவரது கேள்விக்கு அவருடைய செகரட்டரி மீனாட்சி சுந்தரம் பதில் கூறினார்.

''நரசிம்மபாரதி... நீர் செத்த அப்படி வாரும். நான் விளக்கமா சொல்றேன். இப்ப இவருக்கு எந்தத் தொந்தரவும் தரக் கூடாதுங்கறது டாக்டர்களோட உத்தரவு...''

உபாசகரும் எழுந்து மீனாட்சிசுந்தரத்துடன் ஒதுங்கினார்.

''நடக்கக்கூடாததெல்லாம் நடந்துடுத்து... ஸ்வாமிகளுக்கும் போறாதவேளை. ருத்ரவீணையைத் தேடிப்போய் இப்படி ஆயிட்டார்...''

'ருத்ரவீணை...? புரியும்படி சொல்லுங்கோ...''

''எனக்குத் தெரிஞ்சதைத்தான் நான் சொல்லமுடியும். இதுகூட எனக்கு மட்டும்தான் தெரியும். மாமிக்குக்கூடத் தெரியாது.''

''சரி. மேற்கொண்டு சொல்லுங்கோ. ருத்ரவீணைன்னு சொன்னேளே... அது என்ன?''

''ருத்ரவீணை பற்றி சொல்லணும்னா கொஞ்சமாவது சிவபுராணம் பற்றி பேசியாகணும்.''

''சுருக்கமாக சொல்லுங்களேன்...''

''ருத்ரவீணைன்னு ஒண்ணு. அந்த சிவபெருமானாலேயே செய்யப்பட்ட வீணை அது. அம்பாள் பார்வதியையே அந்த சிவன் வீணையா மாத்திட்டதா சொல்வா... அப்படி ஒரு வீணை இந்த பூமியில இருக்காம். அதைக் கொண்டு உரிய கீர்த்தனைகள், ராகங்கள், மந்திரங்களை வாசிச்சா இந்த பூமியையே தலைகீழா மாத்திடலாமாம்...''

''சரி... அது இப்பவும் இருக்கா...?''

''இருக்காம்... இங்கப் பக்கத்துல தோடிபுரம்கற ஊர்லதான் அது இருக்காம். அது எங்க இருந்தாலும் தினம் வாசிக்கப் படணுமாம். அப்படி வாசிச்சாதான் நல்லதாம். அதனால தோடிபுரமே ரொம்ப க்ஷேமமா, செல்வாக்கோட இருக்கறதா சொல்வா...''

''அதை யார் வெச்சுண்டுருக்கா?''

''அதுதான் மர்மம். தோடிபுரத்துல இருக்கு அது... ஆனா எங்க இருக்கு... யார்கிட்ட இருக்கு... யார் வாசிக்கறா எல்லாமே மர்மம். அது மட்டுமில்ல, அதை யார் அடைய நினைச்சாலும் அவாளுக்கு அழிவு நிச்சயம்.''

''அப்படின்னா அதை நம்ம ஸ்வாமிகள் அடைய நினைச்சாரா?''

''ஆமாம் நரசிம்மபாரதி... இங்க யாருக்குமே தெரியாது. ஒரு நாள் ராத்திரி கிளம்பிப்போய்ட்டார். அப்புறமா பார்த்தா ஒரு இரண்டு நாள் கழிச்சு அந்த ஊர் தாசியான சுந்தராம்பாள்ங்கறவ கொண்டு வந்து இங்க விட்டுட்டுப் போனா... அப்படி அவ விட்டப்பதான் இவர் வீணையைத் தேடிப்போனதும் கால்கை போனதுமே எங்களுக்கெல்லாம் தெரியும்...''

''அந்த வீணைக்கு அப்படி ஒரு சக்தியா?''

''இல்லையா பின்னே...? அந்த அம்பாள்தான் அந்த வீணை... அந்த வீணைதான் அம்பாள்னு சொல்லும்போது இப்படிக் கேக்கலாமா என்ன?''

மீனாட்சிசுந்தரம் தனக்குத் தெரிந்ததைக் கூறிவிட்டு கிளம்பிச் சென்றுவிட்டார். ஆனால் உபாசகர் அதையேதான் நினைக்க ஆரம்பித்தார்.

யார் யாரோ எங்கெங்கோ அம்பாளைத் தேடி பித்தாய் அலைந்துகொண்டிருக்க அவள் ஒரு வீணையில் உறைந் திருக்கிறாள் என்றால் நம்பமுடிகிறதா?

பத்து நாள்கள் கழிந்துவிட்டன.

ஒரு நாள் ஸ்ரீ மடத்தில் எல்லோரும் கூடி பரபரப்பாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். நரசிம்மபாரதி என்னவென்று விசாரித்தபோது அவரை மட்டும் தவிர்த்துவிட்டார்கள். பிறகுதான் தெரிந்தது... ஸ்வாமிகள் படுத்தபடுக்கையில் இருப்பதால் அவர் ஸ்ரீ மடத்துக்கு புதிய மடாதிபதியை நியமனம் செய்ய விரும்புகிறார் என்பது.

புதியவர் வந்து மடத்தை நிர்வகிக்க வேண்டும் என்பது ஸ்வாமிகளின் விருப்பம். நரசிம்மபாரதிக்கு அதைக் கேட்ட நொடிமுதல் மனது அலைபாயத் தொடங்கிவிட்டது. எப்படிப் பார்த்தாலும் அவர்தான் அந்த ஸ்ரீ மடத்தின் மூத்த சிஷ்யன். எனவே ஸ்வாமிகள் அவரைத்தான் மடாதிபதியாக நியமிக்க வேண்டும் என்று அவர் உள்பட எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் முற்றிலும் எதிர்பாராதவிதமாக ஸ்வாமிகள் ஸ்ரீதரன் என்கிற ஒருவருக்கு மடாதிபதி பொறுப்பை ஒப்புவிக்கச் சொல்லிவிட்டார்.

இந்த ஸ்ரீதரன் ஒரு வகையில் மடாதிபதியின் ரத்த சம்பந்த உறவினன்... பெரிய தகுதிகள் எதுவுமில்லாதவன். ''அதனா லென்னா... கத்துக் கொடுத்தா கத்துண்டுடறான்'' என்று அதற்குச் சாதாரணமாக பதில் சொன்னபோது நரசிம்மபாரதிக்கு கன்னத்தில் அறைவிழுந்த மாதிரி இருந்தது.

'பெரியவர் பண்றது கொஞ்சம்கூட நன்னா இல்லை. என்கிட்ட என்ன குறை?' கேட்க மனது துடித்தது. இருந்தும் அடக்கிக்கொண்டார். ஆனாலும் மற்றவர்கள் அவரைப் பார்த்துக் கேட்டு அவரை உசுப்பேற்றிவிட்டனர்.

ஓரளவு வரைதான் அவரால் பொறுக்க முடிந்தது. நேராக ஸ்வாமிகளிடமே சென்று அவரிடமே கேட்டுவிட்டார்.

''பெரியவா... என்னை ஏன் கணக்குல எடுத்துக்கலைன்னு நான் தெரிஞ்சுக்கலாமா?''

அந்தக் கேள்விக்கு முதலில் ஸ்வாமிகள் பதில் கூறவில்லை. பிறகு நரசிம்மபாரதி வற்புறுத்தவும் மெல்ல வாயைத் திறந்தார்.

''நீ பொறுப்பில்லாதவன்...

அல்ப சித்து விளையாட்டுல மயங்கிட்டவன்...

அதை வெச்சுண்டு பூச்சாண்டி காட்றவன்...

ஆனா இந்த ஸ்ரீமடம் ரொம்ப பவித்ரமான மடம்.

இங்க அல்ப விஷயங்களுக்கெல்லாம் இடமே கிடையாது.''

''எது ஸ்வாமி அல்பம்...? சித்து விளையாடுறதா?''

''சித்து அல்பமில்ல... அது சாகஸம். ஆனா அதுல மயங்கறது அல்பம்...''

''அப்படி மயங்கலேன்னா ஜனங்கள்ல எவ்வளவோ பேர் தெய்வமே இல்லேன்னு எப்படியெப்படியோ போயிருப்பா...''

''அப்ப நீ ஜனங்களோட ஒருத்தன்னு சொல்.''

''எல்லாருமே ஜனங்களோட சேர்த்திதானே?''

''ஜனங்களோட ஜனங்களா உப்பு, புளி, காரம்னு சாப்ட்டுண்டு வாழ்க்கைப்பாடே பெரிசாப் போனவன் எப்படி ஒரு ஸ்ரீ மடத்துக்குப் பொருத்தமானவனாக முடியும்? மடாதி பதிங்கறவன் ஜனங்கள்ல இருந்து வேறுபடணும். அல்பங்களை ஜெயிச்சவா இருக்கணும். அது ரொம்ப முக்கியமில்லையா?''

''அப்போ...?''

''உனக்கு இன்னும் தகுதி வரலை...''

''அந்த ஸ்ரீதரனுக்கு மட்டும் தகுதி வந்துடுத்தோ...?''

''வந்துண்டுருக்கு...''

''எனக்கு மட்டும் வராதோ...?''

''வராது... நீ அல்பசித்தன். அம்பாளை நீ எல்லாம் அடையறது ரொம்ப கஷ்டம்.''

''எனக்கு மடாதிபதியாகத் தகுதி இல்லேன்னு சொல்லுங்கோ. பொறுத்துக்கறேன். ஆனா அம்பாளை நான் அடைய முடியாதுன்னு மட்டும் சொல்லாதீங்கோ...''

''பல வருஷமா ஆயிரம் சண்டி ஹோமம் பண்ணியிருக்கேன். என்னையே அவ எத்துக்கலையே... பாத்தியா என் கை காலை...''

''முடிவா என்ன சொல்றேள்...?''

''போய் வேலையப்பாருன்னு சொல்றேன்...''

அதன் பிறகு நரசிம்மபாரதி அவரிடம் வாதாட விரும்ப வில்லை. முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு வெளியில் வந்தார்.

வெளியே சேஷாத்ரி என்பவர் காத்திருந்தார்.

நரசிம்மபாரதியின் சொந்த ஊரான அன்னலிங்கபுரத்துக்காரர். அந்த ஊர் கோயில் பட்டர்!

''சேஷாத்ரி நீயா... எங்க இவ்வளவு தூரம்?''

''உங்களைப் பார்க்கத்தான்...''

''சொல்லு. என்ன விஷயம்?''

''எங்கண்ணே போய்ட்டேள்...?''

''அதுவா... அது அப்படியே காசி, பத்ரிநாத், ரிஷிகேஷ்னு வடக்க யாத்திரை போய்ட்டேன்.''

''ஆத்துல மாமியைத் தவிக்கவிட்டுட்டுப் போய்ட்டேளே...''

''அவளுக்கு லெட்டர் போட்டேனே... நடுவுல ஒரு இரண்டு தடவை மணி ஆர்டரும் பண்ணினேனே.''

''மணியார்டர் பண்ணினா ஆச்சா. என்ன இருந்தாலும் கட்டின பொண்டாட்டிக்கு புருஷன் பக்கத்துல இருக்கற மாதிரி ஒரு பலம் பணத்தால வருமா?''

''என்ன நீ... ராஜத்துக்கு என்ன?''

''ராஜம் மாமிக்கு மட்டுமில்ல... ஊருக்கே இப்ப கெட்டகாலம்.''

''செத்த புரியறமாதிரி சொல்லு சேஷாத்ரி.''

''ஒரே பஞ்சம்ணா... கடும் பஞ்சம்... விவசாயிகள்லாம் எலியைப் பிடிச்சு சுட்டுத் தின்னுண்டுருக்கா. குடிக்க ஒரு சொட்டு ஜலம் கிடையாது.

ஆறுகால பூஜை நடந்துண்டுருந்த கோவிலைக்கூட பூட்டியாச்சு...''

''என்னது... ஊர்க்கோவிலை பூட்டிட்டேளா?''

''ஆமாம்... தண்ணி இல்ல... குடிக்கத் தண்ணியில்லாதப்ப விளக்கேத்த மட்டும் எங்க இருந்து எண்ணெய் வரும்?''

''ஐயோ... எனக்குத் தெரியாதே...''

''நான்கூட விஷயத்தைச் சொல்லிவிட்டு அப்படியே பம்பாய் போலாம்னுதான் உங்களைப் பார்க்க வந்தேன்.''

''பம்பாய்க்கா...?''

''ஆமா... அங்க ஒரு பிள்ளையார்கோவில்ல ஊழியம் பார்க்க கூப்ட்டுருக்கா.''

''அப்ப நம்ம ஊர்க் கோவில்...?''

''அந்த ஸ்வாமியே வந்து பார்த்துண்டாதான் உண்டு. ஊர்ல ஜனங்களே இல்லாதப்ப கோவில் இருந்து என்ன பிரயோஜனம்?''

''சரி... ராஜம் எப்படி இருக்கா?''

''இருக்கா... இன்னொரு விஷயம். கேட்டு அதிர்ச்சியடையக்கூடாது.''

''என்ன... ஊர்ல யாருமே இல்லைங்கறதவிட எது பெரிய அதிர்ச்சியைக் கெடுத்துட முடியும்?''

''இருக்கு...''

''என்ன சேஷாத்ரி...?''

''மனசைத் திடப்படுத்திக்கோங்கோ...''

''நீ முதல்ல விஷயத்தைச் சொல்லு.''

''உங்காத்து மாமிக்குக் கண்ணு போய்டுத்து!''

''என்னது...?'' நரசிம்மபாரதிக்கு ஒரு க்ஷணம் இதயத் துடிப்பே நின்றுவிட்டது.

''ஒரு நாள் மின்னலும் இடியுமா இருந்தது. மழைதான் பெருசா வரப்போறதோன்னு நினைச்சோம். ஆனா மின்னல் மட்டும் வந்தது. அதைத் தெரியாம பார்த்துட்ட உங்க மாமியோட கண்ணை மின்னல் கொண்டுட்டுப் போய்டுத்து...''

''ராஜம்மா...'' நரசிம்மபாரதி அப்படியே ஒரு ஓரமாக அமர்ந்துவிட்டார்!

**உ**பாசகர் நரசிம்மபாரதியின் கையில் ஒரு துணிப்பை. தலையில் வெயிலைத் தாளமுடியாத நிலையில் ஒரு துண்டு. அத்துடன் அன்னலிங்கபுரத்துக்குள் அவர் காலை வைத்தபோது சேஷாத்ரி சொன்னது எவ்வளவு பெரிய உண்மை என்பது புரிந்தது.

வயல்வெளிகள் எல்லாம் பொசுங்கிச் செம்பட்டையாகக் கிடந்தன. கண்ணுக்கு எட்டியவரை மனித நடமாட்டமே இல்லை.

குறிப்பாக அக்ரஹாரம் வெறிச்சோடிக் கிடந்தது.

அக்ரஹாரத்தையே சதா சுற்றிவரும் தெரு நாய்கள்கூட கண்ணில்படவில்லை. கண்ணைக் கரிப்பது போல ஒரு இடத்தில் காளை மாடு ஒன்று இறந்துகிடக்க, கழுத்து பாகத்தில் முடியே இல்லாத நான்கைந்து மொட்டைக் கழுத்து கழுகுகள் அந்த மாட்டிறைச்சிக்காக ஒரு மல்யுத்தமே நடத்திக்கொண்டிருந்தன.

அன்னலிங்கேஸ்வரர் கோவில் வழியாக சென்றபோது கோவிலில் பெரிதாக பூட்டு தொங்கியது. இப்படி எல்லாம் கோவிலைப் பூட்டவேகூடாது...

வீட்டுக்குள் நுழைந்தபோது அவர் வரும் சப்தம் கேட்டு ''யாரது?'' என்கிற கேள்வியோடு எழுந்து வந்து வாசல் கதவிலும் மோதிக்கொண்டாள் அவரது மனைவி ராஜம். நரசிம்மபாரதி பதறிப் போய்விட்டார். அவளைத் தாங்கிப்பிடித்து ''ராஜம்... நான்தான் வந்திருக்கேன்.'' என்று சொல்லவும் அவள் கட்டிக்கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதாள். அதன் பிறகு அவளைச் சமாதானம் செய்வதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது.

''கவலைப்படாதே... நான் இனி உன்னை விட்டுட்டு எங்கேயும் போகமாட்டேன்... இங்கேயே இருக்கேன்.'' என்றார்.

''ஸ்ரீ மடத்துக்குப் போக வேண்டாமா?'' அவள்தான் கேட்டாள்.

''இல்ல ராஜம். இனி எனக்கு அங்கேயும் எந்த ஜோலியும் கிடையாது.''

''ஏன்னா?''

''இது என்ன கேள்வி... நான் சராசரி மனுஷன். அல்ப ஆசைகள் உள்ள ஒரு சித்தன்.''

''சித்தனா?''

''ஆமா... சித்துவேலை செய்யறவாளை சித்தன்னுகூட சொல்லலாம் இல்லையா?''

''என்னன்னா சொல்றேள்? உங்களுக்குச் சித்து வேலை தெரியுமா?''

''பாக்கறியா?''

கேட்டுவிட்டு அடுப்படிக்குச் சென்றார். கல்சட்டியில் பழைய சாதம் இருந்தது. அதுவும் தண்ணீரில் ஊறி ஒரே புளிப்பு

வாடை. அதை அப்படியே தூக்கிக்கொண்டு கூடத்தில் அமர்ந்திருந்த ராஜத்தின் முன்னால் வைத்தார்.

''ராஜம், சமையக்கட்டுல பழையதுதானே வெச்சிருந்தே?''

''ஆமாம்... ஏன் கேக்கறேள்?''

''நான் இப்பதானே உள்ற நுழைஞ்சேன்...?''

''ஆமாம்... எதுக்கு இந்தக் கேள்வி?''

''நீ சாப்ட்டுட்டியா?''

''இல்ல...''

''அப்ப சாப்டுவோமா?''

''சமைக்க வேண்டாமா... அதுக்குத் தேவையான காயோ, கறியோ எதுவும் இல்லையே... நீங்க இப்படி வந்து நிப்பேள்னும் தெரியாதே...?''

''அதைப் பத்தின கவலை எல்லாம் உனக்கு எதுக்கு? உனக்கு இப்ப பசிதானே?''

''நல்ல பசி...''

''அப்ப உக்காரு...''

மனைவியை இழுத்து எதிரில் உட்கார்த்தி வைத்து கல்சட்டியையும் இன்னும் சில காலிப்பாத்திரங்களையும் கீழே வைத்து அதை தன் மேல்துண்டால் மூடி மந்திரம் எதையோ சொல்லி ஜெபித்துவிட்டு துண்டைத் திரும்ப எடுத்துக் கொண்டபோது அங்குள்ள பாத்திரங்களில் எல்லாம் மணக்க மணக்க உணவுப்பண்டங்கள். பழைய சாதம்கூட சுடுசாதமாக ஆவியடித்தது. புளிக்குழம்பு வாடையும் அப்பளத்தின் நறுமணமும் பொதினாத் துவையலின் வாசமும் மூக்கைத் துளைத்தது.

''ஹை... ஒரே வாசனையா இருக்கே. அதுக்குள்ற சமைச்சுட்டேளா?''

''அப்படித்தான்னு வெச்சுக்கோயேன்...''

''அப்படின்னா... எப்படி?''

''அதான் சித்து.''

''நம்பவே முடியலியே...''

''சாப்ட்டுப் பார்த்துட்டு நம்பு..''

''கண்கட்டு இல்லையே...?''

''கண்கட்டுன்னா என்னன்னு தெரியுமா ராஜம் உனக்கு?''

''தெரியாது. கேள்விப்பட்டிருக்கேன். அதாவது எல்லாம் இருக்கறமாதிரி தெரியும். ஆனா உண்மையில் எதுவும் இருக்காது.''

''இது அப்படி இல்ல ராஜம்... இங்க எல்லாமே இருக்கு. நீ சாப்பிடு. உன் பசியும் ஆறும்.''

''அப்படின்னா நீங்களும் இப்ப ஒரு ஸ்வாமிஜியா?''

''என்ன சொல்றே நீ...?''

''ஸ்வாமிஜி... மகான்களாலதான் இப்படியெல்லாம் செய்யமுடியும்.''

''இருக்கலாம்...''

''இருக்கலாமாவா... நீங்க ஸ்வாமிஜியேதான். ஆனா இதையெல்லாம் பார்க்க எனக்குக் கண் இல்லாமப் போய்டுத்தே...''

அவள் வருந்தினாள். அவரும் மௌனமாக நின்றார்.

''என்னன்னா பேசமாட்டேங்கறேள்?''

''என்னத்த பேசறது... உன் தலையெழுத்து அப்படி ஆயிடுத்து...''

''ஏன்னா... உங்களால எனக்குக் கண் வரவழைக்க முடியாதா?''

உபாசகருக்கு இதயத்தைக் கிள்ளியதுபோல் இருந்தது.

''சொல்லுங்கோ... உங்க சித்துவால எனக்குக் கண் கொடுக்க முடியாதா?''

''ராஜம்... அது வந்து...''

''அவ்வளவு எதுக்கு... இந்த ஊரே காஞ்சு கிடக்கறதே இதுக்கு ஒரு மழை?''

''ராஜம்...''

''ஆமான்னா... உங்க சக்தியால் நீங்க இந்த ஊரை பழையபடி மாத்தணும். எனக்கும் கண் வரணும். நீங்க அதுக்கு ஏற்பாடு செய்யணும். இந்தச் சாப்பாடு போஜனம் எல்லாம் எனக்குப் பெரிசு இல்ல... என்ன சொல்றேள்?''

ராஜம் எங்கோ ஆரம்பித்து எங்கோ போய்விட்டாள். நரசிம்மபாரதிக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை.

''என்னன்னா... எதுவுமே பேசமாட்டேங்கறேள்?''

''ஒண்ணுமில்ல ராஜம்... என்னோட சித்து வேலையால சில காரியங்கள்தான் பண்ணலாம். உனக்கான கண்ணு பிரம்மசிருஷ்டி. அதை என்னால கொடுக்க முடியாது. மழையோ வருணனோட சம்பந்தப்பட்டது. பஞ்சபூதங்கள் சம்பந்தப்பட்டது அது. அதை வசப்படுத்தற அளவுக்கெல்லாம் எனக்கு சக்தி இல்லை...''

''அப்ப பழைய சாதத்தைச் சுடுசாதமாக்கினதெல்லாம்தான் உங்களால முடிஞ்ச விஷயமா? அதையெல்லாம் அடுப்பு பத்தவெச்சா யார் வேணா பண்ணலாமே?''

ராஜம் கேட்ட கேள்வி மனசைக் குத்திப் பிசைந்தது. அந்த க்ஷணம் தான் பெரிய சித்தன் என்கிற எண்ணமே ஒரு ஆட்டம் ஆடியது.

''ராஜம், நீ என்ன சொல்றே... நீயும் என் குருநாதர் மாதிரி இந்த சித்து வேலையை அல்பம்கறியா?''

''ஓ... அவர் அப்படி எல்லாம் சொன்னாரா?''

''ஆமாம். அதுமட்டுமல்ல. நான் இப்ப மடாதிபதி கிடையாது. அவரோட சொந்தத்துல ஒருத்தனையே ஆக்கி விட்டார்.''

''நல்ல காரியம்தான் பண்ணியிருக்கார்.''

''ராஜம், நீயா இப்படிச் பேசறே?''

''நானேதான்... ஒரு நல்ல பிராம்மணனுக்கு எதுக்கு மாயமும் மந்திரமும்...? இது கடவுளைவிட்டுப் பிரிச்சிடும். தன்னையே கடவுளா நினைக்க வெச்சுடும்...''

''சொன்னாலும் சொல்லலேன்னாலும் ஒவ்வொருத்தருமே கடவுள்தான். 'அஹம் பிரம்மாஸ்மி'ங்கறதுதானே நம்ம வேதத்தோட சாரம்.''

''அந்தப் பிரம்மம் ஆங்கார பிரம்மமா தன்னை உணரக் கூடாது.''

''போறும் ராஜம்... சாப்பாடு தயாரா இருக்கு பார். முதல்ல சாப்பிடு.''

''இல்லன்னா... இது மோடிவித்தையாலயும் தந்திரத்தாலையும் வந்த சாதம். இது எனக்கு வேண்டாம்.''

''அப்படி எல்லாம் இல்ல ராஜம்.''

''நீங்க சமைச்சுப் போடுங்கோ. சாப்பிடறேன். இது வேண்டாம்...''

''நீ என்னை ரொம்ப மட்டமா நினைக்கறே. அதான் இப்படி எல்லாம் பேசறே...''

''சத்யமா இல்ல. நீங்க சமைச்சுப் போடுங்கோ, நான் சாப்பிடுறேன்.''

''அப்ப என் சித்து எதையும் நீ மதிக்கத் தயாரா இல்ல. அப்படித்தானே?''

''உங்க சித்தால எனக்குக் கண் தர முடியுமா?''

''உங்க சித்தால இந்த ஊரைச் செழிக்க வைக்கமுடியுமா?''

''உங்க சித்தால அம்பாள் அனுக்ரகம் கிடைக்குமா? அவ உங்களுக்கு முக்தி தருவாளா?''

''பதிலே சொல்ல முடியல பார்த்தேளா?''

ஆம்... அவரால் பதிலே கூற முடியவில்லை. அதன்பின் சமைத்துப் போட்ட சாதத்தைத்தான் அவள் சாப்பிட்டாள். அப்படியே அவளைப் படுக்க வைத்து விசிறி உறங்க வைத்தார்.

இருட்டிவிட்டது.

வீட்டுக்கு வெளியில் வந்தார்.

கண்ணைக் கரிக்கும் இருட்டு.

வானத்தில் மட்டும் 'மினுக் மினுக்' என்று நட்சத்திரப் புள்ளிகள். பார்த்துக்கொண்டே நடந்தார். கோவில் வாசலை அடைந்தபோது உள்ளே யாரோ இருக்கும் சப்தம் கேட்டது. எட்டிப் பார்த்தார். வித்தியாசமான தோற்றத்தில் சிலர். திருடர்களா?

அப்படித்தான் இருந்தார்கள். கையில் சாக்குப்பை... கடப்பாரை எல்லாம் இருந்தது. ''டேய்... இங்க திருட எதுவுமே இல்லடா. வாடா போகலாம்...'' என்று அவர்களில் ஒருவன் பேசியதுகூட காதில் விழுந்தது.

'அடக் கொடுமையே... ஒரு திருடன்கூட பொருட்படுத்த ஒன்றுமில்லாத அளவிற்கா போய்விட்டது.' அவர்கள் அவர் பார்த்துக்கொண்டிருக்கும்போதே மறுபுறமாய் சுவர் எட்டிச் குதித்துச் சென்றுவிட்டனர். நேரே உள்ளே சென்றார்.

அன்னலிங்கேஸ்வரர் சன்னதியே திறந்து கிடந்தது.

சதா விளக்கெரிந்தபடி இருக்கும் லிங்க உருவத்தையே வெறும் கல் லிங்கமாகப் பார்க்க முடியாது எப்பொழுதும் அன்னாபிஷேகம் ஆன தோற்றத்தோடுதான் அன்ன லிங்கேஸ்வரரே காட்சி தருவார். எல்லாமே பழைய நினைவுகளாகிவிட்டது.

இப்பொழுது அன்னம் இல்லை... விளக்கு இல்லை... திருடன் தீண்டக்கூடப் பிரியப்படாத அளவுக்கா ஒரு கோயில் போகும்.

கூச்சமாக இருந்தது. எரிச்சலாகவும் வந்தது. என்ன ஒரு கொடுமை?

சட்டென்று தோடிபுரமும் அதன் செழுமையும் நினைவில் தோன்றியது. ஒரே பூமியில் ஒரு இடம் வாடி வறண்டு வதங்கிக்கிடக்கிறது... இன்னொரு இடத்திலோ பசுமையும் வளமையும் தாண்டவமாடியபடி...

அந்த நொடி அதற்குக் காரணம் ருத்ரவீணை என்கிற அந்த உண்மையும் அந்த வீணை வேறு - அந்த உமைவேறில்லை என்று ஸ்ரீமடத்தில் ஸ்வாமிகளின் பிரதான உதவியாளரான மீனாட்சி சுந்தரம் சொன்னதும்தான் காதில் எதிரொலித்தது.

'அந்த வீணையைத் தேடிப்போய்தான் பெரியவருக்கு இப்படி ஆயிடுத்து...' - இதுவும் மீனாட்சிசுந்தரம் சொன்னதுதான்.

அப்படி எந்தவித முயற்சியும் செய்யாவிட்டாலும் அன்னலிங்கபுரத்தில் இருந்தால் பசிப்பட்டினியாலேயே கைகால்கள் போய்விடும் என்று தோன்றிற்று.

தன் சித்துக்களைத் துளியும் பெரிதாகக் கருதாத ராஜம் முகம்வேறு ஒருமுறை மனக்கண்ணில் மின்னிப் 'பிரகாசித்தது. ஒருபுறம் 'நீ அல்ப சித்தன்' என்று சொன்ன மடாதிபதி... 'இதெல்லாம் யாருக்கு வேண்டும்? கண்களைக் கொடுக்க முடியுமா? மழையைக் கொடுக்க முடியுமா' என்றெல்லாம் கேட்ட மனைவி. இதைவிட ஒரு கேள்வியை யாரால் கேட்டுவிட முடியும்.

'இருந்தாலும் நான் அல்ப சித்தனில்லை. காரியசித்தன்... என் சித்து ஒன்றும் லேசுப்பட்டது இல்லை. என் குருநாதர் அவ்வளவு சக்தியையும் எனக்குத் தத்தம் செய்து கொடுத்துவிட்டு அந்த கங்கா மாதாவுக்குள் ஐக்கியமாகிவிட்டார். அவருக்கொரு பெருமை எப்பொழுது ஏற்படும் என்றால் யாராலும் முடியாததை

நான் முடிக்கும்போதுதான். யாராலும் நெருங்க முடியாத அந்த ருத்ரவீணையை நான் நெருங்கிக் காட்டுகிறேன். அடைய முடியாததை அடைவேன். என் அன்பும் தவமும் பக்தியும் பணிவும் அந்த உமையாகிய வீணையை எனக்குப் பரிசாகப் பெற்றுத்தரும்.

அவள் அதன்பின் என் குருநாதருக்கு அவர் இழந்த கைகால்களைத் தருவாள். என் மனைவிக்கும் கண்களைத் தருவாள். இந்த ஊருக்கும் மழையைத் தருவாள்.

வறண்ட இந்த மண்ணும் பச்சையாக மாறும். மாற்றுவேன்... மாற்றினால்தான் நான் உபாசகன். அந்த அன்னையின் பிள்ளை. இல்லாவிட்டால் உயிரோடு இருப்பதைவிட மரித்துப்போவது கோடி கோடிமுறை மேலானது...'

தீர்மானங்களுடன் நடந்தார். அன்னபூரணி அம்மன் சன்னதியும் திறந்துதான் கிடந்தது. துண்டை விரித்து மூடி தியானித்தவர் துண்டை அகற்றவும் பூமாலையுடன் எண்ணெய் ஊற்றிய அகல்விளக்குகளையும் கண்டார். மாலையை அம்பாளுக்குச் சாற்றியவர் விளக்கையும் ஏற்றினார்.

அப்படியே எதிரில் அமர்ந்தார்.

''தாயே ஜெகன்மாதா... பராசக்தி... உன்னை இசை வடிவில் வசப்படுத்த புறப்பட்டுவிட்டேன். எங்கோ மறைந்துகிடக்கும் நீ என் வசப்பட்டு இந்த ஊருக்குப் பயன்படவேண்டும். இல்லா விட்டால் நான் உயிரைவிட்டு விடவேண்டும்.

அதாவது, அடைந்தால் ருத்ரவீணை. இல்லாவிட்டால் மரணமேடை! இதில் வேறு ஒரு மாறுதலுக்கு இடமேயில்லை. இது சத்தியம்... இது சத்தியம்... இது சத்தியம்...!''

உரக்கச் சொல்லியபடி அன்னபூரணி அம்பாள் திருவடியில் கை வலிக்க அடித்துச் சத்தியமும் செய்தார்.

அந்த நொடி ருத்ரவீணைக்கான அவரது தேடல் ஆரம்பமாகிவிட்டது!

குடிசை!

திறந்து வைத்துக்கொண்டிருக்கும் பழைய புத்தகத்தில் நவாப் ஜான்பாபா பற்றிய குறிப்பைப் பார்த்துவிட்டு அப்படியே பழைய ஞாபகங்களிலும் மூழ்கியவருக்கு தாண்டவன் வந்த பிறகுதான் அந்த ஞாபகங்களில் இருந்தே திரும்ப முடிந்தது.

கல்யாணசுந்தரம்தான் ஒரு வாழைத்தாரைக் கொடுத்து அதை உபாசகரிடம் கொடுத்துவிட்டு வா என்று அனுப்பியிருந்தார்.

அதற்காக வந்தவன் உபாசகர் கையில் இருந்த புத்தகத்தையும் ஒரு ஓரப் பார்வை பார்த்தான். திறந்திருக்கும் டிரங்குப் பெட்டியையும் பார்த்தான். உபாசகருக்குப் புரிந்தது. சிரித்தபடியே புத்தகத்தை வைத்துப் பெட்டியை மூடினார்.

''உங்க பிரசிடென்ட்டுக்கு ரொம்ப பெரிய மனசு. இங்க தங்க இடம் கொடுத்தது போறாதா... எதுக்கு வாழைப்பழத்தா ரெல்லாம்...?'' என்று அவனிடம் சற்று உபசரணையாகவே கேட்டார்.

''எங்க முதலாளி ஒரு மாதிரிங்க. அவருக்கு ஒருத்தரைப் பிடிச்சுட்டா உயிரையே விட்றுவாரு...''

''அப்படி அவருக்கு என்கிட்ட பிடிக்க என்னப்பா இருக்கு?''

''என்ன அப்படிச் சொல்லிட்டீங்க... உங்களை மாதிரி ஒரு சித்துவேலை செய்யறவரைத்தானே எங்க முதலாளி ரொம்ப வருஷமா தேடிக்கிட்டு இருந்தார்.

தாண்டவனின் பதில் உபாசகரைக் கொஞ்சம் மிரட்டியது.

''என்னப்பா சொல்றே?''

''ஆமாம் சாமி... இந்த ஊரே இன்னிக்கு அந்த சுந்தராம்பா பிடியிலதான இருக்குது. அவ சொன்னா கிணத்துல குதிக்கக்கூட ஊர்ல எல்லாரும் தயாரா இருக்காங்க.''

''சரி, அதுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம?''

''அவ கொட்டத்தை அடக்க உங்களால முடியும்னு எங்க முதலாளி நம்பறாரு...''

''அப்படியா...? அப்படி என்ன அந்த சுந்தராம்பா உங்க முதலாளிக்கு எதிரா நடந்துகிட்டா...?''

''எதிரால்லாம் நடந்துக்கலை. அந்தம்மா தங்கம்தான். ஆனா ஒரு இடத்துல தங்கத்தம்ளரும் இருக்குது, வெள்ளித்தம்ளரும் இருக்குதுன்னு வையுங்க. பாக்கறவங்க எதை எடுத்துப் பயன்படுத்துவாங்க.''

''தங்கத்தைத்தான்...''

''அதேதான் இங்கேயும். கச்சேரி புக் பண்ணணும்னு வருவாங்க. எங்க முதலாளிகிட்ட பேசிக்கிட்டிருப்பாங்க. அட்வான்சும் கொடுத்துடுவாங்க. கடைசியில பார்த்தா அது

சுந்தராம்பா பாடுறதுக்கா இருக்கும்... ஒரு தடவை பத்திரிகைக்காரங்க வந்தாங்க. என் முதலாளிகிட்ட தோடிபுரம் பத்தி, இங்க எப்பப்பார் வீணை வாசிக்கற சப்தம் கேக்கறது பத்தி, தாசிபங்களா பத்தியெல்லாம் கேட்டாங்க. எங்க முதலாளியும் எல்லா கேள்விக்கும் பதில் சொன்னாரு. பெருசா போட்டோவெல்லாமும் எடுத்துக்கிட்டுப் போனாங்க.

பரவாயில்லை... தம்மையும் பொருட்படுத்தி பேட்டி யெல்லாம் எடுத்துட்டதா நினைச்சுக்கிட்டிருந்தாரு. ஆனா பாருங்க புத்தகம் வந்தப்போ பார்த்தா இவர் போட்டோ ஒரு மூலைல இம்புட்டுக்காண இருந்துச்சு. அந்தச் சுந்தராம்பா போட்டோவோ அட்டைப் படம் முழுக்க பளிச்சுன்னு பெரிசா இருந்துச்சு. அப்படியே நொந்து நூலாயிட்டாரு...''

தாண்டவன் எதையும் மறைக்காதபடி மனதில் உள்ளதைப் பேசினான். உபாசகருக்கும் புரிந்தது கல்யாணசுந்தரம் காரண மாகத்தான் தன் தோட்டத்து வீட்டிலேயே இடமளித்திருக்கிறார் என்பது. கூடவே சிரிப்பு வந்தது.

''சாமி...'' தாண்டவன் அவர் சிரிப்பைக் கலைக்கும் விதமாக அழைத்தான்.

''என்னப்பா...?''

''இதை எல்லாம் நான் சொன்னதா காட்டிக்காதீங்க சாமி.''

''கவலைப்படாதே... எனக்கு உதவிசெய்து மட்டும்தான் பழக்கம்...''

''நல்லது சாமி... ஆமா உங்களுக்கு நீங்க தேடுன வீணை கிடைச்சிடுச்சா சாமி?''

''இல்லையேப்பா...''

''அப்ப என்ன பண்ணப்போறீங்க...?''

''பார்க்கலாம். அந்த அம்பாள் ஒரு வழியைக் காட்டாமலா போய்டுவா.''

''இதுக்கெல்லாம் எதுக்குச் சாமி அம்பாளையும் ஆட்டுக் குட்டியையும் கூப்டுகிட்டு. ஒரு தடவை தஞ்சாவூர் போனா கடைத்தெருவுல ஆயிரம் வீணைங்க கிடைக்குமே சாமி...''

அவன் ருத்ரவீணை பற்றித் தெரியாமல் பேசினான். அவர் பதில் கூறாமல் சிரித்தார்.

''சரி சாமி... நான் உத்தரவு வாங்கிக்கறேன்...''

தாண்டவன் கிளம்பினான்.

அவன் தலை மறைந்த அடுத்த நொடியே புதிதாக ஒருவரின் பிரவேசம்!

காவிவேட்டி, காவிஜிப்பா... கழுத்தில் நவரத்னமாலை. நெற்றியில் குங்குமப்பொட்டு சகிதம்... உபாசகருக்கு அவனைப் பார்க்கவும் கொஞ்சம் முள் குத்தியதுபோல் இருந்தது.

அவன் வேறு யாருமல்ல... திருக்கடவூர் ஸ்ரீ மடத்தில் ஸ்வாமிகளுக்கு எல்லாவகையிலும் கைத்தடியாக இருக்கும் நீலகண்டன்!

''நீலகண்டா... நீயா...?''

''நானேதான் நரசிம்மபாரதி...''

''இங்க எங்க வந்தே?''

''உம்ம பார்க்கத்தான்...''

''பாத்துட்டையோல்லியோ... கிளம்பு!''

''கிளம்பறேன்.. நீரும் உடன் வாரும்.''

''எங்க?''

''திருக்கடவூர் ஸ்ரீ மடத்துக்கு...''

''அங்க இனி எனக்கென்ன வேலை...?''

''பெரியவர் கூட்டிண்டு வரச்சொன்னார்.''

''வரமுடியாதுன்னு சொல்...''

''அவர் நம்ம குருநாதர். அவர் பேச்சைத் தட்டறது பாவம்...''

''இருக்கலாம். ஆனா நான் இங்க ஒரு பெரிய நோக்கத்தோட வந்திருக்கேன். என்னால அங்க வரமுடியாது.''

''தெரியும்... ருத்ரவீணையைத் தேடித்தானே வந்துருக்கேள்...?''

''பரவால்லியே! உனக்குக்கூடத் தெரிஞ்சிருக்கே...''

''வேண்டாம் நரசிம்மபாரதி. பெரியவருக்கே கையும் காலும் போயிடுத்து. உமக்கு உசுரே போயிடும்னார் பெரியவர்...''

''அதையும்தான் பார்ப்போம்...''

''அவர்கிட்டயே சவாலா...?''

''நான் சவால்விடலை. என் மன உறுதியைத்தான் காட்டிண்டு இருக்கேன்...''

''இது உறுதி கிடையாது... உளுத்துப்போன வீரம்.''

''சரி. அப்படியே இருக்கட்டும். நீ கிளம்பு.''

''நரசிம்மபாரதி... சொன்னாக் கேளும்...''

''இப்ப நீ கிளம்பறியா, இல்லையா...?''

உபாசகர் கர்ணகடூரமான குரலில் ஒரு உச்சபட்ச சப்தத்தோடு கேட்க, நீலகண்டனும் அதனால் ஒடுங்கி அவரை ஒரு முறை முறைத்துவிட்டு அங்கிருந்து கிளம்பினான்.

அவன் அகலவும் உபாசகர் போய் தான் எளிய முறையில் உருவாக்கியிருந்த சன்னதி முன்போய் அமர்ந்தார்.

அலைபாய்ந்த மனதை - ஆக்ரோஷத்தில் அனலைக் கக்கிய மனதை அப்படியே ஒடுக்கியபடி அங்குள்ள எரியாத விளக்கைப் பார்த்தார்.

அடுத்த நொடி அது மளுக்கென்று பற்றிக் கொள்ள தீபச்சுடர் ஒளிவிட ஆரம்பித்தது!



## 15



## அன்று

**சா**ஸ்திரிகளைத் தீண்டிய அந்த மனைநாகம் தன் கடமை முடிந்துவிட்டது என்கிற மாதிரி கடித்த வேகத்தில் விறுவிறு வென்று அந்த வீட்டுக்கூரையில் ஏறிக் கண்ணைவிட்டும் மறைந்து விட்டது.

சாஸ்திரிகளோ அப்படியே சுருண்டுவிழுந்துவிட்டார்.

கருநாகத்தின் விஷம் மிகக் கொடியது. அதிலும் ரத்த நாளங்களில் கடி ஏற்பட்டிருந்தால் விஷம் மிக வேகமாகப் பரவும்.

சாஸ்திரிகளும் அப்படியே உருமாறத் தொடங்கிவிட்டார். பாதத்தில் நீலம்பாரிக்க ஆரம்பிக்க - சாஸ்திரிகளின் பதிவிரதையான பாலா மயங்காத குறையாக அவரைத் தாங்கிப் பிடித்தாள்.

அவள் கண்களில் இருந்து கண்ணீரின் பீறிடல்... மிக ஆசாரமான பிராம்மணக் குடும்பத்தில் இருந்து வந்தவள் என்பதால் ஒரு கத்தியை எடுத்து வந்து காலைக் கீறி விஷத்தை உறிஞ்சி வெளியே துப்புவது என்பதெல்லாம் அவளுக்குப் பிடிபடாத ஒன்றாகவே இருந்தது. அதற்காக அழுதபடி அமர்ந்திருப்பதும் சரியில்லை என்று உணர்ந்தவள் ''யாராவது வாங்களேன்...'' என்று வீட்டுவாசலுக்கு வந்து அழுது கத்த ஆரம்பித்தாள். அதற்குப் பலனும் ஏற்படத் தொடங்கியது. சில மராத்திய வீரர்கள் புரவிகளை நடக்கவிட்டபடி வீதியில் வந்து கொண்டிருந்தனர்.

அவர்கள் பாலாவின் அழுகுரல் கேட்டு வேகமாக அவளுக்கு உதவுவதற்கு வந்தனர்.

முனியனின் சாரட் தாசிகள் வசிக்கும் தெருப்பக்கம் திரும்பியபோது அதைப் பார்த்து ஆச்சரியப்படாதவர்கள் இல்லை. சாரட்டின் திரைச்சீலைத் துணி மூடப்பட்டிருந்ததால் பலர் உள்ளே சாஸ்திரிகள் இருப்பதாகவே நினைத்துக்கொண்டனர். ஒரு கட்டத்தில் அதை உணர்ந்த முனியன் சாரட்டின் திரைச்சீலைத் துணிகளை வேகமாக மடித்து ஏற்றிவிட்டான். உள்ளே சாஸ்திரிகள் அமர்ந்து வரும் இருக்கை காலியாக இருப்பதை அனைவரும் பார்க்கும்படியாக வைத்துக்கொண்டு அபராஜித வைஜெயந்தியின் அரண்மனை போன்ற மனைமுன் சாரட்டை நிறுத்திவிட்டுக் கீழ் இறங்கினான்.

அவள் மனைக்கு முன்னால் மகிழமரங்களையும் மனோரஞ்சித மரங்களையும் வளர்த்திருந்தாள். எனவே கும்மென்ற வாசம். அதன் நிழலில் அபராஜிதம் பயன்படுத்தும் சாரட் குதிரை பிரிக்கப்பட்டு நிறுத்தப்பட்டிருந்தது. மற்றபடி எப்பொழுதும் அவளது வீட்டை முற்றுகையிடும் வணிகர்கள், அரசியலார்களின் புரவிகளையோ, விடலை வாலிபர்களையோ அறவே பார்க்க முடியவில்லை.

முனியனுக்கே அந்தக் காட்சி ஆச்சர்யமாக இருந்தது. வேகமாக உள்ளே நுழைந்தான். கையில் சாரட் குதிரையை வழிநடத்தும் சவுக்குப் பிரம்பு. அதை 'விஷ்க் விஷ்க்' என்று வீறியபடி நடக்கும்போது ''நில்'' என்ற ஒருகுரல்.

யாரென்று பார்த்தான் முனியன்.

வீட்டு வேலைக்காரி சொர்ணக்கிளிதான் குரல் கொடுத்தவள். அகலக்கரை பட்டும் ஜவ்வாது வாசமும் வாய்

நிறைய வெற்றிலையுமாக அவள் எதிர்பட்ட தோரணையே படு மிரட்டலாக இருந்தது.

''எங்க வந்தே...? வண்டிக்காரன் உனக்கெல்லாம் தாசியோட உல்லாசம் கேக்குதோ?'' சொர்ணக்கிளி வெட்டுக் கிளிபோல கேட்டது அவனைக் கிள்ளியது.

''இந்த சவுக்காலையே வீறிப்பிடுவேன். வேலைக்கார நாயே... இந்த வீட்டுக்குள்ள ஒரு ஆம்பளை கால்பட்டாலே 'அதுக்கு'த்தான்னு நினைச்சே வாழ்ந்துட்டீங்கடி.''

முனியன் வெடித்தான். சப்தம் உள்ளே முடிந்தவரை சென்றது. அது மாணிக்கவல்லியை எட்டிப்பார்க்க வைத்தது.

நெருங்கிவந்தாள்.

''என்ன சப்தம்?''

''நான் தோடிபுரம் மகாபண்டிதர் சதாசிவ சாஸ்திரிகளோட வண்டிக்காரன்.''

''சந்தோஷம்... உனக்கு என்ன வேணும்?''

''பாபாஜியைப் பார்க்கணும்.''

''அவர் உறங்கிக்கொண்டிருக்கிறார். ஆமாம் நீ எதற்கு அவரைப் பார்க்கணும்?''

''அதை நான் எதற்கு உங்களிடம் சொல்லணும்?''

''என்னப்பா... எதற்கு இத்தனை திமிராகப் பேசுகிறாய்?''

''பேச வைச்சுட்டா உங்க வேலைக்காரி...''

''சொர்ணக்கிளி... என்ன சொன்னாய் இவனை...?''

சொர்ணக்கிளி தடுமாறும்போது ருத்ரவீணையுடன் பாபா எதிரில் வர, முனியன் அவர்களை ஒதுக்கிக்கொண்டு ''கோடி வந்தனமுங்க...'' என்றான். பாபா அருகில் வந்து ''வா போகலாம்...'' என்று மட்டும்தான் சொன்னார். பின்தொடர்ந்து வந்த அபராஜித வைஜெயந்தி முகத்தில் பலத்த ஏமாற்றம். அடுத்து சில நொடிகளில் பாபா சாரட்டில் ஏறிக்கொள்ள சாரட் சிட்டாகப் பறக்கத் தொடங்கியது.

**வீ**ட்டு வாசலை சாரட் அடைந்தபோது முனியனுக்குப் பலத்த அதிர்ச்சி காத்திருந்தது!

சதாசிவ சாஸ்திரிகள் காலமாகிவிட்டார் என்றபடியே சிலர் அழுத முகத்துடன் சொல்லிக்கொண்டு செல்ல, முனியன் சாரட்டில் இருந்து குதித்து உள்ளே வேகமாய் ஓடினான்.

அந்த வீட்டின் ஹாலில் சாஸ்திரிகளின் சடலம் கிடந்தது. நல்ல பறங்கிப்பழம் போன்ற அவர் தேகம் கருநீலத்தில் காட்சி தந்து கண்ணைக் கரித்தது.

வைத்தியர் ஒருவர் ''நாடித்துடிப்பு நின்றுவிட்டது'' என்று சொல்லியபடியே தன் மருந்துப்பெட்டியை ஏறக்கட்டிக் கொண்டிருந்தார்.

சாஸ்திரிகள் மனைவி பாலாவிற்கோ மயக்கம். அவளைச் சிலர் தாங்கிப் பிடித்தபடி இருந்தனர்.

பாபாவும் தன் வீணையைத் தோளில் சுமந்தபடி சாஸ்திரிகள் அருகே வந்து நின்றார். அவரையே எல்லோரும் பார்த்தனர். தலையாரி தம்பையாவும் சேதி அறிந்து வந்திருந்தார்.

''பாபாஜி... என்ன இது... நீங்கள் இருக்க, இப்படி ஆகிவிட்டதே?'' என்று அவரும் தேம்பியழுதார்.

''அந்த மனைநாகத்தை அடித்துக்கொன்றுவிடச் சொல்லி நான் பலமுறை கூறினேன். ஆனால் சாஸ்திரிகள் கேட்கவில்லை. இன்று அவர் அதற்கொரு விலையைக் கொடுத்துவிட்டார்'' என்று துக்கம் விசாரிக்க வந்தவர்களில் ஒருவர் பேசியது பாபாவின் காதுகளில் விழுந்தது.

''இனி செய்வதற்கு ஒன்றும் இல்லை... ஒருபுறம் மயானத்தில் காபாலிகர்களின் அட்டகாசம். மறுபுறம் சாஸ்திரிகள் போல் நல்லவர்களின் மரணம். இனி இந்தத் தோடிபுரத்தை அந்தத் தோடீஸ்வரன் வந்து ரட்சித்தால்தான் உண்டு...''

இதுவும் கூட்டத்து முணுமுணுப்புதான். பாபாவின் காதுகளில் எல்லாமே விழுந்துகொண்டுதானிருந்தது.

பாபா முகத்தில் எந்தவிதச் சலனமுமில்லை. அவர் சாஸ்திரிகளின் சடலத்தை ஒரு பார்வை பார்த்துவிட்டு தலையாரியைத் திரும்பிப் பார்த்தார். பாபா தன்னைப் பார்ப்பதை வைத்து அழைப்பதாக உணர்ந்து தலையாரியும் ஓடிவந்தார்.

''ஒரு விண்ணப்பம்...''

''என்ன பாபாஜி?''

''எவ்வளவு விரைவாக நண்பர் சாஸ்திரியை மயானத்திற்கு எடுத்து வரமுடியுமோ அவ்வளவு விரைவாக எடுத்து வாருங்கள்...''

''காரணத்தை நான் அறியலாமா?''

''அதை நீங்கள் மயானத்திலேயே பார்க்கலாம்.''

''நல்லது... நான் இது தொடர்பாக சாஸ்திரிகளின் உறவினர்களிடம் பேசிப் பார்க்கிறேன்.''

''தாமதம் வேண்டாம். அவரை எவ்வளவு வேகமாக மயானத்துக்கு தூக்கி வரமுடியுமோ அவ்வளவு வேகமாகத் தூக்கி வாருங்கள்...''

பாபா ஆழ்ந்த பொருளுடன் சொல்லிவிட்டுத் தோளில் குழந்தை போல தூங்கும் ருத்ரவீணையுடன் திரும்பி நடந்தார். எதிரில் சாஸ்திரியின் மரணச்செய்தி அறிந்து அபராஜிதவை ஜெயந்தியும் சாரட்டில் வந்து இறங்கிக் கொண்டிருந்தாள். அவளது கண்களில் பெற்ற தந்தையையே இழந்துவிட்டதுபோல கண்ணீர். கையில் துளசிமணிமாலை ஒன்றை எடுத்து வந்திருந்தாள். அத்துடன் உள்ளே நுழைந்தவள் அதை சாஸ்திரிகளின் காலடியில் வைத்துவிட்டு குலுங்கிக் குலுங்கி அழுதாள். முனியன் அதற்குமேல் அழுதான். ஒரு கட்டத்தில் துக்கத்திற்கு நடுவிலும் ஆத்திரத்தோடு ''எங்கே அந்த நாகம்? அதை ஒரு வழி செய்கிறேன் பார்.'' என்று பிரம்பெடுத்துக் கொண்டு அந்த வீட்டைச் சுற்றி வரத்தொடங்கிவிட்டன்.

தம்பையா பாபா சொன்னதற்கு ஏற்ப சாஸ்திரிகளின் சடலத்தை வேகமாகச் சுடுகாட்டுக்குக் கிளப்பும் வேகத்தோடு சாஸ்திரிகளின் பிரதான உறவினரிடம் பேச ஆரம்பித்திருந்தார்

## இன்று

துணிப்பை நிறைய காய்கறிகள்... இடதுதோள் அக்குளில் வாழை இலை, வலது கையில் சிறிய வாழைத்தார் என்று சங்கரன் நடந்து வரும் விதமே வேடிக்கையாக இருந்தது.

எதிரில் மொபட்டில் வந்த சாமிநாதன் சங்கரனை இந்தக் கோலத்தில் பார்த்துவிட்டு சிரித்தபடியே வண்டியை உரசிக் கொண்டு நிறுத்தினான்.

''என்னடா... என்ன இது? ஒரு தள்ளுவண்டியோட மார்க்கெட்டுக்குப் போயிருக்கலாம்ல...?''

''கிண்டலா... முத இந்த வாழைத்தாரைப்பிடி...''

''ஆமா. என்னடா விசேஷம்...? எப்பவும் இவ்வளவு காய்கறியை நீ வாங்கி நான் பார்த்ததே இல்லையே...?''

''காரணமாத்தான். வா சொல்றேன்.''

''எல்லாத்தையும் வண்டில வை. அது சுமக்கட்டும்.''

சங்கரனும் இலையிலிருந்து காய்ப்பை வரை சகலத்தையும் மொபட்டில் வைத்துவிட்டு கையைப் பரபரவென்று தேய்த்துக் கொண்டான்.

''அப்படியே நட... நடந்துண்டே பேசுவோம்... பானுவை வேறு பார்க்கணும்.''

சங்கரன் 'பானு' என்று தாசி சுந்தராம்பாளின் மகள் பேரைச் சொல்லவும் சாமிநாதன் முகம் மத்தாப்பு போலமாறிவிட்டது.

''இப்ப எதுக்குடா அவளைப் பாக்கணும்கறே?''

''விஷயம் இருக்குடா... மைதிலிக்கு ஒரு வரன் அமைஞ்சிருக்கு... மாப்ளைகூட துபாய்னு சொன்னேன்ல...''

''ஆமாம்... அவங்க பொண்பார்க்க வர்றாங்களா?''

''கரெக்டா சொல்லிட்டே... அதுக்குத்தான் இவ்வளவு காய்தறிகளும்...''

''அதுசரி... இந்த விஷயத்தை பானுகிட்ட எதுக்குச் சொல்றே?''

''மைதிலியோட ஒரே தோழி அவதானே... அவதான் நாளைக்கு மைதிலியைச் சீவிச் சிங்காரிக்கப் போறதே...''

''ஓ... நீ அப்படி வர்றியா?''

கேள்வியும் பதிலுமாக அவர்களின் நடை தொடர்ந்து கொண்டிருக்க, சற்றும் எதிர்பாராத விதமாக எதிரில் உபாசகரும் வந்துகொண்டிருந்தார். என்னதான் அவரை ஒரு மேஜீஷியனாகவும் நம்ப முடியாத மனிதராகவும் அச்சத்துடனும் பார்த்தாலும் சங்கரன் உயிரை உகந்த சமயத்தில் காப்பாற்றியவர் என்கிற அந்த அதிசய சம்பவம் சாமிநாதனை அவரை மரியாதையாக பார்க்க வைத்தது.

''என்ன சாமிநாதா,... எங்கே இந்தப் பக்கம்? காய்கறி, வாழை இலைன்னு ஒரே தடபுடலா தெரியறதே... என்ன எதனா விசேஷமா?'' - உபசாகர் மிக எதார்த்தமாக விசாரிக்கத் தொடங்கி விட்டார். சங்கரனும் ஆமோதிப்புடன் மைதிலியின் பெண் பார்க்கும் படலம் பற்றி சொல்வதற்காக வாயைத் திறக்க, சாமிநாதன் சட்டென்று தடுத்தவனாக ''சாமி... இவன் சொல்றது இருக்கட்டும். நீங்கதான் அடுத்தவங்க மனசுல இருக்கறத அப்படியே படம் பிடிக்கறவர் ஆச்சே... எங்க இதெல்லாம் எதுக்குன்னு சொல்லுங்க பார்ப்போம்...'' என்று அவரை அழம் பார்க்கத் தொடங்கிவிட்டான். அவருக்கு அது புரிந்தது.

சிரித்தார்.

தன் இயல்புப்படி தொண்டையை வருடி நெற்றி நடுவில் ஆட்காட்டி விரலால் மரங்கொத்திபோல கொத்தி முடித்தவராக ''என்ன... உன் தங்கையைப் பொண்பாக்க வராளா...?'' என்று கச்சிதமாய் கேட்டார்.

உண்மையிலேயே சாமிநாதனும் சங்கரனும் ஒரு வினாடி உச்சித்தலையில் முடியை வெடுக்கென்று இழுத்ததுபோல்தான் உணர்ந்தனர்.

ஆனால் உபாசகர் முகத்தில் பெரிய உற்சாகமில்லை.

''பரவால்ல சாமி... சரியா சொல்லிட்டீங்க. உங்ககிட்ட ஏதோ விஷயம் இருக்கத்தான் இருக்கு...'' என்று சாமிநாதன் உடனே அவரைப் பாராட்ட, சங்கரன் ''ஸ்வாமிகள் இந்த சமாசாரம் நல்லபடியே நடக்க ஆசீர்வாதம் பண்ணணும்'' என்றான்.

அவர் ஒரு தினுசாகச் சிரித்தார்.

''என்ன சிரிக்கறேள்?''

''இது சோகச் சிரிப்பு சங்கரா...''

''அப்படின்னா?''

''சொன்னா வருத்தப்படமாட்டியே...''

''என்ன...?''

''வருத்தப்பட மாட்டேன்னு சொல்லு. சொல்றேன்.''

''வருத்தப்படுற மாதிரியான விஷயம்னா எப்படி வருத்தப்படாம இருக்க முடியும்?''

''ஆமாம்... இது அப்படிப்பட்ட விஷயம்தான்!''

''சாமி... எதுக்குப் பீடிகை... பட்டுன்னு போட்டு உடையுங்க. மைதிலிக்கு இந்த வரன் அமையுமா அமையாதா?''

''அமையாது!'' உபாசகரிடமிருந்து பொட்டில் அடித்தது போல் வார்த்தை வந்து விழுந்தது.

சங்கரன் ஒரு வினாடி ஆடிப்போய்விட்டான்.

''சாமி... இது அவங்களா வந்து பாக்கற விஷயம். பொண்ணு பேசமாட்டாங்கற விவரமெல்லாம் மாப்பிள்ளை வீட்டுக்குத் தெரியும். 25 பவுன் நகைதான் அவங்க டிமாண்ட். ஆனா 50 பவுன் போடலாம். அந்த அளவு தங்கம் இருக்கு...''

''தங்கம் இருக்கலாம். வெள்ளி இருக்கலாம். விதி இல்லேன்னா எது இருந்தும் பிரயோஜனமில்லை.''

''அப்ப இந்தக் கல்யாணம் நடக்காதா?''

''நாளைக்குப் பாரேன்...''

''நடந்துட்டா...?''

''அதுல எனக்கென்ன குறைஞ்சுடப்போறது. ஆனா நடக்காதுன்னு அம்பாள் சொல்றா. இதைக்கூட நான் காரண மில்லாமச் சொல்லலை...''

''என்ன காரணம்?''

''உங்களுக்கு என்னைப் பத்தி தெரியவேண்டாம்...''

''இதுல உங்க சதிவேலை எதுவும் இருக்காதே..?''

சாமிநாதன் அசராமல் திருப்பிக் கேட்டது உபாசகரைக் குத்தியேவிட்டது. ஒரு விரக்திச் சிரிப்புடன் ''எனக்கு நல்லதைத் தவிர வேறு எதுவும் பண்ணத் தெரியாது'' என்றபடியே நகர்ந்தார். சங்கரன் முகத்தில் வாட்டம்!

# ருத்ரவீணை

## என்னுரை

இன்றைய மனிதனின் விஞ்ஞான சாகசங்கள் செவ்வாய் கிரகத்தைத் தொட்டுக்கொண்டு நிற்கிறது. ஒரு தீப்பெட்டி அளவு செல்ஃபோனை வைத்துக்கொண்டு பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ளவர்களுடன் இன்றைய மனிதன் கைகுலுக்கி முடித்துவிடுகிறான். தூரம் ஒரு பொருட்டேயில்லை. காலகதியையும் மிகமிக ஜெயித்து விடுகிறோம். எல்லாவற்றிலும் வேகம்... மனிதன் செய்யும் அவ்வளவு சாகச முயற்சிகளும் கால கதியைச் சுருக்குவதாகவே உள்ளது.

ஒரு நோய்க்கு மருந்து சாப்பிட்டாலும் அது எவ்வளவு சீக்கிரம் குணமாகும் என்ற காலகதிக் கேள்விதான் அங்கே பிரதானம்!

பணிபுரியும் இடத்திலும் அதன் முதலாளி ஒரு நாளில் இரண்டுநாள் வேலையை எதிர்பார்ப்பவராக இருக்கிறார்.

எங்கு பயணம் செய்தாலும் நாட்கணக்கே நமக்கு இப்பொழுது பிடிக்காமல் போய்விட்டது.

கூர்ந்து கவனித்துப் பாருங்கள்.

மனிதன் தன் வாழ்நாளில் ஒரு பெரும்யுத்தத்தைக் காலத்தின் மீதுதான் செலுத்தியபடி உள்ளான். ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்தால் 'நேரம் போவது தெரியக்கூடாது அவ்வளவு விறுவிறுப்பாக இருக்க வேண்டும்' என்கிறோம்.

அன்றாட ஓய்வான தூக்கத்திலும் அதையே எதிர்பார்க்கிறோம்... மனிதனின் மிகப் பெரிய பாரமாக அவனது வயிற்றைச் சொல்வார்கள். அது வேதாந்தம்.

இன்றோ நேரத்தைக் கூறுகிறார்கள்- இது சித்தாந்தம். இந்த நேரத்திற்கும் நல்ல நேரம் கெட்ட நேரம் என்று இரண்டு பெயர்கள் வைத்திருக்கிறான் மனிதன்.

இவனுக்கு இன்பமளிப்பது எல்லாம் நல்ல நேரமாகி விடுகிறது. துன்பமடைந்தாலோ அந்தக் காலம் கெட்ட காலமாகி விடுகிறது.

'காலம் மனிதனிடம் மாட்டிக்கொண்டு தவிக்கிறது.'

இது ஒரு பார்வை!

'இல்லையில்லை. மனிதன்தான் காலத்திடம் மாட்டிக் கொண்டு முழிக்கிறான்' இது ஒரு பார்வை. எது எப்படியோ... இன்றைய மனிதன் இப்படி இரு கேள்விகளின் பிடியில்தான் உள்ளான். காலத்துடனான யுத்தத்தில் அவன் அதிகம் நம்பிக்கை இழந்து காணப்படுகிறான்.

அவனுக்கு இன்று எதன் பேரிலும் யார் பேரிலும் நம்பிக்கையில்லை. உலகமே ஒரு சுயநலப்பட்டறையாகத்தான் அவனுக்குத் தெரிகிறது.

இதனால் அவன் மனஅழுத்தத்திற்கு ஒரு வடிகால் கட்டாயம் தேவைப்படுகிறது.

வடிகாலுக்கு எங்கே போவான்?

அவனுக்கான ஒரே போக்கிடம் கோவில்கள்தான். அங்குள்ள கல்லால் ஆன சாமிதான். அவர்தான் இவன் எவ்வளவு புலம்பினாலும் பொய் சொன்னாலும் சகிப்புடன் கேட்டுக் கொள்வார். அடுத்தவரிடம் சென்று 'இவனோட அறுவை தாங்கல' என்று போட்டுக்கொடுக்க மாட்டார்.

இப்படி எல்லாம் மனிதக்கூட்டம் ஒரு நாள் திணறும் என்று தெரிந்துதானோ என்னவோ அவ்வைக் கிழவி அந்த நாளிலேயே 'கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்று கூறிவைத்திருக்கிறாள்.

இன்று கோவில்களுக்கும் பஞ்சமில்லை.

சொல்லப்போனால் அரசாங்கத்தின் கஜானா இரண்டாம் பட்சமாகிவிட்டது. திருப்பதி, சபரிமலை. பழனி கோவில் உண்டியல்கள் நிரம்பித்தள்ளுகின்றன. மனிதன்... சுயநல மனிதன்... நமக்கெதற்கு ஊர்வம்பு என்று சமூகப் பிரக்ஞை அற்ற மனிதன் கோவில்கள் விஷயத்தில் மட்டும் குறைவைக்கவில்லை. பிரதோஷம், ஏகாதசிகளில் எள்போட்டு எடுக்க முடிவதில்லை.

ஐம்பது மீட்டர். நூறு மீட்டர் உயரங்களுக்கு எல்லாம் சாமிசிலைகள் எழுப்பப்படுகின்றன. லட்சக்கணக்கில் கூட்டம் கூட்டமாக பாதயாத்திரைகள் வேறு.

இதெல்லாம் பக்தித்தாக்கமா இல்லை, வீக்கமா என்பதே விளங்கவில்லை. அய்யா சாமி... எதற்கு இத்தனை பீடிகை என்று கேட்கிறீர்களா? காரணமிருக்கிறது.

இப்படிப்பட்ட மனிதர்கள் நடுவில் பழங்கால நம்பிக்கை சார்ந்த விஷயங்களைப் பற்றி பேசும்போது அவர்களுக்கு ஒரு புது தெம்பு ஏற்படுகிறது.

இந்த ருத்ரவீணையும் அப்படி ஒரு நம்பிக்கை தரும் நாவல் தான். 'இசையும் ஒரு மருந்து' என்று ஒரு பழமொழிபோல் சொல்லும் போது அது சரியாகப் போய்ச்சேரவில்லை. இருக்கலாம் என்று தலையாட்டிவிட்டுப் போய்விடுகிறார்கள்... அதுவே எப்படி என்று விளிக்கும் பொழுது ஒரு ஆச்சரிய ஈர்ப்பு தானாக வந்து விடுகிறது.

அதிலும் இறைச்சிந்தனைகளுடன் இசை பற்றிப் பேசிடும்போது அந்த ஈர்ப்பு பல மடங்கு அதிகமாகிறது.

இந்த நாவலும் அதைத்தான் செய்திருக்கிறது. கோஹினூர் வைரம்போல, மயிற்பொறி போல 'ருத்ரவீணை'யும் ஒரு நம்பிக்கை சார்ந்த விஷயம்.

முதல் பாகத்தைப் போலவே இந்த இரண்டாம் பாகமும் உங்கள் சிந்தையை மகிழ்விக்கும். பதிப்புரையில் திரு.ஜி. அசோகன் கூறியிருப்பதைப்போல் இதன் மூன்றாம் பாகம் விரைவில் வெளிவரும்.

அன்புடன்,

**இந்திரா சௌந்தர்ராஜன்.**

# முதல் பாகத்தின் சுருக்கம்

***அன்று:-*** *இன்றிலிருந்து மிகச் சரியாக 302 ஆண்டுகளுக்கு முன்பு(கி.பி.1700) நவாப்ஜான் பாபா எனும் நாடோடி ஒருவர் தஞ்சையின் தோடிபுரம் நோக்கி வருகிறார். தன்னிடமிருந்த வித்தியாசமான ருத்ரவீணையால் மழைபெய்யாத தோடிபுரத்திற்கு மழையையும் தன்னை ஆதரித்து அடைக்கலம் கொடுத்த தாசி அபராஜித வைஜெயந்தியின் பாட்டி மாணிக்கவல்லிக்குக் கண் பார்வையையும் வரவழைக்கிறார். தோடீஸ்வரர் கோயிலுக்குள் அனுமதிக்கப்படாத பாபா ருத்ரவீணையால் சதாசிவ தீட்சிதரின் பாடலுக்கு இசையமைக்க, அபராஜித வைஜெயந்தி நடனமாட பல ஆண்டுகளாக பழுதுபட்டிருந்த ஆலயமணி ஒலி எழுப்புகிறது. சதாசிவ தீட்சிதரின் நட்பு கிடைத்து அவரிடம் தன்னைப்பற்றியும் தன் குருநாதர் சடையாண்டிச் சித்தர் பற்றியும் ருத்ரவீணை தனக்குக் கிடைத்த விதம் பற்றியும் தெரிவிக்கிறார் பாபா.*

*தாசிகுலத்தில் பிறந்தவனும் அபராஜித வைஜெயந்தியின் சகோதரனுமாகிய வீரேந்திரன் நவக்கிரக மாளிகைக்குச் சென்று மயானப்பாதையில் திரும்புகிறான். அப்போது காபாலிகன் ஒருவன் வழிமறித்து மதுவையும் மாதுவையும் கொடுத்து அவனைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்கிறான்.*

*காபாலிகர்களின் அட்டூழியத்தைத் தடுப்பதற்காகவும் காணாமல் போன தோடிபுரத்தின் கன்னிப்பெண்களை மீட்பதற்கான சதாசிவ தீட்சிதர், பாபாவைப் பார்க்க எண்ணுகிறார். சாரட் ஓட்டும் முனியன் அபராஜித வைஜெயந்தியின் வீட்டிலிருத்து பாபாவை அழைத்து வருவதற்குள், சதாசிவ தீட்சிதர் மனைப்பாம்பு தீண்டி இறந்து விடுகிறார். தீட்சிதரின் சடலத்தை விரைவாக எடுத்துவரச் சொல்லிவிட்டு ருத்ரவீணையோடு மயானத்திற்கு விரைகிறார் பாபா.*

***இன்று:-*** *நரசிம்மதபாரதி பி. ஏ., பி. எல். படித்துவிட்டு திருக்கடவூர் ஸ்ரீ மடத்தில் மடாதிபதி ஜெயந்திநாதர் சுவாமிகளிடம் விசுவாசமாகப் பணியாற்றுகிறார். ஒருநாள் உபசகர் ஒருவர் ஸ்ரீ*

மடத்திற்கு வர, அவருடன் 'சித்து' கற்றுக்கொள்வதற்காக யாரிடமும் சொல்லாமல் ஸ்ரீமடத்தை விட்டுச் சென்றுவிடுகிறார். தன் குருநாதரிடம் சித்து பற்றி கற்றுக் கொண்டுவிட்டு அவரது மறைவுக்குப் பின் நரசிம்மபாரதி ஸ்ரீமடம் நோக்கி வருகிற பொழுது, திருக்கடவூரில் இவரை தீவிரவாதி என்று நினைத்து போலீஸார் கைது செய்கின்றனர். பின்பு தனது சித்து வேலையால் போலீஸாரைப் பயமுறுத்தி விடுதலையாகி ஸ்ரீமடத்திற்கு வருகிறார். அங்கே மடாதிபதி ஜெயந்திநாதர் ருத்ரவீணையை தேடிச் சென்றதால் நோய்வாய்ப்பட்டுக் கிடக்கிறார். தனக்கு மடாதிபதி பதவி மறுக்கப்பட்ட நிலையில் தன் மனைவியைத் தேடி அன்னலிங்கபுரத்திற்குச் செல்கிறார். அங்கேயிருந்த பார்வையிழந்த மனைவியையும் வறுமையையும் பார்த்துவிட்டு மனம் வருந்தி, ருத்ரவீணையைத் தேடிக்கொண்டு தோடிபுரம் வருகிறார்.

தோடிபுரத்து பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் தோட்டத்து வீட்டில் உபாசகர் நரசிம்மபாரதிக்குத் தங்குவதற்கு இடம் கொடுக்கிறார். சுந்தரேச பட்டரின் மூலமாக கர்ணம் சந்திர மௌலியின் நட்புக்கிடைத்து அவரது வீட்டிற்குச் சென்ற உபாசகருக்குப் பலவித ஆச்சர்யங்கள் தெரியவருகின்றன. தாசி சுந்தராம்பாள் பற்றியும் பாபாவைப் பற்றியும் அறிகிறார். பிரசிடெண்ட் கல்யாணசுந்தரத்தின் மகன் சாமிநாதனும் அவனது நண்பனும் பட்டரின் மகனுமான சங்கரனும் மைதிலியின் நிச்சயதார்த்தத்திற்குக் காய்கறிகள் வாங்கிவர ஏற்கெனவே காவிரியாற்றின் சுழலிலிருந்து சங்கரனைக் காப்பாற்றிய உபாசகர் 'இந்த வரன் அமையாது' என்கிறார்.

அதைக் கேட்ட சங்கரன் அதிர்ச்சியடைகிறான்!

★★★

# ருத்ரவீணை

## இரண்டாம் பாகம்

## 1



### அன்று

**ம**யானத்தை ஒட்டிய அந்த நவரத்னமாளிகையின் உச்சி மாடியில் நின்றுகொண்டிருந்தார் அந்த வங்காள சோதிடர். மாளிகையைச் சுற்றிலும் அடர்வான மரக்கூட்டம். அவர் தஞ்சையில் இருந்து அழைத்து வந்திருந்த காவலர் கூட்டமும் அவரது சாரட்வண்டியும் நவரத்னமாளிகையைச் சுற்றி நிறுத்தப்பட்டிருந்த நிலையில் அவர் மாளிகையின்மேல் உதவியாளன் ஒருவனுடன் நின்று கொண்டிருக்க, உதவியாளன் தன் கையில் வெள்ளைப் பூசணிக்காய் ஒன்றை பற்றியபடி நின்று கொண்டிருந்தான். அதன் காம்பு பாகத்தில் விபூதி குங்கும மைப் பொருட்கள் இருக்க நெய்த்திரி ஒன்றும் இருந்தது. அதில் அவர் சுடர் ஏற்ற அது பற்றி எரிய ஆரம்பித்தது. அந்தச் சோதிடரும் ஏதோ திருஷ்டி கழிப்பதுபோல மாளிகை மொட்டைமாடியின் நான்கு முனைகளுக்கும் சென்று வணங்கிவிட்டு அந்தப் பூசணியை எடுத்துக்கொண்டு சென்று சூறையிடச் சொல்லிவிட்டுக் கீழிறங்கப் போனார். அப்பொழுது மேலிருந்து பார்க்கும் நிலையில், பார்க்க முடிந்த தூரத்தில் மயானமும் மயானத்துச் சடலப்புகையும் அவர் கண்ணில்படும் அதே தருணம், காவிரிக்கரை ஓரமாக மணல் வெளிமேல் கையில் ஒரு எலும்புத்துண்டுடன் முழுநிர்வாணக்

கோலத்தில் காபாலிகன் ஒருவன் கிழக்கு நோக்கி நடந்து கொண்டிருந்தான். அந்தக் காட்சியே அந்தச் சோதிடரின் கண்ணைக் கிள்ளியது.

"ஒழிந்துவிட்டதாகக் கருதிய காபாலிகர்கள் இன்னமுமா இருக்கிறார்கள்?" என்று ஒரு முணுமுணுப்பும் அவர் உதட்டில் இருந்து வெளிப்பட்டது. அந்தக் காபாலிகனோ மணல் வெளியில் இருந்து பிரிந்து மயானத்துக்குள் நுழைந்துவிட்டிருந்தான். ஜோதிடர் முகத்தில் பலத்த கவலை தேங்க ஆரம்பித்துவிட்டது. அப்படியே மாடியின் கைப்பிடிச்சுவர் அருகே மகாராஷ்ட்ரர்களின் மங்கலக் கொடியான காவிக்கொடி பறக்கும் கொடிமரத்தை ஒட்டி நிற்கையில் பாபாவும் அவர் பார்வையில் படுவதுபோல மயானம் நோக்கி நடந்து கொண்டிருந்தார். சாரட்டில் வரும்போதே பலர் பாபா பற்றிப் பேசியது காதில் விழுந்திருந்தது. அவர்கள் பாபாவை வர்ணித்தது எல்லாம் ஞாபகத்தில் இருந்தது.

அந்த ஞாபகத்துடன் பாபாவைப் பார்த்தார். ஒருபுறம் காபாலிகன் மறுபுறம் பாபா... இருவருமே மயானம் செல்கின்றனர். அங்கு எதாவது விசித்ரமாகவோ இல்லை விபரீதமாகவோ நடக்க இருக்கிறதா? ஜோதிடரை ஆர்வம் தொற்றிக்கொண்டது. அதற்கு மேல் அவராலும் அந்த நவரத்ன மாளிகையில் இருக்க முடியவில்லை. என்னதான் நடக்கிறது பார்த்துவிடுவோமே என்று ஒரு ஆர்வம் அவரை நெட்டித் தள்ளும்போது கூட்டமாக சாஸ்திரிகளின் சடலம் மயானத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தது!

**அ**ந்தக் காபாலிகன் மயானத்திலேயே மிக அடர்வான மரமான மஞ்சக்கடம்ப மரத்தின் உச்சிக் கிளையில் ஒரு பல்லியைப் போல படுத்திருந்தான். அவன் கையில் ஒரு சூலாயுதம். அது ஒரு கிளைமேல் அவனைப் போலவே சரிந்து படுத்திருந்தது. அவன் இலைதழைகளை முகத்துக்கு நேருள்ளதை மட்டுமாய் விலக்கிக் கூர்மையாக கீழே என்ன நடக்கிறது என்று பார்த்துக் கொண்டிருந்தான்.

அதே சமயம் மயானத்திற்கு வெளியே ஒரு மருத மரத்தண்டின் பின்னால் ஒளிந்துகொண்டு மயானத்தில் நடப்பதைப் பார்க்கும் ஆவலில் இருந்தார் அந்த வங்காள தேசத்து ஜோதிடர்.

சாஸ்திரிகளின் சடலம் எரிமேடைக்குமுன் பாடைமேல் கிடத்தப்பட்டிருந்தது. பெண்கள் யாரும் அனுமதிக்கப்பட்டிருக்க

வில்லை... சடலத்தைச் சுற்றி சாஸ்திரிகளின் உறவினர்களும் தம்பையாவும் முனியனுமே நின்று கொண்டிருந்தனர்.

தம்பையா பார்வை பாபாவையே பார்த்துக் கொண்டிருந்தது. பாபாவோ தன் ருத்ரவீணையை வெளியே எடுத்து ஒரு தேர்ந்த இடமாகப் பார்த்து அமர்ந்தார்.

''என்ன இது... இதுவா வீணை வாசிக்கும் நேரம்? இதுவா வீணை வாசிக்கும் இடம்?''

''பேசாமல் இருங்கள்... அவர் சொல்லித்தான் சாஸ்திரிகளின் சடலம் இவ்வளவு வேகமாக மயானத்திற்கு எடுத்து வரப்பட்டிருக்கிறது. அதில் ஏதோ ஒரு பொருள் இருக்கத்தான் இருக்கும்...''

விசாரங்கள் முடியுமுன் வீணை ஒலிக்கத் தொடங்கியது. வினோதினி ராகம்...

'ரி... ம... த... நி... ஸ' என்று ஸ்வரப்ரயோகம். வல்லிய ருத்ரவீணையின் நரம்புகளில் இருந்து தொடர்ச்சியாக வினோதினி உருவாகி ஆறாகப் பாயத் தொடங்க, கூட்டத்தாரிடம் அப்படியே ஒரு வித உறைவு.

மரத்தின்மேல் படுத்திருந்த காபாலிகனும் ஒளிந்திருந்து பார்த்துக்கொண்டிருக்கும் வங்காள ஜோதிடரும்கூட அந்த ராகத்தில் தங்களைத் தொலைத்துவிட்டிருக்க, வினோதினி... விஸ்வரூபிணியாகிக் கொண்டிருந்தது...நொடிகள் நிமிடங்களைப் பற்றி, நிமிடங்களும் மணியை எட்டிப் பற்றும்போது மரக்கட்டை போல் கிடந்த சாஸ்திரிகளின் கால் பெருவிரலில் ஒரு அசைவு. கூட்டத்தில் சிலர் அதைப் பார்த்துவிட்டு 'ஆ' என்று வாய்பிளக்க, தலையாரி அப்படியே விக்கித்தே போய்விட்டார்.

காபாலிகனும் கிட்டத்தட்ட விடைத்துவிட்டிருந்தான். ஒரு வீணையின் ராகம் பிணத்தை அசைய வைத்துவிட்ட ஆச்சரியம் அவன் முகத்தில்... ஆனால் ஜோதிடர் அதை உணர்ந்த மாதிரி தெரியவில்லை... சட்டென்று பாபாவின் வீணையின் வினோதினி ராகம் மாறி புன்னாகவராளி பிரவாகிக்க ஆரம்பித்தது... அந்த மாற்றத்திற்குக் காரணம் தலையாரி தம்பையாவிற்கும் புரிந்து விட்டது. அது சாஸ்திரிகளைத் தீண்டிய பாம்பிற்கான வலை... ஆம்! வலை வேலை செய்தது... சப்தம் வெகு தூரம்வரை கேட்டது... அங்கங்கே புதர்களில் ஒளிந்திருந்த, பதுங்கியிருந்த நாகங்கள் எல்லாம் அந்தப் புன்னாகவராளியால் இழுக்கப்பட்டு வெளியில் வந்து அமர்ந்து வாசிக்கும் பாபாவைச் சுற்றி வட்டம்

கட்டி நின்று படம் எடுக்கத் தொடங்க - ஜனக்கூட்டம் அப்படியே ஒதுங்கி ஓரம்கட்ட - அதுவரை இதெல்லாம் என்ன பெரிய விஷயம் என்கிற மாதிரி ஒரு ஓரமாய் நின்று கொண்டிருந்த மயான வெட்டியான் சரம்சரமாய் வரும் அந்தச் சர்ப்பங்களைப் பார்த்து உதறல் எடுக்க ஆரம்பித்தான். பாபாவின் விரல்கள் விடாமல் இசைக்க இறுதியாக சாஸ்திரியைத் தீண்டிய மனைப்பாம்பும் அங்கு வந்து சேர்ந்தது. விடைப்பாக ஒரு முழ உயரத்திற்கு எழும்பிப் படமெடுத்தபடி நின்ற அதைப் பார்த்த பாபா சட்டென்று வாசிப்பதை நிறுத்தினார். தன் மௌன விழிகளால் அந்தச் சர்ப்பத்தை உற்று நோக்கினார்.

அவ்வளவுதான்... அது விறுவிறுவென்று சடலமாகக் கிடக்கும் சாஸ்திரிகளைச் சமீபித்து எந்தக் காலில் தீண்டியதோ அந்தக் காலை அணுகி திரும்ப தன் வாயைப் பதித்து தான் உமிழ்ந்த விஷத்தைத் தன் வாயாலேயே உறிஞ்சி எடுக்க ஆரம்பித்தது. அதைப் பார்த்த தம்பையாவும் முனியனும் பாபா அருகில் வந்து அப்படியே மண்டியிட்டு கைகளைக் கூப்பியபடி பார்த்தனர். சாஸ்திரிகளும் அசைந்து கொடுத்து மெல்ல கண்திறக்க, உடம்பின் விஷத்தை உறிஞ்சிய அந்த நாகம் அப்படியே துவண்டு விழ, மற்ற நாகங்கள் எல்லாம் படுவேகமாக மீண்டும் தங்கள் இடங்களில் சென்று பதுங்கிக்கொண்டன...

மஞ்சக்கடம்ப மரத்தின் மேல் இருந்து பார்த்துக் கொண்டிருந்த காபாலிகனும் ஒளிந்திருந்து நோக்கிக் கொண்டிருந்த வங்கநாட்டுச் சோதிடரும் கிட்டத்தட்ட ஸ்தம்பித்து விட்டனர்.

ஒரு ஆளுயரமாலை... தட்டு நிறைய பொற்காசுகள் என்று ஏகதடபுடலான சாஸ்திரிகள் பாபா எதிரில் நின்று கொண்டிருந்தார். பாபாவோ நிஷ்டையில் இருந்தார்.

அமைதியான புறந்தோற்றம்... சலனமில்லாத முகம்! இந்த நிலையில் பாபாவைக் கலைத்து தனது மரியாதையைக் காட்டத்தான் வேண்டுமா என்று ஒரு வினாடி சிந்தித்த சாஸ்திரி 'வேண்டாம்' என்பதுபோல திரும்பினார். அவரோடு அவரது மனைவியும் வந்திருந்தாள். அவளுக்கும் புரிந்தது. இருவரும் திரும்பி வாசல்வரை கடந்திருக்கமாட்டார்கள்.

மென்மையாக இடையில் கண் மலர்த்திய பாபாவின் குரல் அவர்களைத் தடுப்பதுபோல அழைத்தது.

''சாஸ்திரிகளே... நில்லுங்கள்!''

சாஸ்திரிகள் திரும்பினார். கண் மலர்ந்த பாபாவைப் பார்த்து சந்தோஷப்பட்டபடியே திரும்பி வந்தார்.

''இப்படியா வந்துவிட்டு வந்த சுவடுகூடத் தெரியாமல் திரும்பிச் செல்வது?''

''மன்னிக்க வேண்டும். நாங்கள் நிஷ்டையில் இருப்பதைப் பார்த்துவிட்டே நிஷ்டையைக் கலைப்பது பாவம் என்று திரும்பினேன்.''

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. சில சமயங்களில் நான் மௌனமாகக் கண்களை மூடிக்கொண்டு இசையைப்பற்றி சிந்தித்தவாறு இருப்பேன். அவ்வளவுதான்... ஆமாம்... என்ன இது கைகளில்...?''

''என் உயிரைக் காத்த மகாத்மா நீங்கள். உங்களுக்கு நன்றி கூறத்தான்...''

''நன்றியை இப்படிப் பொருளிலா காட்டுவது?''

''பாபாஜி...''

''எனக்கெதற்குப் பொன்னும் பொருளும்?''

''மன்னியுங்கள்... உங்களையும் ஒரு சராசரி மனிதரைப் போல நினைத்துவிட்டேன்.''

''விட்டுத்தள்ளுங்கள்... உங்களாலும் எனக்கு ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கிறது.''

பாபா அப்படிச் சொன்னதுதான் தாமதம்... சாஸ்திரிகள் முகத்தில் ஒரு புது ஒளி.

''சொல்லுங்கள் பாபாஜி... நான் என்ன செய்யவேண்டும்?''

''சொல்கிறேன்... எனக்கென்னவோ நான் அதிக நாட்கள் இருக்கமாட்டேன் என்கிறாற்போல் ஒரு உள்ளுணர்வு.''

''பாபாஜி...!'' - சாஸ்திரி பதைத்தார்.

''எதற்கு இத்தனை பதட்டம்?''

''நீங்கள் அப்படிச் சொல்லக்கூடாது. இந்த மண்ணில் நீங்கள் நெடுங்காலம் வாழவேண்டும்.''

''நெடுங்காலம்... எவ்வளவு காலம்?''

''நூறு வயது என்று சொல்ல வந்தேன்...''

''ஒரு நூறு போதுமா?''

பாபா கேட்டதில் ஏதோ உட்பொருள் இருப்பது போல் தோன்றியது. சாஸ்திரிகளின் முகமும் மாறியது.

''ஆன்மாவுக்கு அழிவு ஏது...? நூறு இருநூறு என்கிற எண்ணிக்கைகள் எல்லாம் அதன் முன்னால் துச்சம். ஆனால், வீடாகிய இந்த உடம்பு இருக்கிறதே இது ஒரு பஞ்சபூதக் கலவை... இதன் வரையில் இதை நான் உதிர்க்க வேண்டிய வேளை நெருங்கிக் கொண்டிருக்கிறது...''

''அப்படியானால்...?''

''என் உடல்தான் மண்ணாகப் போகிறது. என் ஆத்மா அழிவற்றது...''

''ஏதோ காரியம் ஆகவேண்டும் என்றீர்களே?''

''சொல்கிறேன்...'' பாபா எழுந்தார்.

உள்ளே சென்றார். திரும்பி வந்த அவர் கைகளில் அவருக்கு ஒரு சீனத்துறவி அளித்த மரக்கூழ் ஏடும் மைக்குப்பியும் இருந்தது...''

''இது...?''

''ஒரு சீனத்துறவி இதை எனக்குப் பரிசாக அளித்தார். இதை காகிதம் என்று சிலர் கூறக் கேட்டேன். வஸ்த்ரங்களில் மையால் எழுதுவதற்குப் பதில் இதில் எழுதலாம். கால காலத்திற்கும் நிலைத்திருக்கும்... இந்த மசிக்குப்பியில் உள்ள மூலிகைச்சாறும் திடமானது...''

''நல்லது... இதைக் கொண்டு எதை எழுத உத்தேசம்?''

''இனி எழுத என்ன இருக்கிறது...? எழுத வேண்டிய அவ்வளவையும் எழுதிவிட்டேன். அபூர்வமான ராகங்களின் ஸ்வரம்பற்றியும் ஆரோஹணம் அவரோஹணம் பற்றியும் மாத்திரை சுத்தமாக எழுதியுள்ளேன்...''

''இதை நான் என்ன செய்யவேண்டும்?''

''இதை நீங்கள் கொண்டுசெல்லுங்கள். இதைக் காலகாலத்திற்குப் பாதுகாப்பது உங்கள் பொறுப்பு.''

''நானா?''

''ஆம்... இதை உங்கள் இல்லத்து பூஜை அறையில் வைத்தே பூஜிக்கவும் செய்யலாம்... 'ருத்ரவீணை'யைக்கூட நான் ஆலயத்தில் ஒப்படைக்க இயலாத நிலைக்குத் தள்ளப் பட்டிருக்கிறேன்.''

''என்ன சொல்கிறீர்கள்? எதனால் அப்படிக் கூறுகிறீர்கள்? 'ருத்ரவீணை'யை தோடிபுரம் கோவில் சொத்தாக்குவதுதானே உங்கள் வருகையின் நோக்கம்?''

''ஆம்... ஆனால் இடையில் நடந்த சில சம்பவங்கள் ஒரு விபரீதச் சூழலை உருவாக்கிவிட்டன.''

''நீங்கள் கூறுவதே எனக்குப் புரியவில்லை.''

''ருத்ரவீணையை தோடிபுர எல்லைக்குள் நான் இசைக்கக்கூடாது என்பது என் குருநாதர் எனக்கு இட்ட கட்டளை. ஆனால் நான் அதை பலமுறை மீறிவிட்டேன்.''

''அதனாலென்ன...?''

''சாஸ்திரிகளே... தயவுசெய்து இதற்குமேல் எதுவும் கேட்காதீர்கள். அருள் கூர்ந்து இந்த 'ராகமந்த்ரம்' என்னும் ஏட்டினை எடுத்துச் செல்லுங்கள். ஒரு முக்கிய வேண்டுகோள்...''

''என்ன பாபாஜி...?''

''இதுவும் அந்தச் சிவன் சொத்துதான். சிவனின் பிரதிநிதியாக ருத்ரன் என்பவன் மட்டுமே இதைத் திறந்து படிக்க முடியும். மற்றவர்கள் முயன்றால் அவர்கள் கண்பார்வை போய்விடும். எனவே இதை ஒரு பச்சைப் பட்டினால் கட்டிவையுங்கள். எந்தக் காலத்திலும் யாரும் இதைத் திறந்து பார்த்துவிடாதபடி பார்த்துக் கொள்ளுங்கள்.''

''என்ன இது... அற்புதமான ராகச்செல்வம் இது. இதை எதற்கு இப்படிப் பூட்டி வைக்கவேண்டும்?''

''அற்புதம் என்று கூறினீர்களே... அதனால்தான்! அற்புத மானவை ஆண்டவனால் மட்டுமே பயன்டுத்தப்பட வேண்டும்...''

''உங்கள் பேச்சும் கருத்தும் எனக்கு இன்று பெரிய அளவில் வியப்பைத் தருகிறது.''

''இதைவிட பல வியப்புகள் உங்களுக்குக் காத்திருக்கின்றன. இந்த ஊரே தலைகீழாக மாறப்போகிறது... எவளை தாசி என்று கேவலமாகப் பார்க்கிறீர்களோ அவள் தெய்வமாகப் போகிறாள்... தோடிபுரம் என்று இசைச் சிறப்புமிக்க பெயரை வைத்துக் கொண்டு இசை இன்பத்தையே உணராமல் இருக்கும் மக்கள் இனி தினமும் இசையின்பத்தில் திளைக்கப் போகிறார்கள்.''

பாபா சொல்லச் சொல்ல சாஸ்திரிகள் பூரிப்பை முகத்தில் காட்டினார்.

''உங்களுக்கும் இது புனர்ஜென்மம். எந்த அரவம் உங்களைத் தீண்டியதோ அது இனி காலகாலத்துக்கும் உங்களையும் உங்கள்

பரம்பரையையும் காவல்காக்கும். குறிப்பாக இந்த நாதமந்திரத்தையும் அதுவே காக்கும்...''

பாபாவின் பேச்சில் ஊகிக்க முடியாத அளவுக்குப் புதிர்கள்! சாஸ்திரிகள் மௌனமாக பாபாவின் பேச்சைக் கேட்டபடியே இருந்தார். இதைக் தொடர்ந்து அந்த ஊரில் அடுத்து என்னவெல்லாம் நடக்கப்போகிறதோ என்கிற கேள்வியும் பிரதானமாக இருந்தது.

நவக்கிரக மாளிகையின் மாடி உச்சியில் ஏக சிந்தனையில் இருந்தார்.அந்த வங்க நாட்டுச் சோதிடர். வானத்தில் கும்மிருட்டு! அமாவாசை நாள் என்பதற்கான அறிகுறியாய் கரிய மையாய் வானமிருக்க ஓர் இடத்தில் மட்டும் தீப்புகையோடு கூடிய வெளிச்சம். அதுவும் சுடுகாட்டில் வெந்து கொண்டிருக்கும் ஒரு பிணம் காரணமாக! எரியும் அந்தப் பிணத்தின் மீதே இருந்தது அந்தச் சோதிடரின் பார்வை.

அப்பொழுது அங்கே யாரோ வரும் அரவம்! திரும்பிப் பார்த்தார். தஞ்சை அரசர் சாந்தாஜியின் உயிர் நண்பன் என்று சொல்லக்கூடிய துர்காராம்!

''நமஸ்தேஜீ...'' என்றபடியே வந்தான்.

''வா துர்காராம்!''

''மாளிகைக்குள் பஞ்சணையோடு அறைகள் இருக்க, இங்கே வெட்ட வெளியில் வந்து நின்று கொண்டிருக்கிறீர்களே?''

''எல்லாம் உங்கள் அரசைப் பற்றிய கவலைதான்!''

''என்ன கவலை... உங்கள் ஜோதிடப் பிரசன்னத்தில் எங்கள் ஆட்சிக்கு ஆபத்து என்று எதாவது தகவல் வந்ததா?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை... இது முற்றிலும் வேறு விஷயம்!''

''என்ன என்றுதான் கூறுங்களேன்...?''

''கூறுகிறேன். இன்று இந்த ஊரில் ஒரு அதிசயம் நடந்தது. கேள்விப்பட்டாயா?''

''உம்... மாளிகைக்காவற்காரர்களில் இருந்து சமையற்காரர்கள் வரை அதேதான் பேச்சு. யாரோ ஒரு சாஸ்திரி இறந்துவிட்டாராம். அவரை வீணை வாசித்தே ஒருவர் பிழைக்க வைத்துவிட்டாராமே?''

''ஆம்... நான் அந்த அரிய காட்சியை என் இரு கண்களால் பார்த்தேன்...''

''அந்த மனிதர் நிஜமாலுமே இறந்திருந்தவரா.... இல்லை மூர்ச்சையடைந்தவரை இறந்துவிட்டதாகக் கருதிக்கொண்டு...''

''இல்லையில்லை... அவர் இறந்தவரே! அவரை ஒரு நாகம் கடித்துக் கொன்றுவிட்டது. அந்த நாகமே திரும்ப வந்து விஷத்தை உறிஞ்சி எடுத்து அவரைச் சுத்திகரித்தது.''

''என்ன ஜோதிடரே... எதாவது புராணக்கதையை இங்கே யாராவது நாடகமாக நடித்துக்காட்டினார்களா... அதைப் பார்த்துவிட்டுத்தான் இப்படி எல்லாம் கூறுகிறீர்களா?''

''துர்காராம்... அதிசயங்களைக் கண்ணால் காணாதவரை அறிவு இப்படித்தான் சொல்லும். நீ இப்படிப் பேசுவதில் விந்தை ஒன்றும் இல்லை.''

''சரி... அதற்கென்ன?''

''அதற்கென்னவா? செத்தவன் பிழைப்பதென்பது சாதாரண ஒன்றா என்ன?''

''அபூர்வமென்றே வையுங்கள். அதையே நினைத்துக் கொண்டிருப்பது பைத்தியக்காரத்தனமல்லவா?''

''அவசரப்படுகிறாய்... இவ்வளவையும் சாதித்தது ஒரு மனிதன் அல்ல...''

''இது என்ன புது விளக்கம்?''

''முழுவதுமாகக் கேள்... அந்த மனிதர் வினோதமாய் ஒரு வீணையை வைத்துக் கொண்டிருந்தார். அதை வாசித்துத்தான் அவர் அதைச் சாதித்தார்...''

துர்காராம் அடுத்த நொடியே சிரித்துவிட்டான்.

''ஏன் சிரிக்கிறாய்?''

''சிரிக்காமல் என்ன செய்வது? ஒரு மனிதர் உயிர்ப்பித்தார் என்பதையே என்னால் நம்ப முடியவில்லை. இந்த நிலையில் ஒரு வீணை என்று கூறினால் சிரிக்காமல் என்ன செய்ய முடியும்?''

''முட்டாளே.... உன்னால் என்ன முடியுமோ அதைச் செய்திருக்கிறாய். சிரிப்பது சுலபம் - ஆனால் சிந்திப்பது கடினம்... அதை நீ எனக்கு நிரூபித்துவிட்டாய்.''

''போதும் கேலி... இதில் சிந்திக்க என்ன இருக்கிறது?''

''அப்படிக் கேள்... உன்னையும் என்னையும் இங்கே இணைத்துக் கட்டி இயக்கிக் கொண்டிருப்பது எது?''

''எது?''

''பேச்சு என்னும் சப்தம்... நான் பேசாவிட்டாலோ - இல்லை நீ பேசாவிட்டாலோ ஒருவர் நினைப்பது இன்னொருவருக்குப் போய்ச் சேருமா?''

''இது என்ன விநோதமான கேள்வி...?''

''கேட்டதற்கு மட்டும் பதில் சொல்...''

''போய்ச் சேராது... அதற்கென்ன இப்போது?''

''இப்படிச் சாதாரணமாகச் சிந்தித்தால் எப்படி? சப்தம்தான் உலகின் அறிவார்ந்த விஷயம். அதில் பல மொழி வடிவம் கொண்டதால்தான் மற்ற உயிரினங்களுக்கு நடுவே மனிதன் மட்டும் உயர்ந்த நாகரிகமும் சக்தியும் யுக்தியும் படைத்தவன் ஆனான்... சப்தத்தைப் பயன்படுத்தத் தெரிந்ததாலேயே மொழி பிறந்தது. எழுத்து பிறந்தது...''

''ஜோதிடரே... இதற்கும் இந்த வீணைக்கும் என்ன சம்பந்தம்...? அதைச் சொல்லுங்கள்!''

''வீணையும் ஒருவித இசை என்னும் சப்தம் எழுப்பும் கருவிதானே?''

''ஆமாம்... இதுதான் ஊரறிந்த ஒன்றாயிற்றே?''

''முட்டாளே... திரும்பத் திரும்ப உன்னிடம் அவசரமே தொனிக்கிறது. அந்த வீணையின் நாத சப்தத்தில்தான் சூட்சமமும் இருக்கிறது.''

''அது என்ன சூட்சமம்?''

''அதைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். அந்த வீணை இசையால் ஒரு குருட்டுப்பெண் பார்வை பெற்றிருக்கிறாள். காய்ந்த இந்த மண்ணில் மட்டும் மழை பெய்துள்ளது. பலகாலமாக ஒலிக்காமல் இருந்த ஆலயமணி ஒலித்திருக்கிறது. இறந்த ஒருவரும் பிழைத்து எழுந்திருக்கிறார். ஒவ்வொரு இடத்தில் ஒவ்வொருவித ராகம். அந்த ராகத்தில்தான் இருக்கிறது விஷயம்...''

''என்ன விஷயமோ... எனக்கு ஒன்றுமே புரியவில்லை.''

''சரி. நீ வந்த விஷயம்?''

''உங்கள் அமாவாசை வழிபாடுகள் முடிந்ததா?''

''அமோகமாக... மகாராஷ்ட்ர அரசு இந்த மண்ணில் விஸ்தாரம் பெறவும் மிலேச்சர்கள் இந்த மண்ணைவிட்டு ஓடவும் ஒன்பது கிரகங்களையும் வணங்கி வழிபட்டு அவைகளுக்கான பிரத்யேகமான ஹோமங்களையும் பூசனைகளையும் முடித்தேன்.''

''அதை அறிந்து செல்லத்தான் வந்தேன். அனேகமாக சாந்தாஜி இங்கே வந்து இந்த நவக்கிரகமாளிகையில் தங்கக்கூடும்...''

இருவரும் பேசிக்கொண்டே மாடியைவிட்டுக் கீழே இறங்கினார்கள். பெரிய அந்த மாளிகையின் ஒரு புறம் காவிரியின் ஒரு கிளை வாய்க்காலாக வெட்டப்பட்டு மாளிகையினுள் அமைந்திருந்த குளத்திற்குச் செலுத்தப்பட்டிருந்தது. காவிரியில் வெள்ளம் கரைபுரளும் போதெல்லாம் ஓரளவுக்குமேல் மிகும் நீரானது வாய்க்கால் வழியாக ஓடி மாளிகைக்குள் உள்ள குளத்திற்குள் புகும்படியாகவும் பின் குளத்தில் இருந்து பன்னிரண்டு குழாய்ப்பாதைகளில் அது பன்னிரண்டு ராசிக் கிணற்றுக்கும் செல்லும் விதமாகவும் அந்தக் குளம் அமைந்திருந்தது. குளத்தில் அமைந்திருந்த குழாய்ப்பாதைகள், மேஷம், ரிஷபம், மிதுனம் என்று பெயர்களில் ஒரே நேர்கோட்டில் அமையாமல் மேலும் கீழுமாய் குளத்து உட்புறச் சுவர்களில் அமைந்திருந்தன.

குளத்தில் நிரம்பும் நீரின் அளவுக்கு ஏற்ப நீர் மட்டத்திற்கு அருகில் உள்ள குழாய் வழியாக தண்ணீர் புகுந்து அந்த ராசிக்கிணறை அடையும் விதமாக அமைக்கப்பட்டிருந்ததில் ஏதோ ஒரு காரணம் இருப்பது போலவும் தோன்றியது.

அந்தக் குளத்தை ஒட்டித்தான் வந்து நின்றான் துர்காராம்! குளத்தில் நீர் தளும்பி மேஷக்கேணிக்கான துவார மட்டம் வரை நீர் இருக்க அதனுள் தண்ணீரும் பாய்ந்தபடி இருந்தது. துர்காராம் அதைப் பார்த்துவிட்டு ஜோதிடரிடம் கேட்டான்.

''இந்தக் குளம்... இதன் பன்னிரண்டு குழாய்ப் பாதைகள், அவை முற்றுப் பெறும் ராசிக்கிணறுகள், அவை வற்றாமல் அதில் எப்பொழுதம் நீர் இருக்க வேண்டும் என்பதற்காக இந்தக் குளத்தில் இப்படிச் செய்யப்பட்ட ஏற்பாடுகள் எல்லாமே எனக்குப் பெரிதும் வியப்பைத் தருகிறது. இது யாருடைய வேலை ஜோதிடரே...?''

''அங்கேதான் இந்தத் தோடிபுரத்தின் சிறப்பை நீ புரிந்து கொள்ளவேண்டும். இது ஒரு அசாதாரணமான ஊர். சோழ நாட்டிற்கே அனேகப் பெருமைகள் உணடு. அதிலும் தோடிபுரம் தனித்து நிற்கிறது...

மனித வாழ்வை ஆட்டிப்படைப்பதில் எப்பொழுதுமே கிரகங்கள் வல்லமை மிக்கவை. அப்படிப்பட்டவைகளின் சுழல் கதியை கணக்கில் எடுத்துக்கொண்டு இந்தக் குளமும் வழிப்பாதைகளும் அமைக்கப்பட்டுள்ளன.

இன்று புதன் மிதுன ராசியில் உச்சம்.

பார்... நான்காவது குழாயில் நீர் நுழைந்து மிதுனக்கேணி நோக்கி நீர்பாய்வதை! மிதுனக்கேணியில் இன்று நீர் சராசரி அளவைக் கடந்து வழிந்தபடி இருக்கும்.

ஒரு தேர்ந்த ஜோதிடர் இந்தப் பன்னிரண்டு கிணறுகளையும் சுற்றி வந்து ஒரு பார்வை பார்த்தாலே போதும். எந்தக் கிரகம், எங்கே, எப்படி இருக்கிறது என்பது விளங்கிவிடும்.

உண்மையில் இந்த ஏற்பாடு ஒரு அற்புதம். இதை ஜோதிட மாமனிதர் வராகமிகிரரின் விருப்பத்திற்கு ஏற்ப இந்திர சபையின் மயன் நிர்மாணித்ததாக புராணம் கூறுகிறது. இங்குள்ள பன்னிரண்டு கிணறுகளிலும் ஒருவர் ஸ்நானம் செய்து இறுதியாக காவிரியிலும் நீராடி, பின் தோடீஸ்வரனையும் வணங்கினால் அவர்களின் கர்மவினை முழுவதுமாக விலகி அவர்களுக்கு நற்கதியும் நிச்சயம்...''

ஜோதிடர் அந்த மாளிகையின் ஒரு பிரதான விஷயத்தையும் துர்காராம் என்னும் அவனிடம் ஸ்லாகித்துக்கொள்ள, துர்காராம் அதற்கும் சேர்த்துச் சிரித்தான்.

''எதற்கெடுத்தாலும் சிரிப்பது உனக்கு வழக்கமாகி விட்டது!''

''ஆமாம்... நீங்கள் சொல்லும் எல்லாமே என் வரையில் நகைப்புக்குரியதுதான். இந்த மாளிகையை, இந்தக் குளத்தை ஏதோ ஒரு உலக மகா அதிசயம் போல சொல்கிறீர்கள். எனக்கென்னவோ ஊரில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்படாமல் இருக்க நமது முன்னோர்கள் செய்து வைத்த ஒரு யுக்தியாகத்தான் தோன்றுகிறது. காவிரி நிரம்பினால் குளம் பெருகவேண்டும். குளம் பெருகினால் பன்னிரண்டு கிணறுகளும் பெருகவேண்டும் என்பதெல்லாம் விவசாயம் கருதி எடுக்கப்பட்ட சாதாரண முடிவுகள்.''

''துர்காராம், நீ திரும்பத் திரும்பத் அவசரப்படுகிறாய். அப்படிச் செய்வதாக இருந்தால் வெளிப்படையாக ஒரு வாய்க்கால் வெட்டி அந்தக் கிணறுகளோடு இணைக்கலாமே...? எதற்கு இப்படி ரகசியமாக யாருக்கும் தெரியாதபடி செய்யவேண்டும்?''

''அது... அது...''

''போ... போய் நீ வந்த வேலையைப் பார். இதற்குமேல் என்னிடம் எதுவும் பேசாதே...!''

''சரி... நாளை நீங்கள் தஞ்சை திரும்பிவிடுவீர்கள்தானே?''

''இல்லை... நான் இப்பொழுது வருவதாயில்லை.''

''அப்படியா... இங்கே என்ன செய்யப்போகிறீர்கள்?''

''அதை இப்பொழுது சொல்வதாக இல்லை...''

ஜோதிடர் ருத்ரவீணையை மனதில் நினைத்துக்கொண்டு தான் அவனிடம் அப்படிக் கூறினார். அவனுக்கும் அது புரிந்தது.

அதே சமயம் அந்த மாளிகை வாசலில் ஏதோ சப்தம். சாளரம் வழியாக இருவரும் எட்டிப்பார்த்தனர். வாயிற்காவலாளிகளுடன் வீரேந்திரன்தான் சத்தம் போட்டுக் கத்திப் பேசிக்கொண்டிருந்தான்.

''அடேய்... அந்த வீணைக்கார மனிதர் என் வீட்டில்தான் தங்கியிருக்கிறார். அவர் ஒரு பக்கிரி. அவரிடம் எந்த விசேஷமும் இல்லை. அந்த வீணையும் ஒரு மரக்கட்டை. அவன் ஒரு மாயாவி. இதைப் புரிந்துகொள்ளுங்கள். இது புரியாமல் பினாத்தாதீர்கள்.''

என்று அவர்களிடம் அவன் சொல்லும்போதே அவன் குரல் குழறியது. அவன் மதுவருந்தியிருக்க வேண்டும் என்பதும் புரிந்து போயிற்று.

வீணை பற்றி அவன் பேசவும் ஜோதிடர் வெகுவேகமாக வாயிலுக்கு வந்து அவன் எதிரில் நின்றார். அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு ''யார் இவன்?'' என்று காவலர்களிடம் கேட்டார்.

''இவன் ஒரு தாசிமகன்...''

''தாசிக்கு மகனா...? நம்பமுடியவில்லையே...!''

''கருணையால் பிழைத்துவிட்டவன். இவன் இறந்திருக்கலாம். சதா சர்வகாலமும் உல்லாசமாக இருக்க என்ன தேவையோ அதைச் செய்வான்...''

காவல்வீரர்களின் விளக்கத்தைத் தொடர்ந்து ஜோதிடர் அவனை உற்றுப்பார்த்தார். அவனோ தள்ளாடிக் கொண்டிருந்தான். புதிதாக முடிவிற்கு வந்தவர் போல ''அவனை உள்ளே அனுப்புங்கள்...'' என்று சொல்லிவிட்டுத் திரும்பினார். ஆனால் துர்காராம் தடுத்தான்.

''ஏய்... இவனை உள்ளே விடாதே... இது அரசர்கள், அவர்களது வம்சாவழியினர், உறவினர்கள் மட்டுமே நுழையக் கூடிய இடம்... வேசி மகனுக்கெல்லாம் இங்கே இடமில்லை!''

அது ஜோதிடர் காதிலும் விழுந்தது. வேகமாகத் திரும்பியவர், ''துர்காராம்... என் சொந்த விஷயத்தில் அநாவசிய மாகத் தலையிடாதே.'' என்று அவனிடம் தன் கோபத்தைக் காட்டினார்.

''நான் ஒன்றும் உங்கள் சொந்த விஷயத்தில் தலையிடவில்லை. இது அரண்மனை விவகாரம். வெளியே போய் இவனுடன் நீங்கள் கட்டிப்புரண்டு விட்டுக்கூட வாருங்கள். இந்த அபூர்வ மாளிகைக்குள் அந்நியர்கள் பிரவேசிக்கவே கூடாது என்பது ராஷ்ட்ரகுல திலகர் மகாஸ்ரீஸ்ரீஸ்ரீ சாந்தாஜி அவர்கள் விருப்பம்... நான் அவரது அத்யந்த சினேகிதன். அவரது விருப்பத்தை நிறைவேற்றுவதில் முன்நிற்பவன்.''

துர்க்ராராம் மிகமிகத் தீர்மானமாகப் பேசினான். மதிப்பிற்குரிய ஜோதிடர் ஒருவரிடம் பேசிக்கொண்டிருக்கிறோம் என்கிற எண்ணமே இல்லாமல் பேசினான். அந்த நொடி ஜோதிடர் மனதில் ஒரு தீர்மானம். 'எந்த மாளிகைக்குள் இந்த வீரேந்திரன் நுழையக்கூடாது என்று இந்த துர்காராம் தடுக்கிறானோ அதே மாளிகையை வீரேந்திரனுக்குச் சொந்தமாக்கி, இதே துர்காராமை இந்த மாளிகை வாசலில் காவலுக்கும் நிறுத்த வேண்டும்' என்பதுதான் அது.

வங்காள நாட்டின் காவல்தெய்வமும் வங்காளிகளின் மனமெல்லாம் நிரப்பி வாழ்பவளுமான அந்தக் காளியை நினைத்து அதன் நிமித்தம் ஒரு சங்கல்பமே எடுத்துக்கொண்டவர் துர்காராமைப் பார்த்து ஒரு விஷமப் புன்னகையை உதிர்த்துவிட்டு வீரேந்திரனை அழைத்துக்கொண்டு அப்படியே மாளிகையை விட்டு வெளியேறத் தொடங்கினர்ர்... அருகில் இருப்பது அமைதியான மயானம். ஆள் அரவமற்ற இடம். ஆனால் அங்கோ அவர்கள் இருவரும் வருவதைப் பார்த்தபடி தன்னை மறைத்துக் கொண்டான் - வீரேந்திரனை தன் பிடியில் மயக்கி வைத்திருக்கும் அந்தக் காபலிகன்!

## இன்று

சுந்தராம்பாள் இலவச வைத்தியசாலை!

போர்டை ஒட்டி மொபட்டை நிறுத்திவிட்டு சாமிநாதனும் சங்கரனும் அந்த எளிய கிராமத்து டிஸ்பென்சரிக்குள் நுழைந்தனர்.

வயதான ஒரு பெண்ணின் இடுப்பில் பானு ஊசி ஏற்றிக் கொண்டிருந்தாள். சங்கரனையும் சாமிநாதனையும் பார்த்துப் பரவசமானாள்.

பார்த்தால் ஒரு தாசி குலத்துப்பெண் என்றே யாரும் சொல்லமாட்டார்கள். அப்படி ஒரு லாவண்யம். அம்பு போல விழிகள்... அடப்பமாகத் தலைமுடி... அளவான உடல்வாகு... நல்ல உயரம். குங்கமப்பூ நிறம். சாமிநாதனுக்கு அவளது சமீபம் கிறக்கத்தையே ஏற்படுத்திவிட்டது.

காதல் பற்றி கதையில் படித்திருக்கிறான், சினிமாவில் பார்த்திருக்கிறான். மற்றபடி அந்த உணர்ச்சி பற்றி எதுவும் தெரியாது என்பதுபோல இருந்தான். பானுவைச் சமீபிக்கும் போதெல்லாம் இனம் புரியாத அவஸ்தை கொள்வதை சங்கரனும் கவனிக்கத்தான் செய்தான்.

பானுவோ அவனையே வெறித்துக்கொண்டு நின்றாள்.

''என்ன பானு... எதுக்கு அப்படிப் பாக்கறே?''

சங்கரனே அவளைக் கலைத்தும்விட்டான். பின் மைதிலிக்குப் பெண்பார்க்க வர இருக்கும் விஷயத்தையும் சொல்லி காலையிலேயே வந்துவிடச் சொல்ல அவளும் ''பார்க்கலாம்'' என்றாள்.

சாமிநாதன் கைகள் மருந்துக் குப்பிகளை எடுத்து எடுத்துப் பார்த்துக்கொண்டிருந்தன. அடிக்கடி தோளை வேறு சிலிர்ப்பிச் சிலிர்ப்பி விட்டுக் கொண்டான்.

அதைக் கவனித்த பானு சங்கரனிடம் சீண்டினாள்.

''சங்கர்... சாமிநாதன் வாயே திறக்க மாட்டானா?''

சாமிநாதன் உடனே திரும்பி அவளை வெறித்தபடி ''நான் வாய் திறந்தா ஏட்டிக்குப் போட்டி எதையாவது கேப்பேன். சண்டைதான் வரும்.''

''ஏட்டிக்குப் போட்டியா என்கிட்ட பேச என்ன இருக்கு?''

''நிறைய இருக்கு...''

''ஒண்ணு சொல்லேன்...''

''சொல்றேன்... உங்கம்மாவோ இந்த ஊருக்கே அம்மன் மாதிரி. அருள்வாக்குச் சொல்லியே குறைகளை நீக்கறவங்க. ஆனா நீயோ வியாதின்னா மருந்து சாப்ட்டாதான் குணமாகும்னு சொல்ற ஒரு சயின்ஸ் பார்ட்டி... எப்படி இது...? எனக்குப் புரியலை.''

''நான் மெடிக்கல் சயின்ஸ் படிச்சது என் விருப்பத்துக்கும் எதிர்காலத்துக்காகவும்...

அது துருப்பிடிச்சுடக்கூடாதுன்னுதான் டிஸ்பென்சரி நடத்தறேன். அம்மா விஷயமே வேற...''

''வேறன்னு மொட்டையா சொன்னா எப்படி? விவரமா சொல்றது...''

சாமிநாதன் வளைத்துக் கட்ட முயன்றான். பானு திணறினாள். சங்கரன் சமாளிக்கத் தொடங்கினான்.

''ஏண்டா... இப்ப எதுக்குடா இவகிட்ட போய் சுந்தாரம்பாம்மா பத்தி எல்லாம் பேசறே... பாரு பானு ஃபீல் பண்றதை... வாடா முதல்ல...''

சாமிநாதனைத் தள்ளிக்கொண்டு வெளியில் வந்தான். சாமிநாதனும் பதிலுக்கு ''விட்றா'' என்று தள்ளிவிட,

''என்னடா நீ... எதுக்குடா அவகிட்ட இப்படி எல்லாம் பேசினே?''

''காரணமாத்தாண்டா ஐயரே...''

''என்ன பெரிய காரணம்? புடலங்கா காரணம்.''

''நான் அவளை லவ் பண்றேன். போதுமா!''

''அதுதான் அவளைப் பார்த்தாலே நெளியறியே. தெரியாதாக்கும். ஆமா... ஒரு பக்கம் லவ் பண்ணிக்கிட்டே இப்படி அவளைக் கீறினா என்ன அர்த்தம்?''

''அதுசரி... நான் இவளைக் கல்யாணம் பண்ணிக்குவேனாம். ஆனா இவளோ இவங்க அம்மாவோட ஒரு பெட்ரோமாக்சும் கூடையுமா அந்த தாசிபங்களாவுக்கு டெய்லி கிளம்பிடுவாளாம். பிரமாதமா இருக்கும்...''

''ஓ... உனக்கு அந்தக் கவலையா?''

''இல்லையா பின்னே... ஆனா பானு வாயைத் திறந்தாளா பார்த்தியா?''

''திறக்க வைப்போம். இப்போதைக்கு விட்டுப்பிடிடா...''

சங்கரன் இறுதியாக சொன்னதற்கு மட்டும் பெரிதாக தலையை ஆட்டினான். திரும்பவும் முகத்தில் சோர்வு தொற்றிக் கொண்டுவிட ''என்னடா... உபாசகர் சொன்னதை நம்ப ஆரம்பிச்சுட்டியா?''

''ஆமாண்டா... இவ்வளவு சிரமப்பட்டு ஏற்பாடு பண்றோம். கடைசில சக்ஸஸ் ஆகாமப் போச்சுன்னா?''

''போடா ஃபூல்... அந்த ஆள் அப்படிச் சொன்னா நடத்திக்காட்றேன் பாருன்னு சவால் விடணும்டா.''

''முடியும்கறே...?''

''பார்ப்போமே... இப்ப என்ன காசா பணமா?''

**ந**ன்கு எண்ணெய் தேய்த்துக் குளித்த கூந்தல்... காவிரிக்கரை தென்னந்தோப்பின் காற்றில் ஒரு இளம்பெண் ஏகாந்தமாய் நாட்டியம் ஆடுகிற மாதிரி ஆடிக்கொண்டிருக்க, அடிக்கடி அதை ஒதுக்கி ஒதுக்கிவிட்டபடி யாரையோ எதிர்பார்த்து காத்துக் கொண்டிருந்தாள் காயத்ரி. அவள் எதிர்பார்ப்பு வீண்போகாதபடி 'கிக்கிக்கிக்...' என்று மோட்டார்பைக் ஓடிவரும் சப்தமும் கேட்டது. அவள் முகத்திலும் பளிச்சென்று வெளிச்சம். எதிரே மோட்டார்பைக்கில் கணேசன் வந்து கொண்டிருந்தான். ஊர் கர்ணம் மகன். டைட் ஜீன்சும் டி-ஷர்ட்டுமாய் தோடிபுரத்திலும் சென்னை மாம்பலம் ஸ்டைலைக் கொண்டிருந்தான்.

அவன் கிட்டே வரவும் கிறங்கினாள் காயத்ரி. காற்றில் தாவணிவேறு விலகி அவன் பார்வைக்கு விருந்தாக வைத்தது. மூடிக்கொள்ளக்கூடத் தோன்றவில்லை.

அவனும் ஜொள்ளியபடி அவள் அருகில் பைக்கை நிறுத்திவிட்டு வந்து அமர்ந்தான்.

உடம்போடு லேசாக உரசினான்...

அப்பப்பப்பா... நெய்வேலி அனல்மின்சார நிலையமே இடம் பெயர்ந்து அவர்கள் இருவருக்கும் இடையில் வந்து விட்டதுபோலி தோன்றியது.

''காயத்ரி...''

''உம்.''

''வரச்சொல்லிட்டு இப்படிச் சும்மா உக்கார்ந்துண்டிருந்தா எப்படி?''

''பேசவே வரமாட்டேங்கறது. ஏதேதோ கற்பனைகள்.''

''என்ன... ஸ்விட்சர்லாந்து போற மாதிரியா, இல்லை லண்டன் போற மாதிரியா...?''

''சொர்க்கத்துக்குப் போற மாதிரி...''

''அப்ப நமக்குச் சொர்க்கம் போக பாஸ்போர்ட் கிடைக்கப் போறதுன்னு சொல்லு.''

''ஆமாம்... அக்காவை நாளை பொண்பார்க்க வரா.''

''வெரிகுட்... நல்லபடியா முடிஞ்சா சரி.''

''முடிஞ்சுடும்னுதான் நானும் நினைக்கறேன்.''

''அப்ப நம்ம லைன் க்ளியர்னு சொல்லு.''

''என் லைன்தான் க்ளியர் ஆறது... உங்க சைட்ல யாரும் குறுக்க வராம இருந்தா சரி...'''

''சேச்சே... அப்படியே யாராவது வந்தாதான் என்ன... என்கிட்ட இருந்து உன்னைப் பிரிக்கவே முடியாது...''

''அப்ப ஏழை பட்டர் பொண்ணுன்னு ஏமாத்தமாட்டேள்னு சொல்லுங்கோ...''

''பைத்தியம். இந்த ஜென்மத்துல நீதான் என் பொண்டாட்டி!''

''அப்ப அடுத்த ஜென்மத்துல எவ...?''

''பொசசிவ்னெஸ்ஸா... முதல்ல இந்த ஜென்மத்துக்குச் சிந்திப்போம். அப்புறமா அடுத்த ஜென்மா பத்தி யோசிப்போம்.''

பதிலோடு அப்படியே ஜோடிகள் ஒட்டிக்கொள்ள மது அருந்தாமலே ஒருவித போதையில் இருவரும் மூழ்கத் தொடங்கினர்.

அப்பொழுது பெரிதாக 'புஸ்புஸ்' என்கிற ஒரு சப்தம் துல்லியமாகக் கேட்டது.

கணேசன் காயத்ரியை உற்றுப்பார்த்துவிட்டு ''காயத்ரி! யாரோ பெருமூச்சுவிட்டுற மாதிரி இல்ல...?''

''ஆமாம்... சப்தம் இதோ இந்தப் பக்கமா இருந்துதான்...''

காயத்ரி ஒரு அடர்வான காவிரிக்கரையோர தர்ப்பைப்புதரைக் காட்டினாள்.

கணேசனுக்கு அதற்குமேல் இருப்புக் கொள்ளவில்லை. இருவருமாக எழுந்தனர்.

சப்தம் தொடர்ச்சியாகக் கேட்டபடியே இருந்தது.

''யாரது புதருக்குள்...?'' என்கிற கேள்வியோடு எட்டிப்பார்த்தனர். ஆனால் புதரில் ஒருவருமில்லை அதே வேளையில் புதருக்கு அப்பால் உள்ள காவிரி நீர் ஓட்டத்தில் கழுத்தளவு தண்ணீரில் உபாசகர் அமர்ந்து ஏதோ மந்திரம் சொல்லியபடி இருக்க அவர் கழுத்தில் பரமசிவன் கழுத்துப் பாம்பு போல பாம்பு ஒன்று எங்கிருந்தோ வந்து வளைத்துக் கொண்டிருந்தது. அதுதான் அத்தனை துல்லியமாக சீறிக் கொண்டிருந்தது. அந்தக் காட்சியைப் பார்த்த கணேசனும் காயத்ரியும் விக்கித்துப் போய் அப்படியே நின்றுவிட்டனர்

**வி**டிந்துவிட்டது!

வாஸ்து சாஸ்திரப்படி அமைந்திருந்த பட்டர் வீட்டில் உதய சூரியனின் முதல் கதிர் தங்கு தடையின்றி நிலை வாசலில் விழுந்து அன்று அதிகாலை வேளையில் சாணமிடப்பட்டு கோலமிடப் பட்டிருந்த வாசலிலும் பட்டு மின்னியது.

ஒரு வீட்டின் வாசலில் தங்கு தடையின்றி சூரியக்கதிர்கள் படுவது என்பது மிக மிகச் சிறப்பான ஒரு விஷயம். அந்த வீட்டில் எது இருக்கிறதோ இல்லையோ நிச்சயம் தேக ஆரோக்கியம் இருக்கும். பட்டரும் வெளியே சந்தியா வந்தனம் செய்யும் விருப்பத்துடன் வெங்கலச் செம்பில் தீர்த்தமுடன் வெளிப்பட்டார். அவர் முகத்தில் ஒரு புது ஒளி.

மாப்பிள்ளை வீட்டார் வந்து மைதிலி கரை சேரப்போகிறாள் என்கிற மகிழ்ச்சி. காயத்ரியும் அதிகாலையே எழுந்துவிட்டாள். அக்காவுக்குக் கல்யாணமாகப் போகிறது. தனது லைன் கிளியராகி கர்ணம் மகன் கணேசனைக் கைப்பிடிப்பதில் சிக்கல் இருக்காது என்கிற சந்தோஷம் அவளுக்குள்...

எல்லோருக்கும் மேல் பக்கத்துவீட்டு கோமாப்பாட்டிதான் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிற மாதிரி தெரிந்தது.

சந்தி செய்யத் தொடங்கிவிட்ட பட்டரைப் பார்த்து சிரித்தபடியே உடன் இருந்து உதவிகள் செய்ய கோமாவும் வந்துவிட்டாள்.

சங்கரன் மட்டும் டல்லடித்தான்.

உபாசகர் சொன்ன ''இந்த வரன் அமையாது'' என்கிற வார்த்தைகள் அவனை ஆக்ரமித்துக் கொண்டிருந்தன. இடை யிட்டாள் பாட்டி கோமதி.

''சங்கரா, என்ன இது... எதுக்கு இப்படி மசமசன்னு உக்காந்துண்டுருக்கே?''

''ஒண்ணுமில்லை பாட்டி...''

''ஒண்ணுமில்லையா... அப்போ சட்டுன்னு கிளம்பு. ஆத்துல பாலே இல்லை. ஒரு அஞ்சாறு லிட்டராவது இன்னிக்குத் தேவைப்படும். நம்ப அய்யன் கோனாரைப் பார்த்து வாங்கிண்டு வா. எவ்வளவு ஜோலி இருக்கு... உக்காந்துண்டு என்னமோ தீவிரமா யோசிச்சிண்டிருந்தா என்ன அர்த்தம்?''

பாட்டி தள்ளிவிட்டாள். அவனும் அரைமனதாக காரியங்களில் இறங்கத் தொடங்கினான். பட்டரும் சந்தி முடித்துவிட்டு வந்தவர்,

''சங்கரா, ஒரு முக்கியமான விஷயம்...'' என்றார்.

''என்னப்பா...?''

''யாரைக் கூப்பிடலைன்னாலும் சுந்தராம்பாளைக் கூப்பிடலைன்னா நன்னா இருக்காது. ஓடிப்போய் ஒரு வார்த்தை சொல்லிட்டு வந்துடுறியா?''

''அதுக்கென்னப்பா...!''

சங்கரன் அடுத்த சில நிமிடங்களில் சட்டையை மாட்டிக் கொண்டு கிளம்பிவிட்டான்.

**வீ**ட்டுத் திண்ணையில் நாதஸ்வரப் பயிற்சியில் இருந்தார் கல்யாணசுந்தரம். பஞ்சாயத்து அலுவலகத்தில் இருந்து சீஃப்க்ளார்க்கும் வி.ஏ.ஓ.வும் வந்து எதிரில் நின்றனர்.

''வாங்கய்யா... என்ன காலைலயே...?''

''இப்ப வந்தாதானே உங்களைப் பிடிச்சு மனசு விட்டுப் பேச முடியுது.''

''என்ன விசயம்?''

''எம்.எல்.ஏ. நிதியில இருந்து நம்ம ஊர் கோவில் தெருவுக்கு ரோடு போட நிதி ஒதுக்கியாச்சாம்.''

''ரொம்ப சந்தோஷம்...''

''அப்படியே பீஸான பல்புங்களை எல்லாம் மாத்தி புது கனெக்ஷன் ஒரு நாலும் கொடுத்துடலாமனு E.B.யில இருந்து தகவல் வந்துச்சு.''

''மொதச் செய்யுங்க. தா... என் வீட்டு முன்னால உள்ள கம்பத்துலயே விளக்கு எரியல.''

''எல்லாம் இன்னிக்குச் சரியாயிடும். அப்புறம் சுதந்திர தினம் வருது. ஊர்க்கூட்டம் போடணும். பிரசிடென்ட்டுங்கற முறைல உங்க கவனத்துக்குக் கொண்டுவந்துட்டோம்....''

''அதுக்கென்ன... நம்ம பஞ்சாயத்து ஸ்வீப்பர் சிலுவையை விட்டுத் தமுக்கு போடச் சொல்லிடுங்க! மேற்கொண்டு என்ன செய்யணுமோ செய்துடலாம்.''

''அப்ப நாங்க உத்தரவு வாங்கிக்கறோம்....''

அவர்கள் நகர்ந்த ஐந்தாவது நிமிடம் அவரது வலதுகையான தாண்டவன் யாரோ இரண்டு பேருடன் வந்து நின்றான்.

நாதஸ்வர சீவாளியை வாயில் வைத்து 'ப்பீ... ப்பீ' என்று இரண்டு ஊதுகூட ஊதியிருக்கமாட்டார். நாதஸ்வரத்தை விலக்கியபடி தாண்டவனையும் வந்தவர்களையும் பார்த்தார்.

''அண்ணே... இவங்க பத்திரிகைக்காரங்களாம். நம்ப ஊரைப் பத்தி கேள்விப்பட்டு வந்திருக்குறாங்க...''

அவர்களும் கல்யாணசுந்தரத்தைப் பார்த்து வணக்கம் கூறினர்.

''வணக்கம்.''

''வணக்கம்... நீங்க?''

''நாங்க சென்னைல இருந்து வர்றோம். பிரபல பத்திரிகையான 'திருமகள்' பத்திரிகைக்காக வந்திருக்கோம்.''

''ரொம்ப சந்தோஷம். நான் அதுக்கு என்ன செய்யணும்?''

''நீங்கதானே இந்த ஊர் பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்ட்?''

''ஆமாம்... ஆனா எனக்கு அதுல பெருமை இல்லை. தோடீஸ்வரன் கோயில் ஆஸ்தான நாதஸ்வர வித்வான்கறதுலதான் எனக்குப் பெருமை.''

''ரொம்ப மகிழ்ச்சி. இந்த ஊரைப்பத்தி பலவிதமா கேள்விப்பட்டோம். ரொம்ப இசைச் சிறப்பு வாய்ந்த ஊர்... அப்புறம் எப்பேர்ப்பட்ட இசைக்கலைஞரும் இந்த ஊருக்கு வந்து தோடீஸ்வரனை வணங்காம கச்சேரிக்குப் போகமாட்டாங் கன்னுல்லாமும் கேள்விப்பட்டோம்.''

''ஆமாம். அதுதான் புராணவரலாறு. இப்பவும் இந்த ஊர்ல வீட்டுக்கு வீடு சங்கீதத்துல ஊறினவங்க இருக்காங்கன்னா பார்த்துக்குங்களேன்.''

''இந்த ஊர்ல அடிக்கடி வீணை இசை கேட்கும். அதுவும் ஊர் முழுவதும் கேட்கும்னும் சொன்னாங்க. எப்படி?''

''அது தெரிஞ்சாதான் நான் கடவுளாயிடுவேனே...''

''புரியலை... நீங்க என்ன சொல்லவர்றீங்க...''

''கடவுளுக்குத்தான் அதுக்குக் காரணம் தெரியும்னு சொல்ல வந்தேன்.''

''அது எப்படி இந்த ஹைடெக் யுகத்துல ஒரு வாத்தியக் கருவி சப்தம் ஊர் முழுக்கக் கேக்குதுன்னு யாரும் ஆராய்ச்சி பண்ணலியா?''

''ஏன்... எல்லாரும் நல்லா இருக்கறது உங்களுக்குப் பிடிக்கலியா?''

''அப்ப அதைப்பத்தி தெரிஞ்சுக்க முயற்சி செய்தா ஆபத்துங்கறீங்க்ளா?''

''அப்படி இல்ல... ஒரு விஷயம் நல்லா இருக்கும். அதை ஆராய்ச்சிங்கற பேர்ல கெடுத்துக்க விரும்பலை...''

''இந்த ஊர்லதானே பிரபல கர்நாடக இசைப்பாடகி சுந்தராம்பாள் இருக்காங்க...''

அவர்கள் சுந்தராம்பாள் பெயரைச் சொல்லவும் கல்யாண சுந்தரத்திடம் சுருதி இறங்கத் தொடங்கியது.

மௌனமாக ஆமோதித்தார்.

''அவங்களாலதான் இந்த ஊர் இவ்வளவு சிறப்பா இருக்குன்னும் ஒரு கருத்து இருக்கே?''

அந்தக் கேள்விக்கும் மௌனமாகவே இருந்தார்.

''ஒரு தாசி குலத்துல வந்தவங்க கடவுளுக்குச் சமமா மதிக்கப்பட காரணம் என்னன்னு நீங்க நினைக்கறீங்க. .?''

கல்யாணசுந்தரத்துக்குள் மெல்ல எரிச்சல் பீறிட ஆரம்பித்தது. இதற்குள் போட்டோகிராபர் கல்யாணசுந்தரத்தை புகைப்படம் எடுக்கத் தயாரானார். கல்யாணசுந்தரமும் அவரைப் பார்த்து ''உங்க அட்டைப்படத்துல என் போட்டோ வரும்தானே?'' என்று பேச்சை மாற்றுகிற விதமாகவும் அதே சமயம் மிக ஆவலாகவும் கேட்டார்.

அந்த போட்டோகிராபர் பேட்டி காண்பவரைப் பார்க்க- அவர் முகத்தில் தர்மசங்கடம்.

''என்ன... பதிலே காணோம்?''

''இல்ல... இந்த இதழ் அட்டைல சுந்தராம்பா படம்னு ஆபீஸ்ல தீர்மானிச்சுட்டாங்க.''

அவரின் பதில் கல்யாணசுந்தரத்தை அறைந்த மாதிரி ஆக்கிவிட்டது. முகம் மாறிப்போனது... தாண்டவன் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று எதிர்பார்க்க அதுவும் நிகழ ஆரம்பித்தது.

''அப்ப நீங்க அந்த சுந்தராம்பாளைப் பார்த்து அவகிட்டயே இந்த ஊர் பத்தியும் மத்த எல்லா விஷயம் பத்தியும் கேட்டுத் தெரிஞ்சுக்குங்க. நீங்க என்னைப் பேட்டி கண்டு கிழிச்சதெல்லாம் போதும். புறப்படுங்க'' என்றார் படுஆவேசமாக.

அவர்கள் இருவரும் ஆடிப்போய்விட்டனர்.

தாண்டவன் சைகை கொடுத்து 'போய்விடுங்கள்' என்றான். அவர்களும் மெல்ல நழுவினர்.

அவ்வளவையும் அவர் மனைவி ரங்காயியும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவரை நோக்கி வந்தவள் ''உங்க வாயாலையே எதுக்கு இப்படிக் கெடுத்துக்கறீங்க?'' என்று ஆரம்பித்தாள்.

''என்னடி சொல்றே?''

''என்னத்தச் சொல்ல... சுந்தராம்பா பத்தி கேட்டதுக்கு நீங்க இப்படிக் கோவப்பட்டது அதிகம். உங்க பொறாமை பளிச்சின்னு தெரிஞ்சுபோச்சு.''

''தெரிஞ்சா தெரிஞ்சுட்டுப் போகுது போடி அந்த அல்லிராணிக்கு நீ ஒண்ணும் வக்காலத்து வாங்காதே.''

''தப்புங்க... அவங்க நிஜமாலுமே இந்த ஊருக்குத் தெய்வம். உங்களுக்குத்தான் 'ஒரு பொட்டச்சியால நமக்கு மதிப்பு இல்லாம போகுதே'ங்கற புழுக்கம்.''

''ஆமாண்டி.... ஆமாம்... இப்ப என்னடி அதுக்கு?''

கல்யாணசுந்தரம் பயங்கரமாக சீற, ரங்காயி இனி பேசுவதில் பிரயோஜனமில்லை என்பதுபோல் கண்ணீருடன் திரும்பிச் சென்றாள். பார்த்துக்கொண்டேயிருந்த தாண்டவனும் ''ஐயா, அவசரப்பட்டுட்டீங்க...'' என்று ஆரம்பித்தான். கல்யாணசுந்தரம் பதிலுக்கு ஒரு முறைதான் முறைத்தார். தாண்டவன் அடுத்த நொடியே அங்கிருந்து விலகத்தொடங்கினான்.

''வாப்பா...''

சுந்தராம்பாள்தான் அழைத்தாள். அவள் அழைத்தது சங்கரனை... கைவசம் பூ, பழம் என்று தடபுடலாக அவளைப் பார்த்தவன் நிதானமாக அவளை நோக்கி நீட்டினான்.

''என்ன இது புதுப்பழக்கம்....?''

''இல்ல... ஆத்துல ஒரு விசேஷம். அதான் அப்பா பூ, பழத்தோட போய் பார்த்துட்டுவான்னு அனுப்பினா.''

''என்ன விசேஷம்...? உக்காரு...''

அவன் உட்காராமல் தொடர்ந்தான்.

''மைதிலியை பொண்ணு பார்க்க வரப்போறா...''

அடுத்த நொடியே சுந்தராம்பாள் முகம் மெர்க்குரி விளக்காட்டம் மாறியது.

''ரொம்ப சந்தோஷம்... யார் மாப்ளை?'' என்றாள். அதே சமயம் சுந்தராம்பாளின் அம்மாவான கனகவல்லியும் வந்து அதைக் கேட்டு மகிழ்ச்சியை முகத்தில் காட்டினாள்.

''மாப்ளை பேர் சுந்தர்ராமன்... அரபுநாட்டுல பேங்க் வேலைல இருக்கார். தில்லைஸ்தானம் சொந்த ஊர்.''

''மைதிலி பத்தி...''

''தெரிஞ்சுதான் வரா... நல்ல குடும்பப்பாங்கான பொண்ணுதான் வேணும்கறது மாப்பிள்ளை வீட்டோட எதிர்பார்ப்பு. 25 பவுன் நகை மட்டும் டிமாண்ட் பண்ணா. அதுக்கும் ஏற்பாடு பண்ணியாச்சு...''

''ரொம்ப சந்தோஷம்... நான் கட்டாயம் வந்துடறேன். எல்லாம் நல்லபடியா நடக்கும். நீ எதுக்கும் கவலைப்படாதே. மைதிலி எனக்கும் பொண்ணுமாதிரி. அவ அம்மா இடத்துல நான் இருக்கேன்னு அவகிட்ட சொல்லு.''

மிக உற்சாகமாகப் பேசினாள் சுந்தராம்பாள். குளித்து பூஜை எல்லாம் முடித்திருந்தாள். எனவே பார்ப்பதற்கு மிக ரம்யமாக இருந்தது அவள் முகம். சங்கரனுக்கும் அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும் போல இருந்தது.

''ஆமா எத்தனை மணிக்கு.... மாப்ளை வீட்ல வர்றாங்க?''

அவள் அடுத்து கேட்டது அவன் காதிலேயே விழவில்லை. அவன் ஒருவித பிரமிப்பிலேயே இருந்தான்.

''சங்கரா... உன்னைத்தான்...!''

''அம்மா...''

''மாப்ளை வீட்ல எப்ப வராங்க?''

''ம... மத்யானம்மா...''

''இரு... வந்துடறேன்...'' அவள் அவன் கொண்டு வந்திருந்த பூ, பழத்தட்டுடன் திரும்பி உள்ளே செல்ல முயலும்போது சங்கரனுக்கு உபாசகர் சொன்னது ஞாபகம் வந்தது.

''அம்மா'' என்று அழைத்து அவளைத் திருப்பினான்.

''என்னப்பா?'' - அவளும் திரும்பினாள்.

''அது வந்தும்மா...''

''எது வந்து... சும்மா தயங்காமப் பேசு.''

''உங்ககிட்ட பர்சனலா ஒரு விஷயம் சொல்லணும்னு...''

''சொல்லு...''

''இந்த ஊருக்குப் புதுசா ஒரு உபாசகர் வந்திருக்கார்.... நீங்களும் கேள்விப்பட்ருப்பேள்...''

''அவர் இந்த கல்யாணம் பத்தி எதாவது சொன்னாராக்கும்?''

சுந்தராம்பாள் நச்சென்று மடக்கியது சங்கரனைத் திணற அடித்தது...

''அ... அ... ஆமாம்மா...''

''என்னன்னு சொன்னார்?''

''தலைகீழா நின்னாலும் இந்த இடம் குதிராதுன்னு சொன்னார்...''

சுந்தராம்பாளே ஒரு வினாடி அந்த பதிலால் ஸ்தம்பித்துத் தான் போனாள்.

''இருந்தாலும் உங்க ஆசீர்வாதத்தால எல்லாம் நல்லபடியா நடந்து முடியும்னுதான் எல்லா ஏற்பாடும் பண்ணிண்டு இருக்கேன்... அப்பாகிட்டகூட இது பத்தி பேசலை...''

சுந்தராம்பாள் அதற்குமேல் அவனிடம் கேள்வி எதையும் கேட்கவில்லை. ஒரு சிரிப்பு மட்டும் சிரித்தாள். அது 'என்னைப் போய் நம்புகிறாயே' என்கிற மாதிரியும் இருந்தது... 'அவர் என்ன கடவுளா... சொன்னால் சொன்னபடி நடக்க?' என்று கேட்கிற மாதிரியும் இருந்தது.

அப்படியே புன்னகை மாறாமல் உள்ளே சென்றாள்.

பிரோவைத் திறந்தாள். பிரோவில் வரிசையாய் பட்டுப் புடவைகள். இன்னொரு புறத்தில் நகை டப்பாக்கள். அவைகளில் புதிய பட்டுப்புடவை ஒன்றை வெளியே எடுத்தாள். வெள்ளித் தட்டும் உள்ளிருந்தது. அதையும் எடுத்தாள். நகைகளில் காசு மாலையும் நெக்லசும் பளிச்சென்று தெரிந்தது. இரண்டையும் அப்படியே வெளிஎடுத்தவள் வெள்ளித்தட்டில் அவைகளை வைத்தாள். அதை அப்படியே எடுத்து வந்து''என் ஆசீர்வாதப் பரிசு'' என்று சொல்லிக் கொடுக்க வேண்டியதுதான் பாக்கி - அந்த வீட்டையே வளைய வளைய வரும கறுப்புப்பூனை பீரோ மேல் அமர்ந்திருந்து 'மியாவ்' என்றது. நிமிர்ந்து பார்த்தாள். அதுவும் தன் அரக்கு நிற விழிகளால் அவளை வெறித்தது... தட்டுடன் நடக்க ஆரம்பித்தவளை தடுப்பது போல் தட்டின்மேல் சீறிப்பாய்ந்தது. தட்டு கீழே விழுந்து புடவையும் நகையும் சிதறியது.

சப்தம் கிழவி கனகவல்லியையும் உள்ளே இழுத்து வந்தது. அவள் பார்வையில் மிரட்சி.

''சுந்தரம்... என்ன இது அபசகுனமாட்டம்...?''

''அபசகுனமே... இருந்தாலும் எதையும் காட்டிக்காதே...''

திரும்பவும் புடவை, நகையை எடுத்து சீராக வைத்துக் கொண்டு அறையைவிட்டு வெளியே வந்தாள். சங்கரனை நோக்கி நீட்டினாள்.

''அம்மா... என்ன இதெல்லாம்?''

''இந்த அம்மா தர்ற பரிசுப்பா...''

''இருந்தாலும் இது ரொம்ப அதிகம். எங்ககிட்ட தேவைக்கு இருக்கு.''

''பரவாயில்ல. பிடி...''

அவள் திணிக்க, அவனும் வாங்கிக்கொண்டான். பூனை மட்டும் இடையில் 'மியாவ்' என்றது.




## அன்று

**அ**ந்தக் காபாலிகன் பார்த்துக்கொண்டிருக்க ஜோதிடர் வீரேந்திரனோடு ஒரு மரத்தடிக்குச் சென்றார். அது ஒரு எட்டி மரம். சுடுகாடு என்பதனால் அதை யாரும் வெட்டவில்லை. அருகிலேயே காவிரி பாய்ந்து கொண்டிருந்ததால் அது பூதாகரமாக தழைத்து வளர்ந்துமிருந்தது.

வீரேந்திரனிடம் அங்கே நின்றுகொண்டு ஜோதிடர் பேசமுயன்றார். ஆனால் அவனோ மதுவின் போதையில் இருந்ததால் முதலில் அதைத் தெளிவிப்பது அவசியம் என்று தோன்றியது.

அதற்கு ஒரே வழிதான்... அருகில் நூறடி தொலைவில் காவிரியின் மணல் வெளி தெரிந்தது. மயானத்திற்கு வருபவர்கள் தீட்டுக்கழிக்க குளிக்கும் ஸ்நானக் கட்டம் ஒன்று அந்த கரைவெளியில் குளம் போல் உருவாக்கப்பட்டிருந்தது.

அதைப் பார்த்தவர் அவனை அங்கே அழைத்துச் செல்லத் தொடங்கினார். ஒளிந்தபடி கவனித்துக் கொண்டிருந்த காபாலிகனும் அவரைப் பின்தொடர்ந்தான். பதட்டத்துடன் காபாலிகன் நடந்ததால் காலடியில் கிடந்த பாடைச்சருகுகள், விறகுத்துண்டுகள் எழுப்பும் சப்தம் பற்றி அவன் முன்னமே உணரவில்லை. அது ஜோதிடர் காதிலும் விழுந்தது. அவருக்குப் புரிந்துவிட்டது - யாரோ பின்தொடர்கிறார்கள் என்று!

'யாராக இருக்கும்?

ஒருவேளை என்னையும் வீரேந்திரனையும் நவக்கிரக மாளிகைக்குள் அனுமதிக்க மறுத்த துர்காராம் வேலையாக இருக்குமோ?'

சந்தேகத்துடன் திரும்பிப் பார்த்தார் ஜோதிடர். அந்தக் காபாலிகனும் அவர் திரும்பிப் பார்ப்பதை வைத்து சட்டென்று ஒரு மரத்தின் பின்னால் ஒளிந்துகொண்டான். மயானத்தில் ஆளரவமற்ற சூழலே அவர் கண்ணில் பட்டு மின்னியது.

தொடர்ந்து வீரேந்திரனுடன் நடந்தவர் ஸ்நான கட்டத்தை நெருங்கினார். அதற்குள் அந்தக் காபாலிகன் பின்தொடர்ந்து வந்து அருகில் உள்ள மரம் ஒன்றின்மேல் வேகமாக ஏறி கிளை ஒன்றின்மேல் வசதியாக அமர்ந்துகொண்டான்.

அங்கிருந்தபடியே ஜோதிடர் வீரேந்திரனை என்ன செய்யப் போகிறார் என்று பார்க்கத் தொடங்கினான். ஜோதிடர் வீரேந்திரனுடன் ஸ்நான கட்டத்தைத் தொட்டு நின்றார். அவர் காலடியில் கணுக்காலளவு தண்ணீர். தொடர்ந்து உள்ளிறங்கினால் ஒரு மனிதன் மூழ்கலாம். அந்த அளவுக்குத் தண்ணீர். புதிய காவிரி நீர்... ஸ்படிகம் போல் இருந்தது. கண்ணாடி போல அது தனக்கு மேலே உள்ள சகலத்தையும் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. அது மரக்கிளையில் ஒளிந்துகொண்டு கழுத்தில் கபாலமாலையுடன் எட்டிப் பார்க்கும் கோர முகம் கொண்ட அந்தக் காபாலிகனையும் காட்டியது.

ஜோதிடருக்கு ஒரு வினாடி நெஞ்சத்துடிப்பே நின்று போனது. பின்தொடர்ந்து வந்தவன் ஒரு காபாலிகன் என்பதை அவரால் ஜீரணிக்கவே முடியவில்லை.

காபாலிகர்கள் முற்றிலும் ஒழிந்துவிட்டார்கள் என்று எண்ணிக்கொண்டிருப்பது எவ்வளவு தவறு என்றுகூட அந்த நொடியில் அவருக்குத் தோன்றியது.

ஒரு சில வினாடிகள் இப்படிப்பட்ட எண்ணங்களால் அவர் ஸ்தம்பித்தாலும் அவரது புத்திசாலித்தனமான கணக்கிடும் முறை வெகுவேகமாய் வேலை செய்யத் தொடங்கியது.

குனிந்து வீரேந்திரன் மேல் தண்ணீரை வாரித் தெளித்தார். அதே வேளையில் அவனும் சிலுசிலுப்பு தாளாமல் தண்ணீருக்குள் விழுந்தான். மெல்ல அவனை ஆக்ரமித்திருந்த கள்ளின் போதையும் அவன் உடம்பில் வற்ற ஆரம்பித்தது. முகத்தில் வடிந்த நீரை வழித்துக்கொண்டே ''யார் நீங்கள்?'' என்று கேட்டான்.

''முதலில் கரைக்கு வா... பிறகு சொல்கிறேன்.'' என்று அவர் அவனோடு கரை ஏறினார். அவனும் அவரோடு ஏறினான். ஆடை எல்லாம் ஈரம். உடம்பு லேசாக ஆற்றோரத்து காற்றால் நடுங்கியது. தூரத்தில் எரியும் பிணம் ஒன்றின் தீ ஜ்வாலைகள் அவன் நடுக்கத்திற்கு மருந்தாகும் போலத் தோன்றியது. உடனே அந்த எரியும் பிணத்தைப் பார்த்தபடியே நடக்கத் தொடங்கினான் அவனும்.

''நில்.'' ஜோதிடர் தடுத்தார்.

''என்னை எதற்குத் தடுக்கிறீர்கள்...? நீங்கள் யார்?'' என்று திரும்பவும் கேட்டான்.

''நான் ஒரு ஜோதிடன்... வங்காள தேசத்து ஜோதிடன். இன்று உங்கள் தஞ்சை அரசரின் ஜாதகப் பரிகாரம் ஒன்றினுக்காக இந்த தோடிபுரம் வந்திருப்பவன்...''

வீரேந்திரன் போதை தெளிந்த நிலையில் அவர் பேச்சை நன்கு கவனித்துக் கேட்டான்.

''என்ன பார்க்கிறாய்? எனக்கு சாமுத்ரிகா லட்சணமும் தெரியும். அதை வைத்தே உன் எதிர்காலம் எப்படி இருக்கும் என்று கூறிவிடுவேன்.'' அவர் சொல்வது அந்த காபாலிகன் காதிலும் விழுந்தபடி இருந்தது.

வீரேந்திரனும் ஆவலோடு நெருங்கி வந்து நின்றான். ஓரளவு ஈரம் அவன் உடலில் காய்ந்தும் விட்டிருந்தது.

''உங்கள் பெயர்?'' - கையைக் கட்டிக்கொண்டு மிடுக்காகக் கேட்டான்.

''எனது பெயர் சோமநாத சட்டர்ஜி..

''வேடிக்கையான பெயராக இருக்கிறதே...?''

''வங்காளிகள் அப்படித்தான்... போகட்டும். உன்னை நான் எதற்குச் சந்தித்திருக்கிறேன் என்று தெரியுமா...?''

''சொன்னால்தானே தெரியும்?''

''ஒரு வேசி மகனாய் நீ இருந்தாலும் ராஜயோகங்கள் உனக்குக் காத்திருக்கின்றன...''

''அப்படியா?'' சாதாரணமாகத்தான் கேட்டான் வீரேந்திரன்.

''நான் சொல்வதை உன்னால் நம்பமுடியவில்லையல்லவா? போகட்டும். உனது உடம்பு பற்றிய சில ரகசியங்களைக் கூறுகிறேன். பிறகு தெரியும் உனக்கு நான் யாரென்று...''

''அதுவும் சரிதான்... எங்கே கூறுங்கள் பார்க்கலாம்?''

''உனது வலதுதொடையில் லிங்கத்தை ஒட்டி ஒரு மிளகு அளவுக்கு மச்சம் ஒன்று இருக்கவேண்டுமே?'' அவர் கேட்க அவன் ஒப்புக்கொள்வதை அவருக்கு உணர்த்திவிட்டது.

''உன் முதுகு, இடதுபுட்டம், வலது உள்பாதம், வலது கட்கம் இங்கெல்லாமும் மச்சங்கள் இருக்குமே?'' அவன் அயர்ந்துவிட்டான்.

''உண்மை... உண்மையிலும் உண்மை'' என்றான் படுபரவசமாக.

''இனி நான் சொல்வதை நம்புவாயா?''

''நிச்சயமாக...!''

''இது சுடுகாடு. இங்கே ஜோதிடப் பலன்கள் கூறுவது உகந்தது அல்ல. எனவே இன்று இரவு நவக் கிரகமாளிகைமுன் வா. அப்படியே காவிரிக்கரை ஓரமாக உன்னை அழைத்துச் சென்று உன்னைப் பற்றிய அவ்வளவு செய்திகளையும் கூறிவிடுகிறேன்.''

''நிச்சயமாக...?''

''இதில் எதற்கு அவநம்பிக்கை? ஆனால் ஒன்று...''

''என்ன?''

''நீ இனி மது அருந்தக்கூடாது. குறிப்பாக என்னைச் சந்திக்கும் வரை மது, மாது இரண்டையும் தீண்டக்கூடாது.''

''காரணம்?''

''நான் காளிமாதா அருள் பெற்ற சோதிடன். அவள் கருணையை ஒழுக்கமில்லாதவர்க்குப் பயன்படுத்துவது என் வரையில் பாவம்.''

''சரி... உங்களுக்காக அவ்வாறே இருக்கிறேன்.''

''இன்னொரு விஷயமும் உண்டு.''

''என்ன?''

''உன் ராசிப்படி நீ ராஜயோகியாகி - அதோ, அங்கே காட்சி தருகிறதே நவக்கிரகமாளிகை... அதற்கேகூட அதிபதியாகலாம்... அதுபோல நல்லது உன் வரையில் நடக்கும்பட்சத்தில் குரு தட்சணையாக நீ நான் கேட்பதைத் தரவேண்டும்.''

''தாராளமாக. நீங்கள் சொன்னபடி நான் ராஜயோகியாகி விட்டால் தங்களைத் தங்கத்தாலேயே குளிப்பாட்டுகிறேன். போதுமா?''

''தங்கமெல்லாம் வேண்டாம். ஒரு சாதாரண இசைக் கருவியைத்தான் நான் கேட்பேன். தருவாயா?''

''அவ்வளவுதானே? தந்துவிட்டால் தீர்ந்தது...''

வீரேந்திரன் விபரீதம் ஒன்றைப் பற்றி உணராமல் சாதாரணமாகப் பேசியது அந்த ஜோதிடர் முகத்தில் ஒரு அர்த்த புஷ்டியான புன்னைகயைத் தோற்றுவித்துது. அதை ஒளிந்தபடி கேட்டுக்கொண்டிருந்த காபாலிகன் முகத்திலோ சொல்ல முடியாத அளவுக்குக் கோபம்!

தோடிபுரத்திற்கு வெளியேயான சாலைமேல் புழுதி பறக்க ஒரு புரவிக்கூட்டம்...

முன்னம் பின்னுமாய் பதினெட்டுப் புரவிகள். நடுமையில் ஒரு அளவில் பெரிய சாரட். அதன் தலைப் பாகத்தில் காவிக்கொடி ஒன்று முக்கோணவடிவில் பறந்தபடி இருக்க- அதைப் பார்த்த மாத்திரத்தில் மராத்திய ராஜ்யாதிபதி யாரோ ஒருவர்தான் வருகிறார் என்பது விளங்கிவிட்டது.

தோடிபுரம் நகருக்குள் அந்த சாரட் நுழையுவும் அனைவருக்கும் தெரிந்துவிட்டது. எல்லையில் காவலுக்கு நின்று கொண்டிருந்த காவல்வீரர்களோ, சாரட் தங்களை கடக்குமுன் கட்டியக் குரல் எழுப்பத் தொடங்கினார்கள்.

'ராஜாதிராஜ...

ராஜ குலதிலக

மராத்திய ராஜ்யப்பிரதானி

மகாமந்திரி மகாதேவராவ் பராக்...!'

கட்டியக்குரலைத் தொடர்ந்து மகாதேவராவ் என்னும் அந்த ராஜ்யப்பிரதானி திரைச்சீலையை விலக்கி எட்டி வெளியே பார்த்தார்.

எழிலார்ந்த தோடிபுரம் கண்ணில் பட்டது.

பசுமைப் பூரிப்பு நன்கு தெரிந்தது.

சாரட்டும் ஊருக்குள் நுழைந்து அப்படியே காவிரிப் படுகையை அடைந்து, கரை வழிச் சாலை வழியாக ஓடி நவக்கிரக மாளிகையை அடைந்தது. உற்சாகமாக ஓடிவந்து வரவேற்றான் துர்காராம்.

''வரவேண்டும்... வரவேண்டும்! மகாமந்திரி மகாதேவராவ்ஜி அவர்கள் வரவேண்டும்...!''

''துர்காராம்... எப்படி இருக்கிறாய்?''

''நன்றாய் இருக்கிறேன் ஜீ.''

''நவக்கிரக ஹோமம் நன்கு நடைபெற்றதா?''

''அதை நீங்கள் அந்த ஜோதிடரிடம்தான் கேட்கவேண்டும்.''

துர்கா சற்றே சலிப்புடன் சொல்லும்போதே பட்டுக்கச்சம் சரசரக்க ஜோதிடர் எதிரில் வந்து ''மகாமந்திரிக்கு அடியேன் சோமநாதனின் பணிவான நமஸ்காரங்கள்'' என்றார்.

''நமஸ்காரம்... நமஸ்காரம்...''

''பயணத்தில் ஏதும் இடர்பாடில்லையே...?''

''ஹூம். இங்கிருந்து இருபது கல் தொலைவில் தஞ்சை. இதில் என்ன இடைஞ்சல் வந்துவிடப் போகிறது. வங்காளத்தில் இருந்து ஆயிரமாயிரம் கல் தொலைவுகள் கடந்தா நான் வருகிறேன்?''

''அதுவும் உண்மைதான். வாருங்கள்... உள்ளே சென்று அமர்ந்து பேசுவோம்...''

''பேச்செல்லாம் பிறகு... முதலில் நான் நன்கு இளைப் பாறவேண்டும். அப்படியே கிரகப்புனலில் நீராடவும் வேண்டும்.''

''பேஷாக... பேஷாக...''

ஜோதிடர் ஒதுங்கிக்கொள்ள துர்காராமை மகாமந்திரி அழைத்துக் காதைக் கடித்தார். அவனும் உடனே வேகமாக ஒரு புரவிமீது ஏறி வெளியேறத் தொடங்கினான். அதைக் கவனித்தபடி இருந்த ஜோதிடர் முகத்தில் சலன ரேகைகள்.!

**து**ர்காராமின் புரவி தாசி அபராஜிதவைஜெயந்தியின் இல்லம் முன் நின்றது. தலைப்பாகை, வலக்கையில் மராத்திய முத்திரைக்கச்சு என்று அதிகார அரசுதோரணையோடு இறங்கியவனைப் பார்த்துவிட்டு ஓடிவந்தாள் மாலி.

''வாருங்கள்... வாருங்கள்...!''

''எப்படி இருக்கிறாய் மாலி?''

''ஆஹா... எனக்கென்ன! தங்களைப் போன்ற பிரபு தனவான்களின் தயவும் கடாட்சமும்தான் எனக்கு எப்பொழுதும் உண்டே.''

''தாசிகளுக்குப் பேசவா சொல்லித் தரவேண்டும்? போகட்டும்... யார் இன்று உன் இல்லத்திற்கு வரப்போவது தெரியுமா?''

''யார்...?''

''மகர்மந்திரி மகாதேவராவ்.''

''ஆ... நிஜமாகவா?''

''வாயைப் பிளக்காதே. இந்த முறை உன் இளையமகள்தான் அவர்முன் நாட்டியமாட வேண்டும். இது என் ஆசை.''

''எனக்கும்கூட ஆசைதான். ஆனால் அவளோ கேட்க மாட்டேன் என்கிறாளே...''

''எல்லாம் கேட்பாள். மகாமந்திரி மகாதேவராவுக்கு இன்னமும் திருமணமே ஆகவில்லை. அதை உன் மகளிடம் கூறு.''

''அப்படியா... அவர் ஒரு மாப்பிள்ளை புருஷரா? இது தெரியாமல் போய்விட்டதே... நீங்கள் சென்று அவருடன் வாருங்கள். அபராஜிதா இன்று அவர்முன் ஆடுவாள். ஆடியே தீருவாள்...!''

மாலி உறுதிகூற துர்காராமும் அந்த வீட்டில் இருந்து வேகமாகக் கிளம்பினான். பார்த்துக்கொண்டேயிருந்த மாணிக்கவல்லியின் கண்களில் நீர்.

செய்தி உள்ளே அறை ஒன்றில் அமர்ந்து கைகளுக்கு மருதாணிக் கோலமிட்டுக் கொண்டிருந்த வைஜெயந்தியின் காதுகளை அடையவும் அவள் முகம் மாறிப்போனது. மனதில் தாறுமாறான குழப்பங்கள்.

மாணிக்கவல்லியிடம் வந்தவள் -

''பாட்டி...! எனக்கு இப்படி ஆடவர் முன்னால் ஆடவே பிடிக்கமாட்டேன் என்கிறது. என் மனமெல்லாம் ஆடம்பர வாழ்க்கையிலேயே இல்லை.'' என்றாள்.

''எனக்கும் புரிகிறது. நீ மகாமந்திரியைத் தவிர்ப்பது என்பது அசாத்யம். அது பிறகு ராஜகுற்றமாகி நம்மை பாதித்துவிடும். இந்த

விஷயத்தில் பாபாவிடம் உதவி கேள். அவரால் உனக்கு உதவ முடியும் என்று தோன்றுகிறது.''

மாணிக்கவல்லி அழகாக எடுத்துக் கொடுத்தாள். அபராஜித வைஜெயந்தி முகத்திலும் ஒரு ஒளி!

மயானத்தில் வீரேந்திரனை மொத்த காபாலிகர்களும் சுற்றி வளைத்துக் கொண்டிருந்தார்கள்.

''அந்த ஜோதிடன் ஒரு ஏமாற்றுக்காரன். சாமுத்ரிகா லட்சணம் அது இது என்பதெல்லாம் பொய். அவன் பேச்சைக் கேட்காதே...!''

ஒரு காபாலிகன் வலியுறுத்தினான்.

''ஆமாம்... நிமித்திகம் என்பதெல்லாம் இடைக்காலக் கண்டுபிடிப்புகள். உண்மையில் தாந்திரீக நிமித்திகமெல்லாம் தேவையே இல்லை... உனக்கே உனக்குள் முக்காலமும் தெரியத் தொடங்கிவிடும்.''

''எப்படி?''

''கேள்வியாகக் கேட்காதே. வா... வந்து அனுபவி. தானாகப் புரியும்.''

அவர்கள் அவனைத் தள்ளிக்கொண்டு சென்றார்கள்.

மண்டை ஓட்டில் கள்ளையும் அதற்கும் மேலான மண்டையம் என்னும் மதுவையும் கலந்து அவன்முன் நீட்டினார்கள். அவனும் ஜோதிடர் சொன்னதை மறந்து அதை ஆவலாகக் குடித்தான். போதை தலைக்கு ஏறத் தொடங்கியது. அப்பொழுது ஒரு காபாலிகன் அந்தக் கூட்டத்தின் தலைவனைப் போன்றவனிடம் சென்று ''இவனை விட்டுவிடாதீர்கள்... இவன் மூலமாக அந்த வங்காள ஜோதிடன் ருத்ரவீணையை அபகரிக்கத் திட்டம் போட்டிருக்கிறான்... அதை அந்த வங்காள தேசத்து ஜோதிடன் அடைய நாம் இடம் கொடுத்துவிடக்கூடாது. அது நம் வசம் வந்தாகவேண்டும்.'' என்றான். தலைமைக் காபாலிகனின் முகத்தில் அதன் நிமித்தம் ஒரு ஒளி பொருந்திய புன்னகை.

## இன்று

மைதிரிக்கு அலங்காரம் ஆரம்பமாகியிருந்தது. சுந்தராம்பாள் மகள் பானுவே அலங்காரம் செய்ய வந்திருந்தாள். தாசிகுலத்தில் வந்தவர்களுக்கு ஆடல்பாடல் என்கிற கலைகளோடு அழகுபடுத்துதல் என்பதும் கைவந்தகலை. அது பானுவின் கைகளில் பேசிக்கொண்டிருந்தது.

மைதிலி சற்று மாநிறம்தான். இருந்தும் அதில் ஒரு பொன்னிறப் பளபளப்பு பானுவால் உருவாகியிருந்தது. நடுநடுவே காயத்ரிவேறு எட்டிப்பார்த்துச் சீண்டிக்கொண்டேயிருந்தாள்.

சங்கரன் வெற்றிலை, பாக்கு, பழம் என்று மங்கலமான விஷயங்களை எல்லாம் வாங்க கடைக்குப் போயிருந்தான். பட்டரால் மட்டும் கோவில் பணியை விட்டுவிட்டு வர முடியவில்லை.

மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் மதியம் பன்னிரண்டு மணிவாக்கில்தான் வர இருப்பதாக தகவல் சொல்லப்பட்டிருந்தது.

எனவே பட்டர் கோயில் காரியத்தைக் கவனிக்கப் போய்விட்டிருந்தார்.

நடுநடுவே கோமாபாட்டி எட்டி எட்டிப் பார்த்து எல்லா விஷயங்களையும் முடுக்கிவிட்டுக்கொண்டிருந்தாள். அவள் வரையில் மைதிலியைத் தன் பெண்ணைப் போலவேதான் நினைத்தாள். ஒருவகையில் அதுதான் உண்மை. அவள் அப்படி நினைப்பதற்கான காரணத்தைச் சொல்லச் சரியாக இருபத்து நான்கு வருடங்கள் பின்னோக்கிப் போக வேண்டியிருக்கும்.

சுந்தராம்பாளும் மைதிலியின் அம்மா வேதாவும் ஒன்றாகவே கருவுற்றார்கள். நெருங்கிய தோழிகளுக்குள் இப்படியும் ஒரு ஒற்றுமை ஏற்படவும் ஊரே ஆச்சரியமாகத்தான் பார்த்தது. இதில் அடுத்ததும் ஒரு ஒற்றுமை அவர்களுக்குள் உண்டு. இருவருமே 148 பிரதோஷங்கள் ஒன்றாக விரதம் இறந்தவர்கள். சுந்தராம்பாள் தனக்கு ஒரு பெண்தான் பிறக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்ள, மைதிலியின் அம்மா வேதாவும் ஆஸ்திக்கு சங்கரன் பிறந்துவிட்ட நிலையில் ஆசைக்கு ஒரு பெண் தனக்குப் பிறக்க வேண்டும் என்கிற வேண்டுதலில் இருந்தாள்.

பொதுவில் எது குறித்துப் பிரதோஷவிரதம் இருக்கிறோமோ அது அப்படியே ஈடேறும் என்பது அந்த விரதகாலத்திற்கான சக்தி.

அது அப்படியே இருவர் விஷயத்திலும் பலித்தது.

இரண்டுபேருக்குமே ஒரே நாளில் அவர்கள் ஆசைப்பட்டது போல பெண்கள் வந்து பிறந்தார்கள். அவர்கள் பிறந்த நேரமும் பிரதோஷ வேளைதான். பானு மட்டும் சற்றுத் தள்ளிப் பிறந்தாள்.

இருவருக்கும் அப்படி ஒரு ஒற்றுமை...

அந்த ஒற்றுமை அவர்கள் பூப்பெய்துவதில்கூட தொடர்ந்தது இன்னொரு ஆச்சரியம்.

பானு பழசையெல்லாம் ஒரு முறை நினைத்துக்கொள்கிறாள். ஏதோ ஒருவித பூர்வஜென்ம பந்தம்தான் இப்படி இருவரையும் இணைத்தே கொண்டுசெல்வதாகவும் அவளுக்குள் ஒரு எண்ணம். ஆனால், சில விஷயங்களில் மட்டும் வித்தியாசப்பட்டுப் போனது ஏன் என்று விளங்கவில்லை. கோமாப்பாட்டிகூடக் கேட்டாள்.

''பானு... இரண்டுபேருக்கும் நாமகரணமுகூர்த்தம், புஷ்பமுகூர்த்தம்னு எல்லாமே ஒண்ணாவந்த மாதிரி கல்யாண முகூர்த்தமும் ஒண்ணாவரும்னு எதிர்பார்த்தோம். ஆனா இந்த விஷயத்துல மைதிலி உன்னை முந்திண்டு துபாய்க்கே போயிடப் போறா'' என்றபோது பானுவுக்கே சங்கடமாகத்தான் இருந்தது.

''எல்லா விஷயத்துலயும் மைதிலி என்னைவிடச் சிறப்பா இருக்கணும் பாட்டி. அதுதான் எனக்கு வேணும்'' என்றாள் பானு.

கோமாப்பாட்டி உடனே திருஷ்டி கழித்தாள். அப்படியே ''சரிசரி. இந்த அலங்காரக்கோலத்தோட அப்படியே கோவிலுக்குப்போய் ஸ்வாமிதரிசனம் பண்ணிட்டு வந்துடு. நடக்கப் போறது ஒரு நல்லகாரியம். அதுக்கு அந்தத் தோடீஸ்வரன் அனுக்ரகம் வேணுமோல்லியோ?''

கோமாப்பாட்டி சொன்னது பானுவுக்கும் சரி என்று தோன்றியது.

''என்னடி பண்ணலாம்?''

மைதிலியின் தலை ஆடியது.

''ஆனா நான் வரமாட்டேன்.''

பானுஅப்படிச் சொல்லவும் பாட்டி முகத்தில்கூட ஒரு வாட்டம்.

பானுவை 'நீ இப்படி இருக்கலாமா?' என்கிற மாதிரி பார்த்தாள்.

''பாட்டி... நீங்க எதனால இப்படிப் பாக்கறீங்கன்னு எனக்குத் தெரியும். என்னமோ தெரியல எனக்குக் கோவில், சாமின்னாலே கோவம் கோவமா வருது. என் அம்மாவும் பாட்டியும்தான் தினம் பூஜை பூஜைன்னு தாசிபங்களாவுக்குப் போறாங்களே... இதுல நான் வேற சேரணுமா என்ன? போறும் பாட்டி... ஒரே வெறுப்பா இருக்கு...''

பாட்டி எதிரே பானு அப்படியே உடைந்துபோனாள்.

''அப்ப தலைமுறை தலைமுறையாக அந்த பங்களாவுக்குப் போய் பாபாங்கறவருக்காக பண்ற பூஜையை உங்கம்மாவுக்கு அப்புறமா யார் பண்ணுவா?''

அந்தக் கேள்வியின்போது கச்சிதமாக சாமிநாதனும் உள்ளே வந்தான். அவன் கையில் அவனது தோட்டத்தில் இருந்து அவன் அரிந்து எடுத்துக் கொண்டுவந்திருந்த வாழை இலைக்கட்டு. அந்த வாழை இலைக்கட்டை ஒரு ஓரமாக போட்டபடி பானு பாட்டிக்கு என்ன பதில் சொல்லப் போகிறாள் என்கிற மாதிரி பார்த்தான்.

''அபத்தம் பாட்டி... அம்மா இப்படித் தினம்போய் பூஜை பண்றதே எனக்குப் பிடிக்கலை. இதை நான் எப்படி செய்வேன்?

பூஜைன்னா அது பகிரங்கமா நடக்கணும்.

ரகசியமா நடந்தா என்ன அர்த்தம் பாட்டி...?''

பானு எதிர்க்கேள்வி கேட்க, பாட்டிக்கு வியர்த்துவிட்டது. ஏனென்றால் தாசி சுந்தராம்பாளுக்கு எதிராக யாராவது சந்தித்தாலே அவர்களுக்கு எதாவது கெடுதல் நேரும் என்பது ஊராரின் நம்பிக்கை. ஆனால் சுந்தராம்பாள் பெண்ணே இப்படி எதிராகப் பேசுகிறாளே...?

பாட்டிக்குள் கேள்வி உருண்டு ஓடியபோது பானு கைவைத்துக் கொண்டிருந்த மேஜையின் ஒரு முனையில் கருந்தேள் ஒன்று எட்டிப்பார்க்க ஆரம்பித்திருந்தது!

**பை** கொள்ளாத அளவு சாமான்கள், ஒரு வாழைத்தார், கொடிக்கால் வெற்றிலை ஒரு அரைகிலோ, சுருள்பாக்கு, சீவல் பாக்கு, வாசனைப்பாக்கு என்று எல்லாப் பாக்கிலும் ஒரு பாக்கெட். கூடவே பன்னீர்புகையிலையும் வாசனைச் சுண்ணாம்பும் சேர்த்து லிஸ்ட்டில் போட்டிருந்தான்.

மளிகைக்கடைக்காரர் உற்சாகமாக இருந்தார்.

''என்ன சங்கரா, தங்கச்சிக்குக் கல்யாணக்களை இப்பவே கட்ட ஆரம்பிச்சிடிச்சுபோல இருக்கே'' என்று கேட்டு சங்கரனை மேலும் குஷிப்படுத்தினார்.

''ஆமாம் நாடாரே... இந்தக் கல்யாணம் நல்லவிதமா நடக்கணுமேன்னு இருக்கு'' என்று அவரிடம் பொறுப்பாய் கவலைப்பட்டுக்கொண்டான்.

கைக்கெடிகாரத்தைப் பார்த்தான்.

மணி பத்தாகியிருந்தது.

அவ்வளவு சாமான்களுடனும் வீதிக்கு வந்தபோது எதிரில் மொபட்டில் சாமிநாதன்! அவன் முகத்தில் பதட்டம்.

''வாடா... மொதல்ல இந்தப் பையை வண்டில மாட்டு. ஒரே வெயிட்!''

''தெரியும்... ஆமாம். நான் வரதுக்குள்ளே எதுக்குக் கடைக்குக் கிளம்பினே? நான்தான் வரேன்னு சொல்லி யிருந்தேன்ல?''

''இப்ப என்னடா... அதான் வந்துட்டியோல்லியோ.''

''என்ன வந்துட்டியோல்லியோ....? உங்க வீட்ல ஏகக் கலாட்டா...''

''என்னடா?'' - சங்கரனைப் பதட்டம் தொற்றிக்கொண்டது.

''மைதிலியை அலங்காரம் பண்ண பானு வந்திருக்கா. வந்தவ வாயை பக்கத்து வீட்டு கோமாபாட்டியும் சும்மா இல்லாம கிண்டியிருக்காங்க...''

''என்னடா விவகாரம்... அதைச் சொல்லுடா முதல்ல..''

''அதைத்தாண்டா சொல்றேன். நீ வண்டில ஏறு. போய்க்கிட்டே பேசுவோம்.'' பேச்சோடு மொபமட்டை உதைக்க, அது புகையைக் கக்கியபடி உருள - சங்கரனும் பின்னால் காலைத் தூக்கிப்போட்டு அமர்ந்து கொண்டான்.

''விஷயத்தைச் சொல்லுடா...''

''சொல்றேண்டா... சும்மா சொல்லக்கூடாதுடா. நான் பானுவை என்னவோன்னு நினைச்சேன். அவ நம்ம கட்சிடா...''

''இப்ப அவ எந்தக் கட்சின்னா நான் கேட்டேன்?''

''அட பொறுமையா கேளுடா அய்யரே. நம்ம கட்சின்னா நம்மளைப் போலவே தாசிபங்களா மர்மத்தைச் சந்தேகப்படுற கட்சி!''

''யாரு... பானுவா?''

''ஆமாண்டா... பக்கத்துவீட்டு பாட்டி 'நீயும் தாசிபங்களா பூஜையைப் பண்ணவேண்டியவதானே'ன்னப்ப அவளுக்கு வந்த கோவம் இருக்கே?''

''அப்ப அவ சுந்தராம்பாம்மா மாதிரி கிடையாதுன்னு சொல்லு.''

''ஆமாண்டா... அதே சமயம் அந்த தாசி சுந்தராம்பாளை எதிர்த்து யார் கேள்வி கேட்டாலும் அவங்களுக்கு எதிரா எதாவது நடக்கும்னு ஒரு நம்பிக்கை இருக்குதானே?''

''ஆமாம்...''

''அதுவும் ஒர்க் அவுட்டாயிருக்கு...''

''என்ன ஆச்சு பானுவுக்கு?''

''அவ தன் கோபத்தைக் காட்டி முடிச்ச மறு நிமிஷம் ஒரு கருந்தேள் பட்டுன்னு கைவிரல்லயே போட்டிருச்சு...''

''அடக் கொடுமையே...!''

''உனக்குக் கொடுமையா தோணின இந்த விஷயம் எனக்கு மட்டும் பயங்கர இனிமையா இருந்ததுடா...''

''என்னடா சொல்றே?''

''ஆமாண்டா... பூ மாதிரி இருக்கற அவ கையைத் தொட்டு அதுதான் சாக்குன்னு மருந்து போட்டேனே...''

மொபட்டை ஒரு மரநிழலில் ஒதுக்கியவனாக சாமிநாதன் சொக்கிப்போனான். சங்கரனுக்கும் அவன் அவளை எவ்வளவு தூரத்துக்கு நேசிக்கிறான் என்பது புரிந்துபோயிற்று. அவனையே வெறித்துப் பார்த்தான்.

''என்னடா... என் காதலை நினைச்சு சந்தோஷப்படுறியா... இல்லை வருத்தப்படுறியா?''

''இரண்டும் இல்லடா. ஆச்சரியப்படறேன்.''

''என்கிட்ட ஆச்சரியப்பட என்ன இருக்கு...? நானும் மனுஷன்தானே...? காதல்ங்கறது எனக்கும் பொதுவானது தானே?''

''அப்படியில்லடா... இந்த அச்சரியம் வேறவிதம். அந்தக் காலத்துல உன் அப்பா பானுவோட அம்மாவை அதாவது சுந்தராம்பா அம்மாவைக் காதலிச்சதா கேள்விப்பட்ருக்கேன். இப்ப அவர் பிள்ளை நீ அவங்க பொண்ணைக் காதலிக்கறே... ஆச்சரியப்படாம எப்படி இருக்க முடியும்?''

சங்கரன் அப்படிக் கேட்கவும் சாமிநாதன் முகம் சுட்ட கத்தரிக்காய்போல அப்படியே வாடிப்போனது.

''என்னடா... நான் ஏதாவது தப்பா சொல்லிட்டேனா?''

''டேய் சாமி... நான் சாதாரணமா சொன்னேன்டா.''

''தெரியும்டா... இருந்தாலும் சில நம்பிக்கைகளை நினைச்சா வருத்தப்படாம இருக்கமுடியலியே.''

''நீ என்னடா சொல்றே?''

''அன்னிக்கு எங்கப்பாவுக்கு பானு அம்மா கிடைக்கல. அதேபோல எனக்கும் பானு கிடைக்காமப் போயிடுவாளோன்னு ஒரு பயம்.''

''அபத்தம்டா... அவ ஒரு தாசி பொண்ணு. துணிச்சலா கல்யாணம் பண்ணிக்க உன்னை மாதிரி யாராவது வந்தாதான் உண்டு.''

''டேய்...''

''என்னடா...?''

''அவ தாசி பொண்ணுன்னு நீயே சொல்ற பார்த்தியா?''

''அய்யோ... நான் அவா குலத்தைச் சொன்னேன்.''

''அதெல்லாம்தான் ஒழிஞ்சு ரொம்பக் காலமாச்சே... சுந்தராம்பாம்மாவும் அழகா ஒருத்தரை கட்டிக்கிட்டு நம்ம அம்மாக்கள் மாதிரி குடும்ப வாழ்க்கையைத்தானே வாழறாங்க.''

''அதுல என்ன சந்தேகம். நான் தப்பா சொல்லிட்டேன். ஆளைவிடு. அப்புறம் நாழியாச்சு பார். வண்டிய எடு. மாப்ளை விட்டுக்காரங்க 12 மணிக்கெல்லாம் வந்துடுவாங்களாம்.''

''கவலைப்படாதே... ஜமாய்ச்சுடுவோம்.''

பதிலோடு மொபட்டைத் திரும்ப ஸ்டார்ட் பண்ண, சங்கரன் இப்பொழுது உபாசகர் சொன்னதில் மையம் கொண்டு விட்டிருந்தான்.

''ஏறுடா... அதுக்குள்ற என்ன கவலை?''

''இல்ல... உபாசகர் சொன்னது ஞாபகத்துல வந்தது. அதான்.''

''அவர் சொன்னது உனக்கு இப்பதான் ஞாபகத்துக்கு வருதா? எனக்குள்ற அதே ஞாபகம்தான்...''

''அப்படின்னா...?''

''அவர் சொன்னது எந்த அளவுக்கு ஒர்க்அவுட் ஆகப்போகுதுன்னு பார்த்துக்கிட்டே இருக்கேன்.''

''அப்ப நீ அதை நம்பறியா... மைதிலிக்கு இந்த வரன் அமையாதா?'' - சங்கரனிடம் படபடப்பு பெருகிறது.

''பைத்தியக்காரா.... அவரைப் புரிஞ்சுக்க இது ஒரு சந்தர்ப்பம்னு சொன்னேன். வண்டியில ஏறு!''

சாமிநாதன் குரலும் வலுத்தது. சங்கரன் முகத்தில் சங்கடரேகைகளோடு வண்டியில் பின்னால் ஏறி அமர்ந்தான். மொபெட்டில் திரும்பவும் பாய்ச்சல்!

கோவில்!

பட்டர் மைதிலியைத் துளிகூட எதிர்பார்க்கவில்லை. அதிலும் மணப்பெண்போல அத்தனை அலங்காரத்தோடு...! ஒரு சில வினாடி அவருக்கு அவரது மனைவி வேதாவே உயிர்பெற்று திரும்ப நடந்துவருகிற மாதிரிகூடத் தோன்றியது.

''வா மைதிலி... என்ன இது திடீர்னு...''

அவளுடன் வந்திருந்த கோமாபாட்டியின் பேத்தி அலமேலு,

''பாட்டிதான் போய் சேவிச்சுட்டு வான்னு அனுப்பினா'' என்றாள்.

''அதுவும் சரிதான். ஒரு நல்லகாரியம் நடக்கப் போவுது. அதுக்கு முன்னால் சுவாமி தரிசனம் பண்ணிக்கறதும் நல்லதுதானே?''

பேச்சோடு அவளுக்குக் கற்பூர தீபாராதனைக் காட்டி பூவும் குங்குமமும் கொடுத்தார்.

அவள் அப்படியே அவர் காலடியில் விழுந்தாள்.

பட்டர் பதறிப்போய் விலகினார்.

மைதிலியும் அதிர்ந்தாள்.

''அம்மாடி... கோவில்ல யார் கால்லையும் விழக்கூடாது. அப்பாவா இருந்தாலும் சரி, அம்மாவா இருந்தாலும் சரி. அது தோஷம்.இங்க சுவாமிதான் எல்லாம்...''

அவர் விளக்கத்திற்குப் பிறகு அவளிடம் கொஞ்சம் போல சமாதானம். பின் தன் நயனபாஷையில் புறப்படுகிறேன் என்றவளை ''இரும்மா. அம்பாள் சன்னதிக்கும் போய்ட்டுப் போய்டு!'' என்று அங்கே அழைத்துச் சென்றார் பட்டர்.எல்லா கோவிலிலும் அம்பாள் சன்னதி சுவாமி சன்னதிக்கு வலப்பக்கம் கிழக்குப் பார்த்து இருக்கும். இங்கே ஈசான்ய மூலையில் நவக்கிரக சன்னதி இருக்கும் இடத்தில் அம்பாள் சன்னதி இருப்பதற்குப் பின்னாலே ஆயிரம் காரணங்கள்.

பிரதான காரணம் - ஒன்பது கிரகங்களும் ஒன்றான உருவாக - அம்பாளாக இங்கே எழுந்தருளியிருக்கிறாள் என்கிறது கோவில் தலவரலாறு. அதனால் தோடீஸ்வரன் ஆலயத்தில் தனியாக நவக்கிரகச் சன்னதி கிடையாது.

அவர்கள் தீர்த்தங்களாக ஊரைச் சுற்றி ராசிக் கிணற்றுக்குள் அடங்கிவிட்டதும் இங்குதான்.

இங்கே அம்பாளைச் சேவித்தாலே கிரகங்களைச் சேவித்த பலன். பட்டரும் தீபாராதனை காட்ட மைதிலி கண்களில் ஒற்றிக்கொண்டாள்.

அப்பொழுது அசரீரி போல ஒரு குரல்!

''இதென்ன அம்பாளே அம்பாளைச் சேவிச்சுண்டு...?''

திரும்பிப் பார்த்தபோது பிரபலப் பின்னணிப் பாடகர் ஸ்ரீனிவாச தேசிகர்.

''அடடே... பெரியவாளா... வரணும்... வரணும்...'' பட்டர் பரவசமானார். மைதிலியும் அங்கிருந்து விலகத்தொடங்க, பட்டர் அந்தப் பின்னணிப் பாடகரிடம் உசாவ (மனம்விட்டுப் பேச) ஆரம்பித்துவிட்டார்.

''அப்புறம்... எப்படி இருக்கேள்?''

''தோடீஸ்வரன் க்ருபைல நன்னா இருக்கேன்... ஆமா நீர் எங்க இவ்வளவு தூரம்?''

''கோவிலுக்கு எதுக்குவோ வருவா... சுவாமி தரிசனத்துக்குத்தான்...''

''முன்னை எல்லாம் மாசாமாசம் வருவேள். இப்பல்லாம் வரதே இல்லையே...?''

''உமக்குத் தெரியாதா... நான் அமெரிக்காவுல செட்டிலாயிட்டேன். இன்னிக்குத் தஞ்சாவூர்ல என் பையனுக்கு கச்சேரி அரங்கேற்றமாறது.''

''அப்படியா... ரொம்ப சந்தோஷம்!''

''அதான் அரங்கேற்றத்துக்கு முன்னால தோடீஸ்வரன் க்ருபைக்காக இங்க வந்துட்டோம்...''

''ஆமா, எங்க உங்க பிள்ளையாண்டான்?''

''சுவாமி சன்னதில நின்னுண்டுருக்கான் ஒய்...''

''அடடா காக்கவெச்சுட்டேனே...''

பட்டர் பதறிக்கொண்டே வேகமாக நடக்க, அந்த 'பத்ம பூஷண்' விருது பெற்ற பாடகரும் அவரை வேகமாகத் தொடர்ந்தார்.

**ம**ணி சரியாக பன்னிரண்டு. சங்கரனுக்கு அந்த புரோக்கர் வேப்பிலை அடிக்கத் தொடங்கினான.

''அப்பா சங்கரா... என்ன இது இன்னும் உன் அப்பாவைக் காணலியே?''

''உச்சி பூஜை முடிந்து வந்துடுவா மாமா...''

''அட நீ வேற... இன்னிக்கு ஒருநாள் அந்தப் பிச்சுமணி உச்சிக்கால பூஜைபண்ணா அந்த தோடீஸ்வரன் ஏத்துக்க மாட்டானாமா...''

''அது வந்து மாமா...''

''அட நீ ஒண்ணுப்பா... மாப்ளை ஆத்துக்காரா கார்ல வந்து இறங்கும்போது உங்கப்பாதான் முன்ன நின்னு 'வாங்கோ'ன்னு கூப்பிடணும். அதுதான் மரியாதை...''

''தெரியறது மாமா... ஆனா இன்னிக்குன்னு பார்த்து அந்த பிச்சுமணிக்கு அவ அப்பா ஸ்ரார்த்தமாம்...''

''சரி சரி... நீ போய் அவரைச் செத்த வேகமா கூட்டிண்டு வா. முதல் நாளே கோணலா போனா அப்புறம் எல்லாம் கோணலாயிடும்...''

புரோக்கர் தூண்டிவிட சங்கரனும் உடனே புறப்படக் காலெடுத்தான்.

''ஆமாண்டா சங்கரா... பிள்ளை ஆத்துக்காரா வரும்போது பொண்ணைப் பெத்த தாய்தான் இல்ல அப்பாவும் கிட்ட இல்லேன்னா நன்னா இருக்காது'' என்றாள் கோமாப்பாட்டியும்.

சட்டென்று சாமிநாதன் குறுக்கிட்டான். ''சங்கரா! நான் போய் உங்கப்பாவைக் கூட்டிக்கிட்டு வரேன். நீ வீட்லயே இரு! நீ இல்லாதப்ப அவங்க வந்துட்டா அது இன்னும் மோசம்'' என்ற சாமியை மைதிலி மலர்ந்த விழிகளுடன் பார்த்தாள்.

அவனுக்குமேல் காயத்ரி.

அப்படியே சுவாமி படம் ஒன்றின் முன்னால் சென்று ''ஸ்வாமி... இந்த இடம் எப்படியாவது அக்காவுக்கு ஒர்க் அவுட்டாயிடணும். அப்பதான் என் லைன் க்ளியராகும்'' என்று மனதுக்குள் வேண்டிக்கொண்டாள்.

**அ**ற்புதமான கீர்த்தனை... காம்போதி ராகத்தில் அந்தப் பாடகரின் புதல்வனான ஸ்ரீகாந்த் என்கிறவன் பின்னி எடுத்து விட்டான். கோவிலுக்கு ஸ்வாமி தரிசனம் செய்யவந்தவர்கள் எல்லாம் அதைக் கேட்டுச் சொக்கிப்போய் விட்டிருந்தனர்.

நாதஸ்வர வித்வான் கல்யாணசுந்தரம்கூட வந்து ''அருமையான குரல்... நல்ல சாதகம்'' என்று பாராட்டிவிட்டுச் செல்ல - சாமிநாதன் அவர்கள் எதிரில் பட்டரைப் பார்த்தபடி வந்து நின்றான்.

''வா சாமிநாதா...''

''நான் வர்றது இருக்கட்டும். மணி இப்ப என்ன தெரியுமா?''

''என்ன பதினொன்றரை இருக்கும்...''

''அட போங்க சாமி... கெடிகாரத்தைப் பாருங்க''- பட்டரும் பாடகரின் கைக்கெடிகாரத்தையே பிடித்துப் பார்த்துவிட்டு

''அடடா... டைமாயிடுத்தே'' என்று பதைக்க, பாடகர் கேட்டார்.

''என்ன விசேஷம்?''

''சொல்லத் தவறிட்டேன்... என் பெரிய பொண்ணுக்கு மாப்ளை பார்க்க வரா...''

''அப்படியா! நல்ல சமாசாரம்தான். அப்ப முதல்ல கிளம்பும். ஆமா மாப்ள எந்த ஊர்?''

''இங்க கிட்டதான்... தில்லைஸ்தானம்.''

அந்த பதில் அவர் நெற்றியில் ஒரு கொக்கியைப் போட்டது.

''என்ன... ஊர் பேர் சொன்ன உடனே ஒரு மாதிரி ஆயிட்டேள்?''

''தில்லைஸ்தானம் என் பூர்வீகம் ஒய்...''

''அப்படியா... அப்ப தங்கமா போயிடுத்து. மாப்ளைபத்தி உங்ககிட்டேயே கேட்டுடலாம்னு சொல்லுங்கோ...''

''மாப்ளை பேர்...?''

''சுந்தர்ராமன்.''

''மைகாட்... உத்யோகம்?''

''வெளிநாட்டுல பேங்க் உத்யோகம். உமக்குத் தெரியுமா?''

''தெரியுமாவா?'' அந்தப் பிரபலப் பின்னணிப் பாடகர் அப்படியே நொறுங்கிப்போய் ஒரு ஓரமாக அமர்ந்துவிட்டார்.

''என்ன ஸ்வாமி... என்ன ஆச்சு?''

''என்ன ஆகணும்? அவன் எனக்கும் மாப்ளை ஒய்! உம்ம பொண்ணோட கல்யாணம் நடந்தா அது நாலாவது கல்யாணம்!''

பட்டருக்கு நின்ற இடம் நடங்கத் தொடங்கியது. சாமிநாதனோ உபாசகர் சொன்னதை நினைத்துச் சிலிர்த்து விட்டிருந்தான்.



## அன்று

**யா**ருக்கும் தெரியாதபடி வீட்டின் கொல்லைவாசல் வழியாக வெளியேறத் தொடங்கியிருந்தாள் அபராஜித வைஜெயந்தி. அவளை அப்படி அனுப்பிவிட்டு ஒன்றும் தெரியாதவள்போல் உள்ளே வந்து விட்டாள் மாணிக்கவல்லி.

ஒரு கறுப்பு சால்வையைப் போர்த்திக்கொண்டு மர்மமான ஒரு உருவம் செல்வதுபோல அபராஜித வைஜெயந்தி செல்வது பலரைத் திரும்பிப் பார்க்க வைத்தது.

அவளது கால் சலங்கை சப்தம் வேறு நெடுந்தூரம் வரை கேட்டது. ஊர்த் தெருக்களின் வழியாக சென்றால் பலர் அடையாளம் கண்டுகொண்டுவிடக்கூடும் என்று தெரிந்தோ என்னவோ காவிரிக்கரை ஓரமாக அடர்வாக உள்ள தென்னந் தோப்புகளின் வழியாக அவள் நடந்தபடி இருந்தாள். இடையில்கூட பல குறுக்கீடுகள்.

தோப்புக்காரர்கள் அவளைப் பார்த்து கள்ளச் சிரிப்பு சிரித்தார்கள். அவர்களுக்குப் பிடிகொடுக்காதபடி நடந்து சதாசிவ சாஸ்திரிகளின் வீட்டை அவள் அடையவும் சாஸ்திரிகளின் மனைவி பாலா, அபராஜிதத்தைப் படு உற்சாகமாக வரவேற்றாள்.

''வாடி கொழந்தே..''

''மாமி... பாபாஜிய பாக்கலாம்னுதான் வந்திருக்கேன்.

''அடடா... இப்பதானே அவரும் எங்க ஆத்துக்காரரும் காவிரில அந்தண்ட கரைல இருக்கற பூந்தோட்டத்துக்குக் கிளம்பிப்போனா...''

''பூந்தோட்டத்துக்கா?''

''ஆமாம்... எங்காத்துக்காரர் தோடீஸ்வர ஸ்வாமிக்கு புஷ்பாஞ்சலி செய்ய ஆசைப்பட்டார். அதுக்காக பூபறிக்கக் கிளம்பினார்... பூந்தோட்டம்னா எனக்கும் இஷ்டம்னு இவரும் கிளம்பிட்டார்.''

வைஜெயந்தியின் முகத்தில் உடனேயே கசங்கல்.

''என்னடா கொழந்தே... என்ன சங்கதி? எதுக்காக்கும் இப்படிக் கறுப்புத்துணியைப் போட்டு மூடிண்டு நீ மட்டும் வந்திருக்காய்?''

''ஒண்ணுமில்ல மாமி... நான் வரேன்.''

அவள் பாலாவிடம் தன் பிரச்னையைச் சொல்ல விரும்ப வில்லை. அதே சமயம் பூந்தோட்டத்திற்குத் தானும் போய் அங்கேயே பார்த்து விடுவது நல்லது என்று தோன்றியது.

காவிரி ஆற்றிலும் புதுவெள்ளம்!

நொப்பும் நுரையுமாய் சுழித்தபடி ஓடிக்கொண்டிருந்தது.

குடகுமலையில் நல்ல மழை என்று சொல்லாமல் சொன்ன அந்த ராஜநதியின் கரையில் நின்று மலைப்போடு ஒரு பார்வை பார்த்தாள்.

காவிரிக்குப் பயந்தால் கவைக்கு உதவாது என்று தோன்றிற்று.

'வருவது வரட்டும்... ஒரு வேசியாய் - வருகிற போகிறவன் மடியில் எல்லாம் விழுந்து எழுவதற்கு காவிரித்தாயின் மடி மிக உத்தமமானது. நல்ல வாழ்க்கை என்று ஒன்று இருந்து தலையில் எழுதியிருந்தால் நான் அக்கரைக்குச் சென்று பாபாவை பார்ப்பேன். இல்லாவிட்டால் இந்த ஆத்தோடு அப்படியே போய்விட்டுப் போகிறேன்' என்கிற முடிவுக்கு வந்தவள் மளமளவென்று ஆற்றுக்குள் இறங்கினாள். அங்குலம் அங்குலமாக ஆற்றுக்குள் அவள் உடல் மூழ்க ஆரம்பித்தது. துணிந்து அவள் நீந்த ஆரம்பித்த போது பாதி ஆற்றைக் கடந்துவிட்டிருந்தாள். ஆனால் வெள்ளத்தின் பலம் அவள் பூ உடலைத் தன் பிடிக்குள் வைத்துக்கொண்டு எங்கோ உருட்டிக்கொண்டு ஓடத்தொடங்கியது.

**ந**வக்கிரக மாளிகை!

மாளிகை மையத்தில் ஒரு திறந்தவெளிச் சாளரம். அங்கிருந்து மேலே பார்த்தபோது வானம் துல்லியமாகத் தெரிந்தது. அதேபோல் உதயசூரியன் கிழக்கில் எழும்பொழுது பூமியில் விழும் முதல் கதிர் மாளிகை வாசலில் விழுவதற்குத் தோதாக நீண்ட வராண்டாவுடன் கூடிய கிழக்கு வாசல். அதேபோல் மேற்குச் சூரியன் அஸ்தமிக்கும்போதும் அவன் கதிர்க்கரம் நீண்டு விழத் தோதாக மேற்கு வாசல். வடகிழக்கில் நீராழி அமையவேண்டும் என்பதற்குத் தோதாக ஒரு பெரிய நீராழி.

சுற்றிலும் படித்துறை. நன்கு இறங்கி மூழ்கிக் குளிக்கலாம். காவிரி வெள்ளத்தைப் பொறுத்து நீராழியிலும் நீரின் மட்டம் கூடிக் குறையும் விதமாக காவிரியுடனும் நீராழிக்குளத்துக்கும் ஒரு கால்வாய் தொடர்பு.

அப்படி ஒரு திட்டமிடப்பட்ட நீராழிக்குளத்தினுள் மகாமந்திரி மகாதேவராவ் நீராடுவதற்காக இறங்கியிருந்தார். அதற்குமுன் ராஜநீராட்டத்தின் ஒரு வெள்ளோட்டமாக அந்த நீர்ப்படுகைமேல் மலர்கள் தூவப்பட்டு வாசனாதித் திரவியங்கள் எல்லாம் தெளிக்கப்பட்டிருந்தன.

அந்த நீராழி மண்டபத்தின் தூண் ஒன்றில் 'சூர்யா புஷ்கரணி' என்கிற எழுத்துக்கள் வேறு கண்ணில் பட்டன. நேரே மாலைச் சூரியனின் கிரணக் கதிர்க் கற்றைகளின் ஊடுருவல்.

அதற்கொரு நமஸ்காரம் புரிந்தபடியே நீராழிக்குளத்தில் இறங்கிய மந்திரி ஒன்று இரண்டு மூன்று என்று முழுக்குப் போட்டுவிட்டு நான்காவதாக மூழ்கித்திளைப்பதற்குத் தயாரான போது தண்ணீருக்கள் அவரது காலடியில் மனித உடல் ஒன்று தட்டுப்பட்டு இடறுகிற மாதிரியெல்லாம் அவருக்கு ஒரு பிரமை.

எதற்குச் சந்தேகம் என்று மூழ்கிப் பார்த்தபோது உடம்பில் பொட்டுத்துணியின்றி மூர்ச்சையான நிலையில் அந்த நீராழிக்குளத்தின் அடிப்படுகையில் அபராஜித வைஜெயந்தி!

**ந**வக்கிரக மாளிகைக்கு வெளியே காவிரிக் கரையை ஒட்டி காத்துக்கொண்டிருந்தார் வங்காள ஜோதிடர் சோம்நாத் சட்டர்ஜி.

சூரியன் அஸ்தமித்து இரவுக் குடைவிரியத் தொடங்கி விட்டிருந்தது. கட்டாயம் வருவதாகச் சொல்லிச் சென்ற வீரேந்திரனை வேறு காணவில்லை.

'என்ன ஆனான் அவன்...?'

குழம்பியபடி ஜோதிடர் நிற்கும்போழுது வானில் ஒரு மின்வெட்டு நெடுந்தொலைவில் அவர் கண்ணில் பட்டது.

மழை வானமற்ற நிலையில் மின்னல் தோன்றினால் நிமித்திகப்படி அது கேடு.

ஜோதிடர் உள்ளம் லேசாக நடுங்க ஆரம்பித்தது.

'கேடு யாருக்கு?'

அவர் அந்தக் கேள்வியைக் கேட்டுக்கொள்ளும் பொழுதே 'உமக்குத்தான் கேடு' என்கிறாற்போல அவரைச் சிலர் சுற்றி வளைக்கத் தொடங்கினர்.

கோரமான முகம்.

கழுத்தில் மண்டை ஓட்டு மாலை!

இடையில் சிலர் கௌபீனம் தரித்திருந்தனர்.

சிலர் அதுவுமின்றி லிங்க சொரூபிகளாக நின்றனர். கைகளில் அவர்கள் உயரத்திற்கும் மேலான சூலாயுதம். அதன் ஒரு பகுதியில் காளைத்தோலால் உருவாக்கப்பட்ட சிறிய உடுக்கை.

ஜோதிடருக்குப் புரிந்துவிட்டது.

''நீ... நீங்கள் காபாலிகர்களேதான்...?''

''ஆமாம். காபாலிகர்களேதான். ஏன்... எங்களைக் கண்டால் அச்சமாக உள்ளதா?''

''அ... அப்படி எல்லாம் ஒன்றுமில்லை.''

''பொய் சொல்லாதே... உன் ரத்தம் குடிக்கவே இப்பொழுது இங்கு ஒன்றாகத் திரண்டிருக்கிறோம்.''

''ரத்தம் குடிக்கவா... ஐயோ... நான் உங்களுக்கு என்ன கேடு செய்தேன்?''

''ஜோதிடன் நீ... மனிதர்களைப் பயமுறுத்துவதையே தொழிலாகக் கொண்டவன்...''

''அட... அதை நீங்கள் கூறுகிறீர்களா?''

''எங்களுக்கென்ன... எங்களைப்பற்றி உனக்கென்ன தெரியும்?''

''என்ன தெரியவேண்டும். நரமாமிசம், மானுடரத்த மெல்லாம் குடிக்கும் உங்களைப் பற்றி சொல்ல என்னதான் இல்லை...''

''நீ அதிகம் பேசுகிறாய். பேசாமல் எங்களுடன் புறப்படு...''

''உங்களுடனா... எங்கே?''

''அதை நீ வந்து தெரிந்துகொள்ளலாம்...''

பதிலோடு அந்தக் கபாலிகர்கள் ஜோதிடரை அப்படியே சூலாயுத முனையில் கட்டித் தூக்கிக் கொண்டனர்.

காவிரிக்கரையில் இருந்து மறுபுறம் நோக்கி நடக்கத் தொடங்கினர். காவிரியின் மறுபுறத்தில் அடர்வான கோரைப் புற்கள் வளர்ந்திருந்தன. அப்படியே வகை தொகை இல்லாதபடி காட்டுச்செடிகொடிகளும்... எப்பொழுதுமே ஆற்றோரத்து பூமிக்கு ஊட்டம் அதிகம். உள்ளே புலியே பதுங்கியிருந்தாலும் யாருக்கும் தெரியாது.

அப்படி ஒரு இடம் காபாலிகர்களுக்கு வசதியாகப் போய்விட்டது.

அவர்களோடு சேர்ந்து தண்ணீரில் நடக்கும் ஜோதிடருக்கு மனது கிடந்து தவித்தது. அவர்கள் தங்கள் கை சூலாயுதத்தை ஆட்டிக்கொண்டும் ஓடும் நீருக்குள் குத்தி அதில் சில பெரிய மீன்களை ஏந்திப் பிடித்தும் 'ஆஊ' என்று கத்திக்கொண்டும் காட்டு மிராண்டிகள் சிலர் நரபலிக்காக கையில் கிடைத்தவர்களை இழுத்துச் செல்லுகிற மாதிரி இருந்தது அந்தக் காட்சி.

ஜோதிடர் நடுங்கிக்கொண்டுதான் அவர்களைப் பின் தொடர்ந்தார். அதே சமயம் ஊருக்கே நல்லது கெட்டது சொல்லும் அவர் நுட்பமான புத்தி இவர்களை எப்படிச் சமாளிப்பது என்றும் அப்பொழுதே யோசிக்கத் தொடங்கிவிட்டது.

சாதாரணமாக ஒருவரது ராசிக்கு சந்திரன் அஷ்டமத்தில் வரும் சமயம் அவர்களுக்கு மனோரீதியாக கொதிப்பும் சிக்கல்களும் ஏற்படும்.

இன்று தனக்கு ஒருவேளை சந்திராஷ்டமமோ என்றும் கேட்டுக் கொண்டார். அதற்குள் மறுகரை வந்துவிட்டது.

அவர்கள் அவரை கோரைப்புதர்களுக்குள் இழுத்துச் சென்றனர். அப்படியே அருகில் உள்ள மாந்தோப்பு ஒன்றின் வேலியைக் கடந்து அதற்குள் நுழைந்தனர். மாமரங்களில் அங்கங்கே தீப்பந்தங்கள் எரிந்து கொண்டிருந்தன.

ஒரு கூட்டமாய் காபாலிகர்கள் நின்றுகொண்டிருக்க, ஒரு மரக்கிளைமேல் தலைமைக் காபாலிகன் அமர்ந்திருந்தான். முகம் முழுக்கப் பிணச்சாம்பலைக் குழைத்துப் பூசியிருந்தான். தலை முடியில் அநியாயத்துக்கு ஒரு சடைப்பிடித்த தன்மை. அவன் இடையில் ஒரு புலித்தோல்!

தன்னை அந்தச் சிவமாகவே பாவித்துக்கொண்டவன் போல் அவன் இருந்தான்.

ஜோதிடரை அவன் எதிரில் அவர்கள் கொண்டுசென்று நிறுத்தினார்கள்!

''இவன்தான் அந்த ஜோதிடன்...'' என்று ஒருவன் எடுத்துக் கொடுத்தான்.

''வீரேந்திரனை மயக்கித் தன்வசப்படுத்துவதற்காக காவிரிக்கரையில் நின்றுகொண்டிருந்தவனை கட்டி இழுத்து வந்துவிட்டோம்...'' இது இன்னொருவன்.

அப்பொழுது வீரேந்திரனும் அங்கு வந்தான்.

ஜோதிடரைப் பார்த்து திருட்டு முழிமுழித்தான்.

''வீரேந்திரா... என்ன இது? இவர்கள் எதற்கு இப்படி நம்மைச் சுற்றி வளைத்துக்கொண்டு நிற்கின்றனர்?''

ஜோதிடர் பதைப்புடன் வாய் திறந்தார்.

''நம்மை அல்ல ஜோதிடரே... உங்களை...''

''அப்படியானால் நீ...?''

''நான் இவர்களின் நண்பன்.''

''நண்பனா...? இவர்களுக்கா?''

''ஏன் கூடாதா...? இவர்கள் சிவபுதல்வர்கள். வாழ்வின் மாயங்களை வென்றவர்கள். சதா இன்பமாய் இருக்கும் வழிமுறைகளை உடையவர்கள்.''

''அப்படி இவர்கள் தங்களைப் பற்றி உன்னிடம் சொன்னார்களா?''

''அவர்கள் சொல்வது என்ன... நானே அனுபவிக்கிறேனே. முற்றிலும் ஏகாந்தம். எந்தக் கட்டுப்பாடுகளும் யாருக்கும் கிடையாது.''

''மிருகங்களைப் போல் என்று சொல்...''

ஜோதிடர் மடக்கினார்.

''ஜோதிடனே! நீ அதிகம் பேசுகிறாய்!'' -ஒரு காபாலிகன் கோபத்துடன் இடையிட்டான்.

''அனைத்தையும் துறந்து விட்டவர்களிடம் இன்னமும் கோபமும் ரோஷமும் துறவு போகவில்லை போல் தெரிகிறதே...''
ஜோதிடரும் விடுவதாக இல்லை.

''வாயாடாதே... அவனுக்கு அரசபோகங்கள் எல்லாம் காத்திருப்பதாக எதைத் வைத்துக் கூறினாய்?''

''அவசியம் உங்களுக்குத் தெரியவேண்டுமா?''

''ஆமாம்... நீ உன் ஜோதிட வித்தையை எங்களிடமும் காட்டேன். கொஞ்சம் அது எப்படி என்று நாங்களும்தான் பார்க்கிறோமே...?''

''ஜோதிடம் என்பது என்ன... உங்களைப் போன்ற காட்டு மிராண்டிகள் சுலபத்தில் உணர்ந்துகொண்டுவிடும் ஒரு சாதாரண விஷயமா என்ன?''

''எங்களது இந்திரிய தந்திரங்களைவிட உயர்வானது எதுவுமே இந்த உலகில் கிடையாது.''

''ஒரே ஒரு விஷயத்திற்காக உங்களை நான் மதிக்கிறேன். தெரிந்தோ தெரியாமலோ நீங்கள் அந்த சிவத்தை துதிப்பவர்கள். இல்லாவிட்டால் இங்கே இப்படி நின்று பேசிக்கொண்டிருக்கு மாட்டேன்.''

''நாங்களும் உன் நெற்றியில் நீ தரித்திருக்கும் விபூதிச் சின்னம் கண்டே உன்னைக் சுட்டுப்பொசுக்காமல் இருக்கிறோம். அந்தக் கழுத்து ருத்ராட்சமும் எங்களைத் தடுக்கிறது. இல்லாவிட்டால் உனது உடம்பு வாட்டி எடுக்கப்பட்டு எங்கள் வயிறுகளை அடைந்திருக்கும்.''

''ஒரு ஜோதிடன் உயிரை அவ்வளவு சுலபத்தில் உங்களால் எடுத்துவிட முடியாது. எனக்குத் தெரியும் எனது உயிர் என்று, எப்படிப் பிரியும் என்று...''

''நீ வார்த்தைக்கு வார்த்தை பதில் கூறாமல் - வீரேந்திரனை ரகசியமாக அழைத்த காரணத்தைக் கூறு.''

''உங்களிடம் அதுபற்றி நான் பேச விரும்பவில்லை...''

''பேசித்தான் ஆகவேண்டும்.''

''முடியாது...''

''நான் கூறவா?''

''என்ன?''

''ருத்ரவீணை பற்றி பேசத்தானே வீரேந்திரனை அழைத்தாய்?''

ஜோதிடரிடம் ஸ்தம்பிப்பு.

''அந்த வீணை பற்றி நாங்களும் அறிவோம். எங்கள் இறைவனின் திருக்கரங்கள் வருடிய இனிய இசைக்கருவி அது...!''

''அப்படி ஒரு கருவியை நீங்கள் தீண்ட நினைக்கலமா?''

''எங்களுக்குத் தேவை முக்தி. முக்திக்கு வழிகாட்டுவது அந்த வீணை இசை...''

''எப்படி?''

''அதில் நாங்கள் காம்போதி இசைத்தால் அந்த ராவணேஸ்வரனுக்குக் காட்சிதந்தது போல எங்களுக்கும் அந்த ஈசன் காட்சி தரமாட்டானா என்ன?''

''ஒரு வகையில் நல்ல ஆசைதான். உண்மையில் முக்திக்காகத்தான் அந்த வீணைபற்றி கேட்கிறீர்களா?''

''நிச்சயமாகவும் சத்தியமாகவும் அதற்காகவே கேட்கிறோம். அதனால் இந்த உலகின் போக்கையே மாற்ற முடிந்தாலும் எங்களுக்கு அதெல்லாம் வேண்டாம்.''

''ருத்ரவீணை மூலம் இறைவனை அடைய நினைப்பது ஒரு குறுக்குவழி என்பது உங்களுக்கு தெரியாதா?''

''இறைவன் திருவடியை அடைய குறுக்குவழி என்ன, எது வேண்டுமானாலும் செய்ய நாங்கள் தயார். இந்த மாயா வாழ்க்கை எங்களுக்கு வேண்டாம்... தினம் பசிக்கிறது. அதற்காக பௌதி பிட்சாந்தேஹி' என்று பிச்சை எடுக்க வேண்டியுள்ளது.

சாப்பிட்டால் மலம் கழிக்க வேண்டும்...

சாப்பிடும் சாப்பாட்டாலும் உடலில் உணர்வு நிலைகளில் நிறைய கொதிப்புகள், கோபதாபங்கள்.

அடக்கி ஆளவேண்டியிருக்கிறது.

சுருக்கமாகச் சொல்வதானால் இந்த உடம்பைக் கட்டிக் கொண்டு அழவேண்டியுள்ளது. இந்த உடம்பாவது ஒரே மாதிரி கருக்குலையாமல் இருக்கிறதா என்றால் அதுவும் இல்லை. கருக்கிறது. சுருங்குகிறது. வியாதியில் விழுகிறது. கண்பார்வை மங்குகிறது. ஒருநாள் போல் ஒரு நாள் இருக்கமாட்டேன் என்கிறது. இருமல், சளி, கபம், சோர்வு, களைப்பு என்று ஒவ்வொரு நாள் ஒவ்வொன்று தாக்குகிறது. இதனால்தானே உங்கள் திருவாலங்காட்டுக் கிழவி ஒருத்தி பிறவாத வரம் வேண்டும் என்று இறைவனிடம் வேண்டினாள்.''

தலைமைக் காபாலிகன் ஒரு மேடைப்பிரசங்கிபோல பேசியது ஜோதிடரையே ஒரு வினாடி திகைக்க வைத்துவிட்டது.

''அற்புதம்... அருமை..'' என்றார் பதிலுக்கு.

''பாராட்டு பிறகு... அந்த ருத்ரவீணை பற்றி உனக்கு என்ன தெரியும்? கூறு.''

''எனக்குத் தெரிந்து அது ஒரு கற்பகத்தரு காமதேனு - சப்த சாகஸம்.''

''சப்த சாகஸமா?''

''ஆமாம்... சப்தமாகிய பேச்சு இல்லாவிட்டால் இப்பொழுது நீங்கள் பேசுவதை நானும் நான் சொல்வதை நீங்களும் விளங்கிக்கொள்ள முடியுமா?''

''அதற்காக...?''

''சப்தம்தான் எல்லாம்... பார்வை இல்லாமல்கூட தொடு உணர்ச்சியால் ஒருவன் வாழ்ந்து விடமுடியும். சப்தமாகிய மொழி இல்லாவிட்டால் மனிதன் மிருகத்தைவிடக் கேவலமாகி யிருப்பான்...''

''ருத்ரவீணை பற்றி கேட்டால் சப்தம், பாஷை என்று எங்கெங்கோ போனால் என்ன அர்த்தம்?''

''உங்களுக்கு எதிலும் அவசரம் என்று அர்த்தம்...''

''எப்படி?''

''வீணை என்பது என்ன... இசைக்கருவிதானே?''

''ஆமாம்...''

''இசை என்பது என்ன... சப்தம் சார்ந்ததுதானே?''

''ஆமாம்...''

''நம் பேச்சும் மொழியும்கூட சப்தம் சார்ந்ததுதானே?''

''ஆமாம்...''

''நம் மொழிக்கும் வீணையின் மொழிக்கும் என்ன வித்தியாசம்?''

''என்ன வித்தியாசம்?''

''பிணம் தின்னும் உங்களுக்கெங்கே அந்த நுட்பம் புரியப் போகிறது? சொல்கிறேன். கேளுங்கள்.

இந்த உலகம் ஒலியில் இருந்துதான் தோன்றியது என்பதைப் புரிந்துகொள்ளுங்கள்...''

''ஒலியில் இருந்தா''

''ஆம்... 'ஓம்' என்கிற பிரணவத்தில் இருந்துதான் இந்த உலகம் மற்றும் அண்ட சராசரங்கள் தோன்றின.''

''ஆதாரம்?''

''ஒன்று இருக்கிறது என்பதை எதை வைத்து நாம் உணர்கிறோம்...''

''கண்ணால் பார்த்து...''

''கண்ணால் பார்த்தால் ஆயிற்றா... பார்க்கும் விஷயம் என்ன என்று மனது உணர வேண்டாமா?''

''நிச்சயமாக...''

''அப்படியானால் எதை வைத்து உணர்கிறோம்?''

''எதை வைத்து?''

''பள்ளிக்கூட மாணவன் போல என்னையே கேளுங்கள்... யோசித்துவிடாதீர்கள்.''

''இதோ பார் ஜோதிடனே! நீ எங்களைக் குழப்பிக் கொண்டிருக்கிறாய். வீணை பற்றி கேட்டால் தேவையில்லாத வியாக்யானமளிக்கிறாய்.''

''தேவையில்லாததைப் பற்றி நான் சிந்தித்ததே கிடையாது. என் கேள்விகளுக்கு நீங்கள் பதில் சொல்லிக்கொண்டே வாருங்கள். உங்களுக்குத் தானாக நான் விளக்க விரும்புவது விளங்கிவிடும்.''

''சரி... கேள்...''

''ஒரு விஷயத்தைப் பார்த்து அது இதுதான் என்று மனதில் எதை வைத்து உணர்கிறீர்கள்?''

''புரியவில்லை...''

''சரி. நான் இப்படி வருகிறேன். நான் யார்?''

''ஜோதிடன்!''

''உங்கள் மனது அப்படித்தான் நினைத்ததா?''

''ஆம்... நீ ஜோதிடன்தானே... ஜோதிடனை ஜோதிடன் என்றுதானே மனது நினைக்கும்.''

''அந்த நினைப்பு என்பது என்ன?''

''இது என்ன கேள்வி...நினைப்பு நினைப்புதான்.''

''நினைப்பு என்பது உருவமா...இல்லை சப்தமா?''

''இரண்டும்தான்...''

''இல்லை. சதா மனது எதையாவது நினைத்துக்கொண்டு சிந்தனையில் இருக்கிறதல்லவா... அது எது?''

''எது?''

''நினைப்பு என்பது உள்ளடங்கிய ஒரு ஒலிதானே?''

''அட... ஆமாம்...''

''இப்பொழுது கூறுங்கள். மனிதன் எதால் இயங்குகிறான்?''

''ஒலியால்...

''எதால் உணர்கிறான்?''

''ஒலியால்...''

''எதால் வாழ்கிறான்?''

''ஒலியால்... ஒலியால்... ஒலியால்...!''

''எனக்கொரு பெயர்... உங்களுக்கொரு பெயர்... எல்லாம் என்ன?''

''ஒலி... ஒலி... ஒலியேதான்.''

''இங்கே நீங்கள் என்னை கொல்லச் சொல்லி கட்டளை இட்டால் அந்தக் கட்டளை என்னும் ஒலியால் என்ன நடக்கும்?''

''உன் உயிர் போகும்.''

''எனக்கு விருந்து கொடுக்கச் சொல்லிக் கட்டளை யிட்டால்...?''

''உன் உயிர் மகிழும்...''

''அப்படியானால் இன்பம் துன்பம் எல்லாம் பிறரால் எதை வைத்துச் செயலாகிறது?''

''ஒலியால்...''

''இப்பொழுது அப்படியே வீணைக்கு வாருங்கள். அந்த வீணையில் எழுப்பப்படும் இசை என்னும் நாத ஒலியும் பல விளைவுகளை உருவாக்கவல்லது.''

''எப்படி... எப்படி?''

''அதில் இசைக்கப்படும் ஒவ்வொரு ராகத்திற்கும் ஒரு சக்தி இருக்கிறது. அது பிரபஞ்ச வெளியில் பஞ்சபூதங்களை ஆட்டுவிக்கிறது.''

''ஓ... அப்படிப் போகிறதா கதை...?''

''கதையல்ல... நமக்குத் தெரியாத, நமக்குள்ள மூளையால் புரிந்துகொள்ள முடியாத சூட்சமம் அது...''

''ஒரு மனிதனால் உணர்ந்துகொள்ள முடியாத விஷயங்கள் கூட உண்டா என்ன?''

''நம் புலன்களின் சக்தி ஒரு வரையறைக்கு உட்பட்டது. நீரில் வாழும் தவளைக்கு அடுத்த சில மணி நேரங்களில் மழைவருவது பற்றி தெரிந்துவிடும். உடனே அது ஒருவிதமாய் குரல் கொடுக்க ஆரம்பித்துவிடும்.

பூகம்பம் வருவதைப் பாம்புகள் உணர்ந்துகொண்டு விடுவதைப் போல, தீயவிளைவுகள் நடக்க இருப்பதை பட்சிகள் முன்பாகக் குரல் கொடுத்து எச்சரிப்பதைப் போல எவ்வளவோ சூட்சமங்கள் இந்த உலகில்.

இதில் மனித சக்திக்கும் ஒரு வரையறை இருக்கிறது.

ஆனால் ருத்ரவீணை அதன் நாதம் இரண்டும் மனித அறிவால் உணர முடியாத உயரத்தில் இருப்பது.

அந்த மகாதேவன் தன் உன்னத செயல்திறனால் ஒரு ஏகாந்த வேளையில் அன்னை உமையோடு கூடி உருவாக்கியது...''

''அப்படி ஒரு அற்புதத்தை அந்த மகாதேவன் ஏன் தன்னுடன் கைலாயத்தில் வைத்துக்கொள்ளாமல் இந்த பூமியில் இப்படி விட்டுச் சென்றான்?''

''பரவாயில்லை... உருப்படியாக இப்படியாவது கேட்கத் தோன்றியதே... ஆனால், இதற்கான விடையை அவ்வளவு சுலபத்தில் உணர முடியாது.''

''போகட்டும் ஜோதிடனே... அந்த வீணைக்கும் வீரேந்திரனுக்கும் என்ன தொடர்பு? அவனை எதற்கு அழைத்தாய்?''

''அவசியம் கூறத்தான் வேண்டுமா?''

''அப்படியானால் கூற விருப்பமில்லையா?

''ஆம்... உங்களிடம் நான் இவ்வளவு பேசியதே அதிகம்...''

''இது மமதை.... இவ்வளவு விளக்கமளித்த நீ அந்தக் காரணத்தைச் சொன்னால் என்ன குறைந்தா போய்விடுவாய்?''

''ஆம்.. குறைந்துதான் போவேன். ஒரு பொருளுக்கு ஒருவர் ஆசைப்படலாம். எல்லோரும் ஆசைப்பட்டால் அங்கே குழப்பம்தான் மிஞ்சும்.''

''அப்படி வா வழிக்கு... உனக்கு அந்த வீணை வேண்டும். அதற்கு வீரேந்திரன் உதவி வேண்டுமோ?''

''ஆம்...''

''இம்மட்டில் வீரேந்திரன் உனக்கு உதவப் போவதில்லை. அவன் எங்களில் ஒருவனாகிவிட்டான். அதை அவன் எங்களுக்காக அபகரித்து வந்து தரப்போகிறான்.''

''முட்டாள்தனமான பேச்சு... அது ஒன்றும் தங்கம் வைரம் போல களவாட முடிந்த ஒன்றல்ல. அதை தெய்வீகமான, சுயநலமற்றவர்கள் தவிர யாராலும் தீண்ட முடியாது!''

''அப்படியா?''

''ஆம்... விந்தியமலையில் இருந்தும் இமயத்தில் இருந்தும், வடக்கே டெல்லி, கலிங்கம், மகாராஷ்ட்ரம், உத்தரம், மத்தியம் என்று தேசம் கடந்து அது இந்தத் தென்பகுதிக்கு - காவிரிக்கரைக்கு வந்துள்ளது.

வழியில் அதை அபகரிக்க எவ்வளவோ முயற்சிகள்.

ஒருவராலும் அந்த வீணையை நெருங்க முடியவில்லை. காரணம், அது இந்த ஊரின் சொத்து...

இந்த ஊர் தோடீஸ்வரன் ஒரு நாள் ஏகாந்தத்தில் உருவக்கியது.

அதாவது அப்பட்டமான தோடிபுரத்து சிவன் சொத்து. வந்து சேர வேண்டிய இடத்திற்கு அது வந்துவிட்டது.''

''அப்படியானால் நீ மட்டும் அதை அடைய நினைக்கலாமா?''

'தவறு... நான் அடைய நினைக்கவில்லை. பயன்படுத்த விரும்புகிறேன்.''

''பயன்படுத்த என்றால்...?''

''இதற்குமேல் எதையும் பேச நான் தயாரில்லை வீரேந்திரா! உன்னைப் பார்த்துக் கேட்கிறேன். நீ என் பேச்சைக் கேட்கப் போகிறாயா, இல்லை இந்த அநாகரிக காட்டுமிராண்டிகள் பேச்சைக் கேட்கப் போகிறாயா?''

ஜோதிடர் சோமநாத சட்டர்ஜி வீரேந்திரனைப் பார்த்து துணிச்சலாகக் கேட்டதற்கு அவன் முகத்தில் ஒரு மர்மப் புன்னகை!

## இன்று

**சொ**ல்ல முடியாத அளவு சோகத்தில் இருந்தாள் மைதிலி.

ஒருபக்கம் நல்லவேளை தப்பித்தோம் என்றுகூட தோன்றியது. ஒரு வினாடி நடந்ததை நினைத்துப் பார்க்கிறாள்.

மாப்பிள்ளை ஒரு ஏமாற்றுப் பேர்வழி என்று தெரிந்த நிலையில் சாமிநாதன் ஆவேசமாக வீட்டுக்குள் நுழைந்ததும் 'ஆடத்தெரியுமா? பாடத் தெரியுமா?' என்று கேட்டு அழிச்சாட்டியம் செய்துகொண்டிருந்த மாப்பிள்ளையைப் பார்த்து 'உனக்கு கராத்தே அடி பிடிக்குமா, குங்ஃபூ அடி பிடிக்குமா' என்று கேட்டதும் அவள் நினைவில் தோன்றிக்கொண்டே இருந்தது.

மாப்பிள்ளையைப் போட்டு பின்னி எடுத்துவிட்டான்.

மாப்பிள்ளையும் துண்டைக் காணோம் துணியைக் காணோம் என்று ஓடிப்போனான்.

நல்லவேளை...

மிக நல்லவேளை என்றே எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் காயத்ரிதான் மிக வெறுத்துவிட்டாள். மைதிலிக்கு ஒருவிதமாய் கல்யாணமாகும். லைன் க்ளியராகும் என்று பார்த்தால் இப்படி ஆகிவிட்டதே? ஒரு பக்கம் அவளும் சோர்வுடன் அமர்ந்திருந்தாள். அப்பொழுது வீட்டுக்கூரைமேல் ஒரு கல் வந்து விழுந்தது.

நடுவில் முற்றம்.

கல் அங்கே வந்து உருண்டு விழுந்தது.

அப்படி ஒரு கல் விழுந்தால் அது கணேசன் கொடுக்கும் சிக்னல்.

'நான் உடனே உன்னைச் சந்தித்துப் பேசவேண்டும். மதகுக்கரைப் பக்கம் வா' என்று அதற்கு ஒரு பொருளும் உண்டு.

உருண்டு விழுந்த கல் காயத்ரிக்கு உற்சாகத்தைக் கொடுத்தது.

ஒரு குடத்தை கையில் எடுத்துக்கொண்டாள். புறப்பட்டு விட்டாள்.

நடுவில் மைதிலியின் கை குறுக்கில் விழுந்து தடுத்தது.

''எதுக்குத் தடுக்கறே?''

''இப்ப எதுக்கு ஆத்துக்கு... நாளைக்குப் போனா போறும். ஆத்துல தேவைக்குத் தண்ணி இருக்கு.''

மைதிலி ஜாடை பாஷையில் பேசியது அவளுக்குப் புரிந்தது.

''எனக்கு இங்க அடைஞ்சு கிடக்க மனசு இல்லை. செத்த வெளிய போய்ட்டு வரேன். நீயோ ஊமை. ஒரு வார்த்தை பேசமுடியாது. எவ்வளவு நாழி உம்முன்னு உக்காந்துண்டுருக்கறது?''

அவள் பதில் மைதிலியைக் குத்திக் கிழித்தது. வெறித்தாள். காயத்ரி லட்சியமே செய்யவில்லை. புறப்பட்டுவிட்டாள்.!

**ஆ**ற்றோரமாய் புசுபுசுவென்று கொக்குச்சிறகுகணக்காய் கோரைப்புதர்... அதன் தலையில் புசுபுசுவென்று வெண்பஞ்சு நொதித்தாற் போல கொண்டைகள்.

பார்க்க அவ்வளவு ரம்யமாக இருந்தது.

கீழே சலசலவென்று கணுக்கால் அளவுக்கு வண்டலில் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது.

படுசுத்தமான - வடிகட்டப்பட்ட தண்ணீர். ஆனால், அதில் பொடியாய் அயிரை மீன் கூட்டம். அப்படியே பாலிதீன் உடம்பும் அதில் கறுப்புக் கோடுகளுமாய் கருமுத்துக் கண்களுடன் ஜிலேபிக் கெண்டைகள்.

அவை தண்ணீருக்குள் கால் வைத்தால் கிள்ளிக் கடிக்கும் அழகே தனி. 'வெடுக் வெடுக்' என்று ஒருவித கூச்சமுடன் அது காலைத்தூக்கிக் குதிக்க வைக்கும்.

காவிரிக்கரையோரமாய் வாழும் ஒவ்வொரு மனிதனும் இந்தக் கடியை அனுபவித்தவன்.

கணேசனும் அனுபவித்துக்கொண்டு ஒரு மணல் திண்டு மேல் அமர்ந்திருந்தான்.

அருகில் குடத்துடன் வந்து நின்றாள் காயத்ரி.

அவளது பிம்பம் ஓடும் நீரில் பட்டுத் தெரிந்தது.

சற்றே மேலாக்கு விலகியிருக்க கூந்தலை முன்மார்பில் இரு மலைக்கு நடுவே அந்த மலை ஏற முயலும் ஒரு கறுப்புக் கயிறு போல பின்னிப் போட்டிருந்தாள். தொப்புளும் அதைச் சார்ந்த பாகங்களும் அவனை தேன்குளத்தில் தூக்கிப்போட்டு விட்டிருந்தன. வந்து நிற்பவளைத் திரும்பிக்கூட பார்க்காமல் அந்தப் பிம்பத்தை குறிப்பாக இடைப்பகுதியையே தண்ணீரில் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவளுக்கும் அவன் ரசிப்பது தெரிந்துவிட்டது.

சட்டென்று தாவணியால் அந்தப் பாகத்தை இழுத்து மூடினாள்.

உடனே திரும்பினான்.

''பொறுக்காதே... நான் ரசிக்கறது பொறுக்காதே...!''

''எல்லாம் கழுத்துல ஒரு தாலியைக் கட்டிட்டு நன்னா ரசியுங்கோ. நான் அப்ப மடியிலையே படுத்துக்கறேன்.''

''அட... வார்த்தையெல்லாம் பட்டுபட்டுன்னு வெடிக்கறதே...! கோபமோ?''

''கூப்பிட்ட காரணத்தைச் சொல்லுங்கோ...''

''முதல்ல இப்படி உக்கார்றியா?''

''நான் ஒண்ணும் ஏகாந்தமா லவ்வறதுக்கு வரல.''

''அப்ப எதுக்கு வந்தே?''

''கல் வந்து விழுந்தது. அதான்...''

''நான் லவ்வத்தான் கூப்பிட்டேன். போறுமா?''

''ஆமா... வயசு இருக்குன்னு காதலிச்சிண்டிருந்தா காதலிச்சிண்டே இருக்கலாம். ஆனா அதுக்கு ஒரு முடிவு வேணுமே...''

''முதல்ல உக்காரு காயத்ரி...''

''உக்கார்றேன். கையை வெச்சுண்டு சும்மா இருக்கணும்.''

''ட்ரை பண்றேன்.''

''அப்ப வேண்டாம். எனக்கு இன்னிக்கு மூட் இல்லை. நான் வரேன்.''

''அட என்ன காயத்ரி... உங்க அக்கா கல்யாணம் நின்னு போனது பத்தி கேக்கலாம்னா...''

''தப்பா சொல்றேள். அவ கல்யாணம் ஒண்ணும் நிக்கல. பொண்ணு பாக்கற படலம்தான் நின்னுடுத்து.''

''ஏதோ ஒண்ணு... ஊர் பூரா அதே பேச்சுதான்!''

''ஊருக்கு வேற வேலை என்ன... சும்மா இருந்தா ராமஜெயமா சொல்வா... இப்படி அடிபட்ட கதைதான் பேசுவா. அவா அவாளுக்கு நடந்தா தெரியும்.''

''போகட்டும். அதுக்கு ஏன் நீ இவ்வளவு தூரம் வருத்தப்படுறே?''

''அவ கல்யாண ராசியை நினைச்சுதான். அவ எப்ப கரை ஏறுறது. நாம எப்பக் கைபிடிக்கறது?''

''ஓ... உனக்கு அந்தக் கவலையா?''

''உங்களுக்கு இல்லையாக்கும்... என்னை இப்படி ஆத்தங்கரைல சந்திச்சு சில்மிஷம் பண்ணிண்டே காலத்தை ஓட்டிடலாங்கறது உங்க நினைப்பாக்கும்?''

''ஏன் இப்படிப் பொரியறே... உங்கக்கா அதிர்ஷ்டசாலி. இல்லேன்னா அந்த ஃப்ராடுகிட்ட இருந்து தப்பி யிருப்பாளாக்கும்?''

''என்ன அதிர்ஷ்டமோ... ஏற்கெனவே ஊமை. இதுல இப்படி ஒரு சம்பவம் வேற... எனக்கு நம்பிக்கை இல்ல...''

''அப்ப நம்ம கல்யாணம்?''

''நீங்க யாரையாவது பாத்துக்கோங்கோ. பெரிய லேண்ட் லார்டோட பிள்ளை. கிராஜுவேட் வேற. பொண்ணா கிடைக்க மாட்டா?''

''நிஜமா...?''

''வேணும்னா நானே பொண்ணுபாக்கட்டுமா?''

''அவசியமில்லை. அத்தை பொண்ணு அகல்யா, மாமா பொண்ணு மாளவிகான்னு எங்காத்துல பொண்ணுகளுக்கா பஞ்சம்? அப்ப நான் வரேன்.''

கணேசன் அவளை உலுக்குகிற மாதிரி வேகமாக எழுந்தான். அவளுக்குப் பகீர் என்றது.

''அடப்பாவி பிராம்மணா. எப்பக் கழட்டிவிடலாம்னு அலையறியா நீ?'' எகிறிச் சட்டையைப் பிடித்தாள். அவன் உடனே ஒரு சிரிப்புச் சிரித்தான். அது அவளை அப்படியே மயக்கியது.

அதற்குமேல் அவள் கோபம், வீம்பு எல்லாம் உடைந்து சுக்கு நூறாக இறுக்கி ஒரு அணைப்பு அணைத்தாள். அவனும் காத்திருந்தவன் போல அவள் உதட்டில் மின்சாரம் பருகத் தொடங்கினான்.

அப்பொழுது யாரோ வரும் அரவம்.

இருவரும் அணைப்பிலிருந்து விலகி திரும்பிப் பார்த்தனர். மைதிலி நின்று கொண்டிருந்தாள்.!

காயத்ரிக்கு உடம்பு நடுங்க ஆரம்பித்துவிட்டது.

கணேசன் அப்படியே நைஸாக நழுவத் தொடங்கினான்.

அவன் விலகவும் காயத்ரியை நெருங்கிய மைதிலியின் கண்களில் அனலாய் நெருப்பு.

கைகள் அவள் கன்னத்தில் மாறி மாறி விளையாடத் தொடங்க, ஒரு அளவுக்குப் பொறுத்த காயத்ரிக்கும் பதிலுக்கு வந்தது கோபம். சட்டென்று அவள் கையைப் பிடித்துத் தடுத்தவள்-

''என்ன... எதுக்கு இப்ப அடிக்கறே? நான் அவரை லவ்பண்றேன். அவரைத்தான் கல்யாணம் பண்ணிக்கப்போறேன். ஏன்... உனக்கு வயித்தெரிச்சலா இருக்கா?''

காயத்ரியிடம் தடித்த வார்த்தைகள்.

மைதிலி அதைக் கேட்டு ஸ்தம்பித்துவிட்டாள்.

''இப்ப சொல்றேன் கேட்டுக்கோ... ஏதோ கூடப் பொறந்துட்டியேன்னு உனக்கு ஒரு மரியாதை கொடுத்தேன். ஆனா எப்ப நீ என்னை தேடிவந்து இப்படி அடிச்சியோ இனிமே உன்னை

நான் மதிக்கறதா இல்லை. உனக்குத் திராணி இருந்தா யாரையாவது லவ் பண்ணு. அதுக்கு வக்கில்லேன்னா எதுக்கு இப்படிப் பொறாமைப் படுறே?

கடவுள் உன்னை ஊமையா படைச்சதால நீ மட்டும் கஷ்டப்படலை. நானும்தான் கஷ்டப்படுறேன். நீ எப்ப வீட்டை விட்டுப் போவேன்னு எதிர்பார்த்துக் காத்திருந்து காத்திருந்து கண்ணு பூத்து போச்சு.

இனி நீ போகப் போறதில்லை.

உன்னை யாரும் கல்யாணமும் பண்ணிக்கப்போற தில்லைன்னு தெரிஞ்சு போச்சு. உனக்குத்தான் வாழ்க்கை கிடையாது. எனக்குமா வாழ்க்கை கிடையாது?''

தொடர்ந்து படபடவென்று வெடிப்பு அவளிடம். மைதிலியின் கண்கள் கொப்பளிக்க ஆரம்பித்துவிட்டன!

காயத்ரி அதற்குமேல் அங்கே நிற்கவில்லை. குடத்தோடு விலகிச் சென்றாள். சிறிது தூரம் சென்றவள் திரும்பிப் பார்த்து ''நான் கணேசனைக் காதலிக்கற விஷயத்தை உன் கல்யாணத்தை உத்தேசிச்சுதான் வெளிய சொல்லலை. நீ போய் அப்பா, அண்ணான்னு யார்கிட்ட வேணும்னா சொல்லிக்கோ... அதைப் பத்தி கவலையில்லை. இனியும் உனக்குப் பயந்துண்டு ஒளிஞ்சுக்க நான் தயாரில்லை...'' மைதிலியின் கண்கள் நீரை அருவியாக்கி யிருந்தன.

**உ**பாசகர் தன் குடிசையில் நிஷ்டையில் இருந்தார். எட்டிப் பார்த்த சாமிநாதனுக்குள் அவரது நிஷ்டையைக் கலைப்பதா, இல்லை திரும்பிச்செல்வதா என்று தடுமாற்றம். இறுதியில் திரும்பிவிடுவது நல்லது- அதுதான் இங்கிதம் என்று தோன்றியது. திரும்பினான். குடிசைவாசலைத் தாண்ட காலெடுத்த போது உபாசகர் குரல் அவனைத் தடுத்தது.

''நில் சாமிநாதா...''

உடனே திரும்பிப் பார்த்தான்.

அவரோ நிஷ்டையில்தான் இருந்தார்.

''என்னப்பா... ஆச்சரியமா இருக்கா?''

''ஆமாம் சாமி. எப்படிக் கண்ணைத் திறக்காம, திரும்பியும் பார்க்காம நான் வந்திருக்கறத கண்டுபடிச்சீங்க.''

''ஒரு உபாசகன்கிட்ட இப்படி எல்லாமா சாதாரண கேள்விகள் கேட்கறது? நீ வந்த விஷயத்தைச் சொல்.''

''நான் கேட்டது சாதாரண கேள்வி இல்ல சாமி. அது எப்படின்னு சொன்னாதான் நான் வந்த விஷயத்தைச் சொல்வேன்.''

''அப்படியா...? நான் சொல்வேன். ஆனா உனக்குப் புரியாதேப்பா.''

''புரியாதுன்னா..? தமிழ்லதானே சொல்வீங்க?''

''பரவாயில்லியே... ஜோக்கூட அடிக்கிறியே!''

''நீங்க சொல்லுங்க. எப்படி நான்தான்னு கண்டுபடிச்சீங்க?''

''நீதான்னு மட்டுமில்லை... இப்ப நீ இங்க எதுக்கு வந்திருக்கேங்கறதுகூட எனக்குத் தெரியும்.''

''அப்படியா?''

''இல்லயா பின்ன... மைதிலி கல்யாணம் நான் சொன்ன மாதிரியே நடக்காம போயிடுத்து. அது எப்படின்னும் தெரிஞ்சுக்கற ஆர்வத்துல வந்திருக்கே...''

''கரெக்ட் சாமி... ஆனா எதுக்கு வந்திருக்கேன்னு கண்டு பிடிக்கறது ஒண்ணும் பெரிய விஷயமில்லை. சினிமா தியேட்டருக்குப் போற ஒருத்தர் சினிமா பார்க்கத்தான் போவார்னு சொல்றது பெரிய விஷயமா? அந்த மாதிரிதான் இதுவும்.''

''சரி... எப்படி இருக்கா அந்தப் பொண்ணு மைதிலி?''

''கஷ்டம்தான்... எவ்வளவோ கற்பனைகளோட இருந்தா. எல்லாம் தரைமட்டமா பேச்சே சாமி...''

''கனவு தரைமட்டமாகலை... அவ காப்பாற்றப்பட்டிருக்கா. இப்ப அவ சந்தோஷமா இருக்கணும். ஆனா துக்கத்துல இருக்கணும்கறது காலநேரங்களோட விருப்பம். என்ன பண்றது?''

''பாத்தீங்களா... என் கேள்விக்கு இன்னும் நீங்க பதிலே சொல்லலை.''

''எப்படி நீதான்னு நான் கண்டுபிடிச்சதைக் கேக்கறியா?''

''ஆமாம்...

''சில மந்த்ரங்கள் இருக்கு. அதைப் பல கோடி முறை ஜபிக்கறவாளுக்கு அந்த மந்த்ர உச்சாடன அலைகளால உடம்புல சில புது சக்தி உருவாகும். அதன்படி கண் மூடி இருந்தாலும் பார்க்க முடியும். போதுமா?''

''எப்படி... எப்படி?''

''ஆரம்பிச்சுட்டே பார்த்தியா... இப்ப டாக்டர்கிட்டே போறே. அவர் ஊசி போடுறார். அது மருந்துன்னு தெரியும். என்ன மருந்து, எதுல பண்றது, எப்படிப் பண்றான்னுல்லாமா கேப்பே...?''

''நான் கேப்பேன் சாமி...''

''ஆனா எந்த டாக்டர் பதில் சொல்வான். 'பேஷண்ட் காத்துக்கிட்டிருக்கார் கிளம்புங்க'ம்பா... நீயும் இப்பக் கிளம்பு.''

''என்ன சாமி... எதுக்கு இப்பத் துரத்தறீங்க...?''

''எனக்கும் நிஷ்டைக்கு இடைஞ்சல் - உனக்கும் வெளிய ஒரு முக்கியமான வேலை இருக்கு...''

''எனக்கு முக்கியமான வேலையா?''

''ஆமா. ஒரு உயிர் உனக்காகக் காத்துண்டுருக்கு. கிளம்பு...''

''வீட்ல அம்மாவைச் சொல்றீங்களா?''

''ஆமாம். இவளும் அம்மாதான்... ஆனா இவ சாதாரண அம்மா இல்ல. இந்த லோகத்துக்கே அம்மா. கிளம்புப்பா...''

உபாசகர் தள்ளிவிட்டார். சாமிநாதனாலும் அதற்குமேல் தாக்குப்பிடிக்க முடியவில்லை. அரைமனதாக புறப்பட்டான்.

உபாசகர் கடைசி வரை பிடிகொடுக்காமல் சமாளித்து விட்டதாகத் தோன்றியது.

வெளியில் வாழைத்தோப்பின் சில்லென்ற காற்று.

அனுபவித்தபடி நடந்தான்.

ஒரு இடத்தில் வாழைத்தாரை காய்ந்த இலையால் மூடிக்கட்டியிருந்தான். அங்கே அணில் கூட்டம் களேபரம் பண்ணியிருந்தது. திரும்ப அதை இழுத்து மூடிக்கட்டிவிட்டு, கொஞ்சம் போல கருவேல முள்ளையும் வெட்டிப் போட்டுவிட்டு வரப்பு வழியாக நடையைத் தொடர்ந்தான்.

வயல் வெளிகளில் யாரும் இல்லை. எல்லோரும் களை எடுப்பு முடிந்து போய்விட்டிருந்தனர்.

மேற்கு திசையிலும் குலாப்ஜாமுன் கணக்காய் சூரியன். பார்க்க ரம்யமாக இருந்தது.

ஆனாலும் மைதிலிக்கு நடந்த அந்த துரதிர்ஷ்டமான சம்பவம் கொஞ்சம் வலியை உண்டாக்கி 'இந்தப் பெண்ணுக்கு மட்டும் ஏன் இப்படி நடக்கிறது?' என்ற கேள்விக்குள் அவனை அழுத்தியபோது எதிர்சாரியில் நிஜமாலுமே மைதிலி. வரப்பு ஒன்றின்மேல் வேகமாக நடந்து கொணடிருந்தாள்.

எங்கே போகிறாள்?

பின்தொடர்ந்த சாமிநாதனுக்கே பகீர் என்றது. அவள் அந்த வயற்காட்டின் பிரதானமான கிணறு ஒன்றை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள்.

கிணற்றுத் திட்டின் கரையில் நின்றவள் இறுதியாக கடவுளை வணங்குகிற மாதிரி கைகளையும் கூப்பினாள்.

சாமிநாதனுக்குப் புரிந்துவிட்டது அவள் தற்கொலைக்கு தயாராகிவிட்டது.

''மைதிலீஈஈ...!'' அலறினான்.

அது அவள் காதில் விழவில்லை. மாறாக அவளோ பொதேர் என்று கிணற்றில் விழுந்தாள்.

சாமிநாதன் காலிலும் ஒலிம்பிக் பந்தயத்தில் ஓடுவது போல ஒரு வேகம்.

ஓடிவந்தவன் வந்த வேகத்தில் அப்படியே கிணற்றில் விழுந்தான். ஒன்று, இரண்டு, என்று மூன்றாவது முழுக்குப் போடப் போனவளின் தலைமுடியை எகிறிப் பற்றினான். அப்படியே இழுத்துக்கொண்டு கரைப்பக்கம் ஒதுங்கினான்.

நல்லவேளை.... அவள் மூர்ச்சையாகவில்லை.

அவன் அவளைக் காப்பாற்றிவிட்டதற்காக கோபத்தில் அவன் நெஞ்சில் குத்தினாள்.

''பைத்தியமே... உனக்கு என்ன வந்தது?''

அவனும் தீனமாய் அலறினான்.

அவளோ மளுக்கென்று தன்னை மறந்து அவன் மார்பின் மேல் சாய்ந்தாள். விசும்பி விசும்பி அழத் தொடங்கினாள். அவனுக்குள் இதயம் தாறுமாறாக துடிக்க ஆரம்பித்தது.

பானுவைத்தான் இப்படி எல்லாம் அணைத்துக்கொள்ள வேண்டும் என்று எண்ணியிருந்தான்.

ஆனால், அது மாறிப்போய் மைதிலி... ஐயோ கூடாது! பதைத்துப்போய் அவளை ஒதுக்கிவிட்டான்.

அவளோ விடுவதாக இல்லை.

''நான் துர்அதிர்ஷ்டக்கட்டை.... என்னை ஏன் காப்பாற்றினாய்?'' என்று அவள் கேட்காமல் கேட்டாள்.

''நீ ரொம்ப அதிர்ஷ்டசாலி... அதான் உனக்கு எந்தத் தப்பும் நடக்கமாட்டேங்குது. காலைல அந்த தப்பான மாப்பிள்ளையைத்

தடுக்க ஒரு பிரபல பாடகரே கோவிலுக்கு வந்தார். இப்ப நான் வந்திருக்கேன். உண்மைல நீ சந்தோஷப்பட வேண்டிய தருணம் இது.''

அவன் சொன்னதிலும் உண்மை இருக்கத்தான் செய்தது.

அவளும் கொஞ்சம் போல யோசிக்க ஆரம்பித்தாள்.

''உனக்கு ஆனாலும் தாழ்வுமனப்பான்மை மைதிலி. அதுவும் ஊமைங்கற தாழ்வு மனப்பான்மை. ஆனா நீ ஒண்ணும் பிறவி ஊமை இல்ல. நடுவுல வந்த இந்த பாதிப்பு எப்ப வேணா சரியாகலாம். பழையபடி நீ குயில் போலப் பாடலாம். எனக்கு இப்பவும் உன் குரல் ஞாபகம் இருக்கு. உன் வீட்ல நான் சங்கரனோட பாடம் படிக்க வரும் போதெல்லாம் பாடுவியே...''

அவன் கேள்வி அவளை ஃப்ளாஷ்பேக்கில் தள்ளியது. மனதுக்கும் இதமாக இருந்தது.

தன்னை மதித்து தனக்கு ஆறுதலாகப் பேசவும் ஒரு உயிர். அவளது உயிருக்குள் ஒரு வித நம்பிக்கை ஊற்றெடுக்கத் தொடங்கியது.

இதோ பார்... இனி நீ இந்த மாதிரி நடந்துக்கக்கூடாது. இது கோழைகளோட செயல். என் மைதிலி ஒரு வீரமான பொண்ணுன்னு நான் நினைச்சுக்கிட்டிருக்கேன். இப்படியா அசட்டுத்தனமா நடந்துக்குவே?''

அவன் பேசப்பேச அவளுக்குள் வானில் மிதப்பது போல இருந்தது. காயத்ரியால் அவள் பேச்சால் ஏற்பட்ட மனக்கீறல் களுக்கு சாமிநாதன் இதமாக மருந்து பூசுவதுபோல் இருந்தது.

''இப்ப சொல்றேன்... இனி நீ எந்தக் காலத்துலயும் இப்படி ஒரு முடிவுக்கு வரக்கூடாது. உனக்கு எதுன்னாலும் என்கிட்டச் சொல். நான் இருக்கேன். எங்க... 'நான் இனி தற்கொலை பத்தியே சிந்திக்கமாட்டேன்'னு சொல்லிச் சத்தியம் செய் பார்க்கலாம்?''

அவன் கை நீளா, அவள் கையும் அவன் கையைப் பற்றி சத்தியம் செய்தது.

அவள் வரையில் அவள் சத்தியம் செய்வதாக நினைக்க வில்லை. 'எனக்கு இனி ஆயுள் பர்யந்தம் நீதான்' என்கிறாற் போல நினைக்கிற மாதிரிதான் தோன்றியது.




## அன்று

மர்மமாய் சிரித்த வீரேந்திரன் இறுதியாக காபாலிகர்களைத்தான் பார்த்தான்.

அதுவே அவன் அவர்கள் பக்கம் சாய்ந்துவிட்டதைச் சொல்லாமல் சொன்னது.

ஜோதிடர் உடனேயே பெருமூச்சுவிட்டார்.

''விதி வலியது...'' என்றார் எல்லோருக்கும் கேட்கும் படியாக.

''ஆம்... வலியதுதான்!'' பதிலோடு அடுத்தநொடி ஒருவனது திரிசூலம் அவரது அடிவயிற்றில் ஏறியது. கண்கள் தெறித்து விழாத குறையாக விக்கித்துப் போன ஜோதிடர் ''காட்டுமிராண்டிகளே, அவசரப்பட்டுவிட்டீர்கள்... அனுபவிப்பீர்கள்.'' என்கிற வார்த்தைகளுடன் அப்படியே தலையைச் சரித்து உயிரைவிட்டார்.

முட்டுக்காலிட்டு சோகப்பதுமைபோல அமர்ந்திருந்தாள் அபராஜித வைஜெயந்தி. அவளைச் சுற்றி ஒருவரும் இல்லை. நெடுநேரத்திற்குப் பிறகு மகா மந்திரி மகாதேவராவ்தான் வந்தார். அவள் சோகமாக அமர்ந்திருப்பதைப் பார்த்துச் சிரித்தார். அவளோ கண்ணீருடன் நிமிர்ந்தாள்.

''எதற்கு இப்பொழுது அழுகிறாய்?''

''அழாமல் என்ன செய்வது...? யாரைத் தவிர்க்க வேண்டும், யாரைப் பார்க்கவே கூடாது, எங்கே வரவே கூடாது என்றெல்லாம் எண்ணி அதற்காக வீட்டைவிட்டு வெளியேறினேனோ அது அர்த்தமற்றதாகிவிட்டது. ஒளியத் தெரியாதவன் தலையாரி வீட்டிலேயே ஒளிந்தது போலாகிவிட்டது என் நிலை.''

''உன் பெயரை முதலில் சொல். பிறகு நீ யாரென்று கூறு!''

''என்னைத் தெரியாத ஆடவர்களும் இந்த பூமியில் உண்டா என்ன?''

''ஓ... நீதான் ஆட்டக்காரி அபராஜித வைஜெயந்தியா?''

அவளிடம் மௌனம்.

''நீ தாசிதானே...? ஆடவர் சேர்க்கை என்பதுதானே உனக்கு விதிக்கப்பட்ட தர்மம்?''

'அதற்குப் பேர் தர்மமில்லை. கர்மம்?''

''கர்மமா... என்ன சொல்கிறாய்?''

''உங்களுக்கு ஒரு சகோதரி இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் அவளை ஒருவனோடு வாழவைக்கச் செய்வீர்களா... இல்லை பலருடனா?''

''குடும்பப் பெண்ணுக்கும் தாசிக்கும் உள்ள வேற்றுமை தெரியாமல் இது என்ன கேள்வி?''

''நான் தாசியில்லை. துரதிர்ஷ்டவசமாக அந்தக் குலத்தில் பிறந்துவிட்ட ஒருத்தி. இந்த நொடி நான் எந்த ஆண் மகனையும் நினைத்துக்கூட பார்த்ததில்லை.''

''காரணம்....?''

''பிறப்பை வைத்து என்னை மட்டுப்படுத்துவதை என்னால் ஏற்க முடியவில்லை!''

''அப்படியானால் உன் எதிர்காலம்?''

புல் முதல் பூண்டு வரை புழு முதல் பூச்சிவரை சகலத்தையும் படைத்து அவைகளுக்கெல்லாம் ஒரு வழியைக் காட்டும் அந்த ஈசன் என்னைத்தானா கைவிட்டு விடுவான்...?''

சற்றே பெருகிய கண்ணீருடன் வைஜெயந்தி கேட்டவிதம் மகாதேவர் முகத்தில் ஒருவிதப் பெருமிதத்தைத்தான் உண்டு பண்ணியிருந்தது.

அவள்கூட அவரது பட்டு ஆடையைத்தான் அவசர நிமித்தம் உடம்பில் சுற்றிக் கொண்டிருந்தாள். அதைக் கவனித்தபோதுதான் பிறந்தமேனியாகத் தன்னை மகாதேவர் பார்த்துவிட்டதும் தொட்டுத் தூக்கி பின் முதலுதவி அளித்து ஆடை தந்தது வரையும் ஞாபகத்தில் வந்தது.

அந்த ஞாபகங்களின் எதிரொலியாக குப்பென்று வியர்த்தும் விட்டது. மகாதேவர் அதையும் கவனித்துக்கொண்டுதான் இருந்தார். அவள் தவறிப் போய் தாசிகுலத்தில் பிறந்தவிட்டவள் என்பதை அந்த நொடியே உணர முடிந்தது.

''சரி... நீ சற்று ஓய்வெடு. நான் பிறகு வருகிறேன்.''

அவர் அவளுக்கு ஓய்வுதர எண்ணி சற்றே விலக முயல

''நில்லுங்கள்...'' அவள் தடுத்தாள்.

அவரும் திரும்பினார்.

''என் இல்லத்தில் என்னைத் தேடிக்கொண்டிருப்பார்கள்.''

''தெரியும்...''

''நான் புறப்படுகிறேன். இங்கே நான் இனியும் இருக்க விரும்பவில்லை.''

'' உன் எண்ணமும் சரிதான். ஆனால், உன் மன ஓட்டத்தை அறிந்து கொண்டுவிட்ட நிலையில் உன்னை இங்கிருந்து அனுப்ப எனக்குச் சங்கடமாக இருக்கிறது.''

''என்ன சொல்கிறீர்கள்...?''

''நீ குலப்பெண்களைப் போல வாழவிரும்புகிறாய் அல்லவா?''

''ஆமாம். அதுதான் என் லட்சியம், கனவு, எல்லாம்.''

''அப்படி இருக்க நீ திரும்ப உன் இல்லத்திற்குச் சென்றால் உன் தாய் உன் விருப்பப்படி வாழ அனுமதிப்பாளா?''

மந்திரியின் கேள்விமுன் மடங்கித்தான் போனாள் வைஜெயந்தி.

''உனக்கு நான் சில முக்கிய தகவல்களைத் தரப் போகிறேன். கவனமாகக் கேட்டுக்கொள்.''

மந்திரியின் பீடிகை அவளை நிமிர்த்தியது.

''நான் உன் ஆட்டம் பற்றி கேள்விப்பட்டு அதை ரசிக்கத்தான் துர்காராமை அனுப்பிவைத்தேன். உன்னையே அனுபவிப்பதற்காக அல்ல...''

அவரின் பதிலால் அவளுக்குள் ஒருவித எழுச்சி நிலை.

''இந்த நொடி நான் எந்தப் பெண்ணையும் தீண்டியதில்லை. எனக்கென்று சில முடிவுகள் இருந்தன. அதன்படி வாழ்நாளில் மனைவியைத் தவிர வேறு எந்தப் பெண்ணையும் நான் தீண்டக்கூடாது என்கிற சங்கல்பத்திலும் இருந்தேன். ஆனால் அதை இன்று நவக்கிரக மாளிகை தகர்த்துவிட்டது.''

மந்திரி மகாதேவரின் பதிலால் அவளிடம் ஆச்சரியப் பேரலைகள். 'காமுகனாக, அதிகார வெறிபிடித்த சராசரி

ஆண்மகனாகத்தான் அவர் இருக்கக்கூடும் என்று நினைத்தால் இப்படி ஒரு மாறுபட்ட மனிதரா?'

அவள் வெறிக்க அவர் தொடர்ந்தார்.

''அபராஜிதா... உன்னைப் பார்க்கக்கூடாத கோலத்தில் பார்த்துவிட்டேன். எனக்கும் வாலிப வயது. என்னால் மனக்குதிரையை அதற்குண்டான லாயத்தில் பூட்ட முடியவில்லை. இருந்தும் இந்த நிமிடம் நான் கட்டுப்பாடோடுதான் இருக்கிறேன்.''

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''புரியவில்லையா?''

''பாதி புரிகிறது... மீதி புரியவில்லை!''

''அந்தப் புரிந்த பாதியைச் சற்றுச் சொல்லேன்.''

''நீங்கள் என்னை நேசிக்கிறீர்களா?''

''ஆமாம்... அதுமட்டுமல்ல... உன்னை என் வாழ்க்கைத் துணையாகவே ஏற்றுக்கொள்கிறேன்.''

''உண்மையாகவா?''

''நான் சத்தியம் செய்தால்தான் நம்புவாய் என்றால் சத்தியம் செய்கிறேன்.''

''இல்லை... என்னால் நம்பமுடியவில்லை. நீங்கள் அரச வம்சத்தைச் சேர்ந்தவர். நானோ தாசிகுலத்தைச் சேர்ந்தவள்.''

''ஆனாலும் நீ ஒரு சேற்றில் மலர்ந்த செந்தாமரை.''

''இந்த மாதிரி பேசி என்னை மயக்காமல் என்னை என் வழியே போகவிடுங்கள்.''

''நான் மயக்கவில்லை. காவிரித்தாய் எனக்கு என் வாழ்க்கைத் துணையைக் காட்டியருளியதாக எண்ணுகிறேன்.''

''உங்கள் எண்ணத்திற்கு தஞ்சை அரசர் ஒப்புதல் அளிப்பாரா?''

''காதலும் திருமணமும் தனிமனித உரிமை. கடவுளிடம்கூட இதற்காக நான் அனுமதி கேட்கமாட்டேன்.''

''அடேயப்பா! அவ்வளவு தீர்க்கமான கொள்கையா உங்களுக்கு?''

''ஆமாம்... இருக்கக்கூடாதா?''

''இல்லை... இப்படி எல்லாம் கேட்டால் என்னால் பதில் கூற முடியாது. எனக்குச் சற்று யோசிக்க அவகாசம் தாருங்கள்.

''எவ்வளவு நாள் வேண்டுமானாலும் எடுத்துக்கொள். எனக்கு ஆட்சேபமில்லை.''

மகாதேவர் அவளைத் தனிமையில் விட்டுவிட்டு அந்த அறையைவிட்டு வெளியில் வந்தார்.

எதிரில் சோகமே வடிவாய் துர்காராம்.

''துர்காராம்...''

''ஒரு அசம்பாவிதம் நடந்துவிட்டது!''

''அசம்பாவிதமா?''

''ஆமாம்... சாந்திப்பரிகார பூஜை செய்ய வந்த சோதிடரை யாரோ குத்திக் கொன்றுவிட்டார்கள்.''

''அப்படியா?''- மகாதேவர் வாய் பிளந்து கொண்டது.

''உடல் நமது மாளிகை வாசலில்தான் கிடக்கிறது!''

''எப்படி... எப்படி...? யார் செய்த வேலை இது?''

''என்னவென்று சொல்வேன்? எதையென்று சொல்வேன்? தோடிபுரம் இப்பொழுது பழைய தோடிபுரமே இல்லை.''

''விளக்கமாகச் சொல்...''

''நெடுநாட்களாக இங்கே மழையே இல்லை. காவிரியும் வறண்டுவிட்டது. ராசிக்கிணறுகள்கூட அதலபாதாளத்திற்குப் போனகதை உங்களுக்குத் தெரியுமே...''

''அதை எல்லாம் சீர்படுத்தத்தான் நமது அரசர் மேற்கு வங்கத்தின் தலைசிறந்த ஜோதிடர் என்று சோமநாத சட்டர்ஜியை இங்கே அனுப்பினார். அவரது சாந்தி பரிகாரப் பூஜையும் பலனளித்துதான் மழையும் பெய்துவிட்டது தெரிந்த கதைதானே?''

''கொலையை யார் செய்தார்கள்? அதைப் பற்றி சொல்.''

''தவறு மந்திரி அவர்களே... நமது சோதிடரின் பரிகார பூஜைகளால் மழைபெய்யவில்லை.''

''மழைக்கும் இந்தக் கொலைக்கும் காரணம் ஒரு ருத்ரவீணை...''

''ருத்ரவீணையா? என்ன சொல்கிறாய்?''

''ஆமாம்... வடக்கில் இருந்து ஒருவர்... பாபா என்கிற பெயரோடும் ருத்ரவீணை ஒன்றோடும் இந்தத் தோடிபுரத்திற்கு என்று வந்தாரோ அன்று ஆரம்பமாயிற்று சிக்கல்...''

''ருத்ரவீணை... பாபா என்று என்னவெல்லாமோ கூறுகிறாயே...?''

''கேள்விப்பட்டதைக் கூறுகிறேன். அதைப் பற்றி விவரமாகத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் இந்த நொடி உங்கள் பிடியில் இருக்கும் அந்த தாசிப்பெண் அபராஜித வைஜெயந்தியிடம் சென்று அந்த பாபா பற்றி கேட்டுப் பாருங்கள். அவளே அவரைப்பற்றி எல்லா விவரங்களையும் கூறிவிடுவாள்.''

''அப்படியா...? இப்பொழுதே விசாரிக்கிறேன். நீ சோதிடர் உடலை நல்லடக்கம் செய்ய ஏற்பாடு செய்.''

''சோதிடர் ஒரு அந்தணர். அவரது உடலை எரியூட்டுவதுதான் மரபு.''

''அது எனக்கும் தெரியும். இருப்பினும் அவரது உறவினர்கள் யாரும் இல்லாத நிலையில் அவரை எரித்துவிட்டால் நாளை யாராவது அவரைப் பற்றி கேட்கும்போது நாம் சுட்டிக் காட்ட ஒரு தடயம்கூட இருக்காது. நீ பேசாமல் நான் சொன்னது போல் செய்...''

''உத்தரவு... அப்படியானால் மாளிகையை ஒட்டிய நந்தவனத்திலேயே அவரைப் புதைக்க ஏற்பாடு செய்கிறேன்.''

''அவ்வாறே செய்...''

மகாதேவர் அவனை முடுக்கிவிட்டு நேராக அபராஜிதவைஜெயந்தியை நோக்கித்தான் நடந்தார். திரும்ப வந்து நிற்பவரைப் பார்த்து அவளிடமும் ஒருவிதப் பதட்டம.

''பதட்டப்படாதே... உன்னிடம் சில உண்மைகளைத் தெரிந்துகொள்ள வந்திருக்கிறேன்.''

''என்ன உண்மைகள்?''

''உனக்கு பாபா என்பவரைத் தெரியுமா?''

மகாதேவர் அப்படிக் கேட்டதுதான் தாமதம் அபராஜித வைஜெயந்தி முகத்தில் ஒரு அதீத மலர்ச்சி.

''பாபா இன்று இந்த தோடிபுரத்திற்கே மிக பிரசித்தமான ஒருவர். அவரைப்போய் தெரியுமா என்று கேட்கிறீர்களே?''

''வட இந்தியரோ?''

''ஆமாம்... எதற்காகக் கேட்கிறீர்கள் என்று நான் அறியலாமா?''

''அவரது ருத்ரவீணைக்காக பலர் போட்டி போடுவது போல் கேள்விப்பட்டேன். உண்மையா?''

''எனக்கு அதெல்லாம் தெரியாது. ஆனால் அது இறைவனின் வீணை என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

இல்லாவிட்டால் வறண்டு கிடந்த இந்த பூமிக்குத்தான் மழை வந்திருக்குமா... இல்லை எனது அம்மம்மாதான் இழந்த கண்களைத் திருப்பவும் பெற்றிருப்பாளா?''

''வீணையால் இசை எழுப்பலாம்... இதெல்லாம் எப்படி?''

''அதுதான் சப்த சாகஸம். அது இந்தத் தோடிபுர ஆலயத்தின் தனிப் பெரும் பொக்கிஷம். இந்த ஊருக்கே நன்மையளிக்கத் தொடங்கிவிட்டது. சாஸ்திரிகளுக்கும் அதுவே உயிர்ப்பிச்சை யளித்துள்ளது.''

''எல்லாமே எனக்கு வியப்பாக இருக்கிறது. ஒருபுறம் மகத்தான நன்மைகள். மறுபுறத்தில் இந்த மண்ணுக்கு எந்தத் தீங்கும் வராமல் இருப்பதற்காக வழிகாட்ட வந்த சோதிடரே கொலை செய்யப்பட்டுவிட்ட கொடுமை...''

''கொலையா...?''- அபராஜிதத்தின் புருவத்தில் ஒரு அரிவாள் வெட்டே விழுந்தது. மந்திரி மகாதேவர் தீவிர சிந்தனையோடு அங்கிருந்து விலகத் தொடங்க அபராஜிதா அவரைத் தடுத்தாள்.

''உங்களைத்தான்... சற்று நில்லுங்கள்.''

''என்ன அபராஜிதா?''

''எனக்கு என் தாயையும் பாட்டியையும் காண வேண்டும் போல் இருக்கிறது.''

''எதற்காக என்னிடம் கேட்கிறாய்... உன் விருப்பம்போல நீ இங்கிருந்து செல்லலாம்.''

''உங்கள் பெருந்தன்மைக்கும் கண்ணியத்திற்கும் என் நன்றிகள். அதே சமயம்...'' அவள் ஏதோ கூற விரும்புகிறாள் என்பது மகாதேவருக்குப் புரிந்துவிட்டது.

''ம். சொல்... என்ன தயக்கம்?''

''என்னை... என்னை...''

''உன்னை?''

''இல்லை... என்னைக் கைபிடிப்பதாகச் சற்றமுன் சொன்னீர்கள் அல்லவா?''

''ஆமாம்...''

''அது குறித்து...''

''அது குறித்து?''

''எனக்கு வெட்கமாக இருக்கிறது. நான் எப்படி அதைப்பற்றி உங்களிடம் சொல்வது என்றே எனக்கு விளங்கவில்லை.''

''புரிகிறது.... உன் முகத்தில் குங்குமம் குழைத்துப் பூசியதுபோல தென்படும் வெட்க உணர்ச்சி ஒன்று போதும்-உன் மனது என்ன நினைக்கிறது என்பதை நானறிய.

இனிவரும் ஒரு நல்ல நாளில் உன்னை ஊரறியத் திருமணம் செய்து கொள்வதில் எனக்கு எந்த ஒரு ஆட்சேபமும் கிடையாது.''

''இதை... இதை...''

''இதை?''

''நீங்கள் என் தாயிடம் கூறிவிட முடியுமா?''

''அவ்வளவுதானா... தாராளமாக...''

''அப்படியானால் இப்பொழுது நீங்களும் என்னுடன்...''

''தாராளமாக வருகிறேன். அதற்குமுன் ஜோதிடரின் நல்லடக்கம் உள்ளது. அது தொடர்பான செய்தியை தஞ்சைக்குத் தெரிவிக்கும் பணியும் உள்ளது. உன்னால் சிறிது நேரம் காத்திருக்க இயலுமா?''

''தாராளமாக... உங்களுக்காக இனி நான் காலமெல்லாம் கூடக் காத்திருப்பேன்.''

அபராஜித வைஜெயந்தி பதிலைச் சொன்ன வண்ணம் தன்னை ஆற்றில் இருந்து தள்ளிக்கொண்டு வந்து சேர்த்த அந்த நீராழிக்குளத்தைப் பார்த்தாள்.

அதில் நீர்மட்டம் வெகுவாக கூடியிருந்தது.

அவளுக்கும் மிக வியப்பாகிவிட்டிருந்தது.

**மா**ளிகையை ஒட்டிய நந்தவனப்பகுதியில் ஒரு மரத்தை ஒட்டிய இடத்தில் சவ அடக்கத்திற்கான அந்தக் குழியை வெட்டி முடித்திருந்தான் வெட்டுவாணியன். அவன் உடம்பெல்லாம் வியர்வை பூத்திருந்தது. அருகில் நின்று பார்த்துக்கொண்டிருந்த துர்காராமிற்குள் பளிச்சென்று ஒரு புதிய எண்ணம்.

அருகிலேயே கிடந்தது ஜோதிடரின் கோர உடல்.

அடிவயிற்றில் ரத்தம் உறைந்து கிடந்தது. அதைப் பார்த்துச் சிந்திக்கும் சமயமாக மகாதேவரும் வந்து சேர்ந்தார். அவரும் ஜோதிடரின் சடலத்தைப் பார்த்து முகம் சுளித்தார்.

''எனக்குத் தொண்ணூறு வயது என்று ஆருடம் சொன்ன ஜோதிடர் தன்னுடைய ஆயுளைப்பற்றி தெரிந்துகொள்ளாமலே போய்விட்டார்.'' என்றார் மகாதேவர்.

''மந்திரியாரே... எனக்குள் இப்பொழுது ஒரு புதிய எண்ணம்.''

''என்ன?''

''ஜோதிடர் உயிர் பிழைக்க ஒரு வாய்ப்பு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.''- துர்காராம் சொன்னதைக் கேட்டு மகாதேவர் ஒரு இளக்காரச் சிரிப்பு சிரித்தார்.

''இறந்தவன் பிழைத்ததாக வரலாறு இல்லை என்று சொல்லப் போகிறீர்கள்... அப்படித்தானே?''

''உனக்கே தெரிந்திருக்கிறதே... பிறகென்ன?''

''சற்றுச் சிந்தித்துப் பாருங்கள்... இந்த ஊருக்கு பாபா என்று ஒருவர் வந்திருப்பதாகக் கூறினேன் அல்லவா?''

''ஆமாம்...''

''அவர்கூட இந்த ஜோதிடர்போல இறந்துவிட்ட சாஸ்திரி ஒருவருக்கு உயிர் கொடுத்ததைக் கேள்விப்பட்டிருப்பீர்கள்.''

மகாதேவர் மனதில் அடுத்த நொடியே பூச்சி பறக்கத் தொடங்கிவிட்டது.

''அபராஜித வைஜெயந்தியின் இல்லத்தில்தான் அவர் தங்கியிருந்தார்...''

''அப்படியானால் இப்பொழுது?''

''அந்த சாஸ்திரிகளின் இல்லத்தில் இருப்பதாகத் தகவல்.''

''சரியான தருணத்தில் ஞாபகப்படுத்தினாய். நல்லடக்கம் சிறிது நேரம் நிற்கட்டும். நீ இங்கேயே இந்தச் சடலத்திற்குக் காவலாக இரு. நான் போய் அவரை இங்கே அழைத்து வருகிறேன்.''

''சரியான முடிவு... அபராஜிதாவையும் அழைத்துச் செல்லுங்கள்.''

''ஆம்... அவளும்தான்!''

மகாதேவர் ஒரு அதிசயத்தைக் காணத் தயாராகிவிட்டது அவர் முகத்தில் நன்கு தெரிந்தது.

**வீ**ட்டு வாசலில் தேங்கிய சாரட்டைப் பார்த்து சதாசிவ சாஸ்திரிகள் வியப்பின் உச்சிக்கே போய்விட்டார்.

சாரட் முகப்பில் பறக்கும் அந்தக் காவிக்கொடி அவருக்கு வெகு பரிச்சயம். சாரட்டில் இருந்து மந்திரி இறங்கிவர அவருக்குக் கட்டியம் கொடுத்தபடி இரண்டு கட்டியங்காரர்கள் முன்னால் வந்தனர்.

''மகாராஜ ராஜஸ்ரீ மராத்திய மாவேந்தர் சாந்தாஜியின் ராஜ்ய பரிபாலகர், சங்கீத வித்தகர், அதிருத்ர வீரர் மகாமந்திரி மகாதேவராவ் பராக்...!''

கட்டியக் குரல், உள்ளே ஒரு துண்டை விரித்து நமாஸ் செய்ய ஆரம்பித்திருந்த பாபாவின் காதிலும் விழுந்தது. இருந்தும் அவர் கவனத்தைக் கலைத்துக்கொள்ளாதபடி தொடர்ந்து நமாஸில் ஈடுபடலானார்.

சாஸ்திரிகள் மகாமந்திரியை எதிர்பார்க்கவில்லை.

கூடவே அபராஜிதா'வும் வந்தால் எப்படி இருக்கும். அவளது மலர்ந்த முகத்தைப் பார்த்தபொழுது அவளுக்கு நிச்சயம் சிக்கல் எதுவும் இல்லை என்றே அனுமானித்தார்.

''வரவேண்டும்... ஒரு அரசவைப் பிரதிநிதி என் இல்லம் ஏகியது குறித்து மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன்.''

''நீங்கள்தான் சதாசிவ சாஸ்திரிகளா?''

''ஆமாம்.... தயவுசெய்து அமருங்கள்...''- சாஸ்திரிகள் உபசரிக்க, அவர் மனைவி பாலா ஓடிச்சென்று பட்டுப்பாயை எடுத்து வந்து விரித்தாள். அவரும் சுணக்கமின்றி அதில் அமர்ந்தார். அபராஜித வைஜெயந்தி மட்டும் சாஸ்திரிகளின் மனைவி இருக்குமிடம் சென்று நாணத்துடன் நின்று கொண்டாள்.

''அபராஜிதா என் மகளைப்போல்... அவளுடன் நீங்கள் வந்திருப்பது மகிழ்ச்சி தருகிறது. என்ன சேதி என்று அறியலாமா?''

''நல்ல சேதிதான் சாஸ்திரிகளே... உங்கள் மகளைப் போன்ற அபராஜிதாவை நான் மணம் புரிந்து கொள்ள விரும்புகிறேன்.''

மகாதேவர் கூறிய பதில் சாஸ்திரிகளைத் திக்குமுக்காட வைத்துவிட்டது. பாலாவும் கேட்டுவிட்டு கண்களில் பரவசத்தைக் காட்டினாள்.

''மகிழ்ச்சி... மிகவும் மகிழ்ச்சி...!''

''அதேசமயம் இன்னொரு விக்ஞாபனம்.''

''என்ன?''

''இங்கே உங்களுடன் பாபா என்று ஒரு பெரியவர் தங்கி இருக்கிறாராமே...?''

''ஆம்... அவர் இப்பொழுது வழிபாட்டில் இருக்கிறார். வந்துவிடுவார்.'' சாஸ்திரிகள் சொல்லும்பொழுதே பாபா அவர்கள் முன் வந்தார். அவர் முகத்திலும் மகிழ்ச்சி வெள்ளம். வைஜெயந்தி ஓடிப்போய் அவர் காலில் விழுந்தாள்.

''பாபாஜி... இந்த தாசிக்கும் விடியப் போகிறது'' என்றாள்.

பாபா முகத்தில் அதைக் கேட்டு ஒரு வித தெற்றுப் புன்னகை.

''பாபாஜி... என்ன என்று கேட்கமாட்டீர்களா?''

''அறிவேன் மகளே... உனக்கு மணமாகப் போகிறது. சரிதானே?''

''ஆம்... எல்லாம் நீங்கள் இந்த ஊருக்கு வந்த வேளை...''

''தவறு... விதிப்பயன் என்று சொல். விதி என்னும் நதியில் இழுத்துச் செல்லப்படும் துரும்புகள் நாம். அந்த வெள்ளம் செல்லுமிடம் எல்லாம் சென்றாக வேண்டும்.'' பாபா வியாக்யானத்துடன் மகாதேவரைப் பார்க்க, மகாதேவர் சிரம் குனிந்து வணங்கியது. பாபாவும் புன்னகையோடு பதில் வணக்கம் செலுத்தினார்.

''ஒரு அவசரமான உதவிவேண்டும்.''

''கூறுங்கள்.''

''எங்கள் அரசவை விருந்தினராக வந்திருந்த வங்களா நாட்டு ஜோதிடர் ஒருவரை சில பாதகர்கள் அநியாயமாகக் குத்திகொலை செய்துவிட்டார்கள்..''

''இறைவா...!''

''தஞ்சைக்கு வந்தவர் கொல்லப்பட்டார் என்றால் அது எங்கள் ராஜ்யத்துக்கே இழுக்கு...''

அவர் எங்கே வருகிறார் என்பது பாபாவிற்கும் புரிந்துவிட்டது. சிரித்தார்.

''புரிந்திருக்கும் என்று எண்ணுகிறேன்.''

''புரிகிறது... உயிர்ப்பிச்சை கேட்கிறீர்கள். சாஸ்திரிகள் மறு ஜென்மம் எடுத்ததுபோல அவரும் உயிர்பெற்றால் நல்லது என்று எண்ணுகிறீர்கள்.''

''ஆமாம்...''

''சாஸ்திரிகளுக்குத் தர்மக்கணக்குத் துணை செய்தது. பாம்பினால் அவர் நாடிகள் முழுவதும் அடங்கிடாமல் ஒரு சில நாடிகளில் துடிப்பிருந்தது. அதனால் அவரைப் பிழைக்க வைக்க முடிந்தது. ஆனால் ஜோதிடர் பிரேதம் நாடித்துடிப்பு அடங்கிவிட்ட பிரேதம் என்றே என் உள்ளுணர்வு சொல்கிறது. அவரைப் பிழைக்க வைக்க இயலாது. இயன்றாலும் இறைவனின் உத்தரவின்றி என்னால் செயல்படுத்த முடியாது.''

''அப்படியானால் நாங்கள் பழியைச் சுமக்கத்தான் வேண்டுமா?''

''எந்தப் பழியும் இதனால் வராது. அந்த ஜோதிட பிராம்மணர் கொல்லப்பட்டதால் பிரம்ம ராட்சதனாக மறுவடிவம் கொண்டுவிட்டார். அதுவும் நன்மைக்கே...''

''எப்படி?''

''ருத்ரவீணை பற்றி நன்கறிந்தவர் அவர். அதை அடைய அவரும் விரும்பினார். இந்த நிலையில் அவர் இறந்தது ராட்சத ஆன்மாவாகிவிட்டதும் நன்மைக்கே. அந்த வீணையை யாரும் நெருங்கிவிடாதபடி அவர் காவல் காப்பார். எனக்குப் பிறகு யார் என்ற கேள்விக்கு இறைவன் இப்படி ஒருவழியைக் காட்டிய தாகவே கருதுகிறேன்.''

''அப்படியானால்...?''

''எனது நாட்களும் எண்ணப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. அதற்குமுன் எதெல்லாம் நடைபெற வேண்டமோ அதெல்லாம் நடந்துதானே தீரும்? விதிவலியதல்லவா?''

''பாபாஜி...'' அபராஜித வைஜெயந்தி ஓடிச்சென்று அவரது காலில் விழுந்தாள்.

''பாபாஜி அவர்கள் எங்களுடன் அந்த மாளிகைக்காவது ஒரு முறை வந்து செல்வீர்களா?''

மந்திரி மகாதேவராவ் அப்படிக் கேட்டதுதான் தாமதம்.

மீண்டும் ஒரு முறை ''விதி வலியது'' என்று மட்டும் கூறினார். ஆனால் அதன் உட்பொருள் அவ்வளவாக யாருக்கும் விளங்கவில்லை!

## இன்று

திருக்கடவூர்.

ஸ்ரீமடத்தில் குருநாதரான ஜெயந்திநாத ஸ்வாமிகளுக்கு இருந்திருந்தாற்போல் கைகால்கள் அதீதமாக இழுத்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டன.

தத்தளிக்கத் தொடங்கியவரைப் பார்த்து சிஷ்ய கோடிகளும் அவரது மனைவியும் சூழ்ந்துகொண்டு நிற்க, நீலகண்டனும் அவர்களுக்கு நடுவில் இருந்தான்.

ஜெயந்திநாதர் தனக்கு முடிவுவந்துவிட்டதை முன்கூட்டியே உணர்ந்தவர்போல நீலகண்டனை அருகில் அழைத்தார்.

கோணிக்கொண்ட வாயால் எதுவும் பேச முடியவில்லை. ஆனாலும் செயலிழக்காத அவரது இடதுகை பக்கத்தில் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த குரூப் போட்டோவைக் காட்டியது.

நீலகண்டனும் புரிந்துகொண்டு அதை எடுத்து வந்து அவர் முன் காட்டினான். அதில் நரசிம்மபாரதியும் இருந்தார். ஜெயந்திநாதரின் நடுங்கும் விரல்களில் ஒன்று அந்த உருவத்தைக் சுட்டிக்காட்டி ''நான் இவனைப் பாக்கணும். அழைச்சுண்டு வா'' என்று சொல்லாமல் சொல்லிற்று.

''நான் பல தடவை கூப்பிட்டுட்டேன். ஆனா அந்த நரசிம்ம பாரதி கேக்கமாட்டேங்கறார். 'ருத்ரவீணையோட வருவேன். நான் அல்ப சித்தன் இல்லைன்னு நிரூபிப்பேன்'னு பேசினதையே பேசறார்...''

நீலகண்டன் சொன்ன பதில் ஜெயந்திநாதரைச் சமாதானப் படுத்தவில்லை.

வெடுக்கென்று அந்தப் படத்தை அப்படியே நடுங்கும் கையால் தூக்கி எறிந்தார். கோபிக்கிறார் என்பது புரிந்தது.

''சரி. இந்தத் தடவை எப்படியாவது அவரை அழைச்சுண்டு வரப்பாக்கறேன்...''

நீலகண்டனும் அடுத்த நொடியே கிளம்பிவிட்டான்!

மணி அய்யர் ஒட்டல்!

பெயிண்ட்டெல்லாம் உதிர்ந்த பெயர்ப்பலகையும் நொண்டிக்கால் பெஞ்சுகளுமாக கிராமத்து ஹோட்டலுக்கேயுரிய தன்மைகளோடு இருந்தது.

இரண்டொருவர் சாப்பிட்டுக்கொண்டிருக்க, உபாசகர் உள்ளே நுழைந்தார். அவரைப் பார்த்த உடனேயே சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவனுக்குச் சுருக்கென்றது.

அவன் ஏற்கெனவே உபாசகரை மூணு சீட்டு களத்தில் சந்தித்திருக்கிறான். பெட்டியில் நண்டைக் காட்டி அவர் கலங்கடித்ததையும் தூர இருந்து பார்த்தவன். சற்று பகீரென்றுதான் இருந்தது.

மணி அய்யர் கல்லாவில் இருந்தார்.

அவரே சப்ளையும் செய்தாக வேண்டும்.

உள்ளே அவர் மனைவி காமாட்சி அடுப்படியில் கிடந்து வெந்துகொண்டிருந்தாள். அவள் வேக வேண்டும். இவர் அல்லாட வேண்டும். இரண்டும் இருவருக்கும் நடந்தால்தான் சோறு அவர்களுக்கு என்று அந்தப் பரமன் எழுதிவிட்டான். உள்ளே நுழைந்த உபாசகரைப் பார்க்கவும் மணி அய்யருக்குக் கொஞ்சம் மதிப்பாகவும் இருந்தது- பயமாகவும் இருந்தது.

''பெரியவாளுக்கு என்ன வேணும்?''

''இரண்டே இரண்டு இட்லி...!''

''இரண்டு இட்லியா... போறுமா?''

''தாராளமா போறும். நான் போகியில்லைங்காணும். யோகி.'' உபாசகர் பதிலில் ஒரு கூர்மை. அவரும் இரண்டு இட்லியை கொண்டுவந்து வைத்தார். நடுவில் கவனித்துக் கொண்டேயிருந்த நபர் அவரைக் கல்லாவில் நின்று அழைக்க ''காமாட்சி... சுவாமிக்கு சாம்பார் விடு'' என்றபடி கல்லா நோக்கிச் சென்றார். காசை வாங்கிப் போடும்போது அவன் மணி அய்யர் காதைக் கடித்தான்.

''அய்யரே... பார்த்து.அந்த ஆள் பெரிய மந்திரவாதி. முழிச்சுகிட்டிருக்கும் போதே கண்ணை அமுத்தற பார்ட்டி.''

மணி அய்யருக்குக் கொஞ்சம் சுரீர் என்றது.

காமாட்சியும் வந்து சாம்பாரை ஊற்றிவிடடுப்போனாள்.

உபாசகர் மௌனமாய் ஒரு புன்னகையுடன் சாப்பிட்டு முடித்துவிட்டு காசு கொடுக்க வந்தார்.

அப்பொழுது உள்ளிருக்கும் காமாட்சியிடம் இருந்து ஒரு அதீத அலறல். ஓடிப்போய் பார்த்தார் மணி அய்யர்.

''கழுத்துச் சங்கிலியைக் காணோம்னா... எங்கே போச்சுன்னே தெரியல...''

அய்யருக்கு உடனே சர்வாங்கமும் நடுங்க ஆரம்பித்து விட்டது. அடுத்த நொடி பார்வை உபாசகரை நோக்கித்தான் திரும்பியது.

''ஸ்வாமி...''

''என்ன?''

''என் ஆத்துக்காரி சங்கிலியைக் காணலையாம்.''

''அதுக்காக...?''

''உங்களப்பத்திக் கேள்விப்பட்டேன். உங்க சித்து விளையாட்டு இங்க வேண்டாம். நானே பரம் ஏழை.''

''நீங்க என்ன சொல்றேள்...? நான் எந்தச் சித்தை இப்ப உங்ககிட்ட காட்டினேன்?''

''செத்த முந்திகூட அவ போட்டுண்டு வந்த நகையைப் பார்த்தேன். இப்பதான் காணோம்கறா. மாயமா இருக்கு. உங்களுக்கும் மாயத்துக்கும்தானே தொடர்பு?''

''அடப் பாவி மனுஷா... நான் அம்பாள் உபாசகன். என்னையா திருடன்கறேள்?''

''அது... அது..''

''என்ன அது?''

''இல்ல... நான் மட்டுமில்ல. ஊரே இப்ப உங்களைச் சந்தேகத்தோடதான் பாக்கறது. பிரார்த்தனை, அதுக்காக வீணை வாசிக்க வந்திருக்கேன்னு சொல்லிட்டு வீணை வாசிக்காம அவர் ஊரைச் சுத்தறார்னா என்ன அர்த்தம்? ஊரையே தேட்ட போட வந்திருக்கார்னு பேசிக்கறா?''

உபாசகருக்கும் பகீர் என்றது. தான் இனியும் காலம் தள்ளுவது சிரமம் என்கிற ஒரு உள்ளணர்வு.

''ஒரு நிமிஷம்...'' என்றவர் கண்களை மூடி 'அந்தச் சங்கிலி எங்கே போயிற்று?' என்று கண்டறிய முயன்றவர் அறுபதாவது நொடி கண்களைத் திறந்து ''சாம்பார் வாளிய பாருங்கோ...'' என்றார். மணி அய்யரும் உள்ளே ஓடிச்சென்று வாளியில் கரண்டியைவிட, காமாட்சியின் கழுத்துச் சங்கிலி அறுந்து அதில் விழுந்திருந்தது தெரியவர மணி அய்யர் அப்படியே சிலிர்த்து விட்டார்.

ஓடிவந்தார்...

'ஸ்வாமி, தப்பு பண்ணிட்டேன். உங்கள தப்பா நினைச்சுட்டேன். மன்னிச்சுடுங்கோ...'' என்று படபடவென்று கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

உபாசகரிடமோ புதிதாக ஒரு எண்ணம்.

இந்த ஊரில் ருத்ரவீணை கிடைக்கும் வரை இருக்க வேண்டும் என்றால் ஊரை மாற்றியே தீரவேண்டும். எப்படி மாற்றலாம்?

யோசிக்கத் தொடங்கிவிட்டார்.

கர்ணம் தன் ஏலவாள் நாச்சிமுத்துவுடன் வயல்வரப்பில் நடந்து வந்து கொண்டிருந்தார். புதிய மழையின் தயவில் நிறையவே பசுமை பொசிந்து கிடந்தது.

களத்துமேட்டிலும் டிராக்டர்கள் ஓடிக்கொண்டிருந்தன. அறுவடைக் கதிர்களின் தூசும் தும்புமாக களத்துமேடு இருந்தது.

''பக்கத்துக் கிராமத்துல எல்லாம் சுத்தமா அறுவடை இல்லீங்க. நம்ம ராமநாயக்கர் வயலெல்லாம் சாவியா போயிடிச்சு.'' என்று நாச்சிமுத்து சொல்லிக்கொண்டு வந்தான்.

''அதான் இந்தத் தோடிபுரத்தோட பெருமை. கலெக்டரே 'பேசாம கலெக்டர் ஆபீசைத் தோடிபுரத்துல போட்டுடலாம்'னு மீட்டிங்ல பேசறார்னா பார்த்துக்கோயேன்...''

கர்ணத்தின் குரலிலும் பெருமிதம்.

பக்கத்தில்தான் இருந்தது விருச்சிகக்கேணி.

பன்னிரண்டு ராசிக்கிணறுகளில் எட்டாவதாக அமைந்திருக்கும் கேணி. முன்பெல்லாம் ஒவ்வொரு கேணியிலும் கூட்டம் இருக்கும். விடிய விடிய பரிகாரத்துக்காக ராசிக் கிணறுகளைச் சுற்றிவந்து அதன் நீரால் தலையை நனைத்துக் கொண்டுவிட்டு போவார்கள். இப்பொழுது முன்போல கூட்டமில்லை. குறைந்துபோனதன் காரணமும் விளங்கவில்லை.

பொதுவில் '300 வருஷம்தான் தோடிபுரம் தளதளவென்று இருக்கும். அதன்பின் ருத்ரன் என்று ஒருவன் வருவான். அவன் வந்தபின் ஊரே மாறிவிடும்' என்றும் ஒரு கருத்து எல்லோரிடமும் உண்டு.

இருந்தாலும் கர்ணம் ராசிக்கிணற்றுப் பக்கம் வந்தால் அதன் நீரை தலையில் தெளித்துக்கொள்ளாமல் போகமாட்டார். அதிலும் அவர் விருச்சிகராசி வேறு. அவரது மனக்குறிப்பறிந்து நாச்சி முத்துவும் குடையை மடக்கிக்கொண்டு கிணற்றை நோக்கிச் செல்லும் மண்பாதையில் இறங்கினான். அவர் வந்து சேர்வதற்குள் தண்ணீரை இறைந்து தயாராக நிற்போம் என்று நினைத்து

அதற்கான வேகத்துடன் அந்த விருச்சிகக்கேணியை நெருங்கியவன் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டான். பின்தொடர்ந்து வந்த கர்ணமும் எட்டிப்பார்த்துவிட்டு அப்படியே ஸ்தம்பித்துவிட்டார். உள்ளே உள்சுவரில் விருச்சிகமூர்த்தி சிலை... அந்தச் சிலையின் கண்பாகம் வரை நீர் மேல் ஏறி கண்ணை மூடிவிட்டிருந்தது. விருச்சிகமூர்த்தியின் கண்ணை தண்ணீர் மூடினால் ஊரைக் கண்ணீர் மூடும். அதாவது ஊருக்குப் பெரிய கெடுதல் நடக்கும் என்பது ஐதீகம் சார்ந்த நம்பிக்கை. முப்பது வருடத்துக்கு முன்பு இப்படித்தான் இதேபோல் தண்ணீர் கண்ணை மூடுமளவு உயர்ந்தபோது ஊரில் இடிவிழுந்து வைக்கோல் போரெல்லாம் தீப்பிடித்து எரிந்தது. அப்படிப் பிடித்த தீ அணைவதற்றே மூன்று நாளாயிற்று.

சுந்தராம்பாள் உபவாசம் இருந்து மழையை வரவழைத்த பிறகுதான் பிரச்னை நேரானது.

''இந்த முறை என்ன கெடுதல் நடக்கப்போகிறதோ?''

நாச்சிமுத்து நடுங்கியபடி கேட்டான்.

''முதல் வேலையா போய் பிரசிடெண்ட் கல்யாணசுந்தரம் கிட்ட சொல்வோம். வா...''

இருவரும் அங்கிருந்து படுவேகமாக புறப்பட்டனர்.

**க**ல்யாணசுந்தரம் ஊஞ்சலில் அமர்ந்து வெற்றிலைக் காம்பை கிள்ளிக் கொண்டிருந்தார். காம்பைக் கிள்ளுவது, வெற்றிலையின் சில கசப்பு நரம்புகளை உருவிப் போடுவது, பின் அதன் முதுகுப் பாகத்தில் சுண்ணாம்பு தடவுவது போன்றவற்றில் எல்லாம் ஒருவரின் கேரக்டர் தெரியும். அதுமட்டுமில்லை. அவர்கள் எதிர்காலத்தையே ஒருவர் வெற்றிலை போடுவதை வைத்துச் சொல்லிவிடலாம்.

சாதாரண வெற்றிலை போடுவதில் எல்லாமா எதிர்காலப் பலன்கள் என்று எக்காளமாய் நினைத்தால் நினைப்பவர்தான் ஏமாற வேண்டும்.

கல்யாணசுந்தரம் இம்மட்டில் ஒவ்வொரு வெற்றிலையைத் தொடும்போதும் ஒரு கன்னிப்பெண்ணைத் தொடுகிற மாதிரிதான் தொடுவார்.

வெற்றிலையை மடித்து வாய்க்குள் அடக்கி பின் அதை மெல்ல பற்களால் கடித்து அந்தச் சாற்றை சிலீர் என்று உள்வாங்கி, மெல்ல பரவசமாகி அப்படியே பாக்கின் உவர்ப்புச் சுவையை

அதில் கூட்டி அப்படியே அந்த ருசியை அனுபவிக்க... அதற்கென்றே தனியாக ஒரு ரசனையும் ஒரு ஆர்வமும் வேண்டும்.

இப்படித்தான் கல்யாணசுந்தரமும் சொல்வார்.

அமெரிக்காவில் வாசிக்க வாய்ப்பு வந்தது. இரண்டு மாதடூர். ஆனால் அங்கே வெற்றிலை கிடைக்காது என்கிற ஒரு காரணத்துக்காகவே அந்த ட்ரிப்பை ரத்து செய்துவிட்ட சரியான வெற்றிலைப் பிரியர் கல்யாணசுந்தரம். அப்படிப்பட்டவர் எதிரில் மூச்சிளைபட கர்ணமும் நாச்சிமுத்துவும் வந்து நின்றால் எப்படி இருக்கும்?

''என்னய்யா... கர்ணம்... நம்ம ஊர்ல என்ன ஓட்டப் பந்தயமா நடக்குது?''

''ஐயோ, அது இல்ல கல்யாணசுந்தரம். பார்க்கக்கூடாததைப் பார்த்துட்டேன். அதான் ஓடிவந்தேன்.''

''என்ன... காவிரில எவளாவது பொறந்தமேனியா குளிச்சாளாக்கும். பாத்துட்டு மனசு துடிக்குதாக்கும்.''

''என்ன கல்யாணசுந்தரம் இது? எப்படி இப்படி எல்லாம் உங்களுக்குக் கேட்கத் தோணுது?''

''பின்ன என்னய்யா... விஷயத்தைச் சொல்லாம பீடிகை போட்டா என்ன அர்த்தம்?''

''சரி... விஷயத்துக்கு வந்துடறேன். நம்ம விருச்சிகக்கேணி இல்ல...''

''தெரியும்... அதுல மூர்த்திவிக்கிரகம் கண்ணு வரை தண்ணி. அதானே?'' கல்யாணசுந்தரம் ஒரு வெற்றிலையில் சுண்ணாம்பைத் தடவியபடி சர்வசாதாரணமாகச் சொன்னது கர்ணத்தை அப்படியே புசுக்கென்றாக்கிவிட்டது.

''என்னய்யா... உமக்கு முந்தி எனக்கு எப்படித் தெரியும்னு பாக்கிறீரா...? அதான் கல்யாணசுந்தரம்.''

''சரி... என்ன பண்ணப் போறோம். அதைச் சொல்லங்க.''

''முப்பது வருஷத்துக்கு முந்தி இருந்த நிலை வேற. இப்போதைய நிலை வேற. ஒண்ணும் நடக்காது. போய் வேலையைப் பாருங்க...''

''கல்யாணசுந்தரம்...''

''கவலைப்படாதீங்க... அதுக்கு என்ன பரிகாரம் பண்ணணுமோ அதைப் பண்ணிட்டேன்.''

''அப்ப சுந்தராம்பாளைப் பார்த்துப் பேசிட்டேளா?''

''நான் எதுக்கு அவளைப் பாக்கணும்?'' - கல்யாணசுந்தரம் கேட்ட தொனியிலேயே ஒருவித அலட்சியம்.

''என்ன ஓய்... அவாதானே போன தடவை ஊரைக் காப்பாத்தினது...''

''போன தடவை கதையை உடுங்க. இந்தத் தடவை நமக்கு உபாசகர் இருக்கார்.''

''கல்யாணசுந்தரம்... என்ன இது... உபாசகர்ங்கறவர் இப்ப வந்தவர்.''

''நான் இலலேங்கலியே... எப்ப வந்தார்ங்கறதா கணக்கு? எவ்வளவு சரக்கு இருக்குங்கறதுதானே கேள்வி.''

''அவர் திறமையை நானும் மட்டுப்படுத்தலை. எதுக்கும் சுந்தராம்பாள்கிட்டையும் இந்த விஷயத்தைச் சொல்லிடறது நல்லது.''

''என் வரைல அவசியம் இல்லேன்னு நினைக்கறேன். ஒரு பொட்டச்சிக்கு நாம தேவை இல்லாம நிறைய இடம் கொடுக்கறோம்.''

கர்ணம் அதற்குமேல் எதுவும் பேசவில்லை. பேசினால் பலனும் இல்லை என்று அவருக்குத் தெரியும்

''சரி... அப்ப அந்த ஈஸ்வரனோட விருப்பம்...''

என்றபடியே நாச்சிமுத்துவுடன் கிளம்பினார். நாச்சிமுத்து கூட வெளியே வந்தவுடன் கேட்டான்

''ஏங்க... அப்படி என்னங்க இவருக்கு அந்தம்மா பேர்ல கோபம்?''

பதிலுக்கு கர்ணம் சிரித்த சிரிப்பில் ஏகப்பட்ட பொருள்.

**கோ**விலில் நல்ல கூட்டம்.

வில்வண்டியைவிட்டு இறங்கி உள்ளே நுழைந்து கொண்டிருந்த தாசி சுந்தராம்பாளைப் பார்த்து வணங்காதவர்களே இல்லை எனலாம்.

சுந்தராம்பாளைப் பார்த்தும் வணங்காமல் சென்றால் போகிற காரியம் உருப்படாது என்றெல்லாம் நம்பிக்கைகள். சிலர் நின்று விருச்சிகக்கேணி விஷயம் பேசினார்கள். அவளும் அனந்தரமாக எல்லோரும் சொல்வதைக் கேட்டுக்கொண்டாள். இறுதியாக பட்டரும் அவளிடம் சொல்லவும் அவள் முகத்தில் பெருமூச்சு.

''என்னம்மா... எல்லாரும் ரொம்பப் பயப்படறா. உன் கைலதான் இருக்கு...''

''தப்பா சொல்றீங்க பட்டரே... என் கைல என்ன இருக்கு. எல்லாம் இதோ இந்த தோடீஸ்வரன் கைல இருக்குன்னு சொல்லுங்க...''

''நீ எப்பவுமே ரொம்ப பணிவா சிந்திக்கறவ. அதான் இப்படிப் பேசறே. ஆனா என்ன ஆகுமோ, ஏது ஆகுமோன்னு எனக்கு ரொம்ப பயமா இருக்கு...''

''அச்சமே நரகம்னு ஒரு பழமொழி உண்டு. கேள்விப்பட்டிருப்பீங்க.அச்சத்தை விடுங்க. அதுவும் தினமும் இந்த தோடீஸ்வரனைத் தொட்டு வணங்கற பாக்யம் கொண்ட உங்களுக்குப் பயம் கூடவே கூடாது...''

''நீ சொல்றது வாஸ்தவம்தான்... ஆனா கருவறைல நடக்கக் கூடாத ஒரு சம்பவம் நடந்துடுத்து...''

பட்டர் பீடிகையோடு முகம் கசக்கினார்.

''என்ன?''

''தோடீஸ்வர லிங்கத்தோட தலைக்கு மேல சுவத்துல ஒரு பல்லி ரொம்ப நாளா அங்கேயே இருந்தது. விருச்சிகக்கேணி பத்தின சேதி வந்தப்போ நான் முதல்ல கருவறைக்குள்ற போய் பிரார்த்தனை பண்ணிட்டேன். நான் பிரார்த்தனை பண்ணிண்டிருக்கும்போதே அந்தப் பல்லி தோடீஸ்வர லிங்கத்தோட தலைமேல விழுந்தது...''

பட்டர் முடிக்க முடியாமல் விசும்பினார்.

சுந்தராம்பாளும் அயர்ந்துவிட்டாள்!

**கா**விரியின் புதுவெள்ளத்தில் ஒரு முழுக்கு போட்டுவிட்டு அப்படியே வேட்டியை உலர்த்தி காயப்போட்டுக் கொண்டே கரை ஏறிக் கொண்டிருந்தார் உபாசகர்.

எதிரில் மண்சாலை. அதன்மேல் ஒரு பளபளப்பான சாண்ட்ரோ கார்.

காருக்காக ஒதுங்கி வழிவிட்டவர் மேல் அந்த கார் முதல் நாள் பெய்த மழை நீரை வாரி இறைத்துவிட்டுப் போனது. தோய்த்து அழுக்குப்போக அலசிப்போட்டுக் கட்டிக் கொண்டிருக்கும் அவரது வேட்டி முழுக்க மழைநீர்சகதி.

''பராசக்தி...'' என்று அவர் முணுமுணுக்க அவரைக் கடந்து சென்ற கார் அதிசயமாக அப்படியே வேகம் எடுத்து ஓடாமல் பின்னால் வந்தது.

காரில் இருந்து மிடுக்குக் குறையாதபடி ஒரு மனிதர் இறங்கினார். பார்ப்பதற்கு நன்கு படித்த தோற்றம். ஓடிவந்தார்.... கோல்ட் ஸ்பெக்ஸ் கண்ணாடியெல்லாம் போட்டிருந்தார். அதைக் கழற்றிச் சட்டை பாக்கெட்டில் போட்டபடியே ''மன்னிக்கணும்... மன்னிக்கணும் சாமி.'' என்றார். உபாசகருக்கு அவரது அணுகுமுறை மிகப்பிடித்துவிட்டது.

'மன்னிப்பு கேட்டவன் நீதிதேவனின் இதயத்தில் இடம் பெறுகிறான்' என்கிறது நீதிசாஸ்த்ரம். எனக்கென்ன என்று போக முடிந்தும் போகாமல் திரும்பி வந்து மன்னிப்பு கேட்ட அவரை கோபமே இன்றி புன்னகையுடன் பார்த்த உபாசகர்

''பரவாயில்லை. இப்படி நடக்கணும்னு இருக்கு. நடந்துடுத்து'' என்றார்.

''அப்படி இல்லை... நான் கொஞ்சம் நிதானமா வந்திருக்கலாம்.''

''அதான் சொல்லிட்டேனே.... இப்படி எல்லாம் நடக்கணும்னு இருக்கு. நமக்கு ஒண்ணு நடக்கணும்னு இரும்கும்போது நம்மைச் சுற்றி இருக்கறவாளும் அதுக்குத் தகுந்த மாதிரி தயார் ஆயிடுவா. காலநேரத்துக்கு அப்படி ஒரு சக்தி. ஆமா, உங்க பேர் என்ன...? நீங்க யார்?''

''என்ன சாமி... நீங்க இந்த தோடிபுரத்துக்குப் புதுசா?''

''ஆமாம். எப்படித் தெரிஞ்சது...?''

''அதான் இப்படிக் கேக்கறீங்க. என் பேர் ராமச்சந்திரன். சுந்தராம்பாளோட புருஷன்!''

அவர் அப்படிச் சொன்ன நொடி உபாசகர் முகத்தில் பலத்த ஆச்சர்யம்.

''ஆமாம் நீங்க...?''

''என் பேர் நரசிம்மபாரதி...''

''கோவில் ஊழியமா?''

உபாசகர் சிரித்தபடியே ''இல்லை.... நான் ஒரு உபாசகன்.''

என்றார். ராமச்சந்திரன் என்கிற அந்த மனிதர் முகத்தில் பலத்த ஆச்சர்யம்.

''என்ன பாக்கறேள்?''

''இல்ல... உபாசகன்னா என்ன அர்த்தம்.... அது ஒரு தொழிலா?''

''உபாசகம்கறது தொழில் இல்ல. தவம்...''

''அப்ப யோகின்னு சொல்லுங்கோ...''

''ம். சொல்லலாம்...''

''யோகின்னா சில அபூர்வ சக்திகள் இருக்கணுமே?''

''இப்போதைக்கு இந்தச் சேத்தை போக்கிக்கற சக்தி உண்டு.''

என்றவர் பக்கத்தில் இருந்த ஒருமரத்தின் பின்னால் சென்று மறுபக்கம் வெளிப்பட்டார். ஒரு நொடிகூட இருக்காது. உபாசகர் உடம்பிலும் வேட்டியிலும் பட்ட சேற்றுக்கரை மாயமாக மறைந்துவிட்டிருந்தது!

ராமச்சந்திரன் வாயைப் பிளந்துவிட்டார்.

''போங்கோ... போய் உங்க ஆத்துக்காரியிண்ட என்ன சந்திச்ச விஷயத்தைச் சொல்லுங்கோ. என்னைப்பத்தி இன்னும் நிறைய தகவல் தருவா.'' என்று பொடி வைத்துப் பேசியவர், அப்படியே கையால் ஒரு சொடுக்கு போட்டு ராமச்சந்திரன் நெற்றியில் ஒரு தீட்டு தீட்டினார்.

செந்தூரம் அவர் நெற்றியில் ஒரு கோபி சின்னமாய் உருவாகியிருந்தது!

கார் கண்ணாடியில் அது தெரிந்தது.

ஆச்சரியம் கலையாமல் காரில் ஏறியவர் வணங்கிக் கொண்டே காரைக் கிளப்பினார்.

அந்த கார் விலகிய அதே நொடி புதிதாக இன்னொரு கார் அந்தச் சாலைமேல்!

உபாசகர் தன் குடிசையை நோக்கி நடந்தபடி இருக்க, கார் ஒரு புளிய மரத்தடியில் தேங்கி நின்றது. உள்ளிருந்து வாட்டசாட்டமாக நான்கு பேர் இறங்கினர்.

ஒருவன் குருட்டுப் பிச்சைக்காரன்போல் இருந்தான். ஒருவன் தேன்குடுவைகளுடன் தேன் வியாபாரி போல் இருந்தான். மூன்றாமவன் கைகளில் ஏராளமான சாவிகளுடன் கூடிய சாவிக்கொத்தும் பழைய குடைகளும் இருந்தன. நான்காமவன் சஃபாரி சூட்டில் மிடுக்காய் இருந்தான். அந்த மூன்று பேருக்கும் தலைவனைப் போல் காட்சி தந்தான்.

மூவரும் அவன் அடுத்து என்ன சொல்லப் போகிறானோ என்று பார்த்தனர்.

''எல்லாரும் படு ஜாக்ரதையா நடந்துக்கணும். குருட்டு பாண்டி... ! நீ கோவில் வாசல்ல உக்கார்ந்து கண்காணிக்கறதுல சின்ன தப்பும் பண்ணிடக்கூடாது.

தேன்கார பெரியசாமி...! உன்வேலை என்னன்னு உனக்கே தெரியும். குடைக்கார நல்லமுத்து...! உன் கைலதான் கோவிலுக்குள்ற நுழையறதுக்கான வழிவகையே இருக்கு. ரொம்ப ரொம்ப கவனமா நடந்துக்கணும். இது ஒருவிதமான ஊர். இந்த ஊர்ல இருந்து ஒரு கைப்பிடி மண்ணைக்கூட யாரும் எடுத்துக்கிட்டுப் போகமாட்டாங்களாம். அவ்வளவு பயமாம். எடுத்துக்கிட்டுப் போகவும் இந்த ஊர் சாமி விடாதாம்.

ஆனா நாம அந்தச் சாமியையே எடுத்துகிட்டுப் போகவந்திருக்கோம்.

சாமியா, நாமளான்னா நாமதாங்கறதுதான் எப்பவும் ஜெயிச்சிருக்கு. இருந்தாலும் மத்த கோவிலுங்களப்போல இந்த ஊர் கோவிலை சாதாரணமா நினைச்சுடாம ஒவ்வொரு நொடியும் நீங்க கவனமா நடந்துக்கணும்.

ஏன்னா இது சாதாரண வழிப்பறியோ, வீடு புகுந்து அடிக்கற கொள்ளையோ இல்லை. ஒண்ணரைக் கோடி ரூவாக்கு வியாபாரம் பேசி இறங்கியிருக்கற விஷயம். கவனம்.

ஒவ்வொரு மணி நேரமும் உங்ககிட்ட இருந்து செல்ஃபோன் மூலமா தகவலை எதிர்பார்த்துகிட்டு இருப்பேன்.''

அவன் விலாவாரியாகச் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டு திரும்பித் திரும்பிப் பார்த்தவனாக காரில் ஏறினான். அவர்களும் ஆளுக்கொரு பக்கமாக அவரவர்களுக்குண்டான குணாதிசயத்தோடு நடக்கத் தொடங்கினர். அதிசயமாக தோடிபுரத்தின் மேல்வானத்திலும் ஒன்றுக்கு மூன்று கழுகுகள் வட்டம் கட்டி பறந்தபடி இருந்தன!




## அன்று

அப்பொழுதுதான் அந்தப் பெண்ணின் பிரேதத்தைப் புதைத்துவிட்டுப் போயிருந்தார்கள்.

பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்தவள்... பாம்பு கடித்ததால் நீலம் பாரித்து இறந்தவிட்டாள்.

ஒளிந்த நிலையில் ஒரு காபாலிகன் இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்தான்.

புதைக்க வந்த கூட்டம் துக்கத்தோடு விலகிவிட்ட நிலையில் மெல்ல அந்தச் சமாதி அருகே வந்தான்.

இடுகாட்டு வெட்டியானும் விலகிப்போயிருந்தான். அப்படியே அவன் விலகாவிட்டாலும் அந்தக் காபாலிகனுக்கு கவலையில்லை. மண்குழல் ஒன்றும் அதில் போட்டுப் புகைக்க மாஞ்சா இலைத்தூளும் (கஞ்சா) இருக்கிறது. அதைக் கண்ணில் காட்டினாலே போதும் அந்த வெட்டியானும் வாயைமூடிக் கொண்டுவிடுவான்.

பிணங்களோடு அல்லாடும் பிழைப்பு அவனுக்கு.

எல்லோரும் விதையைப் போட்டு மூடினால் இவன் மட்டும் சிதையைப் போட்டு மூடுவதை வழக்கமாக்கொண்ட ஒரு தினுசான விவசாயி. இதனால் உடம்பின் மேல் பெரிதாக பற்றுதல் கிடையாது.

அழகானதில் இருந்து, அருவருப்பானது வரை பலதரப்பட்ட உடலை அவன் பார்த்துவிட்டான்... அவை அழுகி நாற்றம் வீசத் தொடங்கிவிட்டதையும் பார்த்திருக்கிறான். அதனால் உடம்பை அலங்கரித்துக்கொள்வது என்பதெல்லாம் சரியான ஏமாற்று வேலை என்பது அவன் கருத்து.

எப்பொழுதும் இந்த மண்தான் உடல் வரையில் ஜெயிக்கிறது. இழுத்து வைத்துக்கொள்வதும் அதுதான். வெளியே

நடமாடுபவர்களுக்கு உணவு தருவதும் இதுதான். மண்ணைவிட உயர்வானது இந்த உலகில் இருக்க முடியாது என்றெல்லாம் நினைப்பான். அந்த நினைப்புக்குக் காபாலிகர்கள் தரும் மாஞ்சா இலை பெரிதும் துணைசெய்யும். எந்த உடம்பு அவனுக்குப் பிடிக்காதோ அதன் எடைப்பாட்டையே குறைந்து விடுகிறதே... பஞ்சாய் பறக்கிறமாதிரி இருக்கிறதே....!

இதெல்லாம் ஒருபுறம் என்றால் காபாலிகர்கள் செயல்கள் வேறுவிதமாக இருக்கும். அவர்களுக்குப் பிரேத வழிபாடு ஒரு அங்கம்... பிரேதங்களைப் புணர்வது ஒருவித பயிற்சி. அப்பொழுது எந்த நிலையிலும் புணரும் காபாலிகளின் விந்து பிரேதக்குறிக்குள் சென்றுவிடாது உச்சநிலையை அடைந்து பின் பிரேதக்குறிக்குள் உள்ள விந்து அணுக்களையும் சேர்த்து தன்குறியால் உறிஞ்சி எழுவதுதான் பயிற்சியின் கட்டம்.

அதற்குமுன் மதுவை மகாசக்தியாகக் கருதி குடித்துவிட்டு அந்த சக்தியால் வரும் போதையுடன் சிவமாகிய மாமிசத்தை அதாவது பிரேதத்தைச் சேர்க்கையில் அனுபவித்து, அனுபவிக்கையில் ஏற்படும் பரவசநிலையில் காபாலிகனே பைரவ புருஷனாகிறான். இந்தப் பைரவன் அடைந்திருக்கும் சந்தோஷமே மோட்சம். அந்த ஆனந்தநிலையில் அப்படி உலகை மறந்து அமர்ந்துகிடப்பதே பிரம்மநிலை என்பதுதான் காபாலிகர்களின் கொள்கை.

அவர்களின் தலைவனை 'அகோரகண்டன்' என்பார்கள். அந்தக் கடுகாட்டுக் காபாலிகன் அங்கே பெண்ணின் பிணம் புதைக்கப்படுவதைக் கவனித்தவனாக மிகுந்த செருக்குடன் அங்கிருந்து புறப்பட்டான். காவிரி ஆற்றின் கரையில் புதர்களுக்கு நடுவே பதுங்கிய நிலையில் மாஞ்சா இலைத்தூளை மண்குழலில் போட்டு தீயிட்டு புகையாக்கி அதை நெஞ்சுமுட்ட பரவவிட்ட நிலையில் போதையில் கிடந்தார்கள் காபாலிகர்கள்.

அந்தக் காபாலிகன் ஆற்று நீரில் இறங்கி அவர்களை நோக்கித்தான் நடந்தான்.

அங்கே அவர்களோடு வீரேந்திரனும் கிடந்ததுதான் ஆச்சரியம் .

அந்தக் காபாலிகன் அவர்களில் முதலாவதாக அகோர கண்டனைத்தான் போய் எழுப்பினான். அகோரகண்டனின் கழுத்திலும் அனேக மண்டை ஓடுகள் அடங்கிய கபாலமாலை இருந்தது.

அவை அவன் எழுந்த வேகத்தில் பலமாக சப்தத்தித்தன.

''என்ன... எதற்கு எழுப்பினாய்?''

''பிரேததேவி கிடைத்துவிட்டாள்!''

''அப்படியா... அனைவரையும் எழுப்பு...''

''அவசரம் வேண்டாம். இப்பொழுதுதான் மாலை நேரம் வந்திருக்கிறது... இன்னும் சற்று நேரத்தில் இருட்டி விடும். அப்பொழுது அந்த இடுகாட்டிற்குச் சென்றால் விடிய விடிய நாம் பைரவமாகலாம்...''

''பைரவமாவதைப் பற்றி நீ பேசாதே... அதை குருநாதனாகிய நான்தான் கூறவேண்டும்.''

உரத்த குரலில் அவர்கள் பேசிக்கொள்வது வீரேந்திரன் காதுகளிலும் விழுந்தது. கண்களைக் கசக்கிக்கொண்டு எழுந்தான்.

அவனது வழக்கமான உடைகள் மாறிப் போயிருந்தன. இடுப்பில் ஒரு கறுப்புத்துண்டு மட்டும் கட்டியிருந்தான்.

கன்னத்தில் அவர்கள் கறுப்புமசியைப் பூசி நெற்றியில் ரத்தத்திலகம் தீட்டியிருந்தனர். தலைமுடியை உச்சியில் குவித்து கூம்புபோல கட்டியிருந்தார்கள். கழுத்திலும் எலும்புத்துண்டு களால் ஆன ஒரு மாலை.

ஏனோ அவன் மனஅமைப்பிற்கு அந்த உடை துளிகூட பிடிக்கவில்லை. அவ்வப்போது அதைக் கழட்டிக் கீழே போட்டுக் கொண்டிருந்தான். அப்பொழுதெல்லாம் அவனை ஒட்டியே சுற்றிவரும் அஞ்சனா என்கிற பெண் அதைத் திரும்ப எடுத்து அவன் கழுத்தில் அதைச் சூட்டிவிட்டாள். அவன் ''உறுத்துகிறது'' என்று சொன்னால் ''பழகிவிடும்'' என்றாள் பதிலுக்கு... மீறிப் பேசமுயன்றால் உதட்டில் முத்தமிட்டு பேசமுடியாதபடி அடக்கினாள்.

''அப்பொழுது ஏற்படும் பரவச நிலைதான் பைரவநிலை'' என்று அதற்கு விளக்கமளித்தாள். ''ஒருசில வினாடிகள்தான் நம்மால் இப்பொழுது பைரவநிலையில் இருக்க முடிகிறது.

ஆனால் எப்பொழுதும் ஆனந்தப் பரவசத்தில் நித்ய பைரவர்களாகத் திகழும் ஒரு நிலைப்பாடு இருக்கிறது. அதைப் பற்றி எண்ணிப்பார்'' என்று கூறினாள்.

அவனும் மகுடிக்கு அடங்கிய நாகம்போல அவளது அந்த கருத்தில் மயங்கினான்.

உண்மையில் அதைப்போல ஒரு பரவசநிலையை எங்கேயும் எப்பொழுதும் பார்க்கமுடியாது என்றும் கருதினான்.

''இன்று நம்முடைய தலைவர் அகோரகண்டர் நித்யபரவச நிலைக்கான பயிற்சியைப் பிரேததேவியைக் கொண்டு நமக்குக் கற்றுத்தரப் போகிறார்'' என்றாள்...

''பிரேததேவியா.... அப்படி யார் இருக்கிறார்கள்?''

''இடுகாட்டிற்கு வந்து பார். உனக்கு உண்மை தெரியும்!''

என்று தற்காலிகமாக அவன் வாயை அடக்கினாள் அஞ்சனா என்னும் அவள்.

இருவரும் அப்படியே மீண்டும் புதர்களுக்குள் பதுங்கினர். அந்தப் புதரில் பாம்பு ஒன்று முட்டையிட்டு குஞ்சுபொரித் திருந்தது. சில முட்டைகள் பொரியாமல் இருந்தன.

அந்தப் பாம்பும்கூட படம் எடுத்தபடி சீறியது.

அஞ்சனா அதைக் கண்டு துளியும் அஞ்சவில்லை. ஆனால் வீரேந்திரன் மிக பயந்தான்.. அதன் சீற்றம் அவன் நாடி நரம்பையெல்லாம் நடுங்கவிட்டது.

''அச்சப்படாதே... பிறவியில் பாசபந்தங்களுக்கு இந்த சர்ப்பமும் கட்டுப்பட்ட ஒன்று ... இது இனி தனக்காக வாழாது... பாவம் இந்தச் சர்ப்பம்'' என்றாள் அவள்.

''இந்தச் சர்ப்பத்தைக் கண்டால் உனக்கு அச்சமாக இல்லையா?'' என்று கேட்டான் வீரேந்திரன்.

''காபாலிர்களுக்கு எங்கும் எதிலும் அச்சம் இல்லை என்பது உனக்குத் தெரியாதா?''

''அது எப்படிச் சாத்யம்?''

''நீ இப்பொழுதானே எங்களில் ஒருவன் ஆகியிருக்கிறாய். போகப் போக உணருவாய் அதை. உலகின் ஒரே இறைவன் அந்த பரமனாகிய சிவன்தான்... அவன்தான் எங்கும் மதுவாய் மாமிசமாய் பரவிக்கிடக்கிறான்... அதை நாம் நமது மாமிசமாகிய திருவாயால் உண்டு ருசித்துப் பரவசம்கொள்ள வேண்டும். அந்தப் பரவசநிலைக்கு நல்ல கட்டுடல் வேண்டும். அவ்வளவுதான்... அதற்குதான் இந்த சரீரம்...''

''எப்பொழுதும் ஒரு பெண்ணைப் புணரும்போது கிட்டும் பரவசத்துடன் ஒருவன் இருக்கமுடியுமா?''

''முடியும். காபாலிகத்தில் முடியும். இதுதான் உலகின் உயர்ந்த சித்தாந்தம்!''

''அப்படியானால் எதற்கு இப்படி ஊருக்குத் தெரியாமல் ஒளிந்தும் மறைந்தும் வாழவேண்டும்?''

''என்ன செய்வது... எந்த ஒரு நாட்டிலும் ஊரிலும் காபாலிகத்துக்குப் பெரிய மதிப்போ, வரவேற்போ இல்லை. குளிப்பது, அழியப்போகிற உடம்பை அழகிய உடை மற்றும் நகைகளால் பூட்டி அழகாக்கிக்கொள்வது, பின் மானம் மரியாதை என்ற செயற்கையாகச் சில கட்டுத்திட்டங்களை உருவாக்கிக் கொண்டு அல்லல்படுவது இதுதான் இன்றைய உலகின் மனிதர்களின் நிலைப்பாடு. ஆனால் நாம் அப்படிப் பட்டவர்கள் இல்லை. நமக்கு எப்பொழுதும் இன்பம்... எங்கு பார் இன்பம். எதிலும் இன்பம்... நித்யமோட்சம் நமது லட்சியம்...''

''அதாவது எப்பொழுதும் பரவசநிலையில் இருப்பதைச் சொல்கிறாயா நீ..?''

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது காவிரி ஆற்றில் திடீர் என்று நீர்மட்டம் விறுவிறுவென்று ஏறத் தொடங்கியது. அதன் எதிரொலியாக அவர்கள் அடைந்துகிடந்த கோரைப் புதருக்குள்ளும் நீர் ஊடுருவ ஆரம்பித்தது.

அத்தனை காபாலிகர்களும் சட்டென்று எழுந்தனர். அதுவும் கைகளில் திருசூலத்துடன் எழுந்த அவர்கள் பக்கத்தில் உள்ள தோப்பு நோக்கி ஓடத் தொடங்கினர்.

பார்ப்பதற்குக் காட்டுமிராண்டித்தனமான தோற்றமுடன் கையில் திரிசூலமுடன் ஓடுவதைக் காவிரி ஆற்றில் நெல் மூட்டைகளுடன் ஒரு பாய்மரப் படகில் பயணம் செய்து கொண்டிருந்த ஊர்த்தலையாரியும் பார்த்துவிட்டார். அடுத்தநொடி அவர்முகம் வெளிறிவிட்டது!

**ந**வக்கிரக மாளிகைக்கு வைஜெயந்தி அழைத்ததன் பேரில் அதைப் பார்ப்பதற்கு புறப்பட்டுக் கொண்டிருந்தார் பாபா. கூடவே, சாஸ்திரிகளும் செல்வதாக உத்தேசம். அவரும் ஒரு புதிய வஸ்த்ரத்தை அணிந்தவராக ஒரு துண்டினால் மேல் மார்பை மூடிப் போர்த்தியிருந்தார்.

பாபாவும் அவரும் வாசலுக்கு வரும் சமயம் எதிரில் ஓடோடி வந்தார் தலையாரி.

''என்ன தலையாரி... எதற்கு இப்படி ஓடிவருகிறீர்கள்? யாருக்காவது எதாவது உடல் நலக்கோளாறா?'' சாஸ்திரிகள் கேட்டார்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை சாஸ்திரிகளே... நம் ஊரில் நான் பார்க்கக்கூடாதவர்களைப் பார்த்துவிட்டேன். அதுதான்...'' தலையாரியிடம் பயம் நன்கு தெரிந்தது.

''யார் அவர்கள்... மிலேச்சர்களா... இல்லை கொள்ளையர்களா?''

''ஐயோ... இவர்கள் அவர்களை எல்லாம்விட கொடியவர்கள் ஆயிற்றே...''

''யார் என்று கூறாமல் இப்படி நீங்கள் நடுங்கினால் எப்படி தலையாரியே.. ''

''காபாலிகர்கள்...!''

அந்தப் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் பாபா முகத்திலும் அசுர மாற்றங்கள். அதை சாஸ்திரிகளும் கவனித்தார்.

''பாபாஜி... நீங்களும் அச்சப்படுவதுபோல தெரிகிறதே யார் அவர்கள் என்று உங்களுக்குத் தெரியுமா?''

''அவர்களும் ஒருவித இறை மார்சிகள்தான்...'''

''அப்படியானால் அவர்களைக் கண்டு தலையாரி ஏன் அஞ்ச வேண்டும்?.''

''ஐயோ சாஸ்திரிகளே... என்ன நீங்கள்? காபாலிர்கள் எப்படிப்பட்டவர்கள் என்று நீங்கள் கேள்விப்பட்டதில்லையா?''

''நான் கேள்விப்பட்டவரையில் நரமாமிசம் புசிப்பவர்கள். சதா மது அருந்துபவர்கள். அதேபோல சிற்றின்பமாகிய பெண்களுடன் உல்லசமாக வாழத்துடிப்பவர்கள். பலியும் வதைகளும் அவர்களுக்குச் சாதாரணம்... சதா புலனின்பத்தில் மூழ்கிக் கிடக்க நினைப்பவர்கள். கேட்டால் அதையே மகாயோகம் என்று கூறுகிறவர்கள். இவர்களைப் பல நூற்றாண்டு களுக்கு முன்பே இந்த மண்ணில் இருந்து வெளியேற்றி விட்டோம். ஒரு கட்டத்தில் காபாலிகம் முற்றாக ஒழிந்து சைவசித்தாந்தமும் வைணவ நெறிமுறைகளும்தான் இப்பொழுது நம்முடைய நடைமுறையில் உள்ளது. அதனால்தான் நாட்டிலும் அமைதி உள்ளது.''

''இந்த நிலையில் இவர்கள் மீண்டும் தலையெடுத்தால் என்னாவது?''

உண்மைதான்...'' என்றபடியே பாபாஜியின் சிரமும் ஆடியது.

''ஊரின் தலையாரி என்கிற முறையில் என்னால் அவர்களை அனுமதிக்கவே முடியாது. அவர்கள் ஒரு ஊருக்குள் புகுந்து விட்டால் அந்த ஊரின் நிம்மதியே பாழாகிவிடும். இப்பொழுது என்ன செய்வது பாபாஜி அவர்களே...?''

''உங்கள் அரசரிடம் செல்லுங்கள். அவர்தான் இதற்குச் சரியான தீர்வைக் கூறமுடியும்...''

''பாபாஜி...இவர்களை விரட்ட உங்களால் ஏதும் வழிமுறைகளைக் கூறமுடியாதா?''

''அவசியமில்லை... நான் முன்பே கூறியதுபோல கால வெள்ளத்தின் போக்கில எங்கே எது எப்படி நடக்கவேண்டுமோ அங்கே அது அப்படியே நடந்துவிடுகிறது. எல்லாம் நன்மைக்கே என்றே நான் கருதுகிறேன்.''

''நீங்கள் யோகி... கடிக்க வரும் பாம்பிடம்கூட உங்களால் அன்பு காட்ட இயலும். ஆனால் எங்களால்...?''

''இப்படிச் சொல்லியே உங்களை ஏன் தாழ்த்திக் கொள்கிறீர்கள்? பொறுத்திருந்து பாருங்கள்!''

''ஒன்றை மட்டும் தெளிவுபடுத்துங்கள்... இந்தக் காபாலிகர்களால் இந்த ஊருக்கு எந்த ஆபத்தும் வராதே...?''

''இல்லை... இவர்களால்தான் இனி இந்த ஊர் உலகப் பார்வையே பெறப்போவதாக உள்ளுணர்வு கூறுகிறது.''

பாபாஜி கூறியதைக் கேட்டு சாஸ்திரிகளும் தலையாரியும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

அதற்குமேல் தலையாரியாலும் எதுவும் பேச முடியவில்லை!

## இன்று

**கோ**விலில் நாதஸ்வரத்தில் நாதவெள்ளம் பொங்கி வழிந்தபடி இருந்தது. அற்புதமான ஸ்ரீ ரஞ்சனி ராகத்தில் காற்றையே மாற்றிக்கொண்டிருந்தார் கல்யாணசுந்ரம்.

கோவிலுக்குள் நுழையத் தொடங்கிவிட்ட உபாசகர் காதில் அந்த நாதவெள்ளம் ஒரு கிறக்கத்தையே உண்டாக்கிவிட்டிருந்தது. கோவில் வாசலில் அறுத்துக்கொண்டு ஓடிவந்திருந்த பசுமாடு ஒன்று தொழுவத்தில் அமர்ந்த நிலையில் ஏகாந்தமாக திகழ்கிற மாதிரி கல்யாணசுந்தரத்தின் ராகத்தில் தன்னை மறந்திருந்தது.

உபாசகரையே அது பரவசப்படுத்தியது. அப்படியே நின்று கைதட்டி ரசித்தபடியே நடந்தார். கல்யாணசுந்தரத்தை நெருங்கவும் அவர் அந்த ராகத்தை முடிக்கவும் சரியாக இருந்தது. ''சபாஷ் கல்யாணசுந்தரம்.... பிரமாதம் ஓய்!'' என்றபடியே அவரை நெருங்கிச் சென்று அந்தரத்தில் கையை ஒரு ஆட்டு ஆட்டி எங்கிருந்தோ எலுமிச்சம் பழத்தை வரவழைத்து அவரிடம் நீட்டினார்.

கல்யாணசுந்தரத்துக்கும் பரம சந்தோஷம்.

அவரது வாசிப்பை அந்த ஊரில் யாரும் பெரிதாக ஸ்லாகித்துப் பாராட்டியதே இல்லை. கோவில் நாதஸ்வர வித்வான் என்றால் அவர் ஒரு சம்பிரதாய வாத்தியக்காரர் என்பதாகத்தான் நினைப்பு. அப்படியிருக்க உபாசகர் வாழ்த்தியது பாலைவனத்தில் பால் மழை பெய்தமாதிரி ஒரு பிரமிப்பை உருவாக்கியிருந்தது.

பட்டரும் வேறு நைவேத்ய பிரசாதத்துடன் வந்துவிட்டார். கூடவே ஒரு தூரத்து உறவினர்.

''ஆமா... இந்த ஸ்வாமி யார்?'' என்று அவர் கேட்க பட்டருக்குக் கொஞ்சம் சங்கடமாகிவிட்டது. அவர் யார் என்று கேட்டது உபாசகரை...

''நீங்களே சொல்லிடுங்கோ... நான் சொன்னா உங்களுக்கு அது குத்தலா படலாம்'' என்றார் பட்டர்.

உபாசகருக்குப் புரிந்துவிட்டது - பட்டர் அவர்மேல் மெல்ல நம்பிக்கை இழந்து கொண்டிருக்கிறார் என்பது.

''அடியேன் பேர் நரசிம்மபாரதி... ஒரு அம்பாள் உபாசகர் நான்...'' என்றார் உபாசகரும்.

''இந்த ஊர்ல என்ன பண்றேள்? இது சக்தி ஸ்தலம் இல்லையே?''

அவர் விடுவதாக இல்லை.

''இதுதான் என்னோட சக்தி ஸ்தலம்.''

''அப்படியா... இது அந்த ஈஸ்வரனோட க்ஷேத்ரமாச்சே...?''

''எல்லா க்ஷேத்ரமும்தான் ஈஸ்வரக்ஷேத்ரம். எங்க அவன் இல்லை? சொல்லுங்கோ பார்ப்போம்.''

''ஸ்வாமிகள்... ஒரு மண்டலம் வீணை வாசிக்ககறதா சொன்னதை மறந்துட்டேள். இப்ப எதையோ தேடி ஊரைச் சுத்திச்

சுத்தி வந்துண்டிருக்கேள். உங்களை பாம்புன்னு நம்பறதா, இல்ல பழுதுன்னு மிதிக்கிறதான்னு தெரியலியே...''

பட்டர் மடக்கியேவிட்டார். கல்யாணசுந்தரத்துக்கு வந்தது கோபம்.

''பட்டரே... என்னய்யா இது? இப்படித்தான் ஒரு மூணாம் மனுஷன் முன்னால நம்ம சாமியை மட்டமா பேசறதா...? அவர் எப்பவோ கிளம்பியிருப்பார். நான்தான் தடுத்து நிறுத்தி இங்க தங்கச் சொல்லியிருக்கேன் தெரியுமா உங்களுக்கு?''

கல்யாணசுந்தரத்தின் பதிலில் பட்டர் ஒடுங்க வேண்டிய கட்டாயம். உபாசகருக்கும் நிரடியது. பட்டர் முகத்தைத் தொங்கப் போட்டபடி விலகவும் உபாசகர் கலங்கிய விழிகளுடன் கல்யாண சுந்தரத்தைப் பார்த்தார்.

''ரொம்ப நன்றி கல்யாணசுந்தரம் என்னை விட்டுக் கொடுக்காம பேசினதுக்கு...''

''அது என் கடமை சாமி... ஆனா நான் சொல்றேன்னு தப்பா நினைக்காதிங்க...''

''தெரியும் கல்யாணசுந்தரம்... நீங்க என்ன சொல்லப்போறீங்கன்னு எனக்கு நல்லாவே தெரியும்.''

''சாமி...''

''ஊர்ல எல்லாரும் என்னைச் சந்தேகத்தோட பார்க்க ஆரம்பிச்சுட்டாங்கன்னு சொல்லப் போறீங்க... சரிதானே?''

''ஆமாம் சாமி. நீங்க எப்படியாவது இந்தச் சூழ்நிலையை மாத்தணும்.''

''நாளைக்கு ராத்திரியே மாறிடும் பாருங்க...''

''என்ன சாமி சொல்றீங்க...?''

''பாருங்களேன்... அதான் என்னென்னமோ நடக்கப்போறதே...?''

''என்ன சாமி... ஏற்கெனவே விருச்சிகக்கேணில விக்ரகம் வரை தண்ணி வந்து மூழ்கி ஊருக்கே கெடுதல்னு எல்லாரும் பேசற நிலை. இதுல நீங்கவேற பீதியைக் கிளப்பறீங்க.''

''நான் கிளப்பலை கல்யாணசுந்தரம். அது எப்பவோ கிளம்பியாச்சு. கிளம்பினதைக் கட்டுப்படுத்தற வேலைதான் பாக்கி...''

உபாசகர் கடைசி வரை புதிராகத்தான் பேசினார். கல்யாணசுந்தரத்திடம்கூட அந்த விபரீதம் என்னவென்று கூறவில்லை.

அப்படியே கோவிலுக்கு வெளியில் வந்தார். மாடு அமர்ந்து ராகம்கேட்ட இடத்தில் இப்பொழுது குருட்டுப்பிச்சைக்காரன் ஒருவன்.

அவனைப் பார்க்கவும் உபாசகருக்குள் ஒரு சிறு தடுமாற்றம். அவன் கறுப்புக்கண்ணாடிக்குள் கண்களை நன்கு உருட்டிப் பார்க்கிற மாதிரியும் இருந்தது. பார்க்காத மாதிரியும் இருந்தது. உதடுகள் ''அம்மா தாயே... பிச்சை போடுங்க'' என்றன. உபாசகருக்கு மனது கேட்கவில்லை. அவனது கப்பரையைப் பார்த்தார். அதில் கொஞ்சம்போல சில்லரைக் காசுகள்.

''ஏம்ப்பா... ரொம்ப பசிக்குதா?'' என்று கேட்டவரிடம்

''ஆமாங்க சாமி...'' என்றான். ''ஆமாங்கய்யா'' என்று பொதுவாகக் கூறாமல் ''சாமி'' என்று அவன் பிரத்யேகமாய் கூப்பிட்ட நொடி அவருடைய உபாசனா சக்தியை அவரும் பயன்படுத்த ஆரம்பித்தார். அவன் பெயர் பாண்டி என்பதில் இருந்து அவன் குருடனாக நடிக்கிறான் என்பதுவரை நொடியில் தெளிவாகிவிட்டது.

''சரிப்பா... உனக்குச் சாப்பிட நான் ஏதாவது தரட்டுமா?'' என்று அவனிடம் கேட்க அவனும் ''ஆஹா. போடுங்க சாமி'' என்றான்.

தன் மேல் துண்டால் அவனது கப்பரையை மூடிவிட்டு துண்டை இழுத்துக்கொண்டவர் கப்பரையில் ஒரு ரஸ்தாளிப்பழ கட்டை வரவழைத்திருந்தார். நல்ல மஞ்சள் நிறத்தில் நன்கு பழுத்த நிலையில் இருந்தது.

அவனும் உடனே அவசரத்தில் ''சாமி சந்தோஷம் சாமி... ரஸ்தாளின்னா எனக்கு ரொம்ப இஷ்டம் சாமி.'' என்றான்.

உபாசகர் முகத்தில் உடனே ஒரு மர்மச்சிரிப்பு.

''பரவாயில்லயே... கண்ணு தெரியாத நிலையிலையும் ரஸ்தாளிப் பழம்னு கண்டுபிடிச்சிட்டயே'' என்றார் குத்தலாக. அவன் முகத்தில் உடனே சில மாற்றங்கள். உபாசகர் அங்கிருந்து மெல்ல நகர்ந்தார். அவனுக்கு அப்பாடா என்று இருந்தது!

''பூட்டு சாவி ரிப்பேர்!''

கூவிக்கொண்டே நடந்துகொண்டிருந்தான் நல்லமுத்து என்பவன். ஒரு கையில் ஏராளமான சாவிகள் தொங்கும் சாவிக்கொத்து. இன்னொரு கையில் ஒரு தகரப்பெட்டி... கை அக்குளில் கிழிந்த குடைகளை இணைத்துக் கட்டிய கட்டு.

அவன் இப்பொழுது பிரசிடென்ட் கல்யாணசுந்தரத்தின் வீட்டு முன்னால் நின்று கொண்டிருந்தான்.

அவன் குரல் கேட்டு ரங்காயி எட்டிப்பார்த்தாள்.

''அம்மா, ஏதாவது பழைய பூட்டு ரிப்பேரா இருக்குங்களா...? சரிசெஞ்சுத் தர்றேன்...''

''ஒண்ணுமில்லைப்பா...!''

''குடை...?''

''அட எதுவுமில்லைப்பா...''

''பிரசிடன்ட்டய்யா இல்லீங்களா?''

''எதுக்குக் கேக்கறே...? அவர் பஞ்சாயத்து விஷயமா தஞ்சாவூருக்கு கலெக்டரைப் பார்க்கப் போயிருக்கார்.''

''நல்லதும்மா...'' என்றபடி நழுவினான்.

அடுத்து கர்ணத்தின் வீட்டுப்பக்கம் போய் அதே போல குரல் கொடுத்தான்.

அன்னபூரணி எட்டிப்பார்த்தாள்.

''அம்மா, ஏதாவது குடைகிடை ரிப்பேர் செய்யணுங்களா?''

''ஒண்ணுமில்லையேப்பா...''

''பாருங்கம்மா... மகாலட்சுமி மாதிரி இருக்கீங்க. உங்க கையால முதல் போணியானா இன்னிக்குப் பூரா நல்லதா இருக்கும்னு உங்ககிட்ட வியாபாரம் பண்ண ரொம்பப்பேர் சொல்லியிருக்காங்க...''

அவனது அஸ்திரம் நன்றாகவே வேலைசெய்ய ஆரம்பித்தது. அன்னபூரணி முகம் உடனே குப்பென்று சிவந்து சந்தோஷத்துக்கு மாறிவிட்டது.

''கொஞ்சம் இருப்பா... உள்ள எதனா பிஞ்ச குடை இருக்கான்னு பார்க்கறேன்..'' என்றபடி திரும்பிச் சென்றாள்.

கணேசனோ, கர்ணமோ இரண்டு பேருமே வீட்டிலில்லை. எங்கோ சென்றிருக்கின்றனர்.

உள்ளே சென்ற அன்னபூரணியும் ஒரு கையில் பிய்ந்த குடையுடன் வந்தாள்.

அதை வாங்கியவன் குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கேட்டான். அப்படியே அதை ரிப்பேர்செய்வது போல நோட்டமிட ஆரம்பித்தான்.

தண்ணீர் வரவும் குடித்தபடியே வாயைப் பிடுங்கத் தொடங்கினான்.

''இந்த ஊருக்கு வந்தாதான் மாமி ஓரளவு பொழப்பு நடக்குது...''

''இல்லையா பின்னே... இது அந்தக் தோடீஸ்வரனோட பூமியாச்சே...''

''அது என்ன மாமி நீங்க... உலகமே அவன் படைச்சதுதான். ஆனா இந்த ஊரை மட்டும் பிரிச்சுப் பேசறீங்களே...''

''நான் பிரிச்சுப் பேசலை... அது அப்படித்தானே இருக்கு. ஒரு தாய்க்கு அஞ்சாறு குழந்தை இருந்தாலும் மூத்தவன் மேலயும் கடைக்குட்டி மேலயும் ஒரு தனிப்பிரியம் இருக்கும். அப்படித்தான் அந்த ஈஸ்வரனுக்கும்னு வெச்சுக்கோயேன்.''

''ஆமா... திருட்டுப் பயமெல்லாம் இல்லீங்களா மாமி...?''

''இந்த ஊர்லையா?''

''பின்ன... இதானே உங்க ஊர்?''

''நன்னா கேட்டேபோ... இந்த ஊர் அந்த தோடீஸ்வரனோட ஊர்மட்டுமில்ல... இந்த ஊரே அவன் சொத்து. இங்க யாராவது எதாவது எடுத்தா அவா அழிஞ்சு போயிடுவாங்கறதுதான் உண்மை.''

''அப்ப போட்டது போட்ட இடத்துல இருக்கும்னு சொல்லுங்க...''

''அதேதான்... ஒரு கைப்பிடி மண்ணைக்கூட ஒருவன் இந்த ஊரைவிட்டு எடுத்துண்டு போய்டமுடியாது...''

''நிஜமாவா மாமி...?''

''நீ வேணா ட்ரை பண்ணிப்பாரேன்... அப்ப தெரிஞ்சுட்டுப் போறது உண்மை.''

''ஆச்சரியமா இருக்குது மாமி... அப்ப ராத்திரியில் காவல்காரன்லாம் கிடையாதுன்னு சொல்லுங்க...''

''அந்த ஈஸ்வரன்தான் காவக்காரன்... அவனைவிடவா ஒரு மனுஷன் காப்பாத்திக் கொடுத்துட முடியும்?''

அன்னபூரணியிடம் ஊர்ப்பெருமை பொங்கி வழிந்தது. அவனும் மனதுக்குள் பலவிஷயங்களைக் குறித்துக்கொண்டான்.

ஊரில் யாரும் காவலில் இல்லை என்பது அவனுக்குள் பெரிய அளவில் உற்சாகத்தைக் கொடுத்திருந்தது. ஒருவழியாக குடையை ரிப்பேர் செய்துமுடித்தவனாக அவளைப் பார்த்தான். அவள் ''எவ்வளவு?'' என்று கேட்டாள்.

''கொடுக்கறதக் கொடுங்க'' என்றான் பணிவாக. அவளும் ஒரு ஐந்து ரூபாவை எடுத்து வந்து தந்தாள்... மனோரீதியாக அவள் இன்னமும் 1980-களிலேயே இருக்கிறாள் என்பதை அது சொல்லாமல் சொல்லிற்று.

புதிதாக பூத்திருந்தன அந்த மனோரஞ்சித மலர்கள்!

இன்றைக்கு மனோரஞ்சிதம் பூத்துக் குலுங்குவது என்பது வெகு அபூர்வமான ஒரு விஷயம் என்றாகிவிட்டது. பாம்புகளுக்குப் பயந்துகொண்டே அதை யாரும் வளர்ப்பதில்லை. ஆனாலும் அதன் மதிப்பும் தேவையும் துளிகூடக் குறைந்துவிடவில்லை. ஒருவர் தினம் நூற்றுஎட்டு மனோரஞ்சிதத்தால் அஷ்டோத்ர அர்ச்சனையை அந்த ராஜராஜேஸ்வரிக்கு 108 தினங்கள் செய்தால் எப்பேர்ப்பட்ட கடனும் நீங்கி அவர்கள் மேல்நிலைக்கு வந்துவிடுவார்கள் என்பது ஒருபெரிய ஆன்மீக ரகசியம்.

அதனால்தானோ, இல்லை வேறு காரணத்திற்காகவோ சுந்தராம்பாள் தன் வீட்டிலேயே அப்படி ஒரு அர்ச்சனையைத் துவக்கியிருந்தாள்.

அன்றுதான் முதல்நாள்.

அதற்கான 108 மனோரஞ்சிதப் பூவையும் திருக்கடவூரிலிருந்து நீலகண்டனே கொண்டுவந்திருந்தான். அங்கே ஸ்ரீமடத்து பிருந்தாவனத்தில் ஒன்றுக்குப் பத்தாக மனோரஞ்சிதச் செடிகள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருக்கின்றன.

ஒரு ஈரப் பட்டு வஸ்திரத்தில் அதைக் கட்டி அழகாக எடுத்து வந்திருந்தான். சுந்தராம்பாளுக்கும் அதைப் பார்க்க விவரிக்க முடியாதபடி ஒரு மகிழ்ச்சி.

நீலகண்டனை நன்றியோடு பார்த்தாள்.

வாசம் வீட்டையே திருப்பிப் போட்டது. பக்கத்தில் நூறு அடிக்குள் பாம்புகள் இருந்தால் நிச்சயம் அந்த மலர்களைத் தேடிவந்துவிடும் போல் தோன்றியது.

பல மனோரஞ்சிதங்கள் மஞ்சளாய் பழுத்து விட்டிருந்தன. அவைதான் அதிக வாசமடித்தன.

சுந்தராம்பாளின் தாயான வடிவாம்பாள்கூட எட்டிப்பார்த்து கிறங்கிப்போனாள்.

''எதுக்கு சுந்தரம்?'' என்று கேட்டாள்.

''ராஜராஜேஸ்வரி தேவிக்கான அஷ்டோத்ர அர்ச்சனைக்கும்மா'' என்றாள் சுந்தராம்பாள். உடனே வடிவாம்பாள் கிழவி மகளை அர்த்தபுஷ்டியுடன் பார்த்தாள்.

அந்தப் பார்வையே இப்படி ஒரு பூஜைக்கு என்ன அவசியம்?'' என்று கேட்டது.

''இந்த நிமிஷம் புத்திதாம்மா நமக்கு பலம். அதன் மூலமா தெய்வசக்தியை யாசிக்கப்போறேன்...''

''உன்கிட்ட இல்லாத சக்தியாடி....?''

''என் சக்தியால எனக்கு என்னம்மா பிரயோஜனம்? இது ஊருக்குத்தானே?''

''அப்ப உனக்குன்னு தனியா ஒரு தேவை இருக்கா என்ன?''

''ஆமாம்மா... நிறையவே இருக்கு...''

''என்ன சுந்தரம் சொல்றே... ?நீ இப்படியெல்லாம் பிரிச்சுப் பார்க்கவேமாட்டியே...''

''உன் பேச்சே எனக்குப் புரியலடி...''

''என்னம்மா... என்னைவிடவும் அனுபவப்பட்ட உனக்கே நான் எதுக்கு இந்தப் பூஜையை பண்ணப்போறேங்கறது தெரியலியா?''

''பானுவுக்கு நல்ல இடத்துல மாப்ளை வரணும்னா?''

''என்னம்மா இன்னுமா உனக்குப் புரியலை...? நம்ம ஊர் ராசிக்கிணத்துல விருச்சிகக்கேணில விக்கிரகம் மூழ்கறவரை தண்ணி வந்திருக்காம்மா...''

அதைக் கேட்ட மறுநொடி வடிவாம்பாள் கண்கள் அகண்டுகொள்ள அவளிடம் திகைப்பு.

''சுந்தரம்... நீ போய் பார்த்தியா.'' என்றாள் காற்றுக் குரலில்.

''கொஞ்ச நேரத்துல எல்லாரும் வருவாங்க பார்... அப்ப தெரிஞ்சிடும்''- அவள் சொல்லி வாய்மூடவில்லை.

கோவில் பட்டரில் இருந்து குருக்கள் வரை அவள் வீட்டு வாசலில் தெரிந்தனர்.

''வாங்கோ... வாங்கோ...'' வாய் கொள்ளாதபடி வரவேற்கவும் பட்டனர். மளமளவென்று திலகம் ஜமக்காளத்தை விரிக்க - அதில் அமரவும் செய்தனர்.

''வந்தது எதுக்குன்னு உங்களுக்குத் தெரியும்...'' கர்ணம் ஆரம்பித்தார்.

''சொல்லுங்கோ...''

''எல்லாம் அந்த ராசிக்கிணறு சமாசாரம்தான்!''

''கவலைப்படவேண்டாம். பரிகாரம் என்னவோ அதை நான் இன்னிக்கே செய்துடறேன்.''

''எல்லாரும் ரொம்ப பயப்படறா... நம்ம ஊரைப்போல ஒரு சுபிட்சமான ஊரைப் பார்க்க முடியாது. ஆனா போன தடவை கேணில மூர்த்தி விக்ரகம் மூழ்கினப்போ ஊர்ல பல இடங்கள்ல தீவிபத்து ஏற்பட்டது. ஒரு குடும்பமேல்ல கருகிச் சாம்பலா போச்சு...?''

-அவர் கேட்டதால் சுந்தரம்பாளுக்குள்ளும் வடிவாம்பாளுக் குள்ளும் அந்த ஞாபகங்கள்.

வயலில் புல்லைக் கரித்துக்கொண்டிருந்த பசு ஒன்றின்மேல் இடியும் விழுந்து அதுகூடக் கருகி இறந்தபோது, அதன்பின் ஊரில் அம்மை, காலரா என்று எவ்வளவு வியாதி உண்டோ அவ்வளவும் வந்து இறுதியில் சுந்தராம்பாள் செய்த விரத பூஜையால்தான் ஊரே ஒரு வழிக்கு வந்தது. திரும்பவும் அதோபோல ஒரு நிலை!

'இயற்கை அடிக்கடி தோடிபுரத்துக்கு மட்டும் எதனால் இப்படி எச்சரிக்கை விடுக்கிறது... இதனால் அந்தக் கடவுளுக்கு கிடைப்பதுதான் என்ன?''

இதைக் கேள்வியாக ஒருவர் சுந்தராம்பாளிடமே கேட்டு விட்டார்... அவளோ விஸ்ராந்தியாகச் சிரித்தாள். பிறகு ''உண்மைல துன்பத்தைப் போல மனிதனைப் பக்குவப்படுத்தற ஒரு விஷயம் உலகத்துலையே இல்ல தெரியுமா?'' என்றுதான் ஆரம்பித்தாள்.

அவள் பதிலில் எல்லோருக்கும் வியப்பு.

''ஆனந்தமா ஒரு இனிப்பு சாப்பிடுறோம்... அது அடுத்தடுத்து மனசுல ஏற்படுத்தற தாக்கங்களைக் கொஞ்சம் யோசிச்சுப் பாருங்க. திரும்பத் திரும்ப நம்மை அது சாப்பிடத் தூண்டும். அதுக்காக செலவுவைக்கும். செலவுங்கறது என்ன... நம்ம உழைப்பால நாம கஷ்டப்பட்டுச் சேத்த பணம்தானே?

அதே சமயம் நடக்கும்போது கல்தடுக்கி கால்ல ரத்தம் வருது... அது ஒரு துன்பம. ஆனா அது ஏற்படுத்தற தாக்கத்தை யோசிச்சுப் பாருங்க. பாதையைப் பார்த்து நடப்போம். கவனமா

இருப்போம். பாதைல கல்லோ, முள்ளோ இருந்தா அதைத் தூக்கி எறிவோம். இப்ப யோசியுங்க... இன்பம் என்ன செய்தது... துன்பம் என்ன செய்ததுன்னு...''

சுந்தராம்பாள் மிக எளிமையாக, அதே சமயம் அருமையாக இன்பதுன்பம் பற்றி விளக்கினாள். ''அது சரிம்மா... அதுக்காக ஒருத்தர் எப்பவும் துன்பப்படறதுதான் நல்லதுங்கறேளா?'' என்று திருப்பிக் கேட்டார் ஊர்க்காரர் ஒருவர்.

''தப்பா புரிஞ்சுக்கிட்டீங்க... எப்பவும் இன்பங்கறது ஒரு உண்மையான மெய் வருத்தம்கற கஷ்டத்தால வரணும். அப்ப அது எந்த பாதிப்பையும் தராது... அதாவது முதலில் துன்பம் பிறகு இன்பம்கற நிலைப்பாடுதான் சரியானது. எடுத்த எடுப்புல இன்பத்துல தொடங்கினா கஷ்டம்தான்...'' விட்டால் அதே தலைப்பில் ஒரு பட்டிமன்றம் நடக்கும் போல தோன்றவே பட்டர் கத்தரித்தார்.

''சுந்தராம்பா... எல்லாரும் பரிகாரம் செய்யறது பத்திப்பேச வந்திருக்கோம். அதபத்தி செத்த சிந்திச்சா தேவலை...''

சுந்தராம்பாள் உடனே சிரித்துவிட்டாள்.

''எல்லாரும் இதுக்காக என் வீட்டுக்கு வரணுமா என்ன? எப்ப அந்த விஷயம் என் கவனத்துக்கு வந்ததோ அப்பவே நான் பரிகாரத்துக்குத் தயாராயிட்டேனே...''

''ஆமாம்... என்ன இது மனோரஞ்சிதம்? நம்ப ஊர்ல எனக்குத் தெரிஞ்சு ஒரு மனோரஞ்சிதச் செடிகூடக் கிடையாதே...'' இது பட்டர்

''திருக்கடவூர்ல இருந்து வந்தது பட்டரே...''

''அங்க இருந்து வந்திருக்குன்னா விசேஷம் இருக்குன்னு சொல்...''

''நிச்சயமா...''

சுந்தராம்பாள் பதிலோடு அப்படியே வாசலைப் பார்த்தாள். அந்தக் குடை ரிப்பேர்க்காரன்!

''அம்மா, பழைய குடைரிப்பேர் பண்ணணுங்களா?'' கத்தினான். சுந்தராம்பாளுக்குப் பதிலாக அவனைத் திருப்ப அனுப்ப திலகம் வெளியே சென்றாள்.

அதற்குள் அவள் வீட்டு நாய் முந்திக்கொண்டது.

அவனைத் துரத்த ஆரம்பித்தது... அவனும் ஓடத் தொடங்கினான். பின்னங்கால் பிடறியில் படும்படியான ஒரு ஓட்டம்!

# 6



## அன்று

அந்த நவக்கிரக மாளிகை பிரம்மாண்டமாக இருந்தது.

ஒரு ஆற்றங்கரையோரமாக அதிலும் மயானத்தை ஒட்டி அது கட்டப்பட்டதில் பெரிய அளவில் காரணங்கள் இருக்கிற மாதிரி தோன்றியது.

பாபாஜியும் சதாசிவ சாஸ்திரிகளும் அதனுள் நுழைந்து கொண்டிருந்தார்கள்.

மந்திரி மகாதேவரும் வைஜெயந்தியும் இருவரையும் கரம்கூப்பி வரவேற்றனர். சாஸ்திரிகளுக்குப் பிரமிப்பாக இருந்தது.

''இது நான் பிறந்து வளர்ந்த ஊர். ஆனாலும் இன்றுதான் நானே வருகிறேன்...'' என்றார்.

''ஆமாம்... அரசகுலத்தைச் சேர்ந்தவர்களைத் தவிர யாரையும் இதுவரை இங்கே அனுமதித்ததில்லை. விதிவிலக்காய் நீங்கள்தான் வந்திருக்கிறீர்கள்...'' என்று அதற்கு பதிலுரை கொடுத்தான் துர்காராம்.

''வைஜெயந்தியை விட்டுவிட்டீர்களே...'' என்றார் சாஸ்திரிகள்.

''அவள் எங்கே தானாக வந்தாள்... காவிரி ஆறல்லவா அவளை இங்கே அழைத்து வந்தது...!''

''அப்படியானால் வைஜெயந்தி... நீ முதலில் அன்னை காவிரிக்குத்தான் நன்றி கூற வேண்டும்.''

''ஆம்... அன்னை காவிரி என்னை விழுங்கப் போகிறாள் என்றுதான் நினைத்தேன்... இப்படி ஒரு நல்ல வாழ்வை வழங்கப் போகிறாள் என்று எனக்கு அப்போது தெரியாது.''

''அது எப்படிச் சாத்யம்... காவிரி இந்த மாளிகைக்குள் பிரவேசிக்கிறாளா என்ன?'' சாஸ்திரிகள் அறிந்துகொள்ளத் துடித்தார்.

''அதோ... அன்னை காவிரி ஆற்றில் இருந்து இந்த அரண்போன்ற மாளிகையின் நீராழிக்குள் வரும் வழி...''

மகாதேவர் சுட்டிக்காட்ட அப்பொழுதுதான் சாஸ்திரிகள் அந்த வழியைப் பார்த்தார்.

சுற்றிலும் முற்றம். நடுவில் திறப்பு... அந்தத் திறப்பு முற்றம்தான் நீராழியாக இருந்தது.

அதன் நான்கு பக்கங்களிலும் ஊரின் ராசிக்கிணறுகளுக்கு நீர் செல்ல வேண்டிய துவாரங்கள். அந்தத் துவாரங்கள், ஒரே வரிசையில் ஒரே அளவில் இல்லாமல் சிறியதும் பெரியதுமாய், மேலும் கீழுமாய் இருந்தது. மொத்தம் 12 துவாரங்கள்.

அதில் மேலக்கேணிக்கான துவாரம் மட்டும் முழுவதுமாய் மூழ்கியிருக்க மற்றவைகளில் அரைக்கால் அரைக்கால் என்று நீரோட்டம்.

அந்த ஓட்டத்துக்கு ஏற்ப ஊருக்குள் இருக்கும் ராசிக்கிணறுகளிலும் நீர்மட்டம். அந்த மட்டம் அந்தக் கிணற்றில் இருக்கும் உயரத்தற்கு ஏற்ப அந்த ராசியின் சஞ்சார நிலையை தீர்மானிக்கலாம். ஏடெடுத்து கணக்குப்போட்டு, பின் மைக்கூடு கொண்டு எழுதி, அதன்பின் பஞ்சாங்கம் பார்த்து கணித்து அதன்பின் வரும் விடையை அந்த ராசிக்கிணறுகள் நொடியில் கூறிவிடும்.

''இது யார் செய்த ஏற்பாடு?''

''எப்பேர்ப்பட்டவாள் கணித நுட்பம் இது...''

நினைக்க நினைக்க சாஸ்திரிகளுக்கு வியப்பாக இருந்தது.

''இப்படி ஒரு மாளிகையை வைத்துக் காப்பாற்றுவதும்கூட எங்கள் தஞ்சை அரசருக்கு மிகவும் பாரமாக உள்ளது. இதை இந்த தோடீஸ்வரன் ஆலயத்துச் சொத்தாக எழுதிக்கொடுத்துவிடலாமா என்று பார்க்கிறார்...'' என்றார் மந்திரி மகாதேவர்.

''மந்திரி அவர்களே... இது சாதாரண கட்டடம் அல்ல. இந்தக் கட்டடமே ஒரு கணிதம். இதைப் பொதுப்படையாக வைத்திருப்பதுதான் சிறப்பு. அதே சமயம் இதை முறையாகச் சரியாகப் பராமரிக்காவிட்டால் சுயநலமிகள் இதை அழித்துவிடக் கூடும்... எனவே, எச்சரிக்கை தேவை.'' என்றது சாஸ்திரியின் குரல்.

''பாபாஜி அவர்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று தெரிந்து கொள்ளலாமா?''- மகா மந்திரியின் கேள்விக்குப் பதில் ஏதும்

கூறாமல் அருகில் இருக்கும் சாரளம் வழியாக வெளியே பார்த்தார். அந்த மாளிகையின் தோட்டம் தெரிந்தது. அதில் புதிது புதிதாய் அனேக விருட்சங்கள். குறிப்பாக ராசிகளுக்குரிய தன்மை கொண்ட விருட்சங்கள் அங்கே திட்டமிட்டு வளர்க்கப்பட்டதுபோல தோன்றியது.

''விரைவில் இந்த இடம் ஒரு கோவிலாகும்...'' என்றார் மெல்லிய குரலில்...

''அப்படியானால் தோடீஸ்வரர் ஆலயம் போல இந்த மனையும் பரபரப்பாகிவிடும் என்று கூறுங்கள்.''

''இல்லை... அப்படி இது ஜனக்கூட்டத்தால் ஆக்ரமிக்கப் படக்கூடாது. இது ஒரு அமைதியான ஜனநடமாட்டமில்லாத வழிபாட்டுத்தலமாக மாறினால்தான் இந்த மாளிகை காப்பாற்றப்படும்...''

''அது எப்படி ஜனநடமாட்டமில்லாதபடி இது மாறும்... அதவும் ஆலயமாக...?''

''பாருங்கள்... பார்க்கத்தானே போகிறீர்கள்...''

பாபாவின் பதிலில் ஒரு 'மர்மமான தன்மை... வெளியே விருட்சங்கள் வளர்ந்த வனத்தில்தான் ஜோதிடரின் உடல் புதைக்கப்பட்டு ஒரு விளக்கும் ஏற்றப்பட்டிருந்தது. அந்தச் சமாதி அருகில் ஜோதிடரின் ஆத்ம சரீரம் தேம்பியபடி நிற்பதை பாபாவின் கண்கள் பார்த்துவிட பாபாவுக்குள் இனம் தெரியாத ஒரு குறுகுறுப்பு.

அங்கேயே சற்று நேரம் உற்றுப் பார்த்தார்.

அதை மகாதேவரும் கவனித்தார்... அவருக்கும் புரிந்து விட்டது - ''பாபாவின் கண்களுக்கு மட்டும் ஏதோ தெரிகிறதே...'' என்று நைச்சியமாகக் கேட்டார்.

ஆனால் பாபாஜியிடம் பதிலில்லை... மாறாக ''இறைவா'' என்று சாளரம் அருகில் நின்றபடியே வானை நோக்கிக் கைகளை உயர்த்தினார்.

சாஸ்திரிகளும் வைஜெயந்தியும் துர்காராமும் மாறிமாறி ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

நெடுநேரத்திற்குப் பிறகே பாபாஜியின் பிரார்த்தனை கலைந்தது. சுற்றி நிற்கும் தனது நேயர்களான சகலரையும் நிதானமாக ஒரு பார்வை பார்த்தார்.

''பாபாஜி...''

''சொல்லுங்கள்...''

''வந்த இடத்தில் திடீரென்று பிரார்த்தனை செய்யத் தொடங்கிவிட்டீர்களே...?''

''நான் கண்ட ஒரு காட்சி என்னை அப்படிச் செய்ய வைத்துவிட்டது.''

''நாங்கள் இங்கே எதையுமே காணவில்லையே...?''

''ஐம்புலன்களைக் கொண்டு மட்டும் அதைக் காணமுடியாது...''

''அப்படியானால்...?''

''யோகம் என்று ஒன்று இருக்கிறது. அதை அறிந்தவர் களுக்கு அதுதான் ஆறாவது புலன். அந்தப் புலன் செயல்படத் தொடங்கிவிட்டால் போதும். காற்றை ஊடுருவலாம்; கடலுக்குள் மூழ்கினாலும் அப்படியே மிதக்கலாம்...''

''ஓ... இப்பொழுதுதான் புரிகிறது - எங்கள் ஞானசம்பந்தரைக் கடலில் தூக்கிப் போட்ட போதும் அவர் எப்படி மிதந்தார் என்பதும்.''

பாபாஜி அதைக்கேட்டு சிரித்தார்.

அருகிலேயே இருந்தது விருந்து மண்டபம்.

அங்கே அழகிய மேஜைமேல் எல்லாவிதமான உணவுப் பதார்த்தங்களும் அவர்கள் உண்பதற்காக காத்திருந்தன. தஞ்சை காவிரி மண்ணிற்கே உரிய வாலரிசிச் சோறு! பாபா வடவர் என்பதால் கோதுமையைத் திரித்து ரொட்டி. அதற்கு பக்கத் துணையாக சுட்ட கத்திரியின் புளிவதக்கலும் பேயன் வாழைக்காயின் மிளகுகூடிய கூட்டும் ஒருபுறம். மராத்தியர்களுக்கு மிகப் பிடித்த பருப்புக்குழையும் (தால்) சேனை, சேம்பு பொரியலும் ஒரு புறத்தில்.

ஒரு அடுக்கில் புளிசாதம் - இன்னொன்றில் தேங்காய் சாதம் - மூன்றாவதில் சர்க்கரைப் பொங்கல், நான்காவதில் வெல்ல அவல் பாயசம், மற்றும் பொரித்தெடுக்கப்பட்டிருந்த வடகங்கள் இவை தவிர புளிக்குழம்பு, பருப்புக்குழம்பு, பண்ணையம், நெய், பசுந்தயிர், வெள்ளரிப்பச்சடி, மாங்காய்த் துண்டு, புளி ஊறுகாய்.

மேஜை கொள்ளாதபடி உணவு வகைகள் கமகமவென்று மணத்தோடு சுண்டி இழுத்தன. துர்காராம் நல்ல பசியோடு இருந்தான். பாபாஜி சாப்பிட வராமல் ஆறாவது புலன், யோகம்

என்றெல்லாம் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்து அவனுக்குள் உள்மனதில் அதீதமாய் ஆதங்கம்.

பாபாவுக்கு அது எப்படியோ புரிந்துவிட்டது.

''பாவம், துர்காராம்... அவனுக்குப் பசிக்கிறது. வாருங்கள். விருந்து உண்டபடியே பேசுவோம்.'' என்று அவரே விருந்து மேஜை நோக்கி நடந்தார்.

துர்காராமுக்குக் கொஞ்சம் வெட்கமாகக்கூடப் போய்விட்டது.

பாபாஜியும் ''பிறர் மனக்குறிப்பறிவதும்கூட யோகம் கற்றவர்களுக்குச் சுலபம்'' என்றார்.

''அப்படியா... யோகத்திற்கு அப்படி ஒரு சக்தியா?''

''அதை சக்தி என்றும் கூறலாம். நிலைப்பாடு என்றும் கூறலாம். யோகம் வசப்பட குருவருள் மிகமுக்கியம்.''

பேச்சோடு அமர்ந்தனர். வாழை இலை விரிக்கப்பட்டது. உணவுப் பரிமாற ஆரம்பித்தாள் வைஜெயந்தி.

பாபா இலையில் ஒரு வாழைப்பழத்தை மட்டும் ஏற்றுக்கொண்டார்.

''பாபாஜி... என்ன இது? உங்களுக்காக எவ்வளவு பதார்த்தங்கள் இருக்கின்றன என்று பாருங்கள்.''- மகாதேவர் படபடத்தார்.

''யோகிகளுக்கு இவை எல்லாம் எதிரிகள்!''

''ஆச்சரியமாக உள்ளதே... இவை ருசியான சைவ உணவு. இது எப்படி எதிரியாகும்?''

''எந்த உணவு உடலுக்குப் பலமாகிறதோ அதே உணவு மனதுக்குப் பலவீனமானது. ஓடியாடி உழைத்துப் பிழைப்பவர்கள் ஒருவகை... போதும் என்று ஒடுங்கி வாழ்பவர்கள் இன்னொரு வகை. இந்த உணவு வகைகள் உங்களுக்குப் பொருந்தும். எனக்குப் பொருந்தாது. நான் கட்டிப் போட்டிருக்கும் மனக்குதிரையை இந்த உணவு வகைகள் மெல்ல அவிழ்த்துவிட்டுவிடும்...''

பாபாவின் விளக்கம் கேட்டு அவர்கள் முகங்களில் ஆச்சரிய ரேகைகள்.

''உங்களுடன் பேசிக்கொண்டிருந்தால் புதிது புதிதாக பல செய்திகள் கிடைக்கின்றன... இந்த வாழ்க்கையில்தான் எத்தனை வினோதங்கள்...''

''ஆம்... வினோதங்களில்தானே சுவை இருக்கிறது.''

''அப்படியானால் இந்த வினோதங்கள் உங்களுக்குப் பிடிக்கவில்லையா?''

''அலுத்துப்போகும் எதுவும் யோகிகளுக்குப் பிடிக்காது....''

''அப்படியானால்...?''

''நித்ய இன்பம் எதுவோ அதுதான் யோகிகளுக்குக் குறி!''

''எது நித்ய இன்பம்...?''

''நீங்கள் கேட்டிருப்பது ஒரு அசாதாரண கேள்வி. அதற்குப் பதில் கூறும் அளவு நான் மேதை இல்லை. சுருக்கமாக எனக்குத் தெரிந்த விதத்தில் கூறுகிறேன். இறை நினைப்பே நித்ய இன்பம்.''

''அபாரம்... இன்னொரு விஷயம்பற்றிக் கேட்கலாமா?''

''கேளுங்கள்...''

''ஜோதிடரின் புதைக்கப்பட்ட இடத்தை பார்த்து நீங்கள் சலனப்பட்டது எதனால் என்று நானறியலாமா?''

இதுவும் மகாதேவரின் கேள்விதான்.

''அவரது கர்மவினை அவரைக் கொல்லுயிர் ஆக்கிவிட்டது. அவரது ஆன்மா பரிதவித்தபடியும் ஆவேச கதியோடும் நிற்பதைப் பார்த்தேன்...''

''அதைத்தான் பிரம்மராட்சதனாய் அவர் நடமாடத் தொடங்கிவிட்டார் என்றீர்களோ?''

''ஆமாம்...''

''அப்படியானால் அவரது ஆத்மா இந்த மாளிகையை அல்லவா சுற்றிவரும்...?''

''அவரது ஆத்மா மட்டுமா...?''

ஒரு புன்முறுவலோடு பாபா கேட்டதில் ஏராளமான உட்பொருள்.

## இன்று

**அ**ந்தக் குடைக்காரத் திருடன் தப்பித்தோம் பிழைத்தோம் என்று ஓடிவிட நாயும் திரும்பி வந்தது.

சுந்தராம்பாளை ஒரு சுற்றிச் சுற்றி வந்து இளைத்தது.

அவளும் அதன் தலையை தடவிக் கொடுத்தாள். அப்படியே அது ஏதோ சொல்கிறது என்பது போல யோசித்தாள்.

''என்ன சுந்தரா ம்பா... உன் நாய் சாதாரணமா யாரையும் பார்த்துக் குரைக்காதே...?''

பட்டர் மட்டும் தன் சந்தேகத்தைக் கேள்வியாக்கினார். சுந்தராம்பாள் பதிலேதும் கூறாமல் சிரித்தாள்.

அதற்கு அவள் பதில் கூறிவிடுவதுகூட தேவலை என்றுதான் பட்டது.

அதன்பின் அவர்கள் அவ்வளவு பேரும் விடைபெற்றுக் கொண்டனர்.

உச்சிவேளையில் சூரிய பிம்பம் விருச்சி க்கேணியில் தெரியும்போது சாந்திபரிகாரபூஜை செய்வது என்று தீர்மானிக்கப் பட்டிருந்தது.

உச்சிவேளை!

நடுவானில் சூரியன்...

அவனது வட்ட வடிவமைப்பு அப்படியே விருச்சிகக் கேணியின் மையத்தில் துல்லியமாகத் தெரிந்தது. நீரில் சூரியன் மூழ்கிக் கிடக்கிற மாதிரியும் தோன்றியது. சற்றுத் தள்ளி கோவிலில் முரசைச் சப்திக்கும் வப்பாளத்தான் கோவில் முரசை வைத்துக்கொண்டு 'தொம்... தொம்' என்று தட்டிக் கொண்டிருந்தான்.

ஊரில் பலர் கிணற்றடிக்கு வந்திருந்தனர்.

கல்யாணசுந்தரம் வந்திருக்கவில்லை.

பதிலுக்கு கர்ணம், பட்டர் என்று முக்கியஸ்தர்கள் காத்துக் கொண்டிருந்தனர். சொல்லி வைத்த மாதிரி வில்வண்டியில் சுந்தராம்பாள் திலகத்துடன் வந்து இறங்கினாள். கையில் பூ பழத்தட்டு.

எல்லோரும் கும்பிட்டு வரவேற்றனர்.

கிணற்று முன் வந்தவள் அதை ஒரு பார்வை பார்த்தாள். விருச்சிகமூர்த்தியின் கண்பாகம் வரை மூடி நெற்றி தெரிந்தது. அவளும் அதைப் பார்த்தபடி கைகளைக் கூப்பினாள். அப்படியே அண்ணாந்து சூரியனைப் பார்த்தாள்.

நவக்கிரகங்களின் சஞ்சார பலன்கள் ஊருக்கும் பொருந்தும். அந்த வகையில் கேது முதல், சூர்ய சந்திரர் மற்றும் குரு என்று சகலரும் அஷ்டமத்தில் மறையும்போது ஒரு ஊர் அருள் பலமற்றுப்

போகும். அப்போது எதிர்மறையான உணர்வுகளுக்குப் பலம் ஏற்படும்.

பௌர்ணமி இரவில் பாம்புகள் இரை தேடிப்புறப்படுகிற மாதிரி ஒரு எதார்த்தமான விஷயம் இது.

வானில் ஏற்படும் சஞ்சாரங்களில் இதுபோல சில நிகழ்வுகள் மிக சகஜம். மழை பெய்யும்போது மழையை நிறுத்த முடியாது. ஆனால் குடையைப் பிடித்துக்கொண்டு சென்று நம்மை நாம் பாதுகாத்துக் கொள்ள முடியும். அப்படித்தான் அருள் பலமற்ற நிலையில் தற்காலிகமாக ஒரு அருள் பலத்தை உருவாக்க சுந்தராம் பாளும் தயாரானாள்.

அதே சமயம் இப்படி வானத்து மாறுதல்களை பூமியில் இருப்பவர்கள் சுலபமாகத் தெரிந்துகொள்ள அந்த நாளில் ஒரு கெடிகாரம் போல இப்படி ஒரு அமைப்பை செய்தவர்களை நினைத்து ஒரு வினாடி அவளுக்குள் பரவசமும் ஏற்பட்டு அடங்கியது.

மளமளவென்று பூஜையையும் தொடங்கினாள். பிரார்த்தித்துக் கொண்டு மலர்களை வாரி கிணற்றில் இறைத்தாள். அப்படியே எட்டு திக்குக்கும் எலுமிச்சையை நறுக்கி எறிந்து கிணற்று நெற்றி பாகத்தில் தேங்காய் உடைத்து, கதலிப்பழம் வைத்து கற்பூரம் ஏற்றினாள்.

பின் கொண்டுவந்திருந்த அகல்விளக்கில் நெய்விட்டு தீபம் ஏற்றினாள். அதைச் சுமந்து கொண்டு அப்படியே அந்தக் கிணற்றை வலம்வரத் தொடங்கினாள். 12ராசிக்கும் சேர்த்து 12 முறை அவள் வலம்வந்து முடியும்வரை அந்த விளக்கு அணையக்கூடாது. அணைந்தால் பூஜிப்பதில் பலனில்லை. பூஜையை ராசி தேவர்கள் ஏற்கவில்லை என்று பொருள்.

அதனாலேயே சுந்தராம்பாள் மிகக் கவனமாக நடந்து பிரதட்சணம் வந்தாள். சுற்றி இருப்பவர்களும் பயபக்தியுடன் பார்த்தபடி இருந்தனர்.

''இப்படிப் பிரதட்சணம் வரும்போது காம்போதில ஒரு கீர்த்தனையை நம்ம கல்யாணசுந்தரம் வாசிச்சா நம்ம ஸ்வாமியை சங்கீதத்தாலயே ஆராதிச்ச மாதிரியும் இருக்கும். ஆனா அவரோ உடம்பு சௌகர்யமில்லேன்னு வரமாட்டேன்னுட்டாரே...''

ஒருவர் புலம்புவது கேட்டு சுந்தராம்பாள் இதழ்க்கடையில் ஒரு சன்னச் சிரிப்பு.

இறுதியாக பன்னிரண்டாவது சுற்று முடியும்போது அங்கே உபாசகர் தலை தெரிந்தது.

கர்ணம் அவரைப் பார்த்தவுடன் பரிவோடு ''வணக்கம்'' என்றார். உபாசகருக்கு சுந்தராம்பாள் செய்யும் பூஜை எதற்கு என்பது பார்த்த மாத்திரத்தில் விளங்கிவிட்டது.

''என்ன ஸ்வாமி... பரிகார பூஜையாக்கும்?''

''ஆமாம்...''

''இதைப் பண்ணிட்டா நடக்கப்போற கெடுதல் நடக்காதாக்கும்...?''

''அப்படின்னு நம்பறோம்...''

''பாவம் நீங்கோ...'' உபாசகர் சொன்னவிதம் கர்ணம் நெஞ்சில் குத்தியது.

''தப்பா எடுத்துக்காதேள்... எனக்கென்னவோ ஒரு தப்புகாரியம் நடந்தே தீரும்னுதான் தோண்றது. நான் வேணும்னா அதைத் தடுக்கலாம். உங்க சுந்தராம்பாளால முடியாதுங்கறதுதான் என் அபிப்ராயம்.''

''அதுசரி... இது என்ன தற்பெருமையா, இல்லை பொறாமைல பேசற பேச்சா?''

''ஊர் நன்னா இருக்கணும்னு நான் மனசார சொல்ற சத்தியம்...''

அதைக் கேட்ட கர்ணத்தின் முகம் அப்படியே சுண்டிச் சுருங்கியது.

சுந்தராம்பாள் தன் வழிபாட்டை முடித்திருந்தாள். உபாசகரையும் பார்த்தாள். அம்பாளின் பரமபக்தராயிற்றே! வணங்கினாள்.

அவரும் பதிலுக்கு வணங்கினார்.

இருவரும் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்ள ஆரம்பிக்கவும் மற்றவர்கள் இங்கிதமாக ஒதுங்கிக்கொண்டனர்.

''என்னம்மா... எப்படியிருக்கேள்?''

''எனக்கென்ன... பரமசௌக்யம்.''

''இந்தப் பூஜையால ஊருக்கு வரப்போற கெடுதலைத் தடுத்திட முடியும்னு நம்பறேளா?''

''அப்ப இந்தப் பூஜைக்கு சக்தி இல்லேங்கறீங்களா?''

''இதோட சக்தியைவிட கிரகங்களோட சக்தி கூடுதலா இருக்கு. எப்பவும் எது கூடுதலோ அதுதானே ஜெயிக்கும்?''

''பாஞ்சாலியோட மானம் காக்க அந்தக் கண்ணன் வந்தமாதிரி எனக்காக அந்த தோடீஸ்வரன் வருவான்னு நான் நம்பறேன்.''

''தோடீஸ்வரன் எதுக்கு... நான் போறும்.''

''ஓ... நீங்க அந்த ஈஸ்வரனுக்கும் மேலன்னு சொல்லாமச் சொல்றீங்களா?''

''என் உபாசனையால எனக்குள்ற அவன் வந்துடுவான்னு சொல்றேன். அப்ப நானும் அந்த ஈசனும் ஒண்ணுதானே?''

உபாசகர் கேட்ட விதத்தில் ஒருவித பூடகம்.

சுந்தராம்பாள் பதில் ஏதும் கூறாமல் சிரித்துக்கொண்டே புறப்பட்டாள்.

இப்படி அவள் சிரிப்பதுதான் கல்யாணசுந்தரத்துக்கும் எரிச்சல் மூட்டியது. இங்கே உபாசகருக்கும்...

அவள் வந்த வில்வண்டி புறப்பட்டுவிட்டது. எல்லோரும் கலைந்தனர். சிலர் பார்வை உபாசகரைத் துளையிட்டது. அவர்களுக்குள் முணுமுணுப்பு. அதிசயமாக அங்கே ராவுத்தரும் வந்திருந்தார்.

''என்ன சாமி... நீங்க தேடுற வீணை இன்னுமா கிடைக்கல?'' என்று அவர் வேறு கேட்கவும் உபாசகர் முகத்தில் சலனம்.

கர்ணம் மட்டும் மிஞ்சியிருந்தார்.

''என்ன சுவாமி... எங்க சுந்தராம்பாம்மா என்ன சொன்னா?'' என்று ஒருவித க்யூரியாசிட்டியோடு கேட்டார்.

உபாசகர் பதிலுக்குச் சிரித்தவராக ''நான்தான் இந்த ஊரைக் காப்பாத்தப் போறேன்னேன்... கேட்டுண்டு போய்ட்டா...'' என்றார்.

கர்ணம் முகமும் அதைக் கேட்க மாறிவிட்டது.

''அப்ப நிச்சயம் கெடுதல் நடக்கப்போறதா?''

''ஆமாம்.... என் திருஷ்டில அப்படித்தான் தோண்றது...''

''அது என்னன்னு தெரியறதா?''

''அவ்வளவு பெரிய உபாசகனில்ல நான். ஆனா அந்த அளவு ஆகறதுதான் என் லட்சயம். அதுக்காகத்தான் இந்த ஊருக்கே வந்திருக்கேன்...''

''அப்ப வீணை வாசிக்க இல்லையா?''

உபாசகர் முகத்தில் பதிலுக்கு மர்மச் சிரிப்பு!

குடைரிப்பேர் நல்லமுத்துவும் தேன்கார பெரியசாமியும் குருட்டுப் பாண்டியும் ஊருக்கு வெளியில் உள்ள ஆளரவமில்லாத அந்த மரத்தடியில் ஒன்றுகூடியிருந்தனர்.

ஆளுக்கொரு பக்கம் பார்த்தபடி நின்று கொண்டனர்.

''என்ன பாண்டி... கோவில்ல நடமாட்டமெல்லாம் எப்படி?''

''பெருசா கூட்டம் இல்ல நல்லமுத்து... அதுலயும் ராத்திரி ஆறேழு மணிக்கு மேல பட்டரும் அவர் அசிஸ்டெண்டும்தான் இருக்காங்க. ஆமா ஊரோட நிலைமை எப்படி?''

''இந்த ஊர்ல திருட்டே போகாதாம்... கைப்பிடி மண்ணக்கூட எடுத்துக்கிட்டுப் போகமுடியதாம் ... சாமி உடாதாம் கேட்கவே எனக்குச் சிரிப்பா வந்துச்சு.''

''நானும் அப்படி எல்லாம் கேள்விப்பட்டேன். நடுநடுவுல வீணை வாசிக்கற சப்தமும் காதுல விழுந்துச்சு. நீ கேட்டியா?''

'உம்... கேக்காம...! யார், எங்க இருந்து வாசிக்கறாங்கன்னு தான் தெரியலை.''

''தலைவரும் எல்லாத்தையும் சொல்லித்தானே அனுப்பி யிருக்காரு. போட்ட திட்டப்படி கச்சிதமா காரியத்தை முடிச்சிட்டா தலைக்குப் பத்து லட்சம்... அப்படியே வடக்க பம்பாய், கல்கத்தான்னு ஓடிப்போயிடலாம்.''

அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்ளும்போது அம்பாசடர் கார் ஒன்று அவர்களுக்குப் பல அடி தூரத்தில் தேங்கி நின்றது. காரில் இருந்து இறங்கிக்கொண்டிருந்தான் அவர்களுக்குத் தலைவனைப் போன்றவன்.

''டேய், தலைவர் வர்றாருடா... அவர் கைலகூட தேன்குடுவை பார்...'' என்று அவர்கள் முணுமுணுத்துக்கொள்ள, அவன் அவர்களைச் சமீபித்தான்.

சுற்றிலும் ஒரு பார்வை பார்த்து முடித்தான்.

ஈ காக்கை இல்லை. அவனுக்கும் சற்று நிம்மதியாக இருந்தது.

''வந்து ரொம்ப நேரம் ஆச்சா?''

''இல்ல தலைவா... இப்பதான் பத்து நிமிஷம் ஆவுது.''

''பெரியசாமி... இந்தா...!'' தலைவன் கை தனது தேன்குடுவையை நீட்டியது.

''போதைமருந்து தேனுங்களா?''

''ஆமாம்... இதை ஒரு ஸ்பூன் குடிச்சாகூடப் போதும் - பத்து மணி நேரத்துக்கு எழுந்திருக்கமுடியாது.''

''அப்ப இதை கர்ணம், பிரசிடென்ட், தாசின்னு அம்புட்டு பேர் ஊட்டுக்கும் நான் சப்ளை பண்ணணும்?''

''ஆமாம்... பட்டர், உபாசகர்னு இரண்டு முக்கியமான வங்களை விட்டுட்டியே?''

''இவங்களுக்கு மட்டும் கொடுத்தா போதுமா?''

''இவங்கதான் இந்த ஊர்ல முக்கிய புள்ளிங்க.... ராத்திரி நாம கோவிலுக்குள்ள நுழையும்போது இவங்க வரலைன்னாலே பாதிவேலை முடிஞ்ச மாதிரிதான்...''

''நல்லது தலைவா... நான் பாத்துக்கறேன்.''

''தேன் அவங்க வீட்டுக்குப் போனாமட்டும் பத்தாது. அவுங்க அவசியம் குடிக்கணும். குடிக்காம வாங்கி வைக்கறதுல நமக்கு எந்தப் பிரயோஜனமும் இல்லை.''

''குடிக்க வைக்கறேன்... போதுமா?''

''நல்லமுத்து... என்ன ஆச்சு? கோவில் பூட்டுக்குச் சாவி தயாரா?''

''இன்னிக்கு - இன்னும் கொஞ்ச நேரத்துல வேலய முடிச்சுடுவேன் தலைவரே...''

''இதுவரை இல்லை.''

''இனியும் கவனமா இருக்கணும். ஜாக்ரதை. இது பலகோடி ரூபா மதிப்புள்ள திட்டம். மொத்தமா லைஃப்லயே செட்டில் ஆயிடலாம்.''

''தெரியும் தலைவரே... நீங்க ஏற்கெனவே போட்ட பிளான்படி ராத்திரி 12 மணிக்குக் கோவிலுக்கு வந்துடுங்க. நாங்க காத்திருப்போம்.

அவர்கள் மூன்று பேரும் அளித்த உத்தரவாதத்தைத் தொடர்ந்து அந்தத் தலைவன் திரும்பி நடந்தான்.

மீண்டும் சுற்றுமுற்றும் ஒரு பார்வை.

ஆனால் இந்தமுறை அவர்களுக்கே தெரியாமல் அவர்களை அவர்கள் பேசிக்கொண்டிருந்த மரத்தடியில் மரத்திற்கு மேல் அமர்ந்திருந்த நிலையில் கவனித்துக் கொண்டிருந்தார் உபாசகர்!

**ப**ட்டர்வீடு!

காயத்ரியும் பக்கத்து வீட்டு அலமுவும் பல்லாங்குழி விளையாடிக் கொண்டிருந்தனர்.

மைதிலி அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்தாள். மணி ஒன்றாகிக் கொண்டிருந்தது.

கோவிலில் இருந்து பட்டர் சாப்பிட வரும் சமயம்.

அவரும் வந்து சேர்ந்தார். கால்கை கழுவிக்கொண்டு இலையில் உட்காரப் போன சமயம் ''சாமி.'' என்று குரல் கொடுத்தான் குடைக்கார நல்லமுத்து.

''யாரு...?''

''நல்லமுத்துங்க...''

''நல்லமுத்துவா... யார்னு தெரியலியே...?''

''அதுசரி... தினசரி எவ்வளவோ பேர் கோவிலுக்கு வர்றாங்க போறாங்க. நானும் அவங்கள்ல ஒருத்தன். எப்படி ஞாபகம் இருக்கும்?''

''சரி சொல்லு... என்ன விஷயம்?''

''ஒண்ணுமில்ல சாமி... ஆறு மாசம் முந்தி வந்து உங்க மூலமா என் தங்கச்சி கல்யாணத்துக்காக அர்ச்சனை பண்ணேன். நீங்களும் எல்லாம் நல்லா நடக்கும்னு சொன்னீங்க. அதே மாதிரி இப்ப அவ கல்யாணம் ஆகி, நல்லா இருக்கா சாமி.''

''ரொம்ப சந்தோஷம். ஆமா சாமி தரிசனம் பண்ணிட்டியா?''

''இல்ல சாமி... உங்களைப் பாத்தாலே எனக்கு நம்ம சாமிய பாத்த மாதிரிதான் இருக்குது.''

''என்னப்பா நீ... நான் ஒரு சாதாரண மனுஷன். என்னைப் போய் இவ்வளவு பெருசா சொல்றியே...''

''உங்களுக்கு உங்க பெருமை தெரியாது சாமி...''

''போதும் போதும்... ஆமா இப்படிப் புகழத்தான் வந்தியா?''

''நான் ஒரு குடைரிப்பேர்காரன்சாமி. பழைய குடை எதாச்சும் இருந்தா கொடுங்க, ரிப்பேர் பண்ணித்தரேன்.''

''அப்படி எதுவும் இருக்கறதா தெரியலியே...''

''பாருங்க சாமி... ஐயருங்கன்னா கல்யாணத்துல காசி யாத்திரையின்போது குடை கொடுப்பாங்கல்ல.''

''சரிதான். நீ விஷயத்தோடதான் பேசறே... இரு பாக்கறேன்.''

பட்டர் உள்ளே சென்றார். அவனுக்கும் சந்தோஷமாகி விட்டது. வலையில் அவர் வசமாக விழுந்துவிட்டதாக நினைத்துக் கொண்டான். புகழ்ச்சி வார்த்தைகளுக்கே எப்பொழுதும் தனி சக்திதான். ஆனால் அதைச் சரியாகச் சொல்லத் தெரியவேண்டும். தனக்கு நன்றாக சொல்லத் தெரிவதாக தனக்குள் சொல்லிக் கொண்டான். அப்படியே பார்வை எதிரே, 'எங்கே கோவில் சாவிக் கொத்து?' என்று ஒரு ஓட்டம் ஓடியது.

எப்பொழுதும் கோவிலைப் பூட்டிக் கொண்டு சாவியுடன் வரும் பட்டர் சுவரில் ஒரு காலண்டர் தொங்கும் ஆணிக்காதில் தான் அதை மாட்டுவார். அன்றும் அது அங்கேதான் தொங்கிக் கொண்டிருந்தது. அதைப் பார்க்கவும் அவன் கண்ணில் ஒரு புது ஒளி! அதற்குள் பட்டரும் ஒரு பிய்ந்த குடையுடன் வந்தார்.

''இந்தாப்பா... இது நீ சொன்ன மாதிரி என் கல்யாணக்குடை. முப்பது வருஷமாறது. பரண்ல கிடந்தது. சரிசெய் பார்ப்போம்'' என்றார்.

''அப்படி உக்காந்துகிடட்டுங்களா?''

சாவி தொங்கும் ஆணி அருகே உள்ள இடத்தைக் காட்டிக் கேட்டான்.

''தாராளமா உக்காரேன்...''

அவனும் உட்கார்ந்தான். பல்லாங்குழியில் இருந்த காயத்ரியும் அலமுவும போரடித்தது போல ஆட்டத்தை முடித்துக் கொண்டு விலகினர்.

மைதிலி மட்டும் அவனை ஒரு மாதிரி பார்த்துவிட்டுச் சென்றாள்.

அவனும் மும்முரமாய் குடை தைப்பதுபோல் பாவனைகள் செய்தான். பட்டர் சாப்பிட உட்காரவும் மைதிலி பரிமாறத் தொடங்கவும் சட்டென்று எழுந்தான். தகரப்பெட்டியில் ஒரு நீளமான சோப்புத் துண்டு இருந்தது. அதில் கோவில் சாவியின் தடய அச்சு வேகமாகவும் அழுத்தமாகவும் பதிய ஆரம்பித்தது!

அவன் முகத்திலும் வெற்றிப் புன்னகை.

பூர்ணம் வீடு!

''சாமி ஈ ஈ...'' குரல் தேன்கார பெரியசாமியுடையது. எட்டிப் பார்த்தாள் அன்னபூரணி.

''அம்மா, தேனுங்கம்மா...''

''வேண்டாம்ப்பா... நான் அப்பளக்காரனோன்னு நினைச்சு வந்தேன்.''

''அம்மா, இது கொல்லிமலைத் தேனுங்க. பிரசிடென்ட் அய்யா சொன்னதால மலைக்குப் போய் கஷ்டப்பட்டுப் பிழிஞ்சு எடுத்துக்கிட்டு வந்தேன். பிரசிடென்ட் வாங்குனது போக மிச்சம் இருந்துச்சு. அந்த ஊட்லதான் உங்க ஊட்டுக்குப் போய் குடுக்கச் சொன்னாங்க...''

வசமாக கொக்கி மாட்டினான்.

அதற்குமேல் அன்னபூரணியும் அவனிடம் வாயாடாமல் -

''அப்படியா விஷயம்... ரங்காயி கொடுக்கச் சொன்னாளா?'' என்று கேட்டபடி உள்ளே சென்று ஒரு எவர்சில்வர் தூக்கை எடுத்து வந்தாள்.

அதில் நொப்பும் நுரையுமாய் சற்றே கரேல் என்று தேனும் நிரம்பியது.

''அம்மா... ராத்திரி ஒரு ஸ்பூன் சாப்ட்டுட்டுப் படுங்க. தூக்கம் எப்படி வரும் தெரியுமா?'' என்று முடுக்கிவேறு விட்டான். அவள் சிரித்துக்கொண்டே வாங்கிக்கொண்டாள்.

பதிலுக்கு ''எவ்வளவு விலை?'' என்று கேட்டாள்.

''எதுக்கும்மா... பிரசிடென்ட் வீட்டுலயே கொடுத்துட்டாங்க...'' என்றான். அப்படியே ஒரு கும்பிடுபோட்டு விட்டு நழுவினான்.

அடுத்து நேராக கல்யாணசுந்தரம் வீட்டுக்கு... அங்கே ரங்காயியிடம் கர்ணம் அனுப்பியதாகச் சொல்லி தேனைத்தர, ரங்காயியும் வாங்கிக்கொண்டாள்.

அப்பொழுதே ஒரு சொட்டு நாக்கில்விட்டுப் பார்த்தாள். அதுவும் நல்லதுக்கு என்றுதான் தோன்றியது பெரியசாமிக்கு...

அதற்கடுத்து சுந்தராம்பாள் வீடு!

மரத்தாங்கிமேல் மகாபாரதப் புத்தகம் வைத்து படித்துக் கொண்டிருந்தாள்.

''அம்மா...'' அவன் வரவும் நிமிர்ந்தாள்.

''கோவில்ல இன்னிக்குத் தேனபிஷேகம்... பட்டர் அபிஷேகத்தேனை உங்களுக்குக் கொடுக்கச் சொல்லி கொடுத்துவிட்டார்...''

சுந்தராம்பாள் லேசாக அதிர்ந்தாள்.

''நீ யாருப்பா? உன்னை நான் இந்த ஊர்ல பார்த்த தில்லையே...?'' என்றாள்.

''அ... அ... ஆமாம்மா. நான் சாமி தரிசனம் பண்ண வந்தேன். வந்த இடத்துல சாமி என்கிட்ட கொடுத்து உங்க வீட்ல தரச்சொன்னாரு...'' - பெரியசாமி சமாளித்தான்.

''பட்டர் எப்பவும் ராஜாமணிகிட்டதானே எதையும் கொடுத்து அனுப்புவார்...''

''அவருக்குக் கால்ல காயம்மா... அதான்.'' விடாமல் சமாளித்தான். சந்தேகத்தோடு அவளும் வாங்கிக்கொண்டாள்.

''ரொம்ப நன்றி'' என்றாள்.

அவன் பெரிதாய் ஒரு கும்பிடு போட்டான். அப்படியே அவள் சந்தேகப்படுவதைப் புரிந்துகொண்டவன் அதை உடனே போக்க வேண்டும் என்கிற துடிப்புடன் ''அம்மா, உங்க வீட்ல யாராவது இருந்தா என்கூட அனுப்புங்க. கோவில்ல பட்டர் தேனபிஷேகம் பண்ணாரா. இல்லையா- கொடுத்தாரா, இல்லையாங்கறது தெளிவாயிடும்.'' என்றான்.

சுந்தராம்பாளும் அதைக் கேட்டு ''நான் உன்னைச் சந்தேகப்பட்டாதானே வந்துபாக்கணும்?'' என்றாள். அவனிடமும் 'அப்பாடா' என்று நிம்மதி.

உபாசகர் குடிசை!

உபாசகர் நிஷ்டையில் இருந்தார்.

எதிரில் போய் நின்றான்.

அவர் கண்களைத் திறக்காமலே அவனிடம் பேசத் தொடங்கினார்.

''வாப்பா... பிரசிடென்ட் கல்யாணசுந்தரம் எனக்கு அபிஷேகத்தேனைக் கொடுத்தனுப்பியிருக்காராக்கும்?'' அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இந்த மாதிரி மனசுக்குள் இருப்பதை அப்படியே சொல்லும் மனிதர்களைப் பற்றி அவன் கேள்விப்பட்டதுகூட கிடையாது. அதனாலோ என்னவோ அவன் தலை பலமாக ஆடியது. கண்களைத் திறந்தபடி ''கொண்டா'' என்று தேன்பாட்டிலைக் கேட்டு வாங்கியவர் அப்படியே அவன் எதிரிலேயே ஒரு மடக்குக் குடித்தார். அவனுக்கும் பரம குஷியாகி விட்டது.

''சாமி... சும்மா எப்படித் தூங்கப் போறீங்க பாருங்க...'' என்றான்.

''நிச்சயமா... நானும் தூங்கி ரொம்ப நாளாறது... அதாவது நிம்மதியாத் தூங்கின்னு சொல்ல வந்தேன்...''

அவன் அதைக் கேட்டுச் சிரித்தான். பின் புறப்பட்டான். வெளியே வந்தவன் திரும்பிப் பார்த்தான். உபாசகரும் அமர்ந்திருந்த இடத்திலேயே அப்படியே சுருண்டு படுக்க ஆரம்பித்திருந்தார்.

அவனுக்குள் ஒரே மகிழ்ச்சிப்பெருக்கு.

எகிறிக் குதிக்கலாம் போல இருந்தது. அங்கிருந்து உற்சாகமாக ஓடினான்.

அது தெரிந்தோ என்னவோ உபாசகர் திரும்ப எழுந்து வெளியிலும் வந்து பார்த்தார்.

அவர் முகத்திலும் ஒரு மர்மப் புன்னகை!

**க**ர்ணம் வீட்டில் ஊஞ்சலில் ஆடிக்கொண்டிருந்தார். உபாசகர் ஒரு கடிதம் கொடுத்து அனுப்பியதாக ஒருவன் வந்து கடிதத்தைத் தரவும் ஆவலாகப் பிரித்துப் பார்த்தார். அவர் முகத்தில் பலத்த அதிர்ச்சி.

அன்னபூரணி எதிரில் பால் தம்ளரோடு வந்து நின்றாள்.

''என்னது இது... புதுப் பழக்கம்?''

''தேன் வாங்கினேன். பால்ல கலந்து கொடுத்தா உடம்புக்கு நல்லதாமே... அதான். சாப்டுங்கோ...''

''நல்லவேளை... உபாசகர் சாமி முந்திண்டுட்டார். இந்த தேன் என் உடம்புக்கும் நல்லதில்லை, ஊருக்கும் நல்லதில்லை.''

அலறினார் கர்ணம்.

''என்னன்னா சொல்றேள்...?''

''லெட்டரைப் படி தெரியும்.'' கடிதத்தைக் காட்டினார்.

அவளது கண்களும் அதைப் படித்துவிட்டு அகண்டன. அப்படியே பாலைத் தூக்கிக்கொண்டு போய் சாக்கடையில் கொட்டினாள். கைகளையும் உதறியபடி திரும்பி வந்தாள்.

''இப்ப என்னன்னா பண்ணப் போறேன்?''

''நான் என்னத்த பண்ண... இதே மாதரி லெட்டர் கல்யாண சுந்தரத்தக்கும் பட்டர் ஆத்துக்கும்கூட போயிருக்கும். அவாளோட சேர்ந்து ஒரு முடிவுசெய்ய வேண்டியதுதான்...''

''சுந்தராம்பாளுக்குத் தகவல் தெரியாதா?''

''உபாசகர் ஸ்வாமி தெரிவிக்க விரும்பலைன்னு தோண்றது.''

''நாமளாவது போய் சொல்வோமா?''

''அவசியமில்ல... இது ஒரு சந்தர்ப்பம் அன்னம்... உபாசகர் சக்தியையும் சுந்தராம்பா சக்தியையும் தெரிஞ்சுக்க இது நல்ல சந்தர்ப்பம்!''

''என்னன்னா சொல்றேள்... சக்தி அது இதுன்னு ஏதேதோ சொல்றேளே...?''

''ஊருக்குக் கெடுதல்னு ஒண்ணு வந்தாச்சு... அந்த விஷயத்துல உபாசகருக்கும் சுந்தராம்பாளுக்கும் ஒரு போட்டியும் ஆரம்பிச்சாச்சு. இதை நாம யாரும் எதிர்பார்க்கலேன்னாலும் விதியோட விருப்பம் அதுவா இருக்கும்போது யார் என்ன பண்ண முடியும்?''

கர்ணம் பேசுவது அன்னபூரணிக்குச் சுத்தமாகப் புரியவில்லை.

''நேத்து வந்தவர் இந்த உபாசகர்... இவருக்கும் பரம்பரை பரம்பரையா இங்கயே இருக்கிற சுந்தராம்பாளுக்கும் போட்டின்னா அது எப்படி எதனாலன்னு தெரியலியே...'' அன்னபூரணி மோவாயில் கைவைத்தபடியே சடைத்துக் கொண்டாள். கர்ணமோ தனது ஜிப்பாவை எடுத்து மாட்டிக் கொண்டு கல்யாணசுந்தரத்தைச் சந்திக்கப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்.




## அன்று

**மா**லை நேரம்!

தோடிபுரத்து வீடுகளுக்கு முன் உள்ள முல்லைக்கொடியில் முல்லைகள் பூத்துக்குலுங்கிக் கொண்டிருந்தன.

ஒரே வாசம்!

குறிப்பாக தாசிகள் வசிக்கும் கீழைத் தெருவில் அந்த வாசம் மித மிஞ்சியிருந்தது. அங்கங்கே குதிரைகளும் சாரட்டுகளும் நின்றிருக்க சுற்றுவட்டாரத்து ஊர்க்காரர்களும் மிட்டா மிராசுகளும் தாசிவீடுகளைத் தேடி வந்திருப்பதை உணர முடிந்தது.

சில வீடுகளில் பாட்டுச் சப்தம் கேட்டது.

பல வீடுகளில் ஒரே கும்மாளம்.

முதுமையடைந்து விட்ட தாசிகள் திண்ணைகளில் பூ கட்டிக் கொண்டிருந்தார்கள். யாராவது ஆடவர்கள் கண்ணில் படமாட்டார்களா என்று ஒரு பார்வையும் பூகட்டுவதில் மறு பார்வையுமாக அவர்கள் இருப்பதை பார்த்த மாத்திரத்தில் உணர முடிந்தது.

தப்பித் தவறி யாராவது பார்த்துவிட்டாலோ - அவர்களைப் பார்த்து ஒரு சிரிப்பு சிரித்து கிறக்கமாக ஒரு பார்வை பார்த்து கைச் சைகை காட்டி உள்ளே அழைப்பதுதான் அவர்கள் வேலை.

ஆடவர்களும் அழகாக அவர்களைத் தவிர்த்து இளமையாக யாராவது தென்படமாட்டார்களா என்று கவனித்தபடி நடந்து கொண்டிருந்தனர். அபராஜித வைஜெயந்தியின் வீட்டுமுன் மட்டும் திரளான கூட்டம். பல சாரட்டுகள் நின்றபடி இருந்தன. பல்லக்கு ஒன்றும் நின்று கொண்டிருந்தது. வைஜெயந்தியின் பாட்டியான மாணிக்கவல்லியிடமும் தாயான மாலியிடமும் மற்றுமுள்ள சேடிப்பெண்களிடமும் ஒருவித குதூகலம் தெரிந்தது.

சில மராத்திய அரண்மனை வீரர்களும் கண்ணில் பட்டனர். அந்தத் தெருவில் வாழ்ந்து கொண்டிருக்கும் முதிய தாசிகளில் சிலர் வந்து மாலியிடம் ''பரவால்லியே... வைஜெயந்தி புளியங் கொம்பா பிடிச்சுட்டாளே...'' என்று பொறாமையோடு கூடிய விசாரணைகளில் இருந்தனர்.

மாலியும் சளைக்கவில்லை.

''அவள் மக நட்சத்திரத்தில் சிம்ம ராசியில் பிறக்கும்போதே எனக்குத் தெரியும்... அவள் என்னைப் போல சராசரியாக வெல்லாம் இருக்கமாட்டாளென்று...'' என்று சொல்லி வாயடைத்துக் கொண்டிருந்தாள்.

அப்பொழுது வீரேந்திரனும் வந்து சேர்ந்தான்...

ஆளே பார்க்க பெரிதும் உருமாறி மிகக் கோரமாக இருந்தான். அவனைப் பார்க்கவும் மாலி கத்தினாள்.

''அடேய் பாவி... இப்படியா இருப்பே நீ? உன்னால என் மானம் மரியாதை எல்லாம் போயிடும் போல இருக்கேடா...''

என்று நாலுபேருக்குக் கேட்கும்படி புலம்பினாள். அவனும் பதிலுக்கு முகம் சுளித்தான். அலட்சியமாக அவர்களைக் கடந்துகொண்டு உள்ளே செல்லுமுன் தன் கண்ணில்பட்ட மராத்திய வீரர்களைப் பார்த்து ஆச்சரியமும் கொண்டான்.

அதே சமயம் வழக்கமான தாசி வீடாக ஆட்டம், பாட்டம், ஜதி சப்தம் என்று இருக்கும் சூழ்நிலை மாறி எல்லோர் முகத்திலும் வேறுவிதமான ஒரு சந்தோஷம் நிலவுவதையும் அப்பொழுதுதான் கவனித்தான்.

குறிப்பாக எப்பொழுதும் ஒரு மூலையில் கண்பார்வை தெரியாதபடி புலம்பிக்கொண்டிருக்கும் அவனது பாட்டி மாணிக்கவல்லி புதிய பட்டாடையில் நெற்றித் திலகம், கழுத்தில் தங்கச்சங்கிலி என்று மங்கள ஸ்வரூபத்துடன் காட்சிதந்தது அவனைக் கிள்ளியது.

அவளும் அவனருகில் வந்தாள்.

''பாட்டி... என்ன இது? உங்களுக்கெல்லாம் என்ன வந்தது?''

''ஆமாம். நீ எங்கேடா ஒழிந்தாய்...?''

''என் கேள்விக்குப் பதில் சொல்லு... இங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது?''

''எந்த நல்லது நடக்க வேண்டுமோ அது நடக்க ஆரம்பித்து விட்டதடா...''

''புரியும்படி சொல்லு பாட்டி...''

''முட்டாளே... போ.. போய் முதலில் குளித்து வேறு ஆடை அணிந்துவா... உன்மேல் ஏன்தான் இப்படி ஒரு பிணநாற்றம் அடிக்கிறதோ... எனக்கே தெரியவிலை.''

அவனுக்குத் திக்கென்றது.

''நான் குளிப்பது இருக்கட்டும்... உன்னிடம் மிகப் பெரிய மாற்றம் தெரிகிறது... எங்கே வைஜெயந்தி? அவளையும் பார்க்க முடியவில்லையே...?''

''விளக்கமாக சொல்கிறேன்... நீ முதலில் கேணிக்கரைக்கு வா. முதலில் நீராடு. இந்த மனைவாழ்க்கை நம் வரையில் இன்றோடு சரி. நாம் இனி அந்தக் காவிரிக்கரை நவக்கிரக மாளிகையில்தான் வசிக்கப் போகிறோம்...''

''பாட்டி...''

''என்ன பாட்டி... எல்லாம் அந்த பாபாஜி இந்த மண்ணுக்கு வந்த வேளை... 'நல்லவர் ஒருவர் இருந்தால்கூட போதும் அவரால் ஊர்முழுவதும் மழைபெய்து செழிப்பாக இருக்கும்' என்று வள்ளுவர் சொன்னதுதான் என் நினைவுக்கு வருகிறது.''

''எதற்கு இந்தப் பீடிகை... நேராக விஷயத்துக்கு வரவே உனக்குத் தெரியாதா?'' - கோபித்தான் வீரேந்திரன்.

''முட்டாளே... இன்னுமா உனக்குப் புரியவில்லை. முதலில் எனக்குப் பார்வை வந்தது... பிறகு இசைக்காத கோவில்மணியே இசைத்தது. ஊருக்குள்ளும் வறட்சி நீங்கி மழை பொழிந்தது... அவ்வளவு ஏன்... சாஸ்திரிகள் எமன் கோவிலுக்குள் நுழைந்து விட்டார். அவரை மீட்டுக்கொண்டு வந்து தந்தார் பாபா... அவர்தான் எத்தனை அதிசயமான ஒரு மனிதர்...!''

''அந்த மாயாவி பற்றி இங்கே பேசவேண்டிய அவசியம்?''

''அடப்பாவி...! அவர் மாயாவி இல்லை. மகான். இனி இப்படிப் பேசாதே. நமது வைஜெயந்திக்கும் ஒரு மறுவாழ்வு கிடைத்திருக்கிறது...''

''மறுவாழ்வா... எப்படி?''

''அவள் இனி தாசி வம்சத்தவளில்லை... தஞ்சை மந்திரி மகாதேவரின் பத்தினியாகப் போகிறாள். அதற்குப் பரிசுதான் அந்த மாளிகை வாசம்.''

''மகாதேவர் நம் வைஜெயந்தியை மணந்துகொள்ளவா போகிறார்?''

''ஆம்...''

''யார் சொன்னது... அவருக்கு என்ன பைத்தியமா?''

''அடப்பாவி... நீயே இப்படி நம்பாமல் தாழ்வாகப் பேசினால் எப்படியடா?''

''அவர்களே வடக்கில் இருந்து இங்கே வந்து ஒண்டியிருப்பவர்கள். எப்பொழுது யுத்தம் வரும்... அதில் நாயக்கர்கள் ஜெயிப்பார்களா, இல்லை நவாபின் ஆட்கள் ஜெயிப்பார்களா... அதுவுமில்லை... சேதுபதிக் கிழவன் ஜெயிப்பானா என்பது தெரியாத நிலை.... இதில் இவன் நமது வைஜெயந்தியை மணப்பதாகக் கூறுவதெல்லாம் சரியான வாய்ஜாலம்.''

''நிச்சயமாக இல்லை... மந்திரி மகாதேவர் ஒரு மிகச்சிறந்த மனிதராம். தெரிந்துகொள்.''

''எந்தச் சிறந்த மனிதனும் ஒரு தாசியை மணந்துகொள்ள சம்மதிக்கமாட்டான்... இதை நீயும் தெரிந்துகொள்...''

மாணிக்கவல்லியிடமும் வீரேந்திரனிடமும் பலமான சர்ச்சை. நடுவில் மாலி அவர்களை நெருங்கினாள். அவனை முறைத்துப் பார்த்தாள்.

''நீ பிறந்த உடனேயே உன்னைக் கொன்றிருக்க வேண்டும். போகட்டும் என்று நான் உன்னை விட்டது மிகப் பெரிய தவறாகி விட்டது.'' என்றாள் அவனைப் பார்த்து.

அவனும் அசரவில்லை. அவனது இடையில் ஒரு குறுவாள் இருந்தது. அதை எடுத்து அவள் கையில் திணித்தான்.

''இப்பொழுதுகூட ஒன்றும் கெட்டுப்போய்விடவில்லை. இந்தா என்னைக் குத்திக் கொல்... அதற்குத் தேவை உனக்கு தைரியம் மட்டும்தான். நான் துளிகூட எதிர்க்கமாட்டேன்.'' என்றான் வீரேந்திரன். மாணிக்கவல்லி அந்தக் குறுவாளைப் பிடுங்கி எறிந்தாள்.

''போதும்... இருந்திருந்து இந்தக் குடும்பத்திற்கு ஒரு விமோசனம் பிறக்கப்போகிறது. நீங்கள் உங்களுக்குள் இப்படியெல்லாம் அடித்துக்கொள்ளாதீர்கள்''என்றாள்.

அதே சமயம் தெருவிலும் முரசறைபவனிடம் இருந்து ஒரு அறிவிப்பு. அது வீரேந்திரனைக்கூட காது கொடுக்க வைத்து விட்டது.

''இதனால் சகலமான தோடிபுரத்து மகாஜனங்களுக்கும் தெரிவிச்சிக்கிறது என்னன்னா... நாளைய தினம் காலை வேளையில் நம்முடைய தோடிபுரத்துக் கோவிலில் ஒரு முக்கிய கூட்டம் நடைபெற இருக்கிறது. அதுசமயம், தோடிபுரத்துக்குள் இல்லாமல்போன கோவில் தாசி முறையை மீண்டும் புதுப்பிச்சு அபராஜித வைஜெயந்திங்கற தாசிக்குக் கோயில் தாசியா பட்டம் சூட்ட இருக்கறதால அந்தச் சமயத்துல எல்லாரும் வந்து சேர வேண்டியது. தொம்... தொம்... தொம்...'' பானை முரசின் சப்தத்துடன் கேட்ட அந்தச் செய்தி மாணிக்கவல்லி முதல் மாலி வரை அந்த வீட்டைச் சேர்ந்த சகலருக்குமே புதிது.

அவர்கள் முகங்களில் அடுத்த நொடி சூரியப் பிரகாசம்.

மாணிக்கவல்லி பரவசமாகக் கைகளைக் கூப்பி அங்கே கூடத்தில் இருக்கும் நடராஜமூர்த்தி விக்ரகத்தைப் பார்த்தாள். பின் அருகில் சென்று மண்டியிட்டாள். அப்படியே கண்ணீர் உகுத்தாள்.

வீரேந்திரனுக்கு எல்லாமே வியப்பாக இருந்தது.

கோயில்தாசி என்பது அவன் வரையில் ஒரு புதிய செய்தியாக அவனைக் குடைந்தது.

''பாட்டி... இது என்ன தொட்டுத் தொட்டு புதிது புதிதாக தகவல்கள்...''

''ஆமடா... கோவில் தாசியாக இருந்த குடும்பம் இது! அப்படி இருந்தவரை நமக்கென்று ஒரு மட்டு மரியாதை இருந்தது. அரசாங்கப் பாதுகாப்பும் இருந்தது. அதிகாரமும் இருந்தது. நடுவில் அது பறிபோனது... என் பாட்டியின் காலத்தில் பறிபோன பதவி அது. இப்பொழுது திரும்பக் கிடைத்திருக்கிறது.''

''அது ஒரு பதவியா?''

''ஆமாம்... ஊர் தலையாரி, கர்ணம் - இவர்களுக்கெல்லாம் மேலான பதவி அது. இன்னும் சொல்லப்போனால் ஊரில் எந்த நல்லது கெட்டது என்றாலும் கோவில்தாசிக்குத் தெரியாமல் நடக்கக்கூடாது. அவ்வளவு ஏன்...? அவள் கோவிலுக்குள் கருவறைக்குள்ளேயே நுழைந்து பூஜை செய்யலாம்... கோவில் பட்டர் மந்திரங்களால் பூஜித்தால் கோவில்தாசி ஆட்டம் ஆடி முத்திரைகளால் பூஜிக்க வேண்டும். அப்படி இரண்டும் கலந்து பூஜித்தால்தான் அந்தக் கோவிலுக்கும் சிறப்பு..''

''அதுசரி... இவ்வளவு நாளாக இல்லாமல் இப்பொழுது என்ன திடீரென்று...?''

''இந்த மண்ணில்தான் நிலையான ஆட்சியாளர்களே இல்லாமல் போய்விட்டார்களே... சிறிது காலம் நாயக்கர்கள். பிறகு தொண்டைமான் பரம்பரையினர். இப்பொழுது மராத்தியர்கள். நாளைக்கு யாரென்பது தெரியாது. ஆனால் இந்த தாசிமுறை சோழர்காலத்தில் இருந்து வருவது.''

''அது எப்படி பாட்டி உடம்பை விற்றுப் பிழைக்கும் நம் இனத்தைக் கோவிலுக்குள் அனுமதிப்பார்கள்...?''

''மூடனே... தாசிக்கும் வேசிக்கும் வித்தியாசம் தெரியாமல் பேசுகிறாய். தாசி என்றால் 'இறைவனுக்கு அடியவள்' என்று பொருள். ஆட்டமும் பாட்டும் அவள் சொத்து. அதை ரசிப்பவர்கள் அவளைப் போற்றிப் பாதுகாக்க வேண்டும். இறைவனாகிய

நடராஜமூர்த்திக்கு தாசிகள் அடிமை. அவனையே மணவாளனாகக் கொண்டு வாழ்பவர்கள்தான் தாசிகள்.''

''அதுசரி... இங்கே நடராஜனா தினம் வந்து போகிறான்? ஊரில் இருக்கும் காசுள்ள ராஜாக்கள் அவ்வளவு பேரும் அல்லவா வந்து போகின்றனர்?''

''ஆனாலும் ஒருவர்கூட வைஜெயந்தியைத் தீண்டியதில்லை. தீண்ட முடியவில்லை என்பது உனக்குத் தெரியாதா...? ஏன் இப்படி வந்ததில் இருந்து இகழ்ச்சியாகவே பேசுகிறாய்...?''

''வைஜெயந்தியை விடு... மற்றவர்கள் என்ன யோக்கியம்...?''

''அடேய்... எதற்கு அந்தக் குப்பையை எல்லாம் கிளறுகிறாய்? கோவில்தாசி முறை நடுவில் கைவிட்டுப் போனதல் வாழ வழிதெரியாமல் வேறு வழியின்றி நம்மில் சிலர் வேசிகளாகியிருக்கலாம். ஆனால் நாம் எதிலும் தாழ்ந்தவர்கள் கிடையாது.''

''அப்படியானால் என்னை யாரும் வேசி மகன் என்று கூறமாட்டார்களே...''

''நிச்சயமாக... நீ சகல அதிகாரத்துக்கும் உரிய ஒரு இளவரசனைப் போன்றவன். வாயாடியது போதும்... போ... போய் குளித்துவிட்டு வா. நாம் இப்பொழுது அந்த மாளிகைக்குத் தான் செல்ல இருக்கிறோம்.''

மாணிக்கவல்லி அவனை ஒருவாறு சமாதானம் செய்தவளாகத் திரும்பினாள். மாளிகைக்குச் செல்ல சகலவித சீர்தட்டுகளும் தயாராக இருந்தன.

வீதியில் இருக்கும் பிற தாசிகள் பொறாமையோடு நடப்பதைப் பார்த்தபடி இருந்தனர்.

குறிப்பாக வைஜெயந்தி தோடிபுரம் கோவிலுக்குத் தாசி ஆவதை அவர்களால் நினைத்துக்கூட பார்க்க முடியவிலிலை.

இந்த நிலையில் அந்த தாசி வீதியில் மொத்த உடலையும் ஒரு அங்கியால் மூடிக்கொண்டு பிட்சை கேட்பவன் போல ஒரு காபாலிகன் நுழைந்து கொண்டிருந்தான்!

## இன்று

நள்ளிரவு நேரம்!

சுவர்க் கோழிகளின் ரீங்காரச் சப்தம் தவிர வேறு எந்தவித அரவமும் இல்லை.

வானில் மட்டும் நட்சத்திரங்கள் மினுக்கியபடி இருக்க, ஊரே அமைதியாக தூங்கிப் போயிருந்தது.

கோவிலைச் சுற்றிய வீடுகளுக்கெல்லாம் ''அபிஷேகத் தேன், அபிஷேகத் தேன்'' என்று சொல்லிச் சொல்லித் தந்ததில் அவர்களெல்லாமும் அயர்ந்துவிட்டனர்.

கோவில் முகப்பில் ஒரு தெருநாய் சதா படுத்துக்கிடக்கும். அதற்குக்கூட, பிச்சை எடுப்பவன்போல உட்கார்ந்திருக்கும்போது தேனை ஊற்றி நக்கவிட்டதில் அதுகூட சுருண்டு படுத்து விட்டிருந்தது.

மணியும் சரியாக பன்னிரண்டு!

கோவில்முன் ஒரு வேன் வந்து நின்றது.

அப்படியே திரும்பி வேனின் பின்பாகம் கோவிலின் பிரதான கதவு நோக்கித் தெரியும்படி ஓடி நின்றது. குதித்து இறங்கினால் நேராக பிரதான கோபுரக் கதவுதான். உள்ளே கொள்ளையடித்து விட்டு திரும்பும்போதும் தோதாக அப்படியே தாவி ஏறலாம். அதன்பின் வேனைக் கிளப்பினால் அது காற்றைப் போல பறக்க வேண்டியதுதான்.

அந்தத் திருடர்களும் வேனில் இருந்து குதித்தனர்.

குடைக்கார நல்லமுத்து, பட்டர்வீட்டில் உருவாக்கிய சோப்பு அச்சுத்தடத்திலிருந்து செய்திருந்த புதிய சாவி பளபளவென்று மின்னியது.

சுற்றிலும் பாண்டி, பெரியசாமி மற்றும் அவர்களின் தலைவன்.

''உம்... சீக்கிரமாத் திற... மொத்தம் பன்னெண்டு விக்ரகங்கள். எண்ணி 60 நிமிஷத்துல வேனுக்குக் கொண்டுக்கிட்டு வந்துடணும். வந்த நிமிஷம் திரும்பக் கதவை பூட்டிட்டு எதுவுமே தெரியாத மாதிரி ஓடிடணும்.''

தலைவனின் கட்டளைக் குரலைத் தொடர்ந்து கதவைத் திறந்தான் நல்லமுத்து.

கிரீச்சிட்டு சப்தித்த கதவை மெல்லத்தான் திறந்தனர்.

நேர் எதிரே கோவிலின் கோபுரம்!

அதன் முன்னால் ஒரு சிலை நிற்கிறமாதிரி இருந்தது. நல்லமுத்து கையில் டார்ச்லைட் இருந்தது.

அதைச் சந்தேகத்துடன் கொடிமரம் நோக்கி நிமிர்த்தியவனுக்கு தூக்கிவாரிப் போட்டது. மௌனமாக ஒட்டவைத்தது போல ஒரு புன்னகையுடன் எதிரில் உபாசகர்!

'இவர் இங்கே எப்படி...? கண் எதிரில் தேனைக் குடித்துவிட்டு சுருண்டு படுத்தாரே... எப்படி... எப்படி?'

நல்லமுத்து திகைத்துத் தடுமாற மளமளவென்று பின்னால் உள்ள தூண்களுக்கும் பின்னால் இருந்து ஒவ்வொரு உருவமும் வெளிப்பட சட்டென்று கோவிலின் பிராகார விளக்குகளும் எரிய ஆரம்பித்தன!

நால்வரும் அப்படியே கண்டங்காலை கருநாகம் கடித்ததுபோல ஆயினர். திருதிருவென விழித்தவர்கள் அப்படியே திரும்பியும் ஓடத் தொடங்கினர்.

ஆனால் வேனுக்கு முன்னால் ஒரு போலீஸ் பட்டாளமே காத்துக்கொண்டிருந்தது. வேனுக்குள் தாவி ஏறிய அவர்களைப் பார்த்து ஒரு சிரிப்பு சிரித்தார் இன்ஸ்பெக்டர் ஒருவர். டிரைவிங் சீட்டில்கூட ஒரு போலீஸ்காரர்தான்.

''அப்படியே ஸ்டேஷனுக்கு விடுய்யா...'' என்றவர் திரும்பிவந்தார்.

கொடிமரத்தின் முன்னால் உபாசகரைச் சுற்றிலும் கல்யாணசுந்தரம், கர்ணம், பட்டர் என்று ஊர்க்கூட்டம்.

''ரொம்ப நன்றி இன்ஸ்பெக்டர் சார்.'' - உபாசகர்தான் நன்றி சொன்னவர்.

''எங்க டிபார்ட்மென்ட்தான் சாமி உங்களுக்கு நன்றி சொல்லணும். நாலுபேரும் பெரிய திருடனுங்க. ரொம்ப வருஷமா தேடிக்கிட்டிருக்கோம். இவங்கள பிடிச்சா அஞ்சு லட்சரூபா ரிவார்டெல்லாம் உண்டு. உங்களைத் தேடி வரும் பாருங்க...'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''அப்படி வந்தா அதை இந்தக் கோவிலுக்கே கொடுத்துடுங்கோ. எனக்கு எதுக்கு அது?'' உபாசகர் சொன்னதைக் கேட்டு எல்லோருக்குமே சிலிர்த்தது. அந்தக் கூட்டத்தில் சாமிநாதனும் சங்கரனும்கூட இருந்தனர். உபாசகரை

சற்று மரியாதையோடும் நன்றிஉணர்ச்சி கண்களில் மின்னவும் பார்த்தனர்.

''மிஸ்டர் கல்யாணசுந்தரம்... அந்தத் திருடர்களைப் பிடிச்ச விஷயத்துல கொஞ்சம் சம்பிரதாயமெல்லாம் இருக்கு. உங்க ஆட்கள் சிலர் வந்து கையெழுத்தெல்லாம் போடணும். அப்பதான் அவனுங்கள நாங்க கோர்ட்ல நிறுத்தி தண்டனை வாங்கித் தரமுடியும்''

''அதுக்கென்ன இன்ஸ்பெக்டர்! சாட்சிதானே உங்களுக்கு வேணும். நான் வரட்டுமா?''

''அவசியமில்ல... நீங்க கோவிலப் பாருங்க. உங்க மகனையும் இன்னும் இரண்டுபேரையும் அனுப்பி வையுங்களேன்...''

அதைத் தொடர்ந்து சங்கரனும் சாமிநாதனும் அந்த இன்ஸ்பெக்டர் பின்னால் சென்றனர். செல்வதற்கு முன் உபாசகரை ஒரு நன்றிப் பார்வை பார்த்தனர்.

உபாசகர் முகத்தில் ஒருவித மந்தகாசப் புன்னகை. ''சாமி... நின்னு காமிச்சுட்டீங்க. நீங்க மட்டும் இல்லேன்னா கோயிலையே கொண்டுபோயிருப்பாங்க.''

கல்யாணசுந்தரம் ஆரம்பித்தார்.

''எது எப்படியோ.... ஊருக்கு நடக்க இருந்த கெடுதல் ஒருவழியா நீங்கினது. இந்த ஊரே உங்களுக்கு ரொம்பக் கடமைப் பட்டிருக்கு...'' என்றார் பட்டர்.

''என்னால நம்பவே முடியல. எல்லாம் கண்ணாமூச்சி மாதிரி இருக்கு. அதே சமயம் இந்த ஊர்ல இருந்து ஒரு கைப்பிடி மண்ணைக்கூட யாரும் திருடமுடியாதுங்கறது திரும்ப ஒருதடவை நிரூபணம் ஆகியிருக்கு...'' என்றார் கர்ணம். சிலர் உபாசகர் காலிலேயே விழுந்தனர்.

உபாசகர் அவர்களைத் தடுத்தார்.

''தடுக்காதீங்க... இனி நீங்கதான் இந்த ஊருக்குச் சாமி. அந்த தாசி இல்ல...'' என்று அந்த நேரத்தில் சுந்தராம்பாளைக் குத்திக்காட்ட கல்யாணசுந்தரம் தவறவேயில்லை. பட்டர் உடனே 'இப்பொழுது எதற்கு சுந்தராம்பாள் பற்றிய பேச்சு' என்கிற மாதிரி பார்த்தார்.

''என்ன பட்டரே... என்னை பாக்கறீங்க. இனி நம்ம ஊரோட காவல்தெய்வம் உபாசகர்தான். சுந்தராம்பா இந்த நொடி நல்லா

அசந்து தூங்கிட்டு இருப்பா. சக்தியுள்ளவளா இருந்திருந்தா அவ இல்ல இங்க வந்து இந்த திருட்டுப்பசங்கள பிடிச்சுக் கொடுத்திருக்கணும்?''

கல்யாணசுந்தரம் ஆவேசமாக கேட்ட நேரம் கெட்ட நேரம் போலும்... ஜல்ஜல் என்று வில்வண்டி ஒன்று வரும் சப்தம்.

சுந்தராம்பாள்தான் வந்துகொண்டிருந்தாள். வண்டியைப் பார்க்கவும் கல்யாணசுந்தரத்துக்குப் பொட்டுப் பொட்டாய் வியர்க்கத் தொடங்கிவிட்டது.

அவளேதான்... திலகத்துடன் வண்டியில் இருந்து இறங்கினாள். பட்டரும் கர்ணமும் கையெடுத்துக் கும்பிட்டனர்.

கல்யாணசுந்தரம் அதிர்ச்சியோடு பார்க்க, உபாசகர் முகத்திலும்கூட லேசான அதிர்ச்சி.

சுந்தராம்பாள் நேராக உபாசகரைத்தான் நெருங்கினாள்.

''எல்லாம் கேள்விப்பட்டேன். இந்த ஊருக்கே பெரிய உபகாரம் பண்ணியிருக்கீங்க. நன்றி சொல்லத்தான் வந்தேன்... ரொம்ப நன்றி உங்களுக்கு...'' அவளது கைகள் உபாசகர் முன் வணங்கின. ஆச்சரியமான ஒரு காட்சி அது. ஊரே அவளைப் பார்த்துதான் கும்பிட்டிருக்கிறது. ஆனால் இன்று அவளோ ஒருவரைக் கும்பிடுகிறாள்.

''சுந்தரம்... இங்க நடந்ததெல்லாம் உனக்குத் தெரியுமா?'' - பட்டர் ஆவல் தாளாமல் கேட்டார்.

''தெரியும். வழியில நம் ஊர்க்காரங்க சிலர் நிறுத்தி நடந்த விஷயத்தைச் சொன்னாங்க. எனக்குத் தெரியும். நான் பண்ணின பரிகார பூஜை வீண் போகாதுன்னு...'' அவள் அப்படிச் சொல்லவும் உபாசகருக்குச் சுரீர் என்றது.

''என்னது... நீங்க பண்ணின பரிகார பூஜையாலையா?'' என்றார் உடனே...

''ஆமாம்... அதுதான் உங்களையே இப்படி தயார்படுத்தி கோவிலைக் காப்பாத்தியிருக்கு யார் காப்பாத்தினா என்ன? கோவிலுக்கு ஒரு கெடுதலும் இல்லேங்கறதுதான் முக்கியம். திரும்பவும் அதுக்காக உங்களுக்கு என் நன்றி?'' சொன்னபடி திரும்பி நடந்தாள்.

''ஒரு நிமிஷம்...'' உபாசகர் குரல் அவளைத் தடுத்தது. திரும்பினாள்.

''இவ்வளவு பேசற நீங்களே வந்து அவாளைப் பிடிச்சுக் கொடுத்துருக்கலாமே...?''

''நான் வரதைத்தான் நீங்க விரும்பலியே... விரும்பி யிருந்தாதான் எனக்கும் லெட்டர் அனுப்பியிருப்பீங்களே...?''

''அப்ப உங்களுக்கு எப்படி திருட்டு நடக்கப் போறது தெரியும்... அந்தத் தேன்ல மயக்க மருந்து இருக்கறத யார் சொன்னா?''- உபாசகர் கேள்வி முன்னால் ஒரு சிரிப்பு சிரித்தாள்.

''நீங்கதான் பெரிய உபாசகர் ஆச்சே... நீங்களே கண்டு பிடியுங்களேன் பார்க்கலாம்...'' என்றவள் தொடர்ந்து நடந்தாள். வண்டியிலும் ஏறினாள். அது திரும்பி ஓடத் தொடங்கிவிட்டது.

கல்யாணசுந்தரத்துக்கு அவள் அந்த இரவில் வந்தது, அலட்சியமாக நன்றி சொன்னது, 'நீங்களே கண்டுபிடியுங்கள்' என்று கூறிச் சிரித்தது எல்லாமே அவரைக் கீறிக்கிளறியது.

''சாமி... என்ன சாமி நீங்க... எப்படி சாமி வந்தா இவ. நம்ம ஆளுங்கள்ல எவனாவது இவகிட்ட போட்டுவிட்டுட்டானுங்களா?'' - கர்ஜித்தார் கல்யாணசுந்தரம். உபாசகர் பதிலேதும் கூறவில்லை. மாறாக அவருக்குள் காரணத்துக்கு விடை தேடி ஒருசில நொடிகள் தியானித்தார். பூனை ஒன்று மியாவ் என்று கத்தியபடி ஓட, பல்லி ஒன்று உத்தரத்தில் இருந்து தவறி தேன்கிண்ணத்தில் விழுந்தது ஒரு காட்சியாய் உள் ஓடியது. முகத்திலும் அதைத் தொடர்ந்து ஒரு சிறு புன்னகை.

''என்ன சாமி...?''

''யாரும் போட்டுவிடலை கல்யாணசுந்தரம். சுந்தராம்பாளுக்கு நிறையவே தெய்வபலம் இருக்கு. இல்லேன்னா ஒரு சுவத்து பல்லி தேன்கிண்ணத்துல விழுந்து அதைத் தட்டி விடுமா...?''

''அப்படின்னா...?''

''அவ சாதாரண பொம்பளையில்ல கல்யாணசுந்தரம்...''

''உண்மைதான்...'' என்றது சட்டென்று ஒரு பெண்குரல். யார் என்று பார்த்தபோது இருட்டில் திலகம் வந்து கொண்டிருந்தாள்.

நெருங்கினாள்... உபாசகரைப் பார்த்தவள் அவரைத் தனியே அழைத்துச் சென்றாள். உபாசகரும் பின்னால் சென்றார்.

''என்னம்மா... எதனா ரகசியமா?''

''ஆமாம்...''

''என்ன... சொல்லு.''

''நீங்க உடனே ஊருக்குத் திரும்பறது நல்லதாம். எவ்வளவு நல்ல பெயர் எடுத்தாலும் எதுக்காக வந்திருக்கீங்களோ அது நடக்காதாம்...''

''அப்படின்னு சுந்தராம்பா சொல்லிவிட்டாளாக்கும்?''

''ஆமாம்...''

''போய்ச் சொல்லு... எண்ணி பதினெட்டு நாள் நான் எதுக்கு வந்தேனோ அதை அடைஞ்சிகாட்டறேன்னு...''

''பதினெட்டு நாள்லையா?''

''ஆமாம். பதினெட்டு நாளேதான்... மகாபாரதப் போர் நடந்த அதே அளவு காலம் இந்த உபாசகனுக்கும் போதுமான காலம்.''

திலகம் பதிலுக்கு முறைத்தாள்.

''தலைஎழுத்தை யாரால் மாற்ற முடியும்...'' என்று திரும்பி நடந்தாள். கல்யாணசுந்தரமும் பட்டரும் கர்ணமும் ஒன்றும் புரியாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.




## அன்று

**சா**தாரணமாக தோடிபுரத்தில் யாருமே பிச்சை எடுக்கமாட்டார்கள். அதற்கு அவசியமேயில்லாத ஊர் அது. கோவிலுக்குச் சொந்தமான அன்னசத்திரத்தில் எப்பொழுதும் சோறு பொங்கிப் போட்டபடி இருப்பார்கள். எனவே பிச்சை எடுக்க வேண்டிய ஒரு அவசியமில்லாத ஊருக்குள் ஒரு காபாலிகன் பிச்சை எடுத்தபடி வருவது பலரை ஆச்சரியப்படவைத்தது.

சிலர் அந்தக் காபாலிகனை நெருங்கிச் சென்று பார்த்தனர். அவனும் அவர்கள் பார்ப்பது தெரிந்து முகத்தை முடிந்த மட்டும் திருப்பிக்கொண்டே ''பிட்சாந் தேஹி....'' என்றான்.

''அப்பா, நீ யார்...? எதற்கு இப்படி அவசியமேயில்லாமல் இந்தத் தெருவில் பிச்சை எடுக்கிறாய்...? அதிலும் இது ஒரு தாசி தெரு... அது தெரியுமா உனக்கு?''

ஒருவர் அவனிடம் கேட்கவே செய்தார்.

''நன்றாகத் தெரியும்... நான் ஒரு பைராகி. அரிசியை பிச்சையாக வாங்கி என் கையால்தான் சமைத்துச் சாப்பிடுவேன். பிறர் கையால் சமைத்த அன்னங்கள் எனக்கு ஆகாது...'' என்று அவரைக் கத்தரித்துவிட்டு வீரேந்திரன் இருக்கும் அந்தப் பிரதான இல்லத்துக்கு வந்தான். வருவோரும் போவோருமாக 'ஜேஜே' என்று இருந்தது கூட்டம். பல்லக்கு, சாரட், குதிரைகள் என்று ஒரே அமர்க்களம்.

வீட்டின் பின்பக்கத்தில் தென்னை தழைத்திருக்கும் தோப்புப் பகுதி. அதை நன்றாகக் கவனித்துக்கொண்டவன் கூட்டத்தை உத்தேசித்து திரும்பி நடக்க ஆரம்பித்தான்.

**நா**ணல் புதர்களுக்கு அப்பால் தண்ணீர் கசிந்து ஓடியபடி இருக்கும் அடர்த்தியான கரைவெளியில் மொத்த காபாலிகர்களும் கூடியிருந்தனர்.

அந்தப் புதர்ப் பகுதி புதியது... தோடிபுரத்துக்குப் பல காதத் தொலைவில் இருந்தது அது.ஆற்றில் சென்றுகொண்டிருந்த தலையாரியின் பார்வையில் அவர்கள் கூட்டமாக பட்டுவிட்டதன் எதிரொலி.

நிச்சயம் ஊர்மக்களோ, இல்லை மராத்திய வீரர் படையோ தேடிவந்து தங்களை வேட்டையாடுவார்கள் என்று உணர்ந்தோ - இல்லை தங்களை ஊரறிய வெளிக்காட்டிக்கொள்ளக்கூடாது என்று கருதியோ அவர்கள் அந்த இடத்தைவிட்டு உடனே இடம் பெயர்ந்துவிட்டிருந்தனர்.

சரியாக அந்த இடத்தை குறிவைத்து வந்து கொண்டிருந்தான் ஊரில் 'பிட்சாந்தேஹி' என்று பிச்சை கேட்டிருந்த அந்த காபாலிகன்.

அவர்களுக்கும் அவனுக்கும் இடையில், ஆற்று நீரின் ஓட்டம். வானில் தெரியும் சந்திரனின் துண்டுப் பகுதியை அது பளபளவென்று வாங்கி பதிலுக்கு மின்னச் செய்துகொண்டிருந்தது.

நல்ல கவியுள்ளம் கொண்டவர்கள் யார் வந்து பார்த்தாலும் சொக்கிப் போய் விடுவார்கள். அப்படியே கரை ஓரமாக அமர்ந்து

பனை ஓலையும் எழுத்தாணியுமாக தங்களுக்குள் ஊற ஆரம்பித்து விட்ட சொற்களை எடுத்து கோத்துக் கவிதை தயாரிக்க ஆரம்பித்துவிடுவார்கள்.

ஆனால், இந்தக் காபாலிகனுக்குக் கவியுள்ளமும் கிடையாது. அதற்கான ரசனையும் கிடையாது. மாறாக மனது முழுக்க ஒரே கொதிப்புதான் இருந்தது.

ஆற்று நீருக்குள் இறங்கி நடக்கத் தொடங்கிவிட்ட அவன் தன்னை தன் இனத்தவர்கள் அடையாளம் கண்டுகொள்ளும் விதமாக ''ஜெய் பைரவா... யம்யம் பைரவா...'' என்று உரக்க முழக்கமிட்டான். சுற்றிலும் பச்சையான வயல்வெளிகள்தான். எனவே அவனது குரலொலியால் யாதொரு பாதிப்பும் இல்லை.

அவர்களும் அவன் வரவும் ஒருசேர நிமிர்ந்து அமர்ந்தனர். மாஞ்சாவை வாயில் அதக்கியபடியும் சோமரசம் என்னும் சாராயத்தை முகம் கோணக் குடித்துவிட்டு நல்ல போதையிலும் இருந்த காபாலிகர்களும்கூட அவனை ஆவலாகப் பார்த்தனர். காலகண்டன் என்பவன் கேட்க ஆரம்பித்தான்.

''ஜெய் பைரவா... போன காரியம் என்னாயிற்று?''

''ஊரே திருவிழா கோலத்தில் இருக்கிறது. இனி அந்த தாசி மகனும் நம்மிடம் வரப்போவதில்லை என்று எனக்குப் படுகிறது.''

''என்ன சொல்கிறாய்...? வீரேந்திரன் நம் கூட்டத்தவன் என்று தெரிந்து யாரேனும் அவனை எச்சரித்தார்களா?''

''அதெல்லாம் இல்லை... வீரேந்திரனுக்கு ஒரு புது வாழ்வு கிடைத்துள்ளது...''

''எப்படி என்று கூறு...''

அவனும் வைஜெயந்தி, கோவில்தாசி ஆக மாற இருப்பதைக் கூறி, மந்திரி மகாதேவர் வைஜெயந்தியை மணந்து கொள்ள இருப்பதையும் கூறி முடித்தான்.

''இதெல்லாம் நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்கள். வீரேந்திரன் உளறிக்கொட்டாத வரையில் நமக்கு ஒரு ஆபத்துமில்லை...''

''அதுதான் கிடையாது... நமது இலக்கு அந்த நவக்கிரகமாளிகை. மறைந்து நாம் செயல்பட அது மிக ஏற்ற இடம். அது மட்டுமல்ல - நமது கூட்டத்தை பலப்படுத்திக்கொண்டு நமது இயக்கத்தைப் பெருக்கவும் அதுதான் சரியான இடம். அதற்காகவே நாம் வேணாட்டை விட்டும் பாண்டிய நாட்டை

விட்டும் சேது நாடு, சேர நாடு என்று பல நாடுகளை விட்டுவிட்டும் இந்தச் சோழநாட்டுக்கு வந்தோம்.''

''மாளிகைளை வசப்படுத்திக்கொள்வது மட்டுமா நமது இலக்கு... அந்த ருத்ரவீணையின் சக்தியையும் ஒருகை பார்த்து விடுவதும்தானே?''

''எல்லாம்தான்... ஆனால் இனி அதற்கு இடமில்லை. அந்த மாளிகை அந்தத் தாசிக்குச் சொந்தமாகப் போகிறது.''

''என்ன உளறுகிறாய்... அது தஞ்சை அரசவைக்குச் சொந்தமானது. அரசாங்கச் சொத்து!''

''மந்திரி மகாதேவர் யார்...அரச குடும்பத்தவர்தானே? தஞ்சை மன்னர் சாந்தாஜிக்கும் நெருங்கிய உறவினர். அவர் ஒரு முடிவெடுத்தால் எடுத்ததுதானாம்...''

ஊருக்குள் சென்று வந்த கபாலிகன் சொன்னதைக் கேட்டு காலகண்டன் முதல் தலைவனாகிய அகோரகண்டன் வரை அதிர்ச்சியடைந்தனர்.

**அ**வர்களுக்குள் பலவிதத் திட்டங்கள் இருந்தன.

'குறிப்பாக பாரத தேசத்தில் தென்பகுதியில் காபாலிகமோ, காளாமுகமோ, இல்லை தாந்திரீக விஷயங்களோ சுத்தமாக நடைமுறையில் இல்லை. எல்லாம் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே அழிக்கப்பட்டு விட்டிருந்தது. இங்கே சைவமும் வைணவமும்தான் சம அளவில் இருந்தன. பௌத்தமும் சமணமும்கூட இந்த மண்ணில் நிலைபெற முடியவில்லை.

சக்தி வழிபாட்டை மட்டும் நம்பும் சாக்தர்கள்கூட சைவத்தையோ, வைணவத்தையோ எதிர்க்கவில்லை. கூடவே கௌமாரமும் காணாபத்யமும்கூட சைவ, வைணவத்தின் பின்னே ஒளிந்துகொண்டு ஒன்றுக்குள் ஒன்று நிலைபெற்றுவிட்டன.

அட இந்த வைணவமும் சைவமுமாவது பெரிய அளவில் அடித்துக்கொள்கிறதா என்றால் அதுவுமில்லை. 'ஹரியும் சிவனும் ஒண்ணு அறியாதவன் வாயில் மண்ணு' என்று அதற்கொரு சொலவடையைச் சொல்லி அம்மட்டில் பேதம் பார்க்கிறவர்களையும் கட்டிப் போட்டுவிட்டார்கள்.

மதுரைப் பக்கம் திருமலை நாயக்கரோ ஒருபடி மேலே போய் கள்ளழகர் ஆலயத்தையும் மதுரை மீனாட்சி ஆலயத்தையும் ஒரு பழைய புராணக்கதையின் செய்திப்படி சித்திரைத் திருவிழா என்கிற ஒன்றை உருவாக்கி இணைத்து வைத்துவிட்டார்.

அந்தத் திருவிழாவின்படி சைவநெறி முறையைச் சேர்ந்த சொக்கநாதரின் மனைவியான மீனாட்சி வைணவக் கட்டவுனான திருமாலுக்குத் தங்கையாம்...

விட்டால் சைவமும் வைணவமும்கூட ஒன்றுபட்டு புதிதாக ஒருமதம் உருவாகும் அபாயம் இருப்பதாக அந்தக் காபாலிகர்கள் நினைத்தனர்.

உலகின் உன்னதமான ஒரே விஷயம் காபாலிகம்தான்.ஒரே கடவுள் அந்த பரமன்தான். அவனை முன்னிலைப்படுத்தாமல், அவனை ஏகாந்தமாய் வழிபடாமல் சாங்கிய சம்பிரதாயங்களில் சிக்கிக்கொண்டு செயல்படுவதெல்லாம் சரியான அஞ்ஞானம்

இப்படியே போனால் கௌமாரம் என்னும் முருக வழிபாடும் காணாபத்யம் என்னும் கணபதி வழிபாடும் பின்னுக்குத் தள்ளப்பட்டது போல இந்த வைணவர்கள் சைவக் கடவுளான சிவனையும் பின்னுக்குத் தள்ளி அந்த திருமாலே உலகின் முதல்வன் என்று கூறிவிடுவார்கள் என்றெல்லாமும் அவர்களுக்குள் அச்சம்.

அதனாலேயே வடக்கில் காந்தாரத்தில் இருந்து புறப்பட்டு வந்தவர்கள் தாங்கள் சௌகர்யமாக தங்கிச் செயல்பட தோடிபுரத்தை ஒரு சரியான ஊராகத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். நவக்கிரகமாளிகை பற்றியும் நிறைய கேள்விப்பட்டிருந்தார்கள். ஊர் ஜனங்கள் வந்துசெல்ல துளியும் இடமில்லதா ஒரு இடம்.

எப்படியாவது அந்த மாளிகைக் காவலாளிகளை வசப்படுத்திக் கொண்டுவிட்டாலோ - இல்லை மாளிகைக்கு வரும் மராத்திய அதிகாரிகளை வசப்படுத்திவிட்டாலோ அதன்பின் தங்களது திட்டம் சுலபமாக ஈடேற்றப்பட்டுவிடும் என்பதெல்லாம் அவர்களது கனவாக இருந்தது. தங்கள் கனவிற்கு எதிரானவர்களை தங்களுக்குத் தெரிந்த தந்திரோபாயங்களால் கொன்று குவிக்கவும் அவர்கள் அஞ்சியதில்லை.

அகோரமனிதப் பிணத்தையே அறுசுவை உணவைப் போல எண்ணி அது சுடுகாட்டில் கட்டையில் வெந்துகொண்டிருக்கும் போதே அதன் உடலைப் பிய்த்துத் தின்பவர்களுக்கு உலகில் எதுதான் அச்சமூட்டக்கூடிய ஒன்றாக இருக்க முடியும்?

**கோ**விலில் வாழைமரங்களும் கமுகுத்தோரணங்களும் படுவிமரிசையாகக் கட்டப்பட்டுக் கொண்டிருக்க, ஊடே ஈச்சம் பாளை, தாழம்பூக்கள், மாவிலைகள் இவையும் தோரணங்களாகக் கட்டப்பட்டிருந்தன.

ஒரு மிகப் பெரிய திருவிழா நாளுக்குரிய முகாந்திரமாக அது இருந்தது.

தோடீஸ்வரர் ஆலயத்தில் ஒரு பிரதான கல்மண்டபம் ஒன்றும் உண்டு. சிவராத்திரி வேளையில் அந்த மண்டபத்தில்தான் நடராஜமூர்த்தி எழுந்தருளுவார். விடிய விடிய அவர் முன்னால் நாட்டிய நிகழ்வுகள் நடைபெறும்.

அந்த மண்டபத்திலும் அலங்காரம் நடந்துகொண்டிருந்தது.

ஆலயத்து பட்டர் அதைப் பார்த்துச் செறுமாந்து கொண்டிருந்தார்.

கோவில் முகப்பில் யானை ஒன்றும் நின்றபடி இருந்தது.

அதுதான் வைஜெயந்தியைத் தாங்கியபடி ஊர்உலா வரப்போகிறது. அதன் மத்தகம் மேல், முகவிலாசம் மேல் வெள்ளிப்பதாகைகள் போட்டு மூடப்பட்டு கம்பீரமாக அது ஒரு பட்டத்துயானைபோல நின்று கொண்டிருந்தது.

ஊர்மக்கள் கோவில்தாசி பட்டமேற்கும் வைபவத்தைக் காண தி;ரள் திரளாக வந்தபடி இருந்தனர்.

சிலர் ''இப்பொழுது என்ன திடீரென்று...?'' என்று கேள்வி கேட்டனர்.

சிலரோ ''நல்லவேளை.. இப்பொழுதாவது இந்தக் கோயிலுக்கென்று ஒரு தாசி வந்தாளே...'' என்று மகிழ்ந்தனர். ஒருவர் அதுபற்றி புளகாங்கிதமாக ஒருவரிடம் பேசியபடி இருந்தார்.

''ஐயா... நான் திருவாரூர் பக்கம் சென்றிருந்தேன். அங்கே தியாகராஜ ஸ்வாமி ஆலயத்தில் கோவில் தாசிகளின் நாட்டியமும் வழிபாடும் இன்னமும் அப்படியே கண்ணிலேயே இருக்கிறது. என்ன ஒரு ஆட்டம்... என்ன ஒரு சௌஸயம் தெரியுமா?'' என்றார்.

''இல்லையா பின்னே... அந்த தியாகராஜன் யாராம்? அவனே ஆடல் கலைகளுக்குத் தலைவன். அவனை வெறும் மந்திரம் சொல்லி அர்ச்சித்தால் போதுமா... அவனுக்கு மிக உகந்த ஆட்டத்திலேயே தொழுவதுதானே நமது பூர்வீக ஐதீகம்...''

''அது ஐதீகம் மட்டுமல்ல ஸ்வாமி.... அந்த வழிபாட்டு முத்திரைகளில் ஒரு தனிச்சிறப்பு இருக்கிறது. முத்தரை வழிபாடு நடைபெறும் ஆலயங்களில் அருள்வெள்ளம் பெருக்கெடுக்குமாம். அதனால் அந்த ஊரே சுபிட்சப்பட்-டு செல்வம் பெருகுமாம்.

காரணமில்லாமலா நமது முன்னோர்கள் இப்படி எல்லாம் ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்?''

கோவிலுக்குள் நுழைந்து பிராகாரவெளிகளில் நடந்தபடி இருப்பவர்களுக்குள் இப்படிப் பலவிதக் கருத்துப் பரிமாற்றங்கள்...

''எது எப்படியோ நமது ஆலயத்துக்கு ஒரு புதிய உயிர் வந்துவிட்டது... அதுபோதும்... ஹூம்! எல்லாம் அந்த பாபா என்கிற வடவர் வந்த வேளை...''

பேச்சு பாபாவையும் சென்று தொட்டது.

''எல்லாம் அவரிடம் இருக்கும் வீணையால்தான் என்கிறார்களே... உண்மையாக இருக்குமோ?''

''ஏன் இருக்காது...? நம்முடைய ஈசன் இசைவடிவானவன் தானே? அவனை இசையால் இசையவைப்பதுதானே அந்த வீணை...?''

''அந்த வீணையை நாம் வாசித்தாலும் அற்புதங்கள் நிகழுமா?''

''யாருக்குத் தெரியும்... அந்த வீணையைப் பற்றிக்கூட பல பேச்சுக்கள் என் காதில் விழுந்தன. அதை நம்மைப் போன்ற சாமான்யர்களால் தீண்டமுடியாதாம்... இறை அருள் பெற்றவர்களால்தான் அதை வாசிக்க முடியுமாம்...''

''அப்படியானால் அந்த பாபா நம்முடைய ஈசன் அருள் பெற்றவரோ?''

''இல்லாமல் இருக்குமா?''

''அவரே வேற்று மதத்தவராயிற்றே... அப்படி இருக்க எப்படி நமது ஈசன் அவருக்கு அருள்பாலித்தான்?''

''போதுமய்யா... என்ன பேச்சு இது? ஈசனை நம்முடைய உடைமையாகவா நினைப்பது? அவன் இந்த உலகிற்கே பொதுவானவன்... மதமாச்சர்யங்கள் நம்மைப்போன்ற சராசரி மனிதர்களுக்குத்தான். அவனுக்கு அதெல்லாம் ஏது?''

தோடிபுரமே இப்படியெல்லாம்தான் சிந்தித்து மாய்ந்து கொள்வதாகத் தோன்றியது.

இடையில் ஒரு கட்டியக் குரல்!

யார் என்று அனைவரும் பார்த்தபோது ஊர்த் தலையாரி பட்டு வஸ்திரமணிந்து, தலைப்பாகையும் தரித்து நெற்றி கொள்ளாதபடி விபூதி சந்தனம் தரித்தவராக வந்துகொண்டிருந்தார்.

அவரை கோவிலின் பட்டரும் கணக்காயரும் இருகரம் கூப்பி அழைத்துச்சென்று மண்டபத்தில் விரிக்கப்பட்டிருந்த ஜமக்காளம் ஒன்றில் அமர்த்தினர். தொடர்ந்து ஊரின் பெரிய தனக்காரரும் மணியக்காரரும் ஆன தனசேகர வல்லபர் தன் மனைவி மக்களுடன் வந்தார். அவரையும் வரவேற்று அமர்த்தினர். அடுத்து பஞ்சாங்கக் காரர், ஜோதிடர், குருகுலத்து அந்தணர்கள் என்று வரிசையாக வந்தனர். அனைவருக்கும் களபச்சசந்தனம் கொடுத்து பன்னீர் தெளித்து வரவேற்றார் கோவில் கணக்காயர்.

இறுதியாக நன்கு அலங்கரிக்கப்பட்ட சிவிகை ஒன்றில் வைஜெயந்தி வந்தாள். பின்னால் வந்த சாரட்டில் அவளது குடும்பத்தவர்கள். வைஜெயந்திக்கு பூர்ணகும்ப வரவேற்பே அளிக்கப்பட்டது.

பரத நாட்டியக் கலைஞர்களுக்கேயுரிய சதங்கைக் காலுடன் தோகை விரித்தாற் போன்ற பட்டுக் கொசுவ உடையில் மேலே ஒரு சால்வை போர்த்தியவளாக அவள் வந்த தோரணை கூட்டத்தவரில் பலரைக் கிறக்கியது.

வைஜெயந்தியை கோவில் பட்டரின் மனைவி உடன் நின்று அழைத்துச் சென்றாள்.. சன்னதியை ஒட்டி வஸ்திராபரண அறை ஒன்று உண்டு. அங்கு தற்காலிகமாக போய் தங்கிக்கொண்டாள்.

உள்ளிருக்கும் அவள் காதுகளுக்கும் கேட்கிறாற்போல ஒரு கட்டியக் குரல் ஒலிக்க ஆரம்பித்தது.

''ராஜாதிராஜ... ராஜப்பிரதாப, ராஜகம்பீர

மராத்திய மாமண்டலாதிபதியின்

புத்தி தீரர், சித்த வியாகூலர், மகாமந்திரியார்

பராக்... பராக்... பராக்...!''

வைஜெயந்தி அந்த வஸ்திராபரண அறையின் ஜன்னல் கதவுகளைத் திறந்து அதன் வழியாக வெளியே எட்டிப்பார்த்தாள். மந்திரி மகாதேவர்தான் புடை சூழ வந்துகொண்டிருந்தார். அவரை பூர்ணகும்பம் கொடுத்து தலையாரியும் பட்டரும் வரவேற்று அழைத்துச் சென்று கல்மண்டப முகப்பில் அமைக்கப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்த்தினர்.

அவருடைய கண்களும் சுற்றியுள்ள மக்களை எல்லாம் ஒரு பார்வை பார்த்தது. சுற்றியிருப்பவர்களிடமும் ஒரே சலசலப்பு. அவர்கள் அவ்வளவு பேரையும் அமைதிப்படுத்துகிற மாதிரி திமுதிமுவென்று கோவில் முரசறைவோன் மத்தளக் கொட்டு எழுப்ப அனைவர் கவனமும் திரும்பியது.

பின் அந்தக் கொட்டு சப்தம் ஒரு முடிவுக்கு வர, நல்லதொரு நிசப்தம். அதனூடே மணியக்காரர் எழுந்து நின்றார். அனைவரையும் பார்த்து கரம் குவித்து வணங்கியவர் பலமாக பேச ஆரம்பித்தார்.

''மகாஜனங்களே...

இன்று நம்முடைய தோடிபுர வரவாற்றிலே ஒரு பொன்னாள். இதிகாச புராணச் சிறப்புமிக்க நம்முடைய ஆலயத்தின் கீர்த்தி பற்றி நான் கூறத் தேவையேயில்லை. அதை அறியாதவர்களும் இந்த மண்ணில் இல்லை.

அந்த மயனே வடிவமைத்ததாகக் கூறப்படும் இந்த ஆலயத்தில் குடிகொண்டிருக்கும் அந்த தோடீசன் நடராஜனாகவும் இங்கே சேவை சாதிக்கிறான்.

ஆதிகாலங்களில் சிவராத்திரிகளில் அந்த மூர்த்தி ஆடும் நடனத்தை இங்கே இப்பொழுது நாம் அமர்ந்திருக்கும் மண்டபத்தில் இருந்து பார்த்த பல ஞானியர் உண்டு.

அவன் இல்லாத இடமில்லை. எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் அவன் பரதத்திற்கு மிக மகிழ்பவன். அதை உணர்த்தவே ஆடிய கோலத்தில் அவன் அனுதினமும் காட்சி தருகிறான்.

இந்த ஆட்டம் என்பது மகிழ்ச்சிக்குரிய ஒரு செயல்பாடு மட்டுமில்லை. இது ஒரு இயக்கத் தத்தவம். அவனது புருவம் அசைந்தாலே காற்று வீசும். கண்ணசைவில் கடலே பொங்கும். கைகளின் ஒவ்வொரு அசைவும் அதன் வளைவும் உலகின் பிரபஞ்ச விசையாக மாறி நம்மை எல்லாம் ரட்சித்தபடி உள்ளது.

நாம் வாழும் இந்த பூமியே ஒரு வினாடிகூட நில்லாமல் சுழன்றுகொண்டே இருப்பதாகக் கூறுவார்கள். அது ஒரு வினாடிகூட இல்லை அரைவினாடி காலம் அப்படியே நின்றாலும் போதும் - நாமெல்லாம் ஆகாயவெளியில் எங்குபோய் விழுவோம் என்றே தெரியாது. நில்லாமல் இந்த பூமி சுழல, காற்றானது வீசியபடி இருக்க அந்த கருணாமூர்த்தியே காரணம்.

அப்படிப்பட்ட அந்த ஈசனது இந்த ஆலயத்தில் இன்று முதல் முத்திரை வழிபாடு தொடங்கிட உள்ளது. 'அந்தணர்க்கு மந்திரம், ஆடலார்க்கு முத்திரை' என்பார்கள்.

நிதமும் ஆறுகால பூசனைகள் காணும் நமது ஆலயத்தில் இன்று முதல் முத்திரை வழிபாட்டை ஸ்ரீமகளாகிய அபராஜித வைஜெயந்தியார் இனி புரிந்திட உள்ளார். ஆடற்கலையில் வல்ல

அவரது பரம்பரையினரால் நம்முடைய ஆலயத்தில் முத்திரை வழிபாடுகள் நடைபெற்று வந்தன. இடையில் பல்லூழிக் காரணங்களால் அந்த முறை நசிந்துபோய் ஆலயம் சற்றே இருளடைந்துபோனது.

இன்று நம்முடைய மகாமந்திரி அவர்களால் ஆலயத்திற்கு பழைய பொலிவு திரும்பவும் ஏற்பட்டுள்ளது. சோழர் காலத்து சாங்கியமான இதனை நம்முடைய மகாமந்த்ரியார் இங்கே தொடர அனுமதித்ததற்காக அவருக்கு இந்த ஊரின் சார்பாக அனந்தகோடி வந்தனங்களைக் கூறிக்கொள்கிறேன்.

இன்றுமுதல் ஆரம்பமாகும் முத்திரை வழிபாடு இனி காலகாலத்திற்கும் தொடர அந்தத் தோடீஸ்வரனை வேண்டுகிறேன்.

ஸ்ரீ மகளான நம்முடைய அபராஜித வைஜெயந்தியார் நம்முடைய ஈசனார்க்குப் பொட்டுகட்டி பூவைத்து அவரை மணாளனாய் ஏற்பார். அந்த மகாதேவனின் வடிவில் நம்முடைய மந்திரியாரைக் கண்டு அவருக்கே பத்தினியாகத் திகழ்வார்.

அதே சமயம் ஆலயம் தொடர்பான அனைத்து சிறப்புகளுக்கும் இனி அவரே பொறுப்பாவார். ஊர்ப் பஞ்சாயத்திலும் அவருக்கு அலங்காரப் பதவி அளிக்கப்படுகிறது.

ஆலயப் பிரதிநிதியாக அந்த ஈசனின் சார்பில் அவரே இனி இந்தத் தோடிபுரத்தின் நன்மை தீமைகளுக்குப் பொறுப்பு.

மற்ற சிவாலயங்களில் உள்ள இந்த நடைமுறை இங்கேயும் தொடரட்டும்.

அதற்கான ஐதீகங்களை மந்திரியார் அவர்களை தொடங்கி வைக்கும்படி வேண்டிக்கொள்கிறேன்...''

- மணியக்காரர் விஸ்தாரமாகப் பேச்சை முடிக்க, மகாதேவர் எழுந்து அதை அங்கீகரித்துவிட்டதுபோல வணங்கினார். கூட்டத்திடம் ஒரே ஆரவாரம். அதன்பின் பட்டுப்புடவை, நகைகள் அடங்கிய தட்டு ஒன்றை பட்டர் மனைவி ஏந்தி வந்து முன்வைக்க, அதை தலையாரி எடுத்து மந்திரியாரிடம் தர, அவரும் அதை எடுத்துக்கொண்டு வஸ்திராபரண அறையில் இருக்கும் வைஜெயந்தியைக் காண நடந்தார். அடுத்த சில நிமிடங்களில் வைஜெயந்தி அந்தப் பட்டாடையை உடுத்திக்கொண்டு வந்து முத்திரை நடனமாடி கும்பதீபம் ஏந்திச் சென்று தோடீஸ்வரரை வணங்க வேண்டும்... அதன்பின் ஊரார் பார்க்கும்படியாக கல்மண்டபத்தில் அவளது நாட்டியம் நடைபெறும். பம்பரத்தின் சுழற்சிகூட தோற்றுப் போகும். அப்படி ஆடுவாள்.

பலப்பல ஆண்டுகளுக்குமுன் அப்படி நடந்த நடன நிகழ்ச்சியைப் பார்த்த பல வயதானவர்கள் அங்கே இருந்தார்கள். அவர்கள் தங்களின் பழைய ஞாபகங்களில் இருந்தனர்.

அதே சமயம் இத்தனை சந்தோஷமான ஒரு திருநாளில் சதாசிவ சாஸ்திரிகளையும் பாபாஜியையும் காணாமல் சிலர் வருத்தத்திலும் இருந்தனர்.

அபராஜித வைஜெயந்தி எப்படி பாபாஜியை அழைக்காமல் விட்டாள் என்பதே பலருக்குள் கேள்வியாக இருந்தது.

அந்த நல்ல நேரத்தில் அவர்கள் மட்டுமா இல்லை? வீரேந்திரனும்தான்!

## இன்று

போலீஸ் ஸ்டேஷனில் சம்பிரதாயங்கள் முடிந்தன. கம்ப்ளைண்ட்டை எழுதி சாட்சிக் கையெழுத்துகளை வாங்கிக் கொண்டு இன்ஸ்பெக்டர், சங்கரனையும் சாமிநாதனையும் அனுப்பிவைத்தார்.

ஸ்டேஷனுக்கு வெளியில் வந்தபோது விடிந்துவிட்டது.

சங்கரனும் சாமிநாதனும் கொட்டாவி பிரிய ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

சூடாக ஒரு கப் காபி குடித்தால் தேவலை என்று இருந்தது.

சங்கரன் அருகில் எதாவது ஹோட்டல் தென்படுகிறதா என்று பார்க்க ஆரம்பித்தான்.

''என்னடா... எதைத் தேடுறே?''

''சூடா ஒரு காபி சாப்பிடணும் போல இருக்குடா சாமி...''

''எனக்கும்தான்... வேகமா நட! ராமாகபே திறந்திருக்கும். போய் சாப்டுவோம். ஆனாலும் நீ உன் வீட்ல மைதிலி கையால குடிக்கற காபி மாதிரி நிச்சயமா இருக்காது...''

சாமிநாதன் ரசித்துச் சொன்னான். சங்கரன் அதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டான்.

''அது என்னமோ தெரியலப்பா... ஐயர் வீடுங்கள்லதான் காபி எப்பவுமே நல்லா இருக்கு. அதனாலதான் காபியை 'பிராமண சாராயம்'னு சொல்றாங்களோ?''

''சாராயமா... என்னடா இது உளறல்?''

''உளறலா? ரசனையான விமர்சனம்டா...''

''ஒரு கோணத்துல பார்த்தா அதுவும் சரிதான். எந்த வீட்ல இன்னிக்கு காபி இல்ல... சொல்லு பார்ப்போம்.''

''அதுசரி... ராத்திரி கோவில்ல நடந்த திருட்டப்பத்தி நீ என்ன நினைக்கறே?''

''நான் நினைக்க என்னடா இருக்கு... அந்த உபாசகர்க்குத் தான் நன்றி சொல்லணும். சும்மா சொல்லக்கூடாதுடா. சம்திங் அவர்கிட்ட ஏதோ இருக்கு... என்ன நான் சொல்றது?''

''அப்ப உபாசகரை நீ நம்பறேன்னு சொல்லு...''

''ஏண்டா... நீ கேக்கறது பார்த்தா ஒரு சந்தேகப்படுற தொனி தெரியறதே...''

''எப்படிடா சங்கரா, துளிகூட உனக்கு அவர்மேல சந்தேகம் வரலை?''

''இதுல சந்தேகப்பட என்னடா இருக்கு? கையும் களவுமா திருடனுங்கள பிடிச்சு போலீஸ்லையும் ஒப்படைச்சாச்சு.

அதையும் நாமதான் செய்திருக்கோம். இதுல சந்தேகப்பட என்ன இருக்கு?''

''ஏன் இந்தத் திருட்டுக்கான ஏற்பாட்டை உபாசகரே செய்திருக்கக்கூடாது?''

சாமிநாதன் அப்படி ஒரு கேள்வியைக் கேட்பான் என்று சங்கரன் எதிர்பார்க்கவேயில்லை

''சாமி ஈ ஈ''என்றான் வேகமாக.

''பதட்டப்படாம யோசி. எனக்கென்னமோ ஊர் வாயை மூட உபாசகர் செய்த தந்திரம் மாதிரிதான் தோணுது.

''என்னடா உளறுறே...? இப்படிச் செய்யறதுல அவருக்கு என்ன லாபம்?''

''அவருக்கு நம்ம ஊர்ல ஏதோ ஒரு தேவை இருக்குடா. வீணைவாசிக்க வந்தவர் வீடு வீடாபோய் தேடுனதுல இருந்து நான் சந்தேகப்படுறேன். பலரும் அவரைப் பலமாதிரி பேச ஆரம்பிச்சுட்டாங்க. அதான் நல்லபேர் எடுக்க இப்படி ஒரு டிராமா போடுறாரோன்னு ஒரு சந்தேகம்...''

''சபாஷ்... நல்ல யூகம்.''- சட்டென்று ஒரு குரல். திரும்பிப் பார்த்தனர்.

திருக்கடவூர் ஸ்ரீமடத்து நீலகண்டன்!

அவ்வப்போது உபாசகரைப் பார்த்து ஊரைவிட்டுக் கிளம்பச் சொல்லும் அதே நீலகண்டன்.

''நீங்க யாரு?''

''என்னை நீங்க பார்த்ததில்லையா?''

''இல்லையே...''

''ஆச்சரியமா இருக்கே... நான் உபாசகர் தங்கி இருக்கற அந்த தோட்டத்து குடிசை வீட்டுக்குப் பலமுறை வந்திருக்கேன்.''

''உங்க பேர்?''

''என் பேர் நீலகண்டன். உங்களப் பார்க்கத்தான் வந்தேன். தோடிபுரம் போனேன். நீங்க போலீஸ் ஸ்டேஷன் போயிருக்கறதா சொன்னா. அதான் வந்தேன்.''

''நீங்க எதுக்கு என்னைப் பாக்கணும்?''

''காரணமாத்தான்... கொஞ்சம் என் கூட நீங்க இரண்டு பேரும் திருக்கடவூர் வரமுடியுமா?''

''எதுக்கு?''

''அங்க எங்க ஸ்ரீமடம் இருக்கு. அங்கதான் எங்க குருநாதர் இருக்கார். இப்பவோ எப்பவோன்னு இருக்கு அவர் உடல்நிலை. கண் மூடுறதுக்குள்ற உங்களோட பேசப் பிரியப்படறார் அவர்.''

''எங்க கூடப் பேச ஆசைப்படறாரா...? எதுக்கு...?''

''காரணம் இருக்கு. எல்லாம் அந்த உபாசகரைப் பத்திதான்.''

''கொஞ்சம் புரியற மாதிரி சொல்றீங்களா?''

''சொல்றேன். அவர் ஒரு தந்த்ரயோகி. எங்க மடத்துலதான் ஒரு நல்ல சக்தி உபாசகரா இருந்தார். ஆனா மாந்த்ரீகர் ஒருத்தர் எங்க மடாலயத்துக்கு வந்து சில சித்து வேலைகளைக் காட்டவும் அவர் பின்னாலேயே வடநாடு வரை போய்ட்டார்...''

''இப்ப இதை எல்லாம் எதுக்கு எங்ககிட்ட சொல்லிகிட்டு இருக்கீங்க...?''

''அவர் எதுக்கு உங்க ஊருக்கு வந்திருக்காருங்கறது உங்களுக்குத் தெரியவேண்டாம்?''

நீலகண்டன் பிரச்னையின் மையத்துக்கு வந்தான்.

''எதுக்கு?''

''ருத்ரவீணைக்கு!''

நீலகண்டன் நடுத்தெருவில் நின்றுகொண்டு 'ருத்ரவீணைக்கு' என்று சொன்ன அடுத்த நொடி எங்கிருந்தோ ஒரு கோயில் மணிச்சப்தம் ஒலித்து அதை ஆமோதித்தது.

''ருத்ரவீணைக்கா?''

''ஆமாம்... அதுக்கேதான்!''

''வீணைல ருத்ரவீணைன்னு ஒண்ணு இருக்கா என்ன?''

''கேள்விப்பட்டதில்லையா?''

''கேள்விப்பட்ட மாதிரியும் இருக்கு... படாத மாதிரியும் இருக்கு.''

''நான் விவரமா சொல்றேன். கொஞ்சம் என் கூட என் மடாதிபதிய பார்க்க வாங்களேன்.''

''அவரை எதுக்குப் பார்க்கணும்?'' சங்கரன்தான் கேட்டான்.

''என்னைவிட 'ருத்ரவீணை' பற்றி அவர் நிறைய தெரிஞ்சவர். அதை அடைய அவரும் ஆசைப்பட்டார். அதுக்காக தோடிபுரத்துக்குக் கூடவந்தார். ஆனா வந்த பிறகுதான் தெரிஞ்சது- ருத்ர வீணையை ருத்ரர்கள்தான் வாசிக்க முடியும். மற்றவர்களால அதை தீண்டக்கூட முடியாதுன்னு...''

''அதனால...?''

''அதைத் தீண்ட முயற்சி செய்து அவர் தன் கைகாலையே இழந்துட்டார்னா பார்த்துக்குங்களேன்...''

''நம்பவே முடியலியே... ஒரு வீணைக்கு இவ்வளவு சக்தியா? ஆமா அது எங்க இருக்கு?''

''உங்க ஊர்லயே மர்மமான ஒரு இடம் எது?''

''தாசி பங்களா!''

''அங்கதான்...''

''அப்ப அப்பப்ப கேக்கற வீணை இசை அந்த ருத்ரவீணையோட இசைதானா?''

''ஆமாம்...!''

''அது எப்படி ஊர் முழுக்க ரேடியோ கட்டி ஒலிபரப்பற மாதிரி கேக்குது...?''

''ருத்ரவீணை பின்னால் இந்த மாதிரி பல கேள்விகள் இருக்கு. எனக்கு ஓரளவுதான் தெரியும். எங்க மடாதிபதி உங்களுக்கு விளக்கமாவே அந்த ருத்ரவீணை பற்றிச் சொல்வார்!''

''சரி... நாங்க எதுக்கு அதைப்பத்தி தெரிஞ்சுக்கணும்?''

சாமிநாதன் எதனாலோ சற்றுக் காட்டமாகக் கேட்டான். ''என்ன அப்படிக் கேட்டுட்டீங்க... அது உங்க ஊர் சிவனோட சொத்து. அதனாலதான் உங்க ஊரே மத்த ஊரை எல்லாம்விட சிறப்பா இருக்கு. வீட்டுக்கு வீடு இசைக்கலைஞர்கள், தவறாத மழை, மூணு போக விளைச்சல், நோய் நொடி இல்லாத வாழ்க்கை எல்லாம் எதனால?''

''இதுக்கெல்லாம் காரணம் அந்த ருத்ரவீணையா?''

''அதுல என்ன சந்தேகம்... இல்லேன்னா அதைத் தேடி ஏன் உபாசகர் உங்க ஊருக்கு வரணும்?''

''ரொம்ப முட்டாள்தனமா இருக்கு உங்க பேச்சு... வீணைங்கறது ஒரு இசைக் கருவி. நல்லா வாசிச்சா ஒருத்தருக்குப் பத்துபேர் மயங்குவாங்கன்னு சொல்லுங்க. கேட்டுக்கறேன்... அதனால ஒரு ஊரே சந்தோஷமா இருக்கு, நோய் நொடி இல்லேன்னா எப்படி? அது வீணையா இல்ல எதாவது மந்திரக்கோலா?''

''அப்ப மந்திரக்கோலை நீங்க நம்பறவரா?''- நீலகண்டன் சாமிநாதனை உடனே மடக்கினான்.

''இல்ல. நான் ஒரு பேச்சுக்குச் சொன்னேன். மாய மந்திரத்துல எல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது.''

''மாயமந்திரத்துக்கும் மேலான ஒரு அருள் வளையத்துல இருந்துகிட்டு நீங்க பேசறத கேட்டா எனக்கு அழறதா, இல்ல சிரிக்கறதான்னே தெரியல...''

''சாமி, நீ கொஞ்சம் சும்மா இருடா... இவன் எப்பவும் அப்படித்தான். நீங்க சொல்லுங்கோ. அந்த ருத்ரவீணையாலதான் எங்க ஊர் சிறப்பா இருக்கா?''

''ஆமாம்... அதை அடையறதுதான் உபாசகர் லட்சியம்.''

''எப்படி ஒரு வீணை இப்படி ஊரையே ரட்சிக்க முடியும்?''

''அது வடிவத்துலதான் வீணை. மற்றபடி அம்பாள் பார்வதியை அந்த ஈஸ்வரன் வீணையா மாற்றி அப்புறம் அதை வாசிச்சு பிரபஞ்சங்களை எல்லாம் படைச்சதா சொல்வா.''

''அப்படின்னா அந்த வீணை வேற அம்பாள் வேற இல்லையா?''

''ஆமாம். அதுல சில கீர்த்தனைகள் வாசிச்சா சூழ்நிலையே மாறிடும். அதால **அமிர்தவர்ஷினி** வாசிச்சு மழை

வரவழைக்கலாம். கனகதராஸ்தோத்ரம் வாசிச்சா பொன்னா கொட்டும்... சில பீஜாட்சரங்களை வாசிச்சா உரிய தேவதைகளே நேர்ல பிரசன்னமாவாளாம். பல வருஷம் உக்காந்து தபஸ் பண்ணியும் கிடைக்காத தரிசனம் எல்லாம் ஒரு ராக ஆலாபனைல கிடைச்சுடும். அவ்வளவு சக்தி அதுக்கு...

உபாசகர் நரசிம்மபாரதிக்கும் எல்லா தேவதைகளையும் வசியப்படுத்தி கைக்குள்ற வெச்சுக்கணும்கற பேராசை, அதான் 'ருத்ரவீணை'யை அபகரிக்கத் தோடிபுரத்துக்கு வந்திருக்கார்.

அவருக்கு நீங்களும் இடம் எல்லாம் கொடுத்து ஆதரவு காட்டிண்டு இருக்கீங்க. இது உங்க ஊருக்கு நீங்க செய்யற பெரிய தீங்கு.

அவரை முதல்ல ஊரைவிட்டு துரத்துங்கோ.

அதுதான் உங்களுக்கும் நல்லது. அவருக்கும் நல்லது...''

நீலகண்டன் சொன்னது சாமிநாதன் முகத்தில் சிரிப்பைப் பரத்தியது. சங்கரனும் கவனித்தான்.

''தெரியுண்டா... நீ எதுக்குச் சிரிக்கறேன்னு...''

''சிரிக்காம... வீணை வாசிச்சா மழைவரும், தேவதைகள் வருவாங்கங்கறதெல்லாம் அம்புலிமாமா கதை மாதிரி இல்ல...?''

டேய், இப்ப எந்தக் யுகத்துல இருக்கோம் தெரியுமா?''

சாமிநாதனிடம் கோபம் கணிசமாகக் கொப்பளித்தது.

''இதோ பாருங்கோ... நீங்க நம்பறதும் நம்பாததும் உங்க விருப்பத்த பொறுத்தது. எங்க குருநாதரைச் சந்தியுங்கோ. அவர் என்னைவிட அழகா உங்களுக்கு 'ருத்ரவீணை' பற்றி சொல்வார். அவருக்கு சயின்ஸூம் தெரியும். அக்கல்ட் சயின்ஸூம் தெரியும். அவர் பேசறதக் கேட்டுட்டு அப்றமா முடிவுக்கு வாங்கோ...''

நீலகண்டன் சாமிநாதனையும் சங்கரனையும் விடாமல் பிடித்து இழுத்தான்.

''டேய் சாமி... இங்க இருந்து பக்கம்தானே திருக்கடவூர். போய் என்னன்னுதான் கேட்டுட்டு வருவோமே...''

''டைம்தான் வேஸ்ட் ஆகும். பாக்கறீயா?''

''பரவால்லடா... எவ்வளவோ தடவை சினிமாக்கெல்லாம் போய் நாம டயத்தை வேஸ்ட். பண்ணதில்லையா?''

சங்கரன் அந்தக் கருத்தால் ஜெயித்தான். அடுத்த பத்தாவது நிமிடம் மாயவரம் செல்லும் பஸ்ஸில் ஏறினர். அது திருக்கடவூர் வழியாகச் செல்லும் பஸ்.

அதுவும் ஐம்பதாவது நிமிடம் அவர்களை அங்கே இறக்கிவிட்டது. இறங்கி நேராக ஸ்ரீமடம் நோக்கித்தான் நடந்தனர்.

''எங்க ஸ்ரீமடம் ரொம்ப பெரிசு. ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலபுலன் இருக்கு. பத்துப் பதினஞ்சு கோவிலும் எங்க கட்டுப் பாட்டுல இருக்கு.

ரொம்ப ஸ்ரத்தையா பூஜைகள் நடக்கும்.

பலபேருக்கு எங்க ஸ்ரீமடத்துல அம்பாள் ப்ரத்யட்சமா யிருக்கா...''

நீலகண்டன் பெருமை பொங்க பேசியபடி நடந்தான். ஸ்ரீமடத்தை நெருங்கியபோது அதிர்ச்சி காத்திருந்தது. மடத்துக்கு உள்ளும் வெளியும் ஒரே கூட்டம்.

எட்டிப் பார்த்தபோது பகீர் என்றது!

ஸ்ரீமடத்து மடாதிபதியான ஜெயந்திநாதர் பரமபதம் எய்திவிட்டிருந்தார். ஒரு மூங்கில் நாற்காலியில் கையில் த்ரிதண்டத்தைப் பிடித்தபடியே அப்படியே அமர்ந்த நிலையில் உயிரை விட்டிருந்தார்.

அருகில் அவரது தர்மபத்தினியான மனைவி கண்ணீருடன். நீலகண்டன் வரவும் மடத்து மேனேஜரான சாம்பசிவய்யர் தரதரவென்று அவனை ஆபீஸ் ரூம் பக்கம் அழைத்துச் சென்றார்.

''என்னண்ணா பெரியவா இப்படி நம்மளை உட்டுட்டுப் போய்ட்டார்...''

''நமக்குக் கொடுத்து வெச்சது அவ்வளவுதான். பிராணன் அடங்கறதுக்கு முந்தி ஒரு நோட் பேப்பர் பேனா கொண்டு வரச்சொன்னார். கொடுபோய்க் கொடுத்தேன். அதுல என்ன எழுதினார் தெரியுமா?''

''என்னண்ணா?''

சாம்பசிவய்யர் அந்த நோட்டை விரித்துக் காட்டினார்.

'நரசிம்மபாரதி... உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். திரும்பிவிடு.. அந்த 'ருத்ரவீணை' பற்றி நினைத்துக்கூடப் பார்க்காதே. அது இந்த லோகத்துக்கே நல்லதில்லை. இது உன் குருவின் கட்டளை' என்றிருந்தது. நீலகண்டன் அதை சங்கரன், சாமிநாதனிடமும் காட்டினான்.

இருவர் முகத்திலும் பிடிபடாத சலன உணர்வுகள்!

பூகட்டிக் கொண்டிருந்தார் உபாசகர்!

அருகில் அம்பாள் திருஉருவப்படங்கள்... நெய்விளக்கு எரிந்தபடி இருக்க, தசாங்கம் மேகம் போல புகை கக்கியபடி இருந்தது. அதன் நடுவே ஒரு நிழலுருவம போல ஒரு தோற்றம்.

யாரென்று பார்த்தார். நீலகண்டன்!

''நீயா...?''

''நானேதான்...''

''உனக்கு எத்தனை தடவை சொல்றது... என்னை ஏன் விடாம துரத்திண்டு இருக்கே?''

''தெரியாதா நரசிம்மாபாரதி...?''

''நீலகண்டா... ஒண்ணு நன்னா தெரிஞ்சுச்கோ. நான் வைராக்யச் சித்திம் உடையவன். எதையும் யோசிக்காம செய்யமாட்டேன். முடிவுக்கும் வரமாட்டேன். வந்துட்டா மலையே புரண்டாலும் நான் பிறழமாட்டேன்.''

''இப்ப நிஜமாலுமே மலை பிரண்டுடுத்து நரசிம்மாபாரதி.''

''என்ன உளறுறே?''

''உளறலை. ஸ்ரீமடத்துக்கு வந்துபாரும். பெரியவர் மகா சமாதியாயிட்டார்.''

நீலகண்டன் சொல்லிமுடிக்க- வெடுக்கென்று உச்சித் தலையை யாரோ பிடித்து இழுத்ததுபோல இருந்தது உபாசகருக்கு. ஒரு க்ஷணம் பேச்சே வரவில்லை.

''என்ன... நான் பொய் சொல்றதா நினைக்கறேளா?''

''சேச்சே... நீ அவ்வளவு மோசமானவன் கிடையாது நீலகண்டா. அது எனக்கு நன்னாவே தெரியும்.''

''உங்க அபிமானத்துக்கு ரொம்ப நன்றி. கிளம்புங்கோ...''

''இல்ல நீலகண்டா... என் வைராக்யத்துக்கு இது சோதனையான கட்டம். நான் வரலை.''

''நரசிம்மபாரதி... செத்துப்போயிருக்கறது உங்க தகப்பனாருக்குச் சமமான குருநாதர்.''

''நானும் மறுக்கலை. நான் வரதனால அவர் பிராணன் திரும்பப் போறதில்ல. இங்க இருந்தே நான் பிரார்த்தனை பண்ணிக்கறேன்.''

''நரசிம்மபாரதி... இது உங்களுக்கே அழகா இருக்கா? கல்யாணத்தைக்கூட விடலாம். சாவை விடலாமா?''

''என் வரைல விடவேண்டிய நிலைமை. திரும்பினா 'ருத்ரவீணை'யோடதான் திரும்புவேன் நீலகண்டா. ஞாபகம் வெச்சுக்கோ.''

''ஒருக்கால் அந்த வீணையே இங்க இல்லைன்னா?''

''அப்ப நான் என்ன முடிவெடுக்கறேன்னு அப்ப வந்து பார் சொல்றேன். இப்ப கிளம்பு...''

''நரசிம்மபாரதி! இது உமக்கே நியாயமா?''

''நீ தலைகீழா நின்னாலும் வானமே என் தலைமேல இடிஞ்சு விழுந்தாலும் என் முடிவில் மாற்றம் கிடையாது.''

உபாசகர் உறுதியான குரலில் சொன்னதைத் தொடர்ந்து நீலகண்டன் அவரை முறைத்துப் பார்த்துவிட்டு வெளியேறினான்.

பெட்ரோமாக்ஸை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டிருந்தாள் திலகம். அருகில் அந்தக் கூடை. அதை ஒரு துணியால் மூடியிருந்தாள்.

வெளியே சூரியன் அவிந்து அடங்கியிருந்தான்.

பானு உள்ளே நுழைந்து கொண்டிருந்தாள்.

கிராமத்து டிஸ்பென்சரி என்பதால் கூட்டம் இல்லை. போதும் என்று மூடிவிட்டு வந்துவிட்டாள்.

உள்ளே நுழைபவள் எதிரில் சுந்தராம்பாள் தாசிபங்களாவுக்கு அன்றைய பூஜைக்காக புறப்பட்டுக் கொண்டிருந்தாள்.

பானுவின் முகம் அதைப் பார்க்கவும் ஒருமாதிரி வாடிப் போனது. சுந்தராம்பாளுக்கும் அது புரிந்தது.

''என்னம்மா... என்ன இன்னிக்குச் சீக்கிரம் வந்துட்டே?''

''டிஸ்பென்சரில கூட்டமில்ல...''

''சரி... போய் சாப்ட்டு ரெஸ்ட் எடு!''

''இல்லம்மா... வந்து.''

''என்ன?''

''இன்னிக்கு உன் கூட நான் வரட்டுமாம்மா? திலகம், நீ வீட்ல இரேன்...''

''பானு...?''

''ஏம்மா...?''

''என்ன இது புதுப் பழக்கம்?''

''பழக்கமா...? ஏன்மா நான் வரக்கூடாதா...? நீ பூஜை பண்றத ஒரு நாள்கூடவா நான் நேர்ல பார்க்கக்கூடாது?''

''போதும்... என் வாயைப் புடுங்காம போய் வேலையைப் பார்.''

''ஏம்மா, நான் வந்தா என்ன ஆகும்? எப்படி இருந்தாலும் உன் காலத்துக்குப் பிறகு நான்தானே இந்த பூஜையைத் தொடரணும்?''

பானு அப்படி ஒரு கேள்வியைக் கேட்பாள் என்று சுந்தராம்பாள் எதிர்பார்க்கவேயில்லை.

ஒரு முறைமுறைத்தாள்.

''முறைக்காதம்மா... நான் கேட்டதுல என்ன தப்பு? சொல்.''

பானு தீர்க்கமாகக் கேட்க, ''எல்லாமே தப்புதான். இதுக்குமேல ஒரு வார்த்தை நீ பேசக்கூடாது'' என்று பானுவை ஒரு மாதிரி உற்றுப்பார்த்தாள். பானுவும் சில நொடிகளில் அப்படியே குழைய ஆரம்பித்துவிட்டாள்.

''சாரிம்மா... நான் ஒரு ஆர்வத்துல கேட்டுட்டேன்... என்ன தப்பா எடுத்துக்காதீங்க.'' என்றாள். தொடர்ந்து சிரித்தபடி சுந்தராம்பாளும் திலகமும் சென்றுவிட பாட்டி வடிவாம்பாள் வந்தாள்.

அவள் கண்கள் கலங்கியிருந்தன.

''பானு... நீயா உங்கம்மாகிட்ட அப்படி எல்லாம் பேசினே?'' கண்களில் நீர்வடிய அவள் பேசியதைப் பார்த்து பானுவுக்கே என்னவோ போலாகிவிட்டது.

''பாட்டி... நீ எதுக்கு அழுவறே?''

''அழாம...? அவ தன்னோட, அந்த தாசி பங்களா சமாச்சாரம் முடிஞ்சிடணும்னு நினைக்கறா... நீ அதைத் தொடரப்போறதா சொன்னா அவ மனசுதாங்குமாடி...?''

''ஆனா ஊர்ல சிலர் என்னைப் பத்தி அப்படித்தானே பாட்டி நினைக்கறாங்க...''

''அந்தச் சிலருக்கு நம்ம குடும்பம் பத்தி என்னடி தெரியுமா?''

''எனக்கே தெரியாது... அவங்களுக்கு மட்டும் எப்படி பாட்டி தெரியும்?''

''நீ என்ன குத்தலா பேசறியா... இல்ல வருத்தமா பேசறியா?''

''இரண்டும்தான் பாட்டி...''

''வேண்டாம். அவ எதுக்க அப்படிப் பேசாதே. அவ நிஜமாலுமே ஒரு பெரிய சுமைதாங்கி. என்னைவிட பல மடங்கு மேலானவ. நான்கூட அவளை இந்த விஷயத்துலதான் இழுத்து விட்டேன். ஆனா அவ உன்னைப் படிக்க வெச்சு டாக்டராக்கினவ.

உனக்கு ஒரு சமூக அந்தஸ்து கிடைச்சு நீ நல்லவிதமா இருக்கணும்னு நினைக்கறவ.''

''அப்படி நினைக்கறவங்களுக்கு அந்த தாசி பங்களாவுல என்ன இருக்குன்னு சொல்றதுல என்ன பாட்டி தயக்கம்?''

''அவசியமில்லேன்னு நினைக்கறாடி அவ...''

''நான் அப்படி நினைக்கலே. அம்மா எதையோ மறைக்கறதா நினைக்கறேன்.''

''ஆமாண்டி... மறைக்கறாதான். எல்லாம் ருத்ரன் வர்றவரைதான்.''

''ருத்ரனா...? அது யார்?''

''நம்ம குடும்பத்துக்கு விமோசனம் தரப்போற ஒருத்தன்.''

''புரியற மாதிரி பேசு பாட்டி...''

''பேசறேன். இப்ப என்னால இவ்வளவுதான் முடியும்.''

''சரி... நீ எப்பதான் தெளிவா முழுசா பேசுவே?''

''பதினெட்டு நாள்... பதினெட்டே நாள் பொறு. பல உண்மைகள் உனக்குத் தானா தெரியவரும்?''

''அது என்ன பதினெட்டு நாள் கணக்கு?''

''அந்தக் கணக்குகூட நானும் உன் அம்மாவும் போட்ட கணக்கு இல்லை. அது ஒரு சவால் கணக்கு...''

''ரொம்பக் குழப்பறே பாட்டி...''

''உண்மைதான்... பதினெட்டு நாள் பொறுத்திரு. தானா தெளியும்.''

வடிவாம்பாள் ஒருவாறாக பானுவின் வாயை அடைத்துவிட்டு நகர்ந்தாள்.

அவர்கள் வீட்டு நாய் ஓரமாய் அமர்ந்திருந்தது. அவ்வளவையும் ஒரு மனிதன் காதுகொடுத்து கேட்கிற மாதிரி கேட்டுக் கொண்டிருந்தது.

**ம**யானப் பாதையில் புதிதாக ஒரு சவம் போயிருந்தது. அதன் காரணமாக வழித்தடமெல்லாம் சம்பங்கிப் பூக்கள்.

அதை மிதித்தபடிதான் நடக்க வேண்டி இருந்தது. சுந்தராம்பாள் அதைப்பற்றி கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. திலகத்துக்கோ அந்த பூக்களை மிதிப்பதும் நடப்பதும் அருவருப்பாக இருந்தது.

ஒதுங்கி ஒதுங்கி நடந்தாள்.

''என்னடி இது புதுசா?''

''ஒண்ணுமில்லம்மா... இதெல்லாம் பிணத்துமேல போட்ட பூங்க. அருவருப்பா இருக்கு.''

''தப்பு திலகம்... மனச மாத்திக்கோ...!''

''முடியலம்மா... இன்னும் எவ்வளவு நாளைக்கும்மா இப்படி?''- பானுவைப் போல, ஆனா வேறுவிதத்தில் திலகமும் கேட்க சுந்தராம்பாள் முகத்தில் அறைவிழுந்த மாதிரி இருந்தது.

''திலகம்... நீயா இப்படி எல்லாம் கேக்கறே?''

''கேக்காம இருக்க முடியலம்மா. என் எதிர்காலத்தை நினைச்சாலும் பயமா இருக்கும்மா...''

''பயப்படுற அளவு கற்பனை பண்ணிப் பாத்துட்டியா?''

''ஆமாம். எனக்குன்னு யார் இருக்கா? ஏதோ இப்ப உங்ககிட்ட இருக்கேன். நீங்களும் என்னைக் குறை இல்லாம கவனிச்சுக்கறீங்க. ஆனா...''

''என்ன ஆனா...?''

''இப்படியே - ராத்திரி ஆனா அந்த பங்களாவுக்கு உங்க கூட வந்தே என் காலம் கழிஞ்சுடுமோன்னு பயமா இருக்கு.''

''சரி வா... உனக்கு ஒரு நல்ல ஏற்பாடு பண்றேன்.''- சுந்தராம்பாள் தற்காலிகமாக அவளைச் சமாதானப்படுத்தி அழைத்துச் சென்றாள்.

எதிரில் சுடுகாட்டுக்குப் போன இழவுக்கூட்டம்.

சுந்தராம்பாளைப் பார்த்து அப்படியே காலில் விழுந்தார்கள் அதுவும் அந்தத் துக்கத்திலும்...

அந்த பக்தி, அந்த மரியாதை திலகத்தையே ஒரு உலுக்கு உலுக்கியது. சுந்தராம்பாளிடம் அவசரப்பட்டுப் பேசி விட்டோமோ என்றுகூட நினைத்துக்கொண்டாள். இடையிட்டு விலகியது சுடுகாட்டின் பிணப்புகை. கண்ணைக் கரிக்காத - அதே சமயம் அதிக கருப்பில்லாத வெண்ணிறமான புகை. அந்த மாதிரி புகை மேனிமேல் உரசிச்செல்லும் போதெல்லாம் ஒருமாதிரி கூச்சம் எடுக்கத்தான் செய்கிறது.

ஆனால் சுந்தராம்பாள் இதற்கெல்லாம் கவலைப்படுகிற மாதிரியே தெரியவில்லை.

'உலகிலேயே இரண்டு பெண்கள் எதற்கும் அஞ்சாமல் எந்த நிரடலும் இல்லாமல் ஒரு சுடுகாட்டுப் பக்கம் தினம் தினம் செல்வது அனேகமாக தோடிபுரத்தில் மட்டும்தான் இருக்கும்' என்று நினைத்துக்கொண்டாள்.

வெட்டியான் எதிர்ப்பட்டான். அதுவும் கையில் கழியோடு. அதை அப்படியே கீழே போட்டுவிட்டு கைகூப்பினான்.

சுந்தராம்பாள் அவனைப் பார்த்துக் கனிவாக ஒரு சிரிப்பு மட்டும் சிரித்தாள். நடையைத் தொடர்ந்தாள். அவனை இன்னொரு உருவமும் தொடர்ந்து கொண்டிருந்ததுதான் விந்தை.

அந்த உருவத்தை வெட்டியானும் கவனித்துவிட்டான். பதறிப் போனான். உடனேயே கையில் கழியோடு அவரை நோக்கி ஓடினான்.

அருகே சென்ற பிறகுதான் தெரிந்தது - அது உபாசகர் என்று.

''சாமிஈ!''என்று குறுக்கே கழியே நீட்டினான்.

''என்னப்பா... ஏன் என்னைத் தடுக்கறே?''

''எங்க போறீங்க சாமி...?''

''எங்கேயோ போறேன்.உனக்கென்ன?''

''இல்ல... நீங்க அம்மாவைத் தேடிப் போறீங்க...''

''சரி. வெச்சுக்கோயேன். இப்ப என்ன?''

''வேண்டாம் சாமி... திரும்புங்க. அது உங்களுக்கு நல்லது இல்ல. ஆபத்து.''

''சரிதான்... என்னைப்பத்தி உனக்குச் சரியாத் தெரியல. அதான் ஆபத்தைப் பார்த்தே ஆபத்துங்கறே.''

''சொன்னாக் கேளுங்க சாமி. கண்டபடி பேசாம திரும்பி நடங்க.''

''இல்லேன்னா...

''உங்களுக்குத்தான் ஆபத்து.''

''அதையும்தான் பாக்கறேனே...''

''நீங்க எதையும் பாக்கமுடியாது... கண்ணே போனாலும் போய்டும்.''

''பரவால்ல. நீ வழியவிடு. இப்படி அல்பத்தனமா மிரட்டாதே.''

அவனை அடக்கிவிட்டு நடந்தவர் அவர்கள் நெடுந்தூரம் சென்றுவிட்டதற்காக ஓடினார்.

அவர்களும் தாசி பங்களாவை ஒட்டியிருந்தனர்.

உபாசகரும் ஒரு தென்னை மரத்துக்குக் கீழே நின்று அதன் பருத்த தண்டுப்பாகத்தை பிடித்தபடி பார்க்கத் தொடங்கினார்.

அவர் வந்திருக்கிறார் என்பது எப்படித்தான் சுந்தராம்பாளுக்குத் தெரியுமோ - ஒரு நமுட்டுச் சிரிப்பு சிரித்தாள். திலகம்கூட சொன்னாள்.

''அம்மா... யாரோ வந்து தென்னமரத்துகிட்ட நின்னு பாக்கற மாதிரி தெரியுது...''

''தெரியும்... நீ பேசாம வா. பாபா பார்த்துப்பார்!''

அவள் அப்படிச் சொன்ன மறுநொடியே அந்தத் தென்னை மரத்துக்கு மேல் உள்ள குலையில் இருந்து ஒரு பருத்த தேங்காய் அவரது தலை மீது கீழே விழ ஆரம்பித்தது.

''அய்யோ!''



## அன்று

தியானத்தில் இருந்தார் பாபாஜி! அருகில் பார்த்துக் கொண்டே நின்றிருந்தார் சாஸ்திரிகள்.

நேரம் கழிந்துகொண்டே இருந்தது.

இந்த நொடி கோவிலில் அபராஜித வைஜெயந்தி கோவில் தாசிக்குண்டான ஐதீகங்களில் மூழ்கியபடி இருப்பாள்.

'அவசியம் நீங்கள் அந்த வைபவத்திற்கு வரவேண்டும்' அன்று அவள் காலில் விழுந்து வணக்கத்துடன் சொன்னது எதிரொலித்துக் கொண்டே இருந்தது.

பாபாஜியோ தியானத்தில் இருந்து கலைவதாகவே தெரியவில்லை. அவரது தியானத்தைக் கலைக்கவும் அச்சமாக இருந்தது சாஸ்திரிகளுக்கு.

கூடாத விஷயங்கள் பத்து என்று ஒரு கட்டளையே இருக்கிறது.

'தியானம் புரிபவரைக் கலைக்கக்கூடாது.

தர்மம் செய்ய நினைப்பவரைத் தடுக்கக்கூடாது.

தாய் தந்தையர் நின்றிருக்க ஒருவர் அமர்ந்திருக்கக்கூடாது.

தண்ணீர் என்று ஒருவர் கேட்க இல்லை என்று சொல்லக்கூடாது.

செய்த தருமம் பற்றி நினைத்துக்கூட பார்க்கக்கூடாது.

கையில் ஒரு பொருள் இருக்க அதை இல்லை என்று கூறக்கூடாது.

மறந்தும்கூட குருநாதரை நிந்திக்கக்கூடாது.

அதிகாலையில் உறங்குதல் கூடாது.

ஆற்றில் முதலில் கால்வைத்தல் கூடாது.

நல்ல தூக்கத்தில் இருப்பவரை எழுப்பக்கூடாது.'

என்று குருகுலத்தில் கல்வி கற்றபோது குருநாதர் கூறியது சாஸ்திரிகளின் ஞாபகத்தில் ஞாபகமாய் எதிரொலித்ததன் எதிரோலி - அவர் பொறுமையாக அமர்ந்தபடி இருந்தார்.

நல்லவேளை... ஒரு கட்டத்தில் பாபா மெல்ல கண்திறந்தார்.

''பாபாஜி...''

''சொல்லுங்கள் சாஸ்திரி.''

''நெடுநேரம் தியானத்தில் இருந்துவிட்டீர்களே?''

''அதில் பிழை ஒன்றுமில்லையே...''

''அப்படியில்லை. இன்று இப்பொழுது அபராஜிதா கோவில்தாசியாக பொறுப்பினை ஏற்கும் நிகழ்ச்சி நடந்தபடி உள்ளது. அவள் வெகுவாக நம் வருகையை எதிர்பார்த்தபடி இருப்பாள்.''

''ஓ... ஆமல்லவா?''

''ஆம்... இப்பொழுதாவது புறப்படுங்கள்.''

''இல்லை... இல்லை சாஸ்திரி.''

''ஏன் பாபாஜி...?''

''அந்தப் பெண்ணின் நினைவே இன்றி நான் தியானத்தில் மூழ்கிவிட்டதன் பின்னால் ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும் என்று என் உள்ளுணர்வு சுறுகிறது.''

''அப்படியானால்...?''

''நான் இப்படி எப்பொழுதும் என்னையோ, ஏன் எனது அபிமானம் மிக்க பிறரையோ ஒருபோதும் மறந்தது இல்லை. ஆனால் இன்று நான் அவர்களை மறந்தது எனக்கே பெருவியப்பாக உள்ளது.''

''பாவம் வைஜெயந்தி... ஆவலாக காத்திருப்பாள். அந்த நிகழ்ச்சியும் மிக அபூர்வமான ஒரு நிகழ்ச்சி.''

''தெரிகிறது. ஆயினும் இப்படி ஆனதன்பின்னே ஒரு சரியான காரணம் இருக்கிறது. அதை நீங்கள் போகப் போக அறிவீர்கள்...''

பாபாஜி சொல்லி வாய் மூடுமுன் ஒரு மராத்திய வீரன் அலறி அடித்துக்கொண்டு அங்கே நுழைந்தான்.

''பாபாஜி... சாஸ்திரிகளே... பாபாஜி...'' என்று அவன் உதடுகள் துடிதுடித்தன.

''என்னப்பா... என்ன சேதி?''

''அய்யோ! அதை நான் எப்படிக் கூறுவேன். நடக்கக்கூடாத விபரீதம் நடந்து முடிந்துவிட்டது பாபாஜி அவர்களே... தலையாரி முதல், மணியக்காரர்வரை சகலரும் குற்றுயிரும் குலை உயிருமாகக் கிடக்கின்றனர்.''

''என்னாயிற்று?''

''கோவில்தாசிப் பட்டமேற்பு நிகழ்ச்சி இனிதாகத் தொடங்கி வைஜெயந்தி அம்மையாரும் பட்டமேற்று முடித்தார்கள். அதைத் தொடர்ந்து அன்னதானம் வழங்கும் நிகழ்ச்சி நடைபெற்றது. ஆனால் என்ன ஒரு கொடுமை... அந்த அன்னத்தில் யாரோ ஆலகால விஷத்தைக் கலந்துவிட்டனர்.

அதைச் சாப்பிட்ட பலர் அப்படியே சுருண்டு விழ வெகு சிலரே தப்பிப் பிழைத்தனர். அவர்களில் நானும் ஒருவன். எனக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை...''

அவன் கைகளை உதறிக்கொண்டு படபடத்தான். சாஸ்திரிகள் அப்படியே திரும்பி பாபாஜியைப் பார்த்தார். அவர் தியானத்தில் ஆழ்ந்துவிட்டதன் காரணமும் அதை உத்தேசித்து அப்படியே தானும் அமர்ந்துவிட்டதையும் நினைத்தவருக்குப் புல்லரித்தது.

''பாபாஜி... இப்பொழுது என்ன செய்யப் போகிறீர்கள்?''

சாஸ்திரிகளின் கேள்விக்கு விடையாக பாபாஜி நேராக ருத்ரவீணை அருகேதான் சென்றார். அதை உற்று சில வினாடிகள் பார்த்தவர், தொட்டுத் தோளில் தூக்கிக்கொண்டார்.

சாஸ்திரிகளுக்குப் புரிந்துவிட்டது!

**ஆ**ற்றோரப் புதர்களில் அடங்கிக்கிடந்த அந்தக் காபாலிகக் கூட்டத்தை நோக்கி ஒரு காபாலிகன் வெகுவேகமாக சென்று கொண்டிருந்தான்.

அவர்களும் அவன் வருகைக்காகவே காத்திருந்தனர். அவன் அவர்களை நெருங்கும்போது ''ஜெய் பைரவா... ஜெய் காபாலிகா... வெற்றி... மகத்தான வெற்றி!'' என்று கூக்குரலிட்டுக் கொண்டேதான் நெருங்கினான். அவர்களும் அவனை ஆவலோடு பார்த்தனர்.

''என்னாயிற்று...? திட்டப்படி எல்லாம் வெற்றிகரமாக நடைபெற்றதா?''- அகோரகண்டன் என்னும் தலைமைக் காபாலிகன் கண்களை அகட்டிக்கொண்டு கேட்டான்.

''இல்லாவிட்டால் வெற்றி முழக்கமிட்டுக்கொண்டு வருவேனா என்ன?''

''அப்படியானால் தோடிபுரமே அழிந்தது என்று சொல்...''

''ஆம்... அப்படித்தான்! அந்த ஆலயமே பிணக்காடாகி விட்டது. அந்த அளவுக்கு அன்னதானப் பிரசாதத்தில் நான் கலந்த நஞ்சு வேலையைக் காட்டிவிட்டது. இனி அந்த ஆலயத்தின் பக்கமே ஒருவர்கூட வரமாட்டார்கள். ஆலயத்தை நினைத்தாலே சாவுதான் ஞாபகத்திற்கு வரும்...''

''எவ்வளவு பேர் இறந்திருப்பார்கள்?''

''தெரியாது....ஆனால் சாப்பிட்ட ஒருவர்கூட பிழைத்திருக்க வழியில்லை...''

''அந்த தாசி பட்டமேற்றுக் கொண்டுவிட்டாளா?''

''ஏற்றுக்கொண்டு நாட்டிய நிகழ்ச்சியும் நடந்தபிறகுதான் அன்னதான வைபவமே நடைபெற்றது. ஆனால் அதுவே இறுதி நிகழ்ச்சியாகிவிட்டது.

பழைய பஞ்சாயத்து முறை, ஒரு தாசியின் கையில் அதிகாரம் என்பதெல்லாம் இனி தோடிபுரத்தில் எந்தக் காலத்திலும் நடக்காது... அவர்கள் வரையில் நடந்து முடிந்தது ஒரு துரதிர்ஷ்டமான சம்பவம்.

ஆலயத்துக்குள்ளும் இனி யாரும் வரமாட்டார்கள். ஐதீகப்படி ஆலயமே சுடுகாடாகிவிட்டதே...''

''அந்த பாபா என்ன ஆனான்... அவனோடு ஒட்டிக்கொண்டு திரிந்த சாஸ்திரியும் ஒழிந்தானா?''

''இல்லை... அந்தக் கூட்டத்தில் அவர்கள் கண்ணிலேயே படவில்லை. ஆனாலும் கவலையில்லை. நாம் நமது கொள்கைக்கு எதிரான ஒரு விஷயத்தைத் தடுத்துவிட்டோம்.

ஆட்டம் பாட்டம் என்று ஐதீகங்களை உருவாக்கி அந்த ஆதி பரமசிவனை அடைய முடியும் என்று கூறுவதெல்லாம் இனி எக்காலத்திலும் சாத்தியமில்லை.

அந்தப் பரமனை அடைய ஒரேவழி நம்முடைய வழிமுறைகள்தான்... நாம் ஊருக்குள் நமது பிரசாரத்தைத் தொடங்கினால் அது இனி ஏற்றுக்கொள்ளும் நிலை வரும். இந்த நாட்டுப் பக்கம் எங்கும் நமது கொள்கை. கால் ஊன்றவில்லையே என்னும் நமது கவலையும் இனி நீங்கிவடும்.

அவன் சொல்லச் சொல்ல அதைக் கேட்கும் அகோரகண்டனும் காலகண்டனும் தங்கள் சுடலைச்சாம்பல் பூசிக்கொண்டிருக்கும் மார்பை பரபரப்புடன் தேய்த்துக்கொண்டு ''ஜெய்பைரவா'' என்று ஆகாசத்தைப் பார்த்துக் கொக்கரித்தார்கள்.

அதே சமயம் ஆற்று நீர்ப்பரப்பில் யாரோ ஒருவன் வரும் அரவம்... யாரது என்று ஊன்றிப் பார்த்தபோது வீரேந்திரன் வந்து கொண்டிருந்தான்!

ஒரு அரசகுமாரனைப் போன்ற உடையமைப்பில் இருந்தான். அவன் நடையில் வேகம் தெரிந்தது.

''வீரேந்திரன் வருகிறான்...''

''இவனும் இறந்திருப்பான் என்றல்லவா நினைத்தேன்...''

''பொறுமை... அவன் வேகமாக வருவதைப் பார்த்தால் அவன் கோபத்தில் இருப்பதுபோல் தெரிகிறது!''

''இவன் நம் வழிக்கு வரமாட்டான். இவனைக் கொண்டு ஊரைப் பிடிக்க நினைத்தது நம் முட்டாள்தனம். அந்த ஜோதிடனைத் தீர்த்துக்கட்டியதுபோல் இவனையும் தீர்த்துக்கட்டிவிட வேண்டியதுதான்...''

''பொறுமையாக இரு... அவன் என்ன செய்கிறான் என்று பார்க்கலாம்...''

அவர்கள் தங்களுக்குள் குசுகுசுத்துக் கொண்டிருந்தார்கள். அவனும் அவர்களை நெருங்கியவனாக பெருமூச்சுவிட்டான்...

அவர்கள் ஒருவர்கூட பேசவில்லை.

அவனையே கூர்மையாக முறைத்துப் பார்த்தார்கள்.

அவனே பார்த்தது போதும் என்று பேச ஆரம்பித்தான். ''எங்கள் ஊர் கோவிலில் உணவில் விஷம் கலந்தது உங்கள் செயல்தானே?''

''உங்களைத்தான் கேட்கிறேன். ஒட்டுமொத்தமாய் ஒரு ஊரையே ஒழித்துக்கட்ட நினைத்தது நீங்கள்தாளே?''

''மௌனமாய் இருந்து என்னைக் குழப்பாதீர்கள். உங்களுக்குத்தான் ஆலயங்கள், அபிஷேக ஆராதனைகள் எல்லாம் துளியும் ஆகாதவை... உங்களால்தான் இப்படி இதயமே இல்லாமல் செயல்பட முடியும்.''

''ஆம்... உண்மைதான்! நீ என்ன கட்சிமாறிவிட்டாயா வீரேந்திரா...?'' ஒருவன் போனால் போகிறது என்று வாயைத் திறந்தான்.

''நீங்கள் இவ்வளவு மோசமானவர்களாக இருப்பீர்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை.''

''இதுவும் ஒருவகை பலிதான்... புரிந்துகொள்.''

''ஒட்டுமொத்தமாக ஒரு ஊரைப் பலியிடுவதை என்னால் ஒப்புக்கொள்ள முடியாது. அதில் எனக்கு வேண்டிய எவ்வளவு பேர் இறந்து மடிந்துபோனார்கள் தெரியுமா?''

''ஓ... பாசம், நட்பு என்று பற்றுதல்களில் சிக்கிக்கொண்டு பிதற்றுகிறாயா? இங்கே அதெல்லாம் எதுவுமில்லை. எந்த நேரமும் ஏகாந்தம். அதாவது ஒவ்வொரு நொடிப்பொழுதும் வாழ்கிறவர்கள் நாங்கள்... இங்கே இருந்த உனக்கு அதற்குள்ளாகவா எல்லாம் மறந்துவிட்டது...?''

''காட்டுமிராண்டித்தனத்துக்கு ஏகாந்த வாழ்க்கை என்று விளக்கமா?''

''வீரேந்திரா... நீயா இப்படிப் பேசுகிறாய்..?''

''அவன் யாரையும் இழக்காதவரையில் நம்மில் ஒருவனாக மகிழ்ச்சியாகத்தான் இருந்தான். பலரை இழந்ததும் அந்தப் பற்றுதல் அவனை அப்படிப் பேசவைக்கிறது. பரவாயில்லை. நம்மைப் போல பக்குவப்பட அவனுக்கு இன்னமும் நாட்களாகும்.''

''போதும் நிறுத்துங்கள்... நடந்துமுடிந்து கொடூரமான சம்பவம் என் கண்களைத் திறந்துவிட்டது... நீங்கள் கெட்டவர்கள். அந்த இறைவன் பெயரை உச்சரிக்கக்கூட தகுதியற்றவர்கள். இறைவனின் பெயரால் பாவங்களைச் செய்கிறவர்கள். உங்களுடன் நான் கூடி செயல்பட்டதற்காக வெட்கப்படுகிறேன். வேதனைப் படுகிறேன்...''

வீரேந்திரன் குமுறினான். அதே சமயம் ஓங்கிய சூலாயுதத்துடன் அவனை ஒரு கூட்டம் சுற்றி வளைக்கத் தொடங்கியது.

அவனும் அவர்களைக் கூர்மையாகக் கவனித்தான். ''தெரியும்... நீங்கள் எப்படிப்பட்டவர்கள் என்று தெரிந்துதானே வந்திருக்கிறேன். என்னை வெறும் கேளிக்கைக்காரனாக மட்டும்தானே பார்த்திருக்கிறீர்கள். இப்பொழுது பாருங்கள் நான் யாரென்று...''

வீரேந்திரன் சொல்லிக்கொண்டே சுழன்று குதித்து சிலம்பு ஆட்டக்காரார்களைப்போல ஊடுகட்ட ஆரம்பித்தான். அவர்களுக்கெல்லாமும் திகைப்பு.

ருத்ரவீணை தோளில் இருக்க பாபாஜி ஆலயத்துக்குள் நுழைந்தபோது அங்கங்கே பலர் சுருண்டு கிடந்தனர். கோலாகலமான ஒரு திருவிழா கூட்டம் அப்படியே துக்கத்தில் புதைந்துபோனது போல தோன்றிற்று.

எங்கு பார்த்தாலும் அழுகுரல்கள்...

இளம் பிஞ்சுகள் பல உயிரைவிட்டிருந்தன.

மகாதேவரும் வைஜெயந்தியும் ஒரு ஓரத்தில் தேம்பிக்கொண்டிருக்க, வைத்தியர்கள் சிலர் நாடி பிடித்துப் பார்த்து நாடி அடங்கியிராதவர்களை முறிமருந்தால் எழுப்பும் காரியத்தில் இருந்தனர். அவசர ஆத்திரத்திற்கு கோவில் கிணற்றுச் சுனையைத் தேடி ஓடியவர்கள் சுனைநீரிலும் விஷம் கலந்திருப்பதை உணராமல் அந்த நீரைக் குடித்து அங்கேயே சுருண்டு விழுந்திருந்தனர்.

வைஜெயந்தி நொறுங்கிப்போயிருந்தாள். ஓடிவந்து பாபாவின் கால்களில் விழுந்தாள். கூடவே சாஸ்திரிகள்.

அவர் கண்களிலும் நீர்ப் பிரவாகம்!

பாபாவோ ஆகாயத்தை ஒருமுறை பார்த்தார்.

வீணையுடன் மௌனமாக நடந்து கல்மண்டபத்தில் போய் அமர்ந்தார்.

அதே சமயம் சடசடவென்று ஒன்று பத்தாக பட்சிகள் பல பறக்கும் சப்தம்... கல்மண்டபத்தின் தூண்களின் மேல் கிளிகள் வந்து அமர்ந்திருந்தன.

அவை வீணையைப் பார்ப்பதற்கென்றே பறந்துவந்ததுபோல் இருந்தது.

உண்மையில் அவை கிளிகளா இல்லை கிளிகள் உருவில் உள்ள தேவபுருஷர்களா என்று தெரியவில்லை. பாபாஜி அவைகளைப் பார்த்து அர்த்தபுஷ்டியுடன் ஒரு சிரிப்பு சிரித்தார்.

அப்படியே கண்களை மூடி தனது குருநாதரை நினைத்து தியானிக்கத் தொடங்கினார்.

''குருவே... வீணையுடன் நீங்கள் சொன்ன அதே ஆலயத்திற்கு வந்துவிட்டேன். ஆனால் சோதனையாக இங்கே

என்னைச் சுற்றிலும் உயிரின் ஊசலாட்டங்கள்! இந்த வீணையால் அவ்வளவு உயிர்களையும் பிழைக்க வைக்க அதற்குண்டான 'வினோதினி' ராகத்தை இசைக்கப்போகிறேன். ஜடப்பொருளுக் குள்ளும் அசைவை உருவாக்கும் சக்தி மிகுந்த ராகம் இங்கே அநியாயமாக இறக்கவிருப்பவர்களின் நாடிகளில் புகுந்து அவர்களுக்கு உயிர்ப் பிச்சையளிக்கட்டும்.

'ஒரு ஊரே இந்த ருத்ரவீணையின் மதிப்பை உணர வேண்டும் என்றே இங்கே - இப்படி நடந்ததோ?' என்று கூட நினைக்கிறேன.

அதே சமயம் எனக்கான காலநேரமும் நெருங்கிவிட்டதை உணர்கிறேன். எனக்குப் பிறகு இந்த வீணையைப் பொறுப்புடன் பெற்று ஊரை ரட்சிக்கும் ஒருவனை நீங்களே அனுப்பித்தர வேண்டும்.

இந்த மண்ணில் இனி எந்த நாளும் துக்கமோ, துயரமோ அவலமான ஒலிக்குரலோ கேட்கக்கூடாது. உலகின் துன்பமே இல்லாத இன்பமயமான ஒரு இடமாக இந்த மண் திகழட்டும். இங்கே வருபவர்கள் இதயமெல்லாம் இசையாலும் அருளாலும் நிரம்பி வழியட்டும்.

ஒரு நல்ல சிஷ்யனாக உங்கள் கட்டளையை நிறைவேற்றும் நானும் எனது சான்றோர்களின் நெறிமுறைப்படி எல்லாம் வல்ல அந்தப் பேரருளாளனின் அருள் உலகில் ஐக்கியப்பட்டு அடக்கமாகிட உங்கள் அருளாசிகள் வழிகாட்டட்டும்.''

பாபா தனது பிரார்த்தனையை தியானத்தில் வைத்துவிட்டு வீணை நரம்புகளில் கையை வைத்தார். வினோதினி ராகமானது ஆரோஹண, அவரோஹணத்தோடு அங்கு பரவ ஆரம்பித்தது.

அதே சமயம்...

திகுதிகுவென்று எரிந்தபடி இருந்தது அந்தச் சடலம். அதன் கால்மாட்டில் ஒற்றைக்காலில் நீண்ட சடாமுடியோடு ஒரு காபாலிகன்!

வெண்ணிறத்தாடியும் மீசையும் தலைமுடியும் அவன் நூறுவயதை நெருங்கியவன் என்பதைச் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருக்க, அருகிலேயே சுடுகாட்டு வெட்டியான் அடங்கி ஒடுங்கி நின்று கொண்டிருந்தான்.

ஒரு கட்டத்தில் அந்தச் சடலம் அப்படியோ எழுந்து அமர்ந்து திகுதிகுத்தது. வெட்டியானுக்குள் பிணத்தின் கைகளை பின்பக்கமாய் வைத்துக்கட்டாததால் அந்தச் சடலம் அப்படி எழுந்து அமர்ந்துகொண்டுவிட்டதாகத் தோன்றியது.

உடம்பின் சதையும் ஒரு எரிபொருளாய் மாறி எரிக்கும் நெருப்போடு ஒன்று சேரும்போது சடலங்கள் இப்படி எழுந்து அமர்ந்துகொள்வது மிக சகஜமான ஒன்று.

அவனும் அதையேதான் நினைத்தான்.

வேறு யாரும் பார்த்தால் சடலத்துக்குள் ஏதோ ஒரு புதுவித சக்தி இருந்து அதனால்தான் அது அப்படி இயங்குவதாகத் தோன்றும்.

அதே வேளையில் அந்தக் காபாலிகனும் அமர்ந்து எரியும் அந்தச் சடலத்தைச் சுற்றிவரத் தொடங்கினான்.

ஒன்று...

இரண்டு...

மூன்று... என்று நூற்றுஎட்டு பிரதட்சணங்கள். வெட்டியானுக்கு அந்தக் காபாலிகன் செயல் வியப்பாக இருந்தது. மாந்திரீக சித்திக்காக சில மாந்திரீகர்கள் மயானத்துக்கு வந்து பிரேத பூஜை செய்து பார்த்திருக்கிறான். ஆனால் இப்படி தொடர் பிரதட்சணம் அவனுக்குப் புதிது.

அப்படிப் பிரதட்சணம் புரிகையில் சாதாரணமாக எந்த மாந்திரீகனும் அருகில் யாரையும் வைத்துக்கொள்ள மாட்டார்கள்.

ஆனால், இந்த காபாலிகனோ அந்தச் சுடுகாட்டு வெட்டியானை அருகிலேயே நிற்கச் சொன்னதோடு பிரதட்சணத்தை முடித்துவிட்டு அவனருகில் சென்று அவனை நேருக்குநேர் நிறுத்தி கைகளைக் கூப்பினான்.

வெட்டியானுக்கு அது வியப்பாக இருந்தது.

''என்ன இது... என்னப்போய் கும்புடுறீங்க?''

''ஆம்... நீ இந்த பிரேதக் கோவிலுக்கு பூசாரி அல்லவா... அதனால்தான்...''

''பிரேதக் கோவிலா... என்ன சொல்றீங்க?'''

''இடுகாடும் சுடுகாடும் எங்கள் காபாலிகத்தில் பிரேதக் கோவில்கள்..''

''அதுசரி... நான் எப்படி பூசாரியாவேன்?''

''ஆகமங்கள் அடங்கிய ஆலயத்துக் குருக்கள், சிவாச்சாரியர்கள், பட்டர்கள், பூசாரிகள் இவர்களைவிட சுடுகாடு காக்கும் வெட்டியான் மேலானவன் என்பது காபாலிகத்தின் சித்தாந்தம்...''

''ஆச்சரியமாக இருக்கிறதே...?''

''இதில் ஆச்சரியத்துக்கு இடம் ஏது... ஒருவன் ஒருநாள்கூட ஆலயம் செல்லாமல் இருக்கலாம். ஆனால் இந்தச் சுடுகாட்டுக்கு வந்துதானே தீரவேண்டும்?''

''அது என்னமோ உண்மைதான்...''

''அங்கே ஆலயத்தில்கூட பெரியவன், சிறியவன் பாகுபாடுகள் உண்டு. அலங்காரம், பூஜை என்று கண்களை மயக்கும் விஷயங்கள் உண்டு. ஆனால் இங்கேதான் எந்த ஏற்றத் தாழ்வுகளும் கிடையாது. ஆண்டியும் சரி, அரசனும் சரி பிணமாக மட்டும பார்க்கப்படுவது இங்கேதானே...?''

''அய்யா நீங்க சொல்றதுதான் சத்தியம்...''

''அந்தச் சத்தியத்தில்தான் ஈசன் இருக்கிறான். அவனது உண்மையான ஆலயம் இந்தச் சுடுகாடுதான். மனித வாழ்வின் மாயைகளுக்கு முடிவுகட்டி 'மனிதா, நீ சாதாரணமானவன்... இறப்பில்லாத பிறப்புக்கு முயற்சி செய்' என்கிற ஞானத்தை ஒருவருக்குத் தருவது சுடுகாடு மட்டும்தான்...''

''அதுவும் உண்மைதான். ஆனா இந்த இடத்தைப் பார்த்தாலே பயப்படுறவங்களும் மனசால நினைக்கக்கூட பிரியப்படாதவங்களும்தானே இங்க இருக்காங்க.''

''அது அவர்களது அறியாமை... அறியாமையை வென்று உண்மையில் மோட்சத்துக்கு வழிகாட்டுவது காபாலிகம் மட்டுதான்.''

''ஆனா, உங்களை மாதிரி காபாலிகர்கள்னு சொல்லிக்கிட்டு இங்க வந்த சிலர் சதா கள்குடிச்சிட்டு பொம்பளைங்களோடையே கிடந்தாங்களே... ''

''அவர்கள் காபாலிகர்களே அல்ல... காபாலிகத்தைக் கொச்சைப்படுத்துகிறவர்கள். உடம்பின் சுகத்தை எந்த நிலையிலும் ஒரு காபாலிகன் பெரிதாக நினைக்கமாட்டான். பெண்ணைப் புணரும்போதுகூட தன் விந்தை விடாமல், பெண் விந்தை உறிஞ்சி சக்தியை தனக்குள் திரட்டத்தான் முயலுவான்.

காமத்தோடு ஒரு பெண்ணைத் தொடுபவன் விந்து விடுவான். நொந்து கெடுவான். ஆனால் அதே பெண்ணை உண்மையில் காபாலிகத்தோடு தொடுபவன் ஆட்டிப்படைப்பான். அதற்கெல்லாம் அசாத்ய மன உறுதி வேண்டும்.''

''நீங்க சொல்றது கொஞ்சம் புரியுது... புரியாத மாதிரியும் இருக்குது...''

''உனக்குப் புரியாதுதான்... நூறு வயதைக் கடந்த எனக்கே இன்னமும் காபாலிகச் சித்தாந்தம் முழுதாக வசப்பட்டதா என்றால் இல்லை என்பதுதான் உண்மை. அப்படி இருக்க உனக்கு எப்படி உடனே புரியும்...?''

''அதுசரி சாமி... நீங்க மட்டும் தனியா வந்திருக்கீங்களே...''

''ஆம்... நான் உண்மை காபாலிகள். பைரவதேவனின் அருளுக்காக அலைபவன்...''

''பைவ சாமியா... அவர் யார்?''

''அந்த மகாதேவனின் ருத்ரங்களில் ஒருவர். அவரே பேரருளாளர். காபாலிக ஞானத்தின் கனிந்த அருளாசிரியர். உலக மாயையை அறுக்க வழிகாட்டுபவர். கர்மவினைகளை மாற்றி எழுதும் வல்லமை உடையவர்....''

''கேள்விப்பட்டிருக்கிறேன் சாமி... பைரவருக்கு ஒரு சின்ன கோவில்கூட எங்க ஊர் தோடீஸ்வரசாமி கோயில்ல உண்டு. ஆனா எங்களைத்தான் உள்ள விடுறதில்லையே...''

''கவலைப்படாதே... மனதார பிரார்த்தித்துக்கொள். பைரவர் உனக்கு இங்கேயே தரிசனம் தருவார். அந்த ருத்ரமூர்த்தியின் தரிசனத்துக்காகவே இந்தத் தோடிபுரத்துக்கு நான் வந்தேன். இதோ பிரேத பூஜை புரிந்து பிரேதக் கோயில் பூசாரியான உன்னையும் வணங்கினேன். என் சொப்பனத்தில் வந்து அந்த பைரவர் கூறியது உண்மையானால் அவர் இங்கே எனக்கு இறந்த கபாலங்களைக் கோத்துக் கட்டிய மாலையுடன் தரிசனம் தந்தே தீர வேண்டும். எனக்குள் ஜென்ம ஜென்மமாய் பதிந்துகிடக்கும் மானுட அச்சங்கள், ஆசாபாசங்கள், மடமைகள் எல்லாம் அந்தக் காட்சியால் இந்தச் சுடுகாட்டுச் சாம்பல்போல் சாம்பலாக வேண்டும்.''

அந்தக் காபாலிகரிடம் தீர்க்கமான பிரார்த்தனை. அது பலித்துவிட்டதுபோல அந்தச் சுடுகாட்டின் ஒருமுனையில் ஒரு உருவம் இரு கைகளிலும் இரண்டு வெட்டி எடுத்த தலைகள், கழுத்திலும் ஒன்றுக்குப் பத்தாக கோத்த தலைகளை மாலையாக சூடிக்கொண்டு நடந்துவந்தபடி இருந்தது.

வெட்டியானே அந்தக் காட்சியைப் பார்த்து நடுங்கிப் போனான்.

ஐயோ...என்ன ஒரு கோரம்!

யாரோ ஒரு அசுரன் யுத்தம் முடிந்து இறந்தவர்களின் தலைகளை மட்டும் வெட்டி எடுத்துக்கொண்டு ஆவேசகதியில் நடந்துவருகிறாற் போல் இருந்தது.

கிட்டே நெருங்கும்போதுதான் தெரிந்தது அது வீரேந்திரன் என்று.

வாயைப் பிளந்துவிட்டான் வெட்டியான்.

அந்தக் காபாலிகரோ அப்படியே மண்டியிட்டார்.

''மஹா பிரபோ... என் சொப்பனத்தை மெய்ப்பித்து விட்டீரே... என்ன ஒரு அற்புதக்காட்சி. இவர்கள் போலிவேடம் போட்டவர்கள். காபாலிகத்தையே கொச்சைப்படுத்தியவர்கள். இவர்களையே சம்ஹாரம் செய்து மகாபைரவமூர்த்தியாக தாங்கள் இங்கே எனக்குத் தரிசனம் தருவதை என்னென்பேன்!

இனி ஒரு வினாடி நான் உயிர் வாழ்ந்தாலும் அது வீணே! தங்கள் திருவடிகளிலேயே என் பிராணனை விட்டுவிடுகிறேன்.

இனி எச்சிலும் மலமும் தாங்கி, பசிக்குச் சோறிட்டு, உறங்கி எழுந்தும் எழுந்து உறங்கியும் காமம், குரோதம் போன்ற மாச்சரியங்களில் வீழ்ந்தும் மாயையில் உழன்றும் வாழும் இந்த மானிட வாழ்வே எனக்கு வேண்டாம். நித்ய மோட்சத்தை எனக்கு அருளி ஆட்கொள்ளுங்கள்.''

அந்தக் காபாலிகர் நீண்ட ஒரு பிரார்த்தனைக் குரலோடு அப்படியே சாஷ்டாங்கமாக அந்த புழுதிக்காட்டில் வீரேந்திரனின் காலடியில் விழுந்தார். வீரேந்தரன் ஆவேச பிம்பமாய் இருந்தான். கண்களில் ரத்தம் பூசினாற்போல ஒரு சிவப்பு. வெட்டியானுக்கு வெடவெடவென்று உடம்பு நடுங்கிற்று. அவன் வாழ்நாளில் அப்படி ஒரு காட்சியைக் கண்டதில்லை. வீரேந்திரன் தொடர்ந்து ஊரை நோக்கி நடந்தான். ஊரைச் சவக்காடாக்கியவர்களை பதிலுக்குச் சவமாக்கிவிட்ட ஒரு ஆவேசம் அவனிடம்.

வெட்டியான் அவன் செல்வதையே மரம் போல நின்று பார்த்துவிட்டுக் கீழே விழுந்து வணங்கிய காபாலிகரைத் தீண்டினான்.

அவரது உடல் சில்லிட்டிருந்தது!

அவனுக்கும் சிலிர்ப்பாகிவிட்டது. ஒரு சில நொடிகள் ஸ்தம்பித்தாலும் அதன்பின் சுதாரித்தவனாக எரிந்துகொண்டிருந்த பிரேதத்தின் மேலேயே அந்த காபாலிகரின் உடலையும் இழுத்துப் போட்டான். அதுவும் மெல்லப் பற்றிக்கொண்டு திகுதிகுவென்று எரிய ஆரம்பித்தது!

**ந**வக்கிரகமாளிகையின் காவலர்கள் அலறி அடித்தபடி ஓடிவந்துகொண்டிருந்தனர். எதிர்ப்படுவோர் என்னவென்று கேட்டபோது ''இறந்துபோன ஜோதிடர் அவரைப் புதைத்த

சமாதிக்கு மேல் கால்மேல் கால்போட்டு அமர்ந்து கொண்டிருக்கிறதைப் பார்த்தோம்'' என்றனர்.

''இந்தத் தோடிபுரத்துக்கு என்ன வந்தது... எதனால் இப்படி எல்லாம் நடக்கிறது...?'' என்று பதிலுக்கு அவர்கள் புலம்பிடும் போது வீரேந்திரனும் அவர்கள் எதிரில் வெட்டி எடுத்த தலைகளை மாலையாகத் தரித்தவனாக நடந்துவந்து கொண்டிருந்தான்!

''அய்யோ... இது என்ன கோரமான காட்சி!'' அவர்களிடம் நடுக்கம் கூடியது. பக்கத்து மரங்களுக்குப் பின்னால் போய் ஒளிந்துகொண்டனர்.

அதே சமயம் அவன் காதில் ஒரு இதமான வீணை நாதத்தின் ஓசை!

அவன் அப்படியே தேங்கி நின்றான். கையிலிருந்த தலைகளை உதிர்த்தான். மண்டை மாலையையும் அப்படியே அவிழ்த்துக் கீழே வைத்தான்.

பக்கத்தில்தான் இருந்தது நவக்கிரக மாளிகையின் நந்தவனப் பகுதி. அங்கேதான் ஜோதிடரைப் புதைத்திருந்தனர். அந்தச் சமாதியை ஒட்டி ஓங்கி வளர்ந்திருந்த ஒரு மருத மரம். அதன் கீழ் சென்று ஒரு யோகியைப் போல அமர்ந்துகொண்டான்.

அந்தக் கோலத்தில் அவனைப் பார்த்தபோது நிஷ்டை புரியத் தயாராகிவிட்ட ஒரு பாலயோகி போலத்தான் இருந்தான்.

வீணை இசை பலமாக ஒலித்தபடி இருந்தது. அது எங்கிருந்து வருகிறது... யார் இசைப்பது என்று எதுவும் அங்கிருக்கும் காவலர்களுக்குக்கூட புரியவில்லை.

ஆலயத்தில் விஷப்பிரசாதத்தால் சுருண்டுவிட்டிருந்த ஒவ்வொருவருமே புத்துயிர் பெற்றவர்களாய் திரும்ப எழுந்து அமர்ந்திருந்தனர். அவர்களை மடியில் போட்டு அழுதவர்கள் முகங்களில் எல்லாமும் வியப்பின் விரிவுகள். அவர்களுக்கு வீணை இசை எங்கிருந்து வருகிறது என்பது விளங்கவில்லை.

கல்மண்டபம் காலியாக இருந்தது. அங்கே சாஸ்திரிகள் கண்களை மூடி தியானத்தில் இருந்தார். பாபாஜி வாசிக்ககத் தொடங்கியதுதான் தெரியும். ஒருவருக்கும் பிரக்ஞை இல்லை. கண்விழித்துப் பார்த்தாலோ ஒரு உலக அதிசயம் ஈடேறியிருந்தது.

மாண்டவர் மீண்டதில்லை என்பது வரலாறு. ஆனால் இங்கோ அவ்வளவு பேரிடமும் புத்துயிர்.

தொட்டுத் தொட்டு வந்தனர். தலையாரி, மணியக்காரர் என்று ஒவ்வொருவருமே எழுந்து வந்தனர்.

எங்கிருந்து வருகிறது இந்தப் பேரிசை என்று அவர்கள் பார்வை துழாவியது. இறுதியில் ஆலயத்தில் பொக்கிஷ நிலவறையில் இருந்து வருவது தெரிந்தது.

ஆலயத்துக்குச் சொந்தமான அணிமணிகள், கலச பாகங்கள், ஆலயத்தின் சொத்துபத்து விவரங்கள் அடங்கிய செப்பேடுகள் என்று கஜானாவுக்குச் சமமாகக் கருதப்படும் அறையில்தான் பாபா அமர்ந்து அதை வாசித்தபடி இருந்தார்.

அறைக்கு வெளியே எல்லோரும் குழுமி நிற்க, மகாதேவர் உள்ளே நுழைந்து அப்படியே வாசித்தபடி இருக்கும் பாபாமுன் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். அவரைத் தொடர்ந்து அபராஜித வைஜெயந்தியும் அவளது தாயும் பாட்டியும் மற்றையோரும் செல்ல சாஸ்திரிகளும் பின்தொடர்ந்தார்.

பாபாவும் அவர்களின் சேவிப்பை அங்கீகரித்தவராக எழுந்தார்.

ருத்ரவீணையை அப்படியே அங்குள்ள பீடத்தின் மேல் வைத்தார். அதற்குமுன் அதன்மேல் இரண்டு பேழைகள் வைக்கப்பட்டிருந்தன.

அதில் ஒன்றுதான் பீடத்தின் மேல் அழகாகப் பொருந்தியது. மற்றது பொருந்தாமல் சற்று சாய்வாகவே அமர்ந்திருந்தது. அப்பொழுதே அது பேழைகளுக்காகன பீடமல்ல, வேறு எதற்கோ என்பது விளங்கிவிட்டது. ஆனால் இப்படி ருத்ரவீணையின் இரண்டு பக்கக் குடங்களுக்கான பீடம் அது என்பதை ஒருவராலும் அதுநாள் வரையில் யூகிக்க முடியவில்லை. வீணை அதில் அமரவும்தான் புரிந்தது.

பாபாவும் ''என்றோ யாராலோ களவு போனது. இன்று என்னைக் கொண்டு மீண்டும் இங்கே வந்து சேர்ந்துள்ளது. என் குருநாதரின் கட்டளையை நிறைவேற்றிவிட்டேன்... இதுவும் பல உயிர்களை மீட்டநிலையில் மகத்தான தெய்வப் பொக்கிஷமாக இங்கே சேர்ந்துவிட்டது. இனி இதைப் பாதுகாப்பது, இதைப் பயன்படுத்தி இந்த ஊரையே ஒரு இசைக்கோவிலாக வைத்திருப்பது எல்லாமே அபராஜிதா... இந்த ஆலயத்தின் இறைவனின் தாசி என்ற முறையில் உன்னையோ சேர்ந்தது'' என்றார்.

''பாபாஜி... எனது பட்டமேற்பு வைபவம் ஒரு துக்க நிகழ்ச்சியாக மாறிவிட்ட துயரத்தில் இருந்தேன். அதை அப்படியே

இந்த நாளை தோடிபுரம் வரலாற்றில் ஒரு பொன்னாளாய் மாற்றி விட்டீர்கள். உங்களுக்கு எப்படி நன்றி கூறுவேன்...'' என்றபடியே அபராஜித வைஜெயந்தி மீண்டும் பாபாவின் கால்களில் விழுந்தாள்.

''ஆலயத்துக்குள் இறைவன் முன் அன்றி ஒருவர் கால்களிலும் விழக்கூடாது அபராஜிதா... அது பிழை'' என்றார் பாபா.

''உண்மைதான்... நான் எங்கே மனிதர்கள் காலில் விழுந்தேன். ஒரு கண்கண்ட தெய்வத்தின் கால்களில் அல்லவா விழுந்தேன்...''

''நான் தெய்வமா...? இறைவா...! என்ன இது சோதனை?''

பாபாவின் கைகள் மேலே உயர்ந்தன. உடம்பு நடுங்கிற்று.

''அதில் சந்தேகமேன்ன பாபாஜி... இந்த ஆலயத்துப் பொக்கிஷத்தைத் திரும்பச் சேர்த்ததோடு மட்டுமின்றி பலரது உயிரையும் பிழைக்கவைத்து உயிர்ப்பிச்சை இட்டுள்ளீர்கள். உலகில் உயிரைத் தருவதும் பறிப்பதும் இறைவன் செயல் என்கிறோம். அப்படிப் பார்த்தால் இங்கே பலருக்கும் உயிர்ப் பிச்சையளித்த நீங்கள் இறைவன்தானே?''

''தவறு... நான் இங்கே கருவி... உண்மையில் உயிர்ச் சுருளை மீட்டது இந்த இசைக்கருவியும் இதன் நாதமும் அதன் ராகமும்தான்.

இசை என்பது உலகின் உன்னதம். சப்தங்களின் உச்சபட்ச சாகஸம்.

இறைவன் சப்த ரூபமாகவும் இருக்கிறான். அவனே இந்த இசைக்கருவியின் நாதவடிவில் பரவி அனைவரின் பிராணனுக்குள்ளும் நுழைந்து உயிர்ச் சுருளை தட்டிவிட்டு இயக்க க்தி அளித்தான். நீங்கள் போற்ற வேண்டியது இந்த இசைக் கருவியை. இதைக் கொண்டு பல்லோருக்கும் உதவுவதற்காக எனக்குக் கிடைத்த வாய்ப்பிற்கு நான் அந்த இறைவனுக்கு நன்றிகூறிக் கொள்கிறேன். உங்கள் அனைவருக்கும் என் நல்லாசிகள்!''

பாபாஜி ஆசீர்வதித்தபடியே அந்த அறையைவிட்டு வெளியே வந்தார். உடனேயே உயிர் பிழைத்த பலர் அறைக்குள் நுழைந்து பீடத்தின் மேல் அமர்ந்திருக்கும் ருத்ர வீணையையும் சேர்த்து வணங்க ஆரம்பித்தனர். ஆலயப் பிராகாரவெளிக்கு

வந்தவரை மந்திரி மகாதேவர் தடுத்து ''பாபாஜி... வாருங்கள், மாளிகைக்குச் செல்வோம்.'' என்றார்.

''இல்லை... இனி எனக்கு அங்கே வேலை இல்லை. சாஸ்திரிகளோடு கொஞ்சம் அளவளாவிவிட்டு நான் நித்ய ஓய்வெடுக்கச் சித்தமாகிவிட்டேன்.''

''அப்படியானால்...?''

''சாஸ்திரிகளிடம் இருந்து உங்களுக்குத் தகவல் வரும். இப்பொழுது என்னைச் செல்ல அனுமதியுங்கள்.''

''பாபாஜி...'' - கண்ணீர் விழிகளுடன் வைஜெயந்தி அவர் முன் ஏறிட்டாள்.

''எதற்கு இந்தக் கண்ணீர்?''

''ஏன் இப்படி விட்டுவிலகுவது போலப் பேசுகிறீர்கள்?''

''நான் பேசாவிட்டாலும் எனது விலகல் தவிர்க்க முடியாதது வைஜெயந்தி!''

''என்ன கூறுகிறீர்கள்... சிறிதுகாலம் என்னுடன் நவக்கிரக மாளிகையில் தாங்கள் தங்கியிருக்கக்கூடாதா?''

''சிறிது காலமல்ல... பலகாலம் நான் அங்கேதான் இருக்கப்போகிறேன். ஆனால் இந்த உடலோடு அல்ல.''

''உங்கள் பேச்சைப் புரிந்துகொள்ள முடியவில்லை என்னால்...''

''போகப் போகப் புரியும். ஒரு விஷயம் மட்டும் உனக்குக் கவனமிருக்கட்டும். அந்த ருத்ரவீணை சுயநலத்திற்காக வாசிக்கப் படக்கூடாது. பொதுநலத்துக்காக தினமும் வாசிக்கப்பட வேண்டும். இது என் குருநாதர் கட்டளை. நான் இருந்தவரை அந்தக் கட்டளையை ஈடேற்றிவிட்டேன். இனியும் ஈடேற்றுவது இந்தக் கோவிலின் சகல நலன்களுக்கும் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும் உன்னுடைய பொறுப்பாகும்.'' பாபாஜி பேச்சோடு அவளது தலையை வருடி கன்னத்தைத் தட்டிக் கொடுத்தவராக அப்படியே வழியும் அவளது கண்ணீரையும் துடைத்துவிட்டபடியே நடந்தார்.

கூட்டத்தவர்கள் கூப்பிய கரங்களுடன் அவருக்கு விடை கொடுத்தனர்.

## இன்று

**ப**ஞ்சாயத்து போர்டு அலுவகத்தில் பெஞ்ச் சிளார்க் கொண்டுவந்து வைத்த கணக்குவழக்குகளை பார்த்துக் கொண்டிருந்தார் கல்யாணசுந்தரம். நாதஸ்வரத்தையும் ஒரு உறையில் போட்டு கையுடன் கொண்டுவந்திருந்தார். அப்படியே கோவிலுக்குப் புறப்பட்டுச் செல்ல வேண்டியதுதான் அவரது திட்டம்.

அப்பொழுது தஞ்சாவூர் கலெக்டர் அலுவலகத்தில் இருந்து ஒருவர் கலெக்டர் அனுப்பியதாக வந்து நின்றார்.

''இங்க பிரசிடெண்ட் அய்யா யாருங்க...?'' கல்யாண சுந்தரத்துக்குள் அந்தக் கேள்வி பெரிய கோபத்தையே வருவாக்கியது.

''ஏய்யா... பிரசிடெண்ட் சீட்ல உட்கார்ந்திருக்கேன். கண்ணு தெரியலியா?'' சீறி விழுந்தார்.

வந்தவரும் கொஞ்சம்போல நடுங்கிவிட்டு ஒரு கடிதத்தை நீட்டினார்.

வாங்கிப் பார்த்த கல்யாணசுந்தரத்துக்கு முகம் சிவந்து விட்டது.

க்ளார்க் கேட்டார்.

''என்னங்க விஷயம்?''

''பொடலங்கா... இந்த ஊர் சுந்தராம்பாதான் உலகத்திலையே பெரிய பாடகியாம். அவ ஜனாதிபதி மாளிகைல மேல்நாட்டுக்காரங்க வரும்போது பாடணுமாம். அதுக்கு பிரசிடெண்ட்டுங்கற முறைல நான் எல்லா வசதியும் செஞ்சு கொடுக்கணுமாம்.'' சொல்லும்போதே கல்யாணசுந்தரத்துக்கு நாக்கு துடித்தது. க்ளார்க்கோ மத்தாப்பு போல முகம் மலர்த்தினார்.

''நம்ம ஊருக்குப் பெருமையான விஷயங்க இது...''

''ஏன்... நான்கூடதான் நல்லா வாசிப்பேன். நான் நாதஸ்வரம் வாசிச்சா நல்லா இருக்காதாக்கும்?''- கோபம் முகத்தைச் சிவக்க வைத்தது. க்ளார்க் வாயைத் திறக்கவில்லை.

''எதுக்குதான் இப்படி ஒரு பொட்டச்சியை ஆளுக்குஆள் தூக்கி வெச்சுக்கறாங்களோ...'' என்றபடி கணக்கு வழக்கை மூடிவைத்துவிட்டுக் கிளம்பினார்.

பிரசிடெண்ட்டானால் சுந்தராம்பாளைவிட ஒருபடி மேலே போய்விடலாம் என்று நினைத்துதான் முட்டி மோதி பிரசிடெண்ட் ஆனார். ஆனால் மழைவிட்டும் தூவானம் விடாத கதையாக சுந்தராம்பாள் அவருக்குமுன் மேலேயே போய்க்கொண்டிருந்தால் அவரால் என்னதான் செய்யமுடியும்?

உபாசகர் ஞாபகம்தான் வந்தது.

குடிசையில் உபாசகர்! தலைமேல் தேங்காய் விழுந்ததில் நல்லவேளை சித்தம் கலங்கவில்லை. இருந்தும் ஒரு எலுமிச்சை அளவு வீக்கம். வலியும் விண்விண் என்று தெறித்தது.

கல்யாணசுந்தரம் வந்து பார்க்கவும் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டார்.

''சாமி, என்னாச்சு?''

''ஒண்ணுமில்ல கல்யாணசுந்தரம். சின்ன அடி!''

''சின்ன அடியா...? பார்த்தா அப்படித் தெரியலையே...!''

''சரி. பெரிய அடி... இப்ப என்ன பண்ணலாம்கிறீங்க...?''

''கோவிச்சுக்கிறீங்களே சாமி... ஒரு அக்கறைலதானே கேட்டேன்.''

''மன்னிச்சுக்குங்க... எனக்கு என் வித்தையை மீறி அடி விழுந்துட்ட ஆத்திரம்.'''

''அப்படின்னா...?''

''அப்படின்னா என்ன... உங்க ஊர்லதான் ஒரு மர்மமாளிகை இருக்குதே... அது தந்த பரிசு.''

''சாமி...''

''ஆமாம் கல்யாணசுந்தரம்... அப்படி அங்க என்னதான் இருக்குன்னு பார்க்கப்போனேன். அப்பதான் இப்படி ஒரு காயம்... அந்த சுந்தராம்பாளை நினைச்சேன். சித்துவேலை எல்லாம்கூட தெரிஞ்சவளாவே இருக்கா...''

''சரியா சொன்னீங்க சாமி... சில தலைமுறையா அவளும் அவ குடும்பமும்தான் இந்த ஊரை ஆளாம ஆள்றவங்க. அவ அம்பாளாம். ஊர்க்காரங்க அவளைத் தலைலதூக்கி வெச்சுகிட்டு ஆட்றத நான் என்னென்னு சொல்வேன்...''

கல்யாணசுந்தரத்திடமும் ஆதங்கம் பீறிட்டது.

உபாசகருக்கு அது சற்று வசதியாக இருந்தது.

''அப்ப சுந்தராம்பாள்னா உங்களுக்கு ஆகாதுன்னு சொல்லுங்கோ...''

''ஆமாம் சாமி... அவ கர்வத்தைப் பங்கம் பண்ணணும்.''

''அதுசரி... அந்த பங்களாவுல என்ன இருக்குன்னு யாருக்குமே தெரியாதா?''

''தெரியாது... தெரிஞ்சுக்க முயற்சி செஞ்சா அவ்வளவுதான். ஒரு உபாசகர் உங்களுக்கே காயம் பட்ருக்கும்போது சாதாரண மனுஷங்க எந்த மூலைக்கு சாமி.''

கல்யாணசுந்தரம் பேசப்பேச உபாசகருக்குள் தீவிரமான எண்ண அலைகள்.

''என்ன சாமி யோசிக்கறீங்க?''

''இல்ல... இப்படிக்கூட ஒரு ஊர் இருக்குமான்னு யோசிச்சேன்.''

''என்னத்த சாமி பண்றது. இப்பகூட மனசு கேக்காமதான் வந்தேன். ஒண்ணு உறுதி. அவ இந்த ஊர்ல இருக்கறவரை நானோ, என் நாதஸ்வரமோ மேல போகவே முடியாது.''

''அப்ப உங்களுக்கு அவ இந்த ஊரைவிட்டுப் போனா போறும். அவ்வளவுதானே?''

''அவ்வளவேதான். உங்களால முடியுமா?''

''அதுக்குத்தானே வந்திருக்கேன்.''

கல்யாணசுந்தரம் முகம் உடனே அதிர்ச்சியில் புதைந்தது.

''அப்படின்னா நான் கேள்விப்பட்டது உண்மையா?'' என்றார்.

''என்ன கேள்விப்பட்டேள்?''

''நீங்க ருத்ரவீணைன்னு ஒண்ணைத் தேடி வந்திருக்கறதா?''

''ஆமாம்...''

''அப்படி என்ன சாமி அந்த வீணைல இருக்கு?''

''அதுல இல்லாததே இல்லை. அது கிடைச்சுட்டா சொர்க்கமே கிடைச்சமாதிரி. அடுத்த ஜென்மா கிடையாது. ஏன் இந்த ஜென்மத்துலேயே அந்த அம்பாளை நேர்ல கூப்ட்டுத் தரிசனம் பண்ணலாம்.''

''அப்ப அதாலதான் சுந்தராம்பா சொல்றதெல்லாம் பலிக்குதா?''

''இருக்கலாம்...''

''அது அந்த தாசிபங்களாவுலதான் இருக்குதா?''

''வேற இடத்துல இருந்தா என் திருஷ்டில தெரிஞ்சிருக்குமே.''

''அங்க இருந்தா மட்டும் தெரியாதா?''

''என்கிட்ட இருக்கற சக்தியவிட பெருசா அங்க சக்தி இருக்கும் போது நான்லாம் அதுக்குத் தகுந்த மாதிரிதானே போகணும்!''

''அப்ப முடிவு?''

''என் சக்திய அதிகப்படுத்திக்கறதுதான் ஒரே வழி...''

''எப்படி சாமி...?''

''எவ்வளவோ வழிமுறைகள் இருக்கு. விசுவாமித்திரரைப் பார்த்து வசிஷ்டர் சிரிச்சதால விசுவாமித்திரர் ஒரு புதிய உலகத்தையே சிருஷ்டி பண்ணினதா சொல்வா. தவசிகள் கோபம் மட்டும் படக்கூடாது.பட்டா அது எதிரிக்கு ஆபத்து...''

''அப்ப இனி சுந்தராம்பாளுக்கு ஆபத்துன்னு சொல்லுங்க.''

''அது எனக்குத் தெரியாது. ஆனா எனக்கு அந்த ருத்ரவீணை வேணும். அதை அடையாம இந்த ஊரைவிட்டுப் போகமாட்டேன்.''

''அதுக்கு நான் என்ன வேணும்னாலும் செய்யறேன் சாமி...''

''அப்புறமா வார்த்தை மாறமாட்டேளே...?''

''எனக்கு அவ ஊரை விட்டுப்போகணும் அதுதான் தேவை.''

''அப்படீன்னா... உங்களுக்கு ஜனாதிபதி கையால பத்மஸ்ரீ பட்டமே கிடைக்கும். நான் வாங்கித்தரேன்.''

''நிஜமாவா சாமி...!''

''ருத்ரவீணை கிடைச்சுட்டா அதெல்லாம் அல்பம் கல்யாணசுந்தரம்...''

''அப்ப இந்த நிமிஷமே என்ன செய்யணும்னு சொல்லுங்க. செய்யறேன்.''

''இப்போதைக்கு நீங்க சொன்னதே போதும். தேவைப்படும்போது கேக்கறேனே...''

''நல்லது சாமி. நீங்க ரெஸ்ட் எடுங்க...''

கல்யாணசுந்தரம் ஏதோ புதுவழி கண்டுபிடித்துவிட்டவர் போல விடை பெற்றுக்கொண்டார்.

சந்தியாவந்தனம் செய்து கொண்டிருந்தான் சங்கரன். உள்ளே நுழைந்துகொண்டிருந்தாள் பானு. திறந்த மார்பு, அதில் திருநீற்றுப் பந்தல். அத்துடன் பிராணாயாமத்துக்காக சங்கரன் மூக்கைப் பிடித்துக்கொண்டு இருப்பது பார்த்து அவளுக்குள் ஒருவித கிளர்ச்சி.

அவனும் சிவப்பழமாக இருந்தான்.

முகத்திலும் அப்படி ஒரு தேஜஸ்.

பானு உற்று உற்றுப் பார்க்கவும் திறந்த மார்புடன் இருக்கும் கூச்சத்துடன் கொஞ்சம் நெளிந்தான். பானு அதை ரசித்தபடியே மைதிலியை நோக்கி நடந்தாள்.

மைதிலி காய் நறுக்கிக்கொண்ருந்தாள்.

பானு வரவும் சிரித்தாள். 'காபி குடிக்கிறாயா?' என்று சைகையில் கேட்டாள். பதிலுக்கு பானுவிடம் ஆமோதிப்பு. எழுந்துசென்று வேகமாக பாலை அடுப்பில் வைத்தாள்.

பானுவும் வந்த விஷயத்தைப் பேச ஆரம்பித்தாள்.

''மைதிலி, நான் இப்ப ஒரு முக்கிய விஷயம் சொல்லப்போறேன்...''

மைதிலி என்ன என்கிற மாதிரி பார்த்தாள்.

''ஜெர்மன்ல இருந்து ஒரு டாக்டர், உன்னைப்போல இடைக்காலத்துல பேசமுடியாம போனவங்களைப் பேசவைக்கறதுல பெரிய நிபுணராம். அதுக்கு ஒரு ஆபரேஷன் இருக்காம். அதுபத்தி ஒரு மெடிசின் மேகசைன்ல ஆர்ட்டிக்கிள் படிச்சேன். எனக்கு உடனே உன் ஞாபகம்தான் வந்தது.''

மைதிலியிடம் பேசிக்கொண்டே சங்கரன்மேல் தீவிரமான கவனத்தில் இருந்தாள் பானு. அவனும் கவனித்தான்.

மளமளவென்று சந்தியை முடித்துவிட்டு துண்டை மேலே போட்டுக்கொண்டு வந்தான்.

மைதிலி அவனுக்கும் சேர்த்து காபியை கலக்கினாள்.

''கொண்டா நான் கொடுக்கறேன்...'' என்று பானு அதைக் கேட்டு வாங்கிக்கொண்டாள். அவள் அப்படி செய்வதற்கான காரணம் மைதிலிக்குக் கொஞ்சம் புரிந்தது. கொஞ்சம் புரியவில்லை.

சங்கரன் பானு காபியைக் கொண்டுவந்து தருவாள் என்று எதிர்பார்க்கவில்லை.

''உனக்கு எதுக்கு பானு சிரமம்...'' என்றான் கமறலுடன்.

''இதுல சிரமம் என்ன இருக்கு...? அதெல்லாம் ஒரு பெண்ணோட கடமைதானே?''

''அதுக்குத்தான் மைதிலி இருக்காளே...''

''இப்ப அவ இருக்கா... நாளைக்கே கல்யாணம் ஆகிப் போய்ட்டா யார் இருக்கா?''

''அப்றமா காயத்ரி இருக்கா இல்லையா?''

''அவளும் கல்யாணம் ஆகிப்போய்ட்டா...?''

''ஏன் எனக்குன்னு ஒருத்தி வரமாட்டாளா... எனக்கு கல்யாணம்னு ஒண்ணு ஆகாதா என்ன?''

''நான் ஆகாதுன்னு சொல்லலியே... அன்னிக்கு செய்யறத இப்பவே செய்யறேன். அவ்வளவுதான்.''

அவள் தன் மனதில் இருப்பதைப் பட்டவர்த்தனமாகப் போட்டு உடைக்க, அவனிடம் ஸ்தம்பிப்பு.

அவளோ அவன் அடுத்து என்ன சொல்லப் போகிறான், ஏது சொல்லப் போகிறான் என்பதுபற்றி துளியும் கவலைப்படாமல் வெட்கத்துடன் விலகிக்கொண்டாள்.

சங்கரனுக்கு நின்ற இடம் அப்படியே நடுங்க ஆரம்பித்தது. பானுமேல் காதலோடு இருக்கும் சாமிநாதன் முகம் ராட்சஸமாய் அவன் மனக்கண்ணில் விசுவரூபம் எடுக்க ஆரம்பித்தது!

திருக்கடவூரில் ஸ்ரீமடத்து மகாசமாதி காரியங்களில் கலந்துகொண்டுவிட்டு ஊருக்குப் புறப்பட காலெடுத்த சுந்தராம்பாள் முன் ''ஒரு முக்கிய விஷயம்'' என்று வந்து நின்றார் ஸ்ரீமடத்து மேனேஜர்.

''சொல்லுங்க மேனேஜர்...''

''பெரியவா சாகும்போது கடைசியா என்ன சொன்னார்னு கேள்விப்பட்டேளா?''

''நீலகண்டன் சொன்னான். அந்த உபாசகரைப் பத்திதானே?''

''ஆமாம்... அவர் குருநாதர் கார்யத்துக்குக்கூட வரலை. அப்படின்னா என்ன ஒரு பேராசை பாருங்கோ.''

''பார்த்துகிட்டுதானே இருக்கேன்.''

''நீங்க கொஞ்சம் ஜாக்ரதையா இருக்கணும்.''

''என் கூட தெய்வம் இருக்கு மேனேஜர். அவர்தான் ஜாக்ரதையா இருக்கணும்.''

''அது எனக்கும் தெரியும். பெரியவா ஒரு ஞானசமுத்ரம். அவரே ருத்ரவீணையால பாடாபட்டுட்டார். இவர் சும்மா கணுக்கால் அளவுகூட தேறாதவர். உயிருக்கே எதனா ஆபத்து வந்துட்டா என்ன பண்றதுன்னுதான் பயப்படறேன்.''

''கவலைப்படவேண்டாம். நான் இருக்கிறவரை ஸ்வாமிகளுக்கு ஆனமாதிரி யாருக்கும் ஆக விடமாட்டேன்.''

''அப்ப பார்த்து அவர்கிட்ட பக்குவமா பேசி இங்க ஸ்ரீமடத்துக்கு அனுப்பி வைங்கோ. இங்க அவரைப் பட்டத்துக்கு அனுமதிக்கக்லைங்கற வருத்தம் வேற அவருக்கு. அதான் ஆக்ரோஷமா பொறப்டுட்டார்...''

''பட்டமும் பதவியும் தானா வரணும். நாம தேடிப்போகக் கூடாது...''

''என்ன பண்றது... இந்தப் பக்குவம் அவருக்கு இல்லை.''

''வரும்... வரவைக்கறேன். அப்ப நான் உத்தரவு வாங்கிக்கறேன்.''

அவர்களிடம் இருந்து விடைபெற்றுக்கொண்டாள். வாசலில் வாடகைக்கார் காத்திருந்தது. ஏறி அமர்ந்தவள் டிரைவரிடம் ''தோடிபுரத்துல என் வீட்டுக்கு போகாதே... நேரா அந்த உபாசகர் இருக்கற குடிசைக்குப் போ...!'' என்றாள்.

**உ**பாசகர் குடிசை...

சுந்தராம்பாளின் வாடகைக்கார் தேங்கி நின்றது. அவளை உபாசகர் துளிகூட எதிர்பார்க்கவில்லை. அது அவரது முகத்தில் அப்பட்டமாகத் தெரிந்தது. விறுவிறுவென்று இறங்கி நேராக உள்ளே வந்தாள. உபாசகர் எழுந்து நின்றார். எந்த ஒரு பெண்ணாக இருந்தாலும் அவளை சக்தி வடிவத்தில் பார்ப்பவன்தான் ஒரு சக்தி உபாசகன் என்பவன்.

உபாசகர் நரசிம்மபாரதியும் விதிவிலக்கில்லை. எழுந்து நின்றார். கைகளைக் கூப்பி வணங்கி வரவேற்றார்.

''வாங்கோ...''

''பரவால்லியே... எதிரியா இருந்தாலும் நாகரிகம் தெரிஞ்சிருக்கே...''

''யார் எதிரி... நீங்களா...? எனக்கா?''

''இல்லையா பின்னே?''

''மன்னிக்கணும்... ஒரு பொம்மனாட்டியை நான் எந்தக் காலத்துலையும் எதிரியா நினைக்கமாட்டேன்.''

''ஏன்... ஆம்பளைங்கற கர்வமா?''

''உக்காருங்கோ முதல்ல... அப்புறமா கேக்க நினைக்கறத கேளுங்கோ...''

''கேக்க என்ன இருக்கு... குருநாதர் சாவுகூட உங்களை அசைக்க முடியலியே... அவ்வளவு கல்மனசா உங்களுக்கு?''

''ஓ... இப்ப அவருக்காக வக்காலத்து வாங்கத்தான் வந்திருக்கேளா?''

''வக்காலத்து வாங்க வரலை... உங்களைக் கவனமா இருக்கச் சொல்ல வந்தேன்.''

''நான் எப்பவும் என் அடியை கவனமா எடுத்து வைக்கறவன்தான்...''

''அதை நீங்க சொல்லக்கூடாது... பாக்கற நாங்க சொல்லணும்...''

''ஒரு விஷயம் தெரிஞ்சுக்கணும் நீங்க... நான் நாலு பேரைப் பார்த்து நடக்கறவன் கிடையாது. என்னை வேணும்னா நூறுபேர் பார்த்து நடக்கலாம்.

நான் வழி நடக்கற தொண்டனில்ல... வழிகாட்ற தலைவன்.''

''அதான் இந்த ஊருக்குத் திருட்டு எண்ணத்தோட வந்திருக்கீங்களா...?''

''என்ன சொல்றேள்... யாருக்குத் திருட்டு புத்தி?''

''அப்ப நீங்க இங்க வந்திருக்கற நோக்கம்?''

''அதை எதுக்கு நான் உங்கிட்ட சொல்லணும்?''

''சொல்ல தைரியம் இல்லையோ...?''

''எப்படி வேணும்னாலும் வெச்சுக்கலாம்...''

''இது மழுப்புப் பேச்சு... நான் முகத்துக்கு நேரா சொல்றேன். ருத்ரவீணையைத் தேடிண்டு வந்திருக்கற உங்க எண்ணத்தை மாத்திக்குங்கோ.''

''சபாஷ்... பூனை இப்பதான் வெளிய வந்திருக்கு. அப்புறம்...?''

''பூனை எலிங்கற எகத்தாளப் பேச்செல்லாம் வேண்டாம். ருத்ரவீணையே எந்த ஒரு சாமான்ய மனிதனும் தீண்டமுடியாது.''

''உண்மைதான்... ஆனா நான் சாமான்யன் இல்லைங்கறது உங்களுக்குத் தெரியாதே...!''

''இப்படிச் சொல்ற யாரும் பெரிய மனுஷனா இருக்க முடியாது... அந்த ருத்ரவீணை சிவன் சொத்து. அதைப் பாதுகாக்ற பொறுப்பு ருத்ரனோடது...''

''ஏன் அந்த ருத்ரனா நான் இருக்கக் கூடாது...?''

''நிச்சயம் நீங்க இல்லை. இருந்திருந்தா என்னைப் போல சந்தோஷப்பட்ற ஒரு ஆத்மாவை உலகத்துலயே பார்க்க முடியாது.''

சுந்தராம்பாளின் அந்தப் பதில் உபாசகரை ஒரு வினாடி திக்குமுக்காட வைத்துவிட்டது.

''என்னது... நான்... நான் ருத்ரன் இல்லையா....? அதே சமயம் நான் அப்படி இருந்தா அதுல உங்களுக்குச் சந்தோஷமா?''

''ஆமாம்... எப்ப ருத்ரன் வருவான்னு காத்துருக்கற ஒருத்தி நான். அவன் வந்துட்டா போதும்... பல தலைமுறையா என் குடும்பம் சுமந்துக்கிட்டிருக்கற அந்தச் சிலுவையை இறக்கி வெச்சுடுவேன்.''

''ஆச்சரியமா இருக்கே இந்தப் பதில்...''

''ஆனா இதுதான் உண்மை...

''ஒண்ணு நான் ஒப்புக்கறேன். எதற்காகவும் நீங்க பொய் சொல்லமாட்டீங்க...''

''அப்ப என்மேல அபிமானம் இருந்தா நான் சொல்றதக் கேளுங்க. இனியும் நீங்க இந்த ஊர்ல இருக்கவேண்டாம்.''

''ஏன்... ஒருவேளை நான் அந்த ருத்ரவீணையை அடைஞ்சாலும் அடைஞ்சுடுவேன்கற பயமா?''

''இல்லை... அழிஞ்சிடுவீங்கங்கற பயம்...''

''அழிவா... எனக்கா?''

''ஆமாம்... உங்களுக்குத்தான். ஆனானப்பட்ட உங்க குருநாதரையே அந்த வீணைகிட்ட நெருங்கிவிடலையே.''

''அவர் என்னைப் போல சித்து, மாந்திரிகம்லாம் தெரிஞ்சவர் இல்லையே...''

''உபாசகரே... வார்த்தைக்கு வார்த்தை இப்படி எல்லாம் பேசி உங்க தலைல மண் அள்ளிப் போட்டுக்க வேண்டாம்.''

''மண்ணுக்குள்ளயே என்னைப் போட்டுப் புதைக்கறதா இருந்தாலும் உங்களால என்னை மாத்த முடியாது சுந்தராம்பா. நான் அந்த ருத்ரவீணையை அடைஞ்சே தீருவேன்.

நீங்க சொல்ற மாதிரி ருத்ரன்தான் அதை அடைய முடியும்னா நான் அதுக்காக ருத்ரனா மாறவும் தயங்கமாட்டேன்.''

உபாசகரின் ஆவேசம் சுந்தராம்பாளை அப்படியே பெருமூச்சுவிட வைத்தது. அனல் விழிகளுடன் ஒரு பார்வை பார்த்தவள் திரும்பி நடந்தாள்.

''குங்குமம் எடுத்துக்காம போறேளே...''

உபாசகர் சிமிழை எடுத்து நீட்டினார். அவளும் மறுக்காமல் அதை எடுத்து நெற்றியில் இட்டுக்கொண்டாள்.

திரும்பி நடந்தாள்.

காரும் சீறிக்கொண்டு புறப்பட்டது.

ஒரு மரத்தின் பின்னால் இருந்து அவ்வளவையும் பார்த்துக் கொண்டே இருந்தர்ன் பிரசிடென்ட் கல்யாணசுந்தரத்தின் கையாள் ஒருவன்!

சோகமாக இருந்தான் சங்கரன். எதிரில் குளத்து நீர்பரப்பு. பச்சையாய் பாசிபடிந்து மீன்கள் நீந்தக் கிடந்தது.

எவ்வளவு ஆழம் என்று யாருக்குமே தெரியாது. குளத்தின் நடுவில் ஒரு தங்கரதம் மூழ்கிக் கிடப்பதாக ஊருக்குள் வதந்திகள் உண்டு.

குளத்தின் கரையில் ஒரு கர்ப்பிணியை வெட்டிப் பலிகொடுத்தால் அது தானாக கிளம்பி மேலே வரும் என்று கிலிமூட்டும் விதமான கதைகளும் நிறையவே உண்டு.

குளத்தைப் பார்க்கும் போதெல்லாம் அப்படிக் கதைகளும் சங்கரனுக்கு ஞாபகம் வரும். ஆனால் இப்பொழுது அந்தக் கதையோ வதந்தியோ எதுவும் ஞாபகத்தில் வரவில்லை. மாறாக பானு அவனைப் பார்த்து 'ஐ லவ்யூ' என்று சொன்னதே ஞாபகத்தில் உலாவந்தபடி இருந்தது.

நடுவில் சாமிநாதனின் மொபட்டும் அந்தக் கரையில் வந்து நின்றது. கையில் ஒரு பூப்பந்துடன் சாமிநாதனும் சங்கரனை நோக்கிச் சென்று அமர்ந்தான்.

''வாடா சாமி... என்னடா இது கைல பூவோட....?''

''வழியில பூக்காரபொண்ணு ஒருத்தி... கடைசி கடைசியா ஒரு மூணுமுழம் பூ இருக்கு... வாங்கிக்குங்கன்னு கெஞ்சினா. பாக்க பாவமா இருந்தது. அதான் வாங்கிகிட்டுவந்தேன்...''

''அதை அப்படியே வழியில் கோவிலுக்குப் போய் ஸ்வாமிக்குச் சாத்திட்டு வந்துருக்கலாம்ல...?''

''அதெல்லாம் உன் வேலை... எனக்கு சாமிக்கு ஐஸ்வைக்கணும்கற அவசியமேல்லாம் இல்லை...''

''அப்ப ஸ்வாமிக்கு பூ வாங்கிக் கொடுக்கறது உன் வரைல ஐஸா?''

''அதுல என்ன சந்தேகம்? பூஜை, அர்ச்சனை எல்லாமே ஐஸ்தான்... அவனே போற்றி... இவனே போற்றின்னு சொல்ற தெல்லாம் என்னடா... ஜால்ராதானே?'

''போறும். ஒரு தீர்மானத்தோடதான் வந்திருக்கேன்னு சொல்...''

''கரெக்ட்... என் தீர்மானத்தைக் கேட்டா நீ அசந்துடுவே...''

''என்ன... என்னடா பெரிய புடலங்கா தீர்மானம்?''

''இந்த பூவோட நான் இப்ப நேரா எங்க போகப் போறேன் தெரியுமா?''

''எங்க...?''

''பானுவோட டிஸ்பென்சரிக்கு...''

சாமிநாதன் அப்படிச் சொன்ன மறுநொடி சங்கரனுக்கு மிளகாயைக் கடித்த மாதிரி இருந்தது.

திருதிருவென விழித்தான்.

''என்னடா நம்பமுடியலையா. என் கூட வா. இந்தப் பூவை நான் அவ தலைல வைக்கறேன்...''

''நீ... நீ... நீயா?''

''நானேதான். எவ்வளவு நாளைக்கு நெஞ்சுக்குள்ளேயே வெச்சு சுமக்கறது. இன்னிக்கு போட்டு உடைச்சிடறேன். நீ வா...''

''நான்... நான் எதுக்குடா?''

''என்னடா கேள்வி இது. எல்லாம் ஒரு சப்போர்ட்டுக்குத்தான்...!''

''நான் சப்போர்ட்டா?''

''இல்லையா...? காதல்ல எப்பவும் உயிர் நண்பர்கள் தானேடா சப்போர்ட்?''

''அது... அது... ஆமாம்... ஆமாம்...''

சங்கரன் பானுவை நினைத்து மென்று துப்ப, சாமிநாதன் அவனைப் பிடித்து இழுத்தக்கொண்டு நடந்தான்.

சங்கரனுக்குக் கைகால் எல்லாம் உதற ஆரம்பித்தது. சாமிநாதன் மொபட்டை ஸ்டார்ட் செய்தவனாக அவனைப் பார்த்தான். வேறு வழியில்லை. ஏறி உட்கார்ந்தான்.

மொபட் ஓட ஆரம்பித்தது.

''சங்கார... என்னவோ தெரியலடா... நேத்துல இருந்து எனக்கு பானு ஞாபகமாகவே இருக்குடா. ராத்திரி கனவுலகூட அவ வந்தா...! 'சாமிநாதா! என்னைச் சீக்கிரமா கல்யாணம் பண்ணிக்கோ - இல்லேன்னா என் அம்மா என்னையும் அந்த தாசி பங்களா பூஜைக்குப் போக வெச்சிடுவா. அப்புறம் அந்த பெட்ரோமாக்ஸ் விளக்கையும் கூடையையும் நானும் தூக்கும்படி ஆயிடும்'னு கண்ணைக் கசக்கிட்டு அழுதா தெரியுமா?''

சாமிநாதன் வண்டியின் ஓட்டத்தோடு சேர்த்து பனு பற்றிய தன் காதல் நினைப்பையும் ஓட்டிக்கொண்டே சென்றான்.

சங்கரனுக்குள் மனதில் ஒரே குடைச்சல்.

'இவ்வளவு காதல் உள்ள இவனை விட்டுவிட்டு என்னைப் போய் இந்த பானு நேசிப்பதாகச் சொல்லிவிட்டாளே... சே... என்ன பெண் இவள்?'

அவன் மனதில் கேள்விக் குடைச்சல்.

அதற்குள் டிஸ்பென்சரியும் வந்துவிட்டது. ஆனால் மூடிக்கிடந்தது. சாமிநாதனுக்குப் பெரிய ஏமாற்றமாக இருந்தது.

பேஷண்டுகள் வராததால் கதவை மூடிக்கொண்டு பானு வீட்டுக்குப் போய்விட்டதாக பக்கத்து வீட்டு அம்மாள் சொன்னாள்.

சங்கரனுக்கு 'அப்பாடா' என்றிருந்தது!

அதன்பின் சாமிநாதனிடம ''டேய். எனக்குத் தர்ப்பை பிடுங்கற வேலை இருக்கடா...'' என்று சொல்லி நழுவிக் கொண்டான்.

அவனைத் தவிர்த்தவன் திரும்ப குளத்தங்கரைக்குத்தான் சென்றான்.

குளத்தின் நீர்மேல் கல் எறிந்தபடியே தீவிரமாக யோசிக்கத் தொடங்கிவிட்டான்.

'சாமிநாதனின் காதலை பானு ஏற்க வழி எதாவது இருக்கிறதா... என்னை அவள் வெறுக்க வேண்டும். இல்லாவிட்டால் சாமிநாதனுடன் உள்ள மாசு மருவில்லாத நட்பே பாழாகிவிடும்.

நட்பைவிட அவன் மனது உடைந்து சுக்குநூறாகிவிடும். அதை எப்படியாவது தவிர்க்க வேண்டும். என்ன வழி?'

தீவிரமாக யோசித்தபோது உபாசகர் முகம் நிழலாடிது. மனதில் எது இருந்தாலும் அதை அப்படியே பட்பட் என்று

போட்டு உடைக்கும் அவரது சாதுர்யம், மூடிய கைக்குள் ஒரு திருப்பதி லட்டையே வரவழைத்த அவரது மாயச் சித்துவேலை எல்லாம் ஒரு வினாடி அவன் கண்முன் தட்டாமாலை சுற்றி ஆடியது.

பானுவின் மனதையும் உபாசகர் மனது வைத்தால் மாற்ற முடியும் என்று தோன்றியது. நண்பனுக்காக அவர் காலில் விழுவதிலும் தப்பு இல்லை என்கிற தெளிவுடன் எழுந்தவன் நேராக அவர் தங்கி இருக்கும் குடிசை நோக்கித்தான் நடந்தான்.

*நிஷ்டையில் இருந்தார் உபாசகர்!*

*சங்கரன் வந்து நிற்கவும் ஆவலாகக் கண் திறந்தார்.*

*''வா சங்கரா... உக்கார்...''*

*அவனும் அமர்ந்தான்.*

*''என்ன ஸ்வாமி இது... மனசுல என்ன இருக்குன்னு பட்பட்னு சொல்ற உங்களுக்கு நான் நினைக்கறத வார்த்தைகளால சொல்லணுமா?''*

*''அப்ப என்னையே கண்டுபிடிச்சுக்கோங்கறியா?''*

*''அப்படி இல்ல... நான் நினைக்கறத சொல்ற சக்தி எனக்கு இல்ல... அதான்!''*

*''அப்ப அவ்வளவு மனத்தாங்கலான விஷயம்னு சொல்.''*

*''ஆமாம்!''*

*''என்ன... சாமிநாதனைக் காதலிக்க வேண்டிய பானு உன்னைக் காதலிக்கறாளாக்கும்?''*

*''ஸ்வாமி...''*

*''சரிதானே?''*

*''அதேதான்...!''*

*''நான் இப்ப அவ மனசை மாத்தணுமாக்கும்?''*

*''ஆமாம்...இல்லேன்னா சாமிநாதன் உயிரையே விட்டுறுவான். அவன் எனக்கு வேணும்.''*

*''பதட்டப்படாதே... உன் ஸ்னேகிதனுக்காக நீ எடுத்துக்கற அக்கறையைப் பாராட்றேன். ஆனா காதல்ங்கறது தூண்டிவிட்டோ, திட்டம்போட்டோ வர்ற விஷயம் கிடையாது. அது ப்ராப்தம் இருந்து நடக்கற ஒண்ணு.''*

''அப்படின்னா...?''

''யாருக்கு யார்னு எப்பவோ அவன் எழுதிட்டான். அதன்படிதான் பூமியில எல்லா விஷயங்களும் நடக்கும்.''

''என்ன ஸ்வாமி இது... பானு என்னை விரும்பறா. ஆனா நானும் விரும்ப வேண்டாமா? என் விருப்பம் இல்லாம அவ எப்படி என்னைக் கல்யாணம் பண்ணிக்க முடியும்?''

''நான் முடியும்னு சொல்லலியே...?''

''அப்ப என்னதான் சொல்றேள்...?''

''பதட்ட்ப்படுறியே... கொஞ்சம் பொறுமையா இரு. பானுவுக்கு யார் புருஷன்னு பிரசன்ன ஜோதிடம் மூலமாவும் வேற ஒரு கணக்கு மூலமாவும் கணிச்சுப்பாக்கறேன். அதுல சாமிநாதன் அகப்பட்டா நீ கவலையே படவேண்டாம்.''

''அப்ப முதல்ல பாருங்கோ... சாமிநாதன் பானு கல்யாணம் நடக்கணும். அதுக்கு வழி இருக்கான்னு பாருங்கோ...''

சங்கரன் பதற, உபாசகரும் சற்றுத் தள்ளி பரண்மேல் இருக்கும் சோழிகள் கொண்ட ஒரு பிரம்புப்பெட்டியை எடுத்தார். கை நிறைய சோழிகளை அள்ளி நெற்றிப் பொட்டருகே கொண்டு சென்று ஏதோ சில மந்திரங்களைச் சொல்லி முணுமுணுத்துவிட்டு சரேலென்று சோழிகளைத் தரை மீது சிதறவிட்டார். பின் அவைகளில் நிமிர்ந்தது, மூடியதைக் கணக்கிட்டுவிட்டு இறுதியாகக் கைகளைக் கூப்பி தியானித்தவர் அப்படியே உருமாற ஆரம்பித்தார். சங்கரன் அதைப் பார்த்து ஆச்சரியத்தில் விழ உபாசகர் ஆவேசமாகக் கண்களைத் திறந்தார்.

''சங்கரா... எந்தக் காலத்துலையும் சாமிநாதன் பானு ஒன்னு சேரமுடியாது. அதுமட்டுமல்ல... சாமிநாதன் இந்த ஊர்லையே இருக்கக்கூடாது. இருந்தா அது அவனுக்கு எந்த வகைலையும் நல்லது இல்ல. நீங்க சிங்கப்பூர் போக ஏற்பாடு செஞ்சுண்டு இருக்கீங்க இல்லியா?''

''ஆமாம் ஸ்வாமி...''

''அப்ப முதல்ல அதுக்கு முயற்சி செய். சாமிநாதன் இந்த ஊர்ல இருந்தா அது அவனுக்குத்தான் ஆபத்து.''

''எப்படி ஸ்வாமி?''

''கேள்வி கேட்காதே... முதல்ல அவனைக் கூட்டிண்டு கிளம்பற வழியைப் பார். போ...

உக்ரமாக அலறினார் உபாசகர். சங்கரன் முகத்தில் பலத்த ஏமாற்றம். பிள்ளையார் பிடிக்க குரங்காகிவிட்டதுபோல ஒரு பிரமை.

சோர்வாக அங்கிருந்து விலகினான்.

அவன் விலகின மறுவினாடி உபாசகர் ஆவேசமாக சன்னதியில் இருக்கும் அம்பாள் படத்தைப் பார்த்தார்.

அப்படியே கண்களை அகட்டி உருட்டியவர்,

''நல்லவேளைம்மா... யார் ருத்ரன்னு அடையாளம் காட்டிட்டே... ஆனா ஒண்ணு! நான் இருக்கற வரை எந்த ருத்ரனாலையும் எதுவும் செய்ய முடியாது. ருத்ரன்தான் அந்த ருத்ரவீணையைத் தொட முடியும்னா இனி நான்தான் அந்த ருத்ரன்... நான்தான் அந்த ருத்ரன்!'' என்று சீறியவர் குங்குமம் மட்டுமே தரித்திருக்கும் தன் நெற்றியில் சரேலென்று விபூதியை எடுத்துப் பூசினார்.

நெற்றியில் விபூதி பளபளக்க கண்களும் அகண்டு விரிய ''நான் இனி ருத்ரன்... நான்தான் ருத்ரன்...! அந்த ருத்ரவீணையும் எனக்குத்தான்'' என்றார் சற்றே குரூரமான முகபாவனைகளுடன்!




## அன்று

**ந**வக்கிரக மாளிகை!

நந்தவனத்து மருதமரத்தின் கீழ் வீரேந்திரன் அமர்ந்திருக்கும் கோலம் அங்கே வந்த வைஜெயந்தி முதல், சகலரையும் உலுக்கிவிட்டது.

மாலி ஆடிப்போனாள்.

குத்துப் பார்வையும் கோரத் தோற்றமுமாய் இருப்பவனைப் பார்த்து ''வீரேந்திரா... என்னப்பா நடந்தது?'' என்று கேட்டாள். அவனோ அவளைப் பார்த்துப் பேசாமல் எங்கோ வெறித்தபடியே ''அரக்கவதம் முடிந்தது... இந்த ஊரைக் காப்பாற்றிவிட்டேன்''

என்றான். அப்படியே ''அஹ்ஹஹ்ஹா'' என்று பெரிதாகச் சிரித்தான்.

''நீ எங்கே ஊரைக் காப்பாற்றினாய் அந்த பாபாதானடா காப்பாற்றினார். அவரும் அந்த வீணையும் இல்லாவிட்டால் இந்த நொடி ஊரே சுடுகாடாகியிருக்கும் தெரியுமா?''- மாணிக்கவல்லி அவனை எதிர்த்து பலமாகக் குரல் கொடுத்தாள்.

''போதும். வாயை மூடுங்கள்... என்னை யாரென்று நினைத்தீர்கள்? நான் இப்பொழுது வீரேந்திரன் அல்ல... பைரவன்... காலபைரவன்...''

வீரேந்திரன் சற்றே மனநோயாளி போல போசுவதாகக்கூடத் தோன்றியது.

சட்டென்று ''இறைவா... ஈசா... எங்கிருக்கிறாய் நீ... இதோ வந்துவிட்டேன். உன்னைத் தரிசிக்காமல் இங்கே இவர்களோடு வாதாடியபடி இருக்கிறேன்... சே, நானெல்லாம் ஒரு மனிதனா...'' என்றவன் எழுந்தான். யாராலும் தடுக்க முடியாதபடி அங்கிருந்து ஓடத் தொடங்கினான்.

மாலி தலையில் அடித்துக்கொண்டாள்.

மாணிக்கவல்லி கண்ணீர் சிந்தினாள்.

மந்திரி மகாதேவர் வைஜெயந்திக்கு ஆறுதல் கூறினார்.

''வைஜெயந்தி... கலக்கத்தை விடு. அவனுக்கு ஏதோ சித்த பிரமை. உரிய முறையில் வைத்யம் பார்த்தால் சீராகிவிடும்'' என்றார்.

''நம்மைச் சுற்றி மனித சக்திக்கு மீறிய விஷயங்களாகவே நடந்துகொண்டிருக்கிறது. இது எனக்கு மிகவும் கலக்கத்தை அளிக்கிறது.''

வைஜெயந்தி கண்ணீர் சிந்தினாள்.

''அழாதே... நடப்பதை எல்லாம் பார்த்து நான் பிரமித்துக் கொண்டிருக்கிறேன்... ஒரு அருள்வளையம் நம்மை மட்டுமல்ல - இந்த ஊரையே காவல்காத்து வருகிறது. இல்லாவிட்டால் பாபாஜி இந்த மண்ணுக்கு வந்திருப்பாரா? அந்தக் காபாலிகர்களால் வந்த இக்கட்டுதான் நீங்கி நாம் திரும்பவும் புத்துயிர் பெற்றிருப் போமா... யோசித்துப்பார்...''

''ஆம்... நீங்கள் சொல்வதுதான் உண்மை.'' என்றாள் மாணிக்கவல்லியும்.

''பாட்டி... நாம் பேசுவது பிறகு... வீரேந்திரன் இங்கிருந்து ஓடியதைப் பார்த்தால் எனக்குக் கலக்கமாக இருக்கிறது. அவன்

விபரீதமாக எதையும் செய்து விடக்கூடாதே என்று என் நெஞ்சு கலங்குகிறது...''

அபராஜிதாவின் கவலையிலும் நியாயம் இருக்கத்தான் செய்தது. அவர்களை மகாதேவர் மாளிகையில் இருக்கச் சொல்லிவிட்டு அவரே ஒரு சாரட்டில் ஏறிக்கொண்டு திரும்பவும் ஆலயம் நோக்கிக் கிளம்பினார்.

ஆலயத்தில் நல்ல கூட்டம். புத்துயிர் பெற்றவர்கள், அதைக் கண்டவர்கள், கேள்விப்பட்டவர்கள் என்று அவ்வளவு பேரும் தோடீஸ்வரரின் ஆலயத்தைச் சுற்றி வளைத்திருந்தார்கள்.

எள் போட்டால் எடுக்க முடியாது... அப்படி ஒரு திரள்! வந்தவர்களில் பலரது பார்வை அந்த ருத்ரவீணை எங்கே என்றுதான் தேடியது.

ஆபரண அறையின் பீடத்தின்மேல் அது ஒரு கலைப்பொருளாய் காட்சி தந்தாலும் பார்ப்பவர்களில் பலர் அதை அன்னை சக்தியாகத்தான் பார்த்தார்கள். பலருக்கு அதை நெருங்கிச் சென்று தொட்டுப் பார்க்கும் ஆவல். ஆலயக் காவலாளியும் பட்டரும் அந்த அறைவாசலிலேயே காவல் இருந்து, வருகிறவர்களைத் தவிர்த்தனர்...

தலையாரியும் மணியக்காரரும்கூட கூட்டத்தின் ஆவலையும் பக்திப் பெருக்கையும் பார்த்து ''இதை எப்படிப் பாதுகாக்கப் போகிறோமோ தெரியவில்லை'' என்று கவலையிலும் குழப்பத்திலும் இருந்தனர்.

''தலையாரி... என்ன செய்யப் போகிறோம் நாம். கூட்டம் கட்டுக்கடங்காமல் வந்தபடி இருக்கிறது. யாரும் எதைச் சொன்னாலும் கேட்கமாட்டேன் என்கிறார்கள். இதை இனியும் இங்கேயே வைத்துப் பாதுகாக்க முடியுமா?''

''தெரியவில்லையே... நேற்றுவரை சாதாரண ஆயெமாக இருந்த நமது ஆலயம், இன்று இந்த ருத்ரவீணையால் ஒரு உலகப் புகழ் பெற்றுவிட்டது போலத் தோன்றுகிறது.

இது களவு போனதற்கு முன்புகூட நமது ஆலயம் அடாத இக்கட்டிலும் பைராகிகள், மந்திரசித்தர்கள் என்று பலராலும் சூழப்பட்டிருந்ததாக நம்முடைய ஆலயத்தின் 'கோவிலொழுகு' என்னும் ஏட்டில் நான் படித்ததாய் ஞாபகம்...''

''அப்படியா? இப்பொது அந்த ஏடு எங்கு இருக்கிறது?''

''இதே அறையில்தான்... அதோ அந்த மரப்பிறையில்.''

தலையாரி சுட்டிக்காட்ட, மணியக்காரர் ஓடிச்சென்று அந்த 'கோவிலொழுகு' என்னும் ஏட்டினை எடுத்தார்.

'கோவிலொழுகு' என்பது ஆலயங்களின் வரலாற்றையும் அங்கு நிகழும் அற்புதங்களையும் முக்கிய சம்பவங்களையும் ஊரறிய பதிவுசெய்து வைத்திருக்கும் ஒரு குறிப்பேடு ஆகும்.

மணியக்காரர் மிகுந்த ஆவலோடு அந்த 'கோவிலொழுகு' ஏட்டுக்கட்டினை எடுத்து முதல் பக்கத்தில் இருந்து வாசிக்க ஆரம்பித்தார்.

'நிகழும் பிங்கல ஆண்டிதில் சித்திரை பௌர்ணமி நன்னாளில் ஆலய பஞ்சாங்க சபையோர் திருமுன் ஆயிரம் ஆண்டுப் பழைமையான இத்தோடீசுவர ஆலய மகா கும்பாபிஷேகவைபவம் குறித்தும் சம்ப்ரோஷணம் குறித்தும் மற்றைய தேரோட்டம், தினப்படி பூசனைகள், சம்ப்ரதாய உற்சவங்கள், திருநட்சத்திரக் கொண்டாட்டங்கள் ஆகியன குறித்தும் தெளிவும் தீர்மானமும் இன்று முதல் கொள்ளப்படும்.

இதனால் பதியப்படுவது யாதெனில், மயனாரின் மதிநுட்பத்தால் கைலாயபதியின் அனுக்ரஹத்தால் ஸ்தாபிதம் செய்யப்பட்ட இவ்வாலயத்தின் அதிவிசேஷ சிறப்பானது மந்த்ரங்களாலன்றி, துதிகளாலும் பஜனை முதலிய கிருதிகளாலும் பாடலாலும் ராகஆலாபனைகளாலும் இவ்வாலயத்து தோடீசனைத் துதிசெய்ய வேண்டியதே தோடீச்சுர ஆசாரமாமம்.

வேதமும் பின்செல்ல நாதமே இங்கு தலையானது என்று தேவன் அருளிச் செய்த இவ்வாலயத்தில் மஹாசக்திக்கென ப்ரத்யேக தனிச்சன்னதி எக்காலும் கூடாதென்பதும் ஈசான்யத்து நவக்கிரக பிரதிஷ்டா பாகத்தில் ஸ்ரீஸ்ரீசக்தியானவள் நவமரின் அம்சமாய் கோவில் கொண்டு எழுந்தருளியிருக்க இங்கே தோடீச்சுரரே முக்காலும் முழு முதல் ஸ்தானிக தெய்வமாய் பிராணப்ரதிஷ்டை செய்யப்பட்டு இவ்வாலயத்தை நாதோபாசனை மிக்கதாய் ஆக்கிய வேளையில் நாரதர், தும்புரு. நில சரஸ்வதி மற்றும் நந்திகேசர் ஆகியோருக்கு இறைவன் திவ்யத்திருக்காட்சி அளித்த வேளையிலே கூடிய தேவதேவியர் இறைவனின் நாதருசியை அறியவேண்டி 'தேவ தேவா... அரிய முத்திரைகளால் தட்சிணாமூர்த்தியாகி பிரம்மகுமாரர்களுக்கு மௌனத்தின் சிறப்பை உணர்த்தினார் போலே, இங்கே எங்களுக்கும் இசையின்பத்தின் வகை தொகைகளையும் அதன் சக்தியையும் எடுத்துரைப்பீராக' என்று வேண்டித் தொழுதக்கால் இறைவன் தேவதேவியாம் அன்னை உமையை ஒரு வீணையாக்கி அதை மடிமீது வைத்து இசைக்கலானார். அந்த நாதத் திவலைகளில் இருந்து பல்லுயிர்கள் உருவாயின. பல லோகங்கள் உருவாகின.

அந்த நாதவெள்ளமானது அண்ட பகிரண்டமெங்கும் பிரயாணித்து ஈரேழு பதினான்கு லோகத்து செவிபடைத்த உயிர்களை எல்லாம் உருக்கி ஸ்தம்பிக்கவே வைத்தது.

பட்டமரம் துளிர்ததும் காய்ந்த பாலை பச்சித்தும் கெட்ட உள்ளத்தில் நல்லெண்ணங்கள் தோன்றியும் மலர்கள் கருக்கொண்டும் குருடர்கள் பார்வை பெற்றும் துஷ்ட ஜீவராசிகள் எல்லாம்கூட இயல்பை மறந்து மது உண்டார் போலே மயங்கியும் கிடந்திட திரும்பின திசையெங்கும் அற்புதமாய் நிகழ்ந்த வண்ணமிருந்தது.

இதனாலே சொர்க்கத்தின் மதிப்பு போய் - வினைப்பாடுகள், கர்மங்கள் ஸ்தம்பித்து நின்றிட, உலகின் அனைத்துயிர்களும் நித்ய இன்பம் என்னும் மோட்ச கதிக்கு நெருங்கிவிட அதைக் கண்ணுற்ற நவமாதி தேவர்கள் தங்களின் பார்வை சக்தியாலே இறைவனை வியாபித்து வீணையின் தந்தி நரம்புகளையும் அறுத்திட நாதமயம் நின்று உயிர்களின் இன்பத்தாக்கமும் மட்டுப்படலாயிற்று. இதனால் கோபமுற்ற மகாதேவர் நவமரைச் சபித்து அவர்களைச் செயலற்றவர்களாக்கிட, அவர்களும் காக்கும் கடவுளாம் விஷ்ணுபதியிடம் சென்று முறையிட்டு அழ, ஸ்ரீ விஷ்ணு மகாதேவரை அணுகி 'கடமையைச் செய்தவர்களைச் சபித்தது அழகல்ல மகாதேவா. அவர்கள் மேலும் செயல்பட அருளுதலே முறை.' என்றுரைக்க மகாதேவரும் அவர்களுக்கு மனமிரங்காமல் கோபித்தபடி இருக்க, அவர்களுக்காக அவர்களின் ராசியாதிபதிகள் வானமண்டலத்தினின்றும் வந்து துதிக்க பின் மகாதேவர் நவமரை முன்பினும் அதிக சக்திபடைத்தவர்களாய் திகழ அருளினார்.

அத்துடன் இசையால் இத்தலத்தில் தன்னை வழிபடுவோரை துன்புறுத்தலாகாது என்றும் கூறிட, நவமரும் இம்மண்ணிற்கு வந்து தங்களை வழிபடுவோரை ரட்சிக்க, அவர்தம் ராசிக்கு ஏற்ப தீர்த்தங்களாய் திகழ்ந்து, அத்தீர்த்தமதில் நீராடுவோர் வினைகளை முற்றிலுமாய் தீர்த்திட முன்வந்தனர்.

அதன் பொருட்டு ராசியாதிபதிகள் பன்னிரு திக்கினை பிரித்துக்கொண்டு சென்று நின்றிட அங்கே ராசிக்கிணறுகள் தோன்றியதாம்!

இத்திருக்கோவிலும் திருக்கிணறுகளும் வான்கணித வழிமுறைக்கு ஏற்ப இலங்குவதை பூமியில் இருந்தவாறே கண்டறிய சூட்சம வழிமுறைகளும் மேற்கொள்ளப்பட்டு பன்னிரு

கிணறுகளையும் ஒரு புள்ளியில் இணைத்து, அந்தப் புள்ளியில் அகத்திய கமண்டலம் அகழ்ந்தெடுத்த நன்னீராம் தென்னாட்டு கங்கையான காவிரியைத் தருவித்து அவளே பன்னிரு கிணற்றுப் புனித நீராகத் திகழ்ந்திடவும் மகாதேவரே அருளினார்.

எந்தவோர் ஸ்தலமும் ஓர் தீர்த்தம் ஓர் விருட்சம் என்றேயிருக்க தோடிபுரம் மட்டும் பன்னிரு தீர்த்தம், பன்னிரு விருட்சம் கொண்டும் நவமரில் சாயா கிரகங்கள் இரண்டு நீங்கிட ஏனைய சப்த கிரகங்களும் இங்கே சப்த மண்டலமாய் அதன் ராகமாய் - சப்த ஸ்வரங்களாய் திகழவும் அருளப்பட்டுள்ளது.

ராகங்களே இங்கே நவமராய் திகழ்வது வேறு எங்கும் இல்லாத ஒரு சிறப்பாம். அந்த ராகங்களை ஐயன் ஈசன் அன்னை உமையால் ஆக்கிய வீணையில் இட்டு மீட்க எண்ணியது ஈடேறும். கேட்டது கிடைத்திடும். மகாதேவ தரிசனமும் மகாசக்தி தரிசனமுமே இதனால் சித்திக்கும் என்பதால் கல்பகோடி வருட தவத்திற்கும் அதன் வலிமைக்கும் இணையானதாம் இவ்வீணை.

இதை அற்ப இச்சையால் தீண்டிட அகிலமழியக்கூடும். லோக க்ஷேமார்த்தம் கருதி இசைத்திட அற்புதங்கள் விளையும்.

இதைச் சில பூதகணங்கள் காவல் காத்திடத் திருவுள்ளம் கொண்டுள்ளன. அவ்வப்போது ருத்ரர்கள் தோன்றி இசையமுது படைப்பர்.

ஆயினும் ஸ்த்ரீகள் இதைத் தீண்டித் திளைத்தல் தகாது. உமை அம்சம் கொண்டோர் மாத்திரம் தீண்டிடின் இசை எழும்.

இதன் வழிப்பாதையை இதுவே தீர்மானிப்பதாலும் இதன் இசையின்பத்தைப் பெற தோடீசுவரனை வேண்டி நிற்பதே உகந்த வழி.

ஆயினும் சில அரக்க சக்திகள் இதை அபகரிக்க நினைப்பதும் அழிக்க நினைப்பதும் கலியுக தர்மத்தின் ஓர் அங்கமாகும். அவ்வேளையில் ஈஸ்வர சித்தப்படியே அனைத்தும் நிகழும்!'

அந்தக் 'கோவிலொழுகு' ஏட்டில் விரிந்துகொண்டே போய்க் கொண்டிருந்தது செய்தி. மணியக்காரர் அதை எல்லாம் வாசித்துவிட்டு பிரமித்துப் போய் நின்றுவிட்டார். அத்தருணத்தில் தான் ஒரு ஆவேசப் புயலைப் போல வீரேந்திரன் அங்கே உள்ளே புகுந்தான்.

சிற்றின்பத்தின் சிகரத்தில் ஒரு உல்லாச வாலிபனாய் எதைப் பற்றியும் கவலையின்றி, 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்று திகழ்ந்தவன் அப்படியே மாறியிருந்தான். அவனது நெற்றியில்

ரத்தத்திலகம். இதழ்க்கடையெல்லாமும் பத்ரகாளி ரத்தம் குடித்தமாதிரி காய்ந்த ரத்த விழுதுகள்.

தலையும் கலைந்து உடம்பிலும் சுடுகாட்டுச் சாம்பலின் அப்பி எடுத்த புழுதி. கூட்டத்தவர்கள் அவனைப் பார்த்து அஞ்சி ஒதுங்கிட, அவன் அந்த ஆபரண அறைக்குள் புகுந்தான்.

அங்கு நின்றுகொண்டிருந்த தலையாரியையும் மணியக் காரரையும் ஒரே தள்ளாய் தள்ளியவன் அதன் கதவை இழுத்து மூடினான்.

அவர்கள் பதைத்துப் போய் கத்தினர்.

கதவைத் தட்டினர். பேரொலி எழுப்பினர்.

''வீரேந்திரா... என்ன செய்யப் போகிறாய்? வா வெளியே...''

மணியக்காரர் அலறினார். அப்பொழுது அங்கே மந்திரி மகாதேவரும் வந்து விஷயமறிந்து விக்கித்தார். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவராய் கதவை உடைத்துக்கொண்டு உள்ளே போனபோது வீரேந்திரனையும் காணவில்லை. அந்த வீணையை யும் காணவில்லை!

அப்படியே விக்கித்து நின்றுவிட்டனர்!

''என்னாயிற்று... எங்கே போயிற்று?''

''இறைவா... இது என்ன சோதனை?''

''இழந்ததைப் பெற்றுவிட்டதாகக் கருதினோம். ஆனால் மீண்டும் இழந்துவிட்டோமே...

எல்லாம் உன் செயலா... உன் திருவிளையாடலா?''

கூட்டமே மாய்ந்து போனது. செய்தி நவக்கிரக மாளிகையில் இருக்கும் அபராஜித வைஜெயந்திக்குச் சென்றபோது அவளுக்கு ஏற்பட்ட அதிர்ச்சிக்கு ஒரு அளவேயில்லை. அதே வேளையில் அங்குள்ள நீராழியில் எப்படி வைஜெயந்தி காவிரியால் அடித்து வரப்பட்டாளோ அதே போல பாபாஜியின் உடம்பானது அடித்துவரப்பட்டு அங்கே மிதந்து கொண்டிருந்தது.

செய்தியறிந்து சாஸ்திரிகள் ஓடிவந்தார்.

''என்னோடுதான் காவிரியில் பாபாஜி நீராடினார். இறுதியாக மூழ்குவதற்குமுன் 'சாஸ்திரிகளே! போய் வருகிறேன்' என்றார். எனக்கு ஒன்றும் புரியவில்லை 'எங்கே பாபாஜி' என்றேன்... 'எனது இந்த உலக வாழ்வு முடியப்போகிறது' என்றார்.

'சாமான்யன் உயிரைவிட்ட பிறகு சடலமாவான்... சன்யாசி உடம்பைச் சடலமாக்கி உயிரைவிடுவான். படைத்தவனுக்கு

எடுத்துக்கொள்ளும் வேலையைக்கூடத் தரக்கூடாது... இந்தா என்று அர்ப்பணித்து விடவேண்டும். என் கடமைகள் முடிந்தது... ஆயினும் அதில் ஏதும் இடர்ப்பாடுகள் வந்தால் என்கடமை ஆத்ம வடியில் தொடரும்...' என்றபடியே காவிரி நீரில் மூழ்கினார்... அதன்பின் அவர் உடலை நான் இங்கேதான் பார்க்கிறேன்'' என்றுகூறி சாஸ்திரிகள் அழுதார்.

அதோடுகூடி வைஜெயந்தியும் மற்றவர்களும்கூட அழுதனர்.

அப்பொழுது ருத்ரவீணை ஒலிக்கும் சப்தம் அவர்கள் காதுகளில் கேட்டது. அப்படியே பார்வை அகண்டு கொள்ள முகத்திலும் ஒரு பிரவசம்...

''மீண்டும் ருத்ரவீணை இசை...

இந்த மாளிகையில் இருந்துதான் கேட்கிறது.

எப்படி... யாரால்?''

அபராஜித வைஜெயந்தியும் மற்றவர்களும் மாளிகையின் எல்லா பக்கங்களையும் நோக்கி ஓடினர். நீராழியை ஒட்டி ஒரு சிறு அறை... அங்கெல்லாமும் எட்டிப்பார்த்தனர். சப்தம் கம்பீரமாகக் கேட்டது. ஆனால் வாசிக்கும் மனிதனையோ, இடத்தையோ அறிய முடியவில்லை.

சட்டென்று அதுவும் ஒரு கட்டத்தில் நின்று போனது. எல்லாமே பிரமிப்பான ஒன்றாய் இருந்தது. குழப்பமாகவும் இருந்தது.

அதற்கு நடுவிலேயே பாபாஜியை நந்தவனத்தில் ஜோதிடரைப் புதைத்த இடத்தில் அருகிலேயே போட்டு புதைத்தனர். புதைத்து மூடிய இடத்தின் முன்னால் மௌனமாக பிரார்த்தித்தபடி நின்றபோது எங்கிருந்தோ ஒரு பச்சை அங்கி பறந்துவந்து கச்சிதமாக போர்த்தியது போல சமாதி மேல் விரிந்து விழுந்தது.

பாபாவை அந்த எல்லாம் வல்ல இறைவன் ஆசீர்வதித்து தனக்குள் ஏற்றுக்கொண்டுவிட்டது போலத் தோன்றியது.

அந்தச் சமயத்தில் மீண்டும் வீணை இசை.

உயிர்க்கூட்டை எல்லாம் உருக்குவது போல...

எங்கிருந்து... யாரால்...? எப்படி?

தொடரும் இரண்டாம் பாகத்தில்

★★★

